# கையேடு

## [HAND BOOK]






கலைக் காட்சிக் குழு,
இரண்டாவது உலகத்
தமிழ்க் கருத்தரங்கு மாநாடு,
சென்னை
1968

கையேடு (HAND BOOK)



பதிப்பாசிரியர் குழு :
சா. கணேசன்
இரா. நாகசாமி
இரா. முத்துக்குமாரசாமி
வை. கணபதி
நாரண துரைக்கண்ணன்
வி. இராமசுப்பிரமணியம் (ஆண்டி)



அமைப்பு :
எலிகன்ட் பப்ளிசிடீஸ்
சென்னை–2



அச்சும் கட்டும் :
கபீர் அச்சகம், சென்னை–5



வெளியிடுவோர் :
கலைக் காட்சிக் குழு,
இரண்டாவது உலகத் தமிழ் ஆராய்ச்சிக்
கருத்தரங்கு மாநாடு, சென்னை



# தன் நேர் இலாத தமிழ்

ஓங்கல் இடை வந்து
உயர்ந்தோர் தொழ விளங்கி

ஏங்கு ஒலி நீர் ஞாலத்து
இருள் கடியும் – ஆங்கு அவற்றுள்

மின் நேர் தனி ஆழி
வெம் கதிர் ஒன்று; ஏனையது

தன் நேர் இலாத தமிழ்!

# முன்னுரை

உலகம் மதிக்கும் சிறந்த மொழிகளுள் ஒன்று நம் தமிழ் மொழி. பன்னெடுங்காலம் பயின்றுவரும் காரணத்தாலும், இலக்கிய வளத்தாலும், இலக்கண வரம்பினாலும் உயர் தனிச் செம்மொழி எனப் பாராட்டப் பெறுவது இது. தற்கால விஞ்ஞானத் துறையில் பின்தங்கியதென்றாலும் இசை, கூத்து, கட்டடம், சிற்பம், கவிதை போன்ற பல கலைகளிலும் உயர்ந்து விளங்கும் சிறப்புடையது. வரலாற்றுத் துறையில், இரண்டாயிரம் ஆண்டு கட்கும் மேலான கல்வெட்டுப் போன்ற சான்றுகளைத் தொடர்ச்சியறாமல் பெற்றுப் பொலிவது நந்தமிழ்.

தமிழ் மொழியின் அருமை பெருமைகளை உலகம் இன்னும் சரியாக உணர்ந்துகொள்ளவில்லை. அம் முயற்சியில் பல அறவோர்கள், அறிஞர்கள் ஈடுபட்டதுண்டு. அவர்களின் திருப்பணியாலேதான் ஏதோ ஓர் அளவாவது நம்மைப்பற்றிப் புற உலகம் மதித்து வந்திருக்கிறது.

அந்த வரிசையில் தற்காலத்தில் தோன்றி நல்ல பணி செய்துவருவது உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கழகம் (Inter-national Association of Tamil Research) ஆகும். இதில் பல நாட்டுத் தமிழறிஞர்களும் இடம் பெற்றிருக் கிறார்கள். இரண்டாண்டுகட்கு ஒரு முறை தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கு மாநாட்டைக் கூட்டி பல்வேறு அறிஞர்களையும் அழைத்துப் பங்குகொள்ள வைத்து ஆராய்ச்சி எழுத்துரைகளைச் சமர்ப்பிக்கச் செய்து அதன் மூலம் தமிழர்களின் கலை, நாகரிகம், பண்பாடுகளை உலகறியச் செய்துவருகிறது.

1966-ல் மலேசியாவின் தலைநகரான கோலாலம்பூரில் முதல் மாநாடு நடைபெற்றது. அடுத்து இரண்டாவது மாநாடு தமிழகத்தின் தலைநகரான சென்னைப்பட்டினத்தில் 3–1–68 முதல் 10–1–68 வரை நடைபெறுகிறது. தமிழகத்தில் நடைபெறும் உலகத் தமிழ் மாநாடாகையால் மிகச் சிறப்பாக நடைபெற எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பெற்றிருக்கின்றன.

அறிஞர் அண்ணா அவர்களின் சீரிய தலைமையில் இயங்கும் தமிழக அரசு மாநாடு பயனும் பொலிவுமுள்ளதாய் விளங்க எல்லா ஏற்பாடுகளையும் செய்திருக்கிறது. தமிழகமே கண்டிராத ஒரு மாபெரும் ஊர்வலம் கண்டோர் வியக்க நடைபெற விருக்கிறது. மாநாட்டின் நினைவை நிலை நிறுத்த அறவோர், கவிஞர் முதலியோரின் திருவுருவச் சிலைகள் நிறுவப் பெறுகின்றன. அரிய இசை விருந்துகளும், நடன, நாடகங்களும் நிகழ்கின்றன.

இங்ஙனம் பல்துறை நிகழ்ச்சிகளுடன் கலைக் காட்சி ஒன்றையும் பெரும் பொருட் செலவில் அமைக்க மாநாட்டுப் பெருங்குழு முடிவெடுத்து அதற்கெனக் கலைக் காட்சிக் குழு ஒன்றையும் நியமித்தது. அக் குழுவில் தலைவனுயிருந்து பணியாற்ற என்னைப் பணித்தது. ஆண்டவன் அருளையும், அரசின் துணையையும் அன்பர்களின் உதவியையும் நம்பி இப்பணி தலைமேற் கொண்டேன். இக்கலைக் காட்சியில் தமிழ் மொழி, இலக்கியம், கலை, நாகரிகம், பண்பாடு முதலிய பற்றிய எல்லாச் சான்றுகளையும் திரட்டி நெறிப்பட அமைக்கவேண்டும் என்பது எங்கள் எல்லோருடைய ஆசையும் ஆகும். இவ் வாசை நிறைவேறக் குழுவில் உள்ள யாவரும் முழு உதவியையும் செய்கிருர்கள். மாநில அரசும், மத்திய அரசும் இவற்றின் அதிகாரிகள் பலரும் மிக்க பரிவுடன் வேண்டிய உதவிகளைச் செய்து வருகின்றனர்.

கலைக் காட்சியின் மற்ருேரங்கமாக, 'கையேடு' ஒன்றை வெளியிட வேண்டுமென்பது குழுவின் முடிவு. கையேட்டின் அளவும் பொருளும் பெரிது. இருபது நாட்களுக்குள் கட்டுரைகளையும் விளக்கப் படங்களையும், வேறு பல படங்களையும் தொகுத்து, வகுத்து அச்சிட்டு முடிப்பது என்பது எத்துணைச் சிரமமானதென்பதைக் கூறவா வேண்டும்? பதிப்புக் குழுவினரின் ஆர்வமும் அயராத உழைப்புமே இதை நிறைவேற்றி வைத்துள்ளது. அன்றியும் இதற்குப் பல்லாயிரம் ரூபாய்கள் செலவா கின்றன. அவ்வழியிலும் சிரமம் ஏற்படாமல் பற்பல தொழிலகங்கள் மிக்க பரிவுடன் விளம்பரக் கட்டணம் தந்து பேருதவி புரிந்தன.

கலைக்காட்சி அமைப்புக்கும், கையேடு வெளியீட்டுக்கும் சிறிதும் மனங் கோணுமல், சலியாமல் உதவியவர்கள் பலர்.

தமிழக அரசு,
இந்து அறநிலைத்துறை,
ஸ்ரீவில்லிபுத்தூர், மதுரை,
அழகர் கோயில், பிள்ளையார்பட்டி,
காரைக்குடி, திருவரங்கம்,
சிக்கல், மயிலை, திருவல்லிக்கேணி

முதலான திருக்கோயில்கள்,

கொரக்கோட்டை சமணர் கோயில்,
மத்திய அரசுத் தொல்பொருள்–துறை,
சென்னைப் பல்கலைக் கழகம்,
தமிழக அரசு பொருட்காட்சிசாலை,
தமிழக அரசு தொல்பொருள்–துறை,
தமிழக அரசு தொல்லேட்டுப் பதிவகம்,
தமிழக அரசு தொழிற்துறை,
தமிழக அரசு கூட்டுறவுத் துறை,

தமிழக அரசு பழஞ்சுவடி நூலகம்,
கன்னிமரா நூலகம்,
அடையாறு பிரம்மஞான சங்க நூலகம்,
கரந்தைத் தமிழ்ச்சங்கம்,
சங்கீத வித்தியாலயம்,

போன்ற எத்தனையோ அமைப்புகள் உதவியுள்ளன.

திருவாளர்களான
கூ. ரா. ஸ்ரீநிவாசன் அவர்கள்
கே. வி. சௌந்தரராசன் அவர்கள்
கே. வி. ராமன் அவர்கள்
நாகபுரி எஸ். ஆர். ராவ் அவர்கள்

ஆகியோர் கலைக்காட்சியின் அமைப்புக்குப் பேருதவி புரிந்துள்ளார்கள். இக் கையேட்டில் வெளியாகியுள்ள பல கட்டுரைகளையும் உபகரித்தவர்கள் பலர். கையேட்டைப் பதிப்பதற்கு வேண்டிய உதவிகளைச் செய்தவர்கள் சென்னை எலிகண்ட் பப்ளிஸிடீஸ். அச்சு வேலையை அழகுறச் செய்தவர்கள் கபீர் அச்சகத்தார்.

கலைக் காட்சிக்கு அன்புடன் தங்கள் தேர்வு மண்டபத்தைத் தந்து உதவியவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்தார். மேலும் பல பொருள்கட்கு இடம் போதாக்குறை அகலத் தங்கள் அலுவல் மனை முன்றில் இடத்தை அன்புடன் தந்துதவியதுடன் தங்கள் விருந்தினரில்லத்து அறைகளையும் பயன்படுத்திக்கொள்ளத் தமிழக பாரத சாரண சாரணீயர் சங்கத்தினர் பரிவுடன் அனுமதித்தனர்.

மாமல்லபுரம் வை. கணபதி ஸ்தபதி அவர்களும் அவர் உதவியாளர் களும் பல்வேறு படிமங்கள் படைப்பதற்கும் பட ஓவியங்கள் வரைவதற்கும் பேருதவி புரிந்திருக்கின்றனர். படிமத் தொழிலறிஞர் கே. ஸ்ரீநிவாசலு அவர்கள் பல பதுமைகள் அணிகள் செய்ய அரிய உதவி செய்துள்ளார்.

இலக்கியக் காட்சிப் படங்களை மீ. ப. சோமசுந்தரம் அவர்கள் பல ஓவியர்களின் துணைக்கொண்டு தீட்டியுள்ளார். கப்பற் படங்களை எல்லாம் சாத்தான்குளம் அ. ராகவன் அவர்கள் அருமையாக ஆக்கி அளித்துள்ளார்.

பல்வேறு பொருள்களையும் பல்வேறிடங்களிலிருந்து கொணரப் போதிய பாதுகாப்பளித்ததுடன் கலைக் காட்சியைக் காத்துப் பணியாற்றும் பெரும் பொறுப்பை ஏற்றுக் காவல் துறைப் பேரதிகாரிகளான அருள் அவர்கள், குப்புசாமி அவர்கள் மற்றும் பல அதிகாரிகள் எல்லாரும் சலியாத உதவி களைச் செய்து தருகிறார்கள்.

எல்லாவற்றிற்கும் அடிப்படையாகத் தமிழக முதலமைச்சர் மாண்பு மிகு அறிஞர் அண்ணா அவர்களும், அவர்கட்கு உறுதுணையாக அரும்பணி

யாற்றும் அமைச்சர்கள் யாவரும் இப்பணிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து நிற்கிறார்கள்.

இவர்கட்கெல்லாம் கலைக் காட்சிக் குழுவினராகிய நாங்கள் உள்ளம் நிறைந்த நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறோம்.

இன்று இந்தக் கலைக்காட்சித் திறப்பு விழாவிற்குச் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர். ஆ. இலக்குமணசாமி முதலியார் அவர்கள் தலைமை தாங்கவும், அரசியற் பெரும் புலவர் மாமேதை இராஜாஜி அவர்கள் கலைக் காட்சியைத் திறந்து வைக்கவும் அமைந்தது எல்லார்க்கும் மகிழ்ச்சி தருவதாகும். இவ்விரு பெரியார்கட்கும் எங்கள் மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இந்தக் கையேட்டை வெளியிட அன்புடன் இசைந்த தமிழக முதல்வர் மாண்பு மிகு அறிஞர் அண்ணா அவர்கட்கு நாங்கள் பெரிதும் நன்றி கூறி மகிழ்கிறோம்.

காலக் குறைவாலும், எங்களின் கவனக் குறைவாலும், திறமைக் குறைவாலும் பிற வேறு காரணங்களாலும் எத்தனையோ குறைகளும், பிழைகளும் ஏற்பட்டிருக்கலாம். அவற்றை எல்லாம் மன்னித்துக் குற்றம் களைந்து குறைபெய்து கொள்ளக் கற்றறிந்த மேலோரைக் கை கூப்பி வேண்டுகிறோம்.

சென்னை
3–1–1968

அன்பும் பணிவுமுள்ள
**சா. கணேசன்,**
கலைக் காட்சிக் குழுத் தலைவன்.

# கருத்துரைகள்

மகிழ்ச்சிப் பெருக்கெடுக்க தமிழக மாந்தர் தலைநகரில் கூடு கின்றனர், உலகத் தமிழ் மாநாடு காண — செவிக்கும் சிந்தைக்கும் தேன் விருந்து தேட !

பல்வேறு நாடுகளின் அறிவுசால் பெருமக்கள் தொல்புகழ் கொண்ட தமிழின் சிறப்புக்களையெல்லாம் விவாதித்திட — அதன் வாயிலாக விளக்கமளித்திட-அமைகின்ற கருத்தரங்கும், தமிழ்மக்கள் பல்லாயிரவர் ஏழுநாட்கள் குழுமியிருந்து தம் மொழிச்சுவையினைப் பருகிடும் வண்ணம் உருவாக்கப்படும் எழில்மிகு மாநாடும், இதற்கெலாம் மேலும் சீர்கூட்டுவதுபோல் வரலாற்றுப் பெருமை கொண்ட கலைக்காட்சியும், உலகத் தமிழ் மாநாட்டின் தலையாய நிகழ்ச்சிகளாகும்.

கலைக்காட்சியினைக் கருத்துக்காட்சியாக்கி புதிய உணர்வு — புதிய வலிவு — புதிய பொலிவு — தமிழகத்தில் தோன்றிடும் வகையில் திரு. சா. கணேசன் அவர்களும் அவர்தம் கலைக்காட்சிக் குழுவினரும் முயன்று வெற்றி குவித்துள்ளனர். புதைந்து கிடந்த கலைச்செல்வங் களைக் கொணர்ந்து சேர்ப்பதிலும் — சங்க இலக்கிய காலத்திற்கு நம்மை யெலாம் அழைத்துச் சென்று அகமகிழச் செய்திடும் அளவில் காட்சிப் பொருள்கள் — நூல்கள் — ஓவியங்கள் ஆகியவற்றை வகைப்படுத்திக் காட்டுவதிலும் அவர்களின் ஆற்றல் பெரிதும் பயன்பட்டிருக்கிறது.

மாநாட்டிற்கு வந்து திரும்பும் தாயகத்தாரும், பிற நாட்டாரும் என்றென்றும் நெஞ்சில் பதிய வைத்துக்கொள்ளும் அரிய முயற்சி இந்தக் கலைக்காட்சி.

இதன் வாயிலாகப் பெறும் அறிவாற்றல், தமிழை — தமிழரை — தமிழ கத்தை மேலும் வளமடையச் செய்யும் என்பதில் துளியும் ஐயமில்லை. கலைக்காட்சிக் குழுவினரின் ஆர்வத்துக்கும் திறமைக்கும் என் பாராட்டுக்கள்.

அண்ணாதுரை
1-1-68

உலகத் தமிழ் மாநாட்டினை ஒட்டி நிறுவப்பெற்றுள்ள கலைக் காட்சியின் சார்பாகக் கலைக் காட்சிக் குழுவினர் அழகும், கவர்ச்சியும் மிக்க 'கையேடு' ஒன்றினை வெளியிட்டிருப்பது போற்றிப் பாராட்டி வாழ்த்தி வரவேற்கக் தக்கதாகும்.

தமிழரின் நாகரிகச் சிறப்பையும், பண்பாட்டு மேன்மையையும், கலைத் திறமையையும், பழக்க வழக்க உயர்வையும், தமிழ் மொழியின் அருமை பெருமைகளையும் சிறப்பாக விளக்கிக் காட்டும் முறையில் கட்டுரைகளும், கவிதைகளும், ஓவியங்களும், நிழற்படங்களும் அழகாக இடம் பெற்றிருக்கின்றன.

இதுவரையில் தமிழகத்தில் அமைந்திராத அளவுக்கு மிகச் சிறப்பான முறையில் கலைக்காட்சியையும் அமைத்துக், கையேட்டினையும் கொண்டு வந்திருக்கும் உயர் திரு. சா. கணேசன் அவர்களையும், அவர்களோடு சேர்ந்து அரும் பணியாற்றியுள்ள ஏனைய குழு உறுப் பினர்களையும் மனமார, வாயாரப் பாராட்டுகிறேன்.

'கையேடு' கலைக் காட்சிக்கு வழி காட்டுவதாகவும், விளக்கம் கூறுவதாகவும் அமைந்திருப்பதோடு மட்டு மல்லாமல், என்றென்றும் கருத்துக் களஞ்சியமாக இருந்து பயன்படுவதாகவும் விளங்குகிறது.

சுருங்கக் கூறினால் 'கையேடு' கருத்தேடாகவும், கவினேடாகவும் விளங்குகிறது என்று கூறவேண்டும்.

கலைக் காட்சிக் குழுவினரின் முயற்சியும், தொண்டும் வெல்க!

**இரா. நெடுஞ்செழியன்**
1–1–68



உலகத் தமிழ் மாநாட்டினை யொட்டி, தமிழ்த் திரு. சா. கணேசன் அவர்களைத் தலைவராகக் கொண்டு அமைந்துள்ள குழுவினர் நடாத்தும் கலைக்காட்சிக்கு முடி புனைவது போல இந்தக் கையேடு அமைந்துள்ளது. 'கையேடு' என, இதற்குப் பெயர் எனினும், இஃதோர் கருத்துக் கருவூலம்; இலக்கியப் பேழை. சங்க காலத்தை, தமிழரின் சரித்திர காலத் தொடக்கத்தை, இன்னோரன்ன சிறப்புறு செய்திகளை யெல்லாம் புலவர் பெருமக்கள் இந்த எழிலார் ஏட்டின் வாயிலாகத் தமிழ் உலகுக்குத் தந்துள்ளனர். மணங் கமழும் இந்த ஏடு தமிழர் மன மெலாம் தமிழ் கமழச் செய்யும் என்பதில் ஐயமில்லை.

முயற்சிக்குப் பாராட்டு; ஆர்வத்திற்கு வாழ்த்து; தமிழ்த் தாய்க்கு என் தலை தாழ்ந்த வணக்கம்.

அன்புள்ள

**மு. கருணாநிதி**
1–1–68

## உள்ளுறை

# தமிழ் எழுத்துகள்

## அன்று முதல் இன்று வரை

சா. கணேசன்

தமிழ் மொழியின் எழுத்துக்கள் தொடக்க முதலே இன்று காணப் பெறுவது போன்ற வரிவடிவத்தையே கொண்டிருந்தனவா? இல்லை என்றால், பண்டைய வடிவம் எப்படி இருந்தது? தொடக்க காலத்து எழுத்து இன்றுள்ள நிலைக்கு வருவதற்கு இடையில் ஓரிரு மாற்றங்களையே அடைந்தனவா, அல்லது பல மாற்றங்களை அவ்வப்பொழுது பெற்றே இன்றைய நிலைக்கு வந்தனவா?

இவற்றை யெல்லாம் நாம் தெரிந்து கொள்ளுவது பயனுடையதாக இருக்கு மல்லவா? பண்டைய எழுத்துக்கள் எப்படி இருந்தன என்பதை எங்ஙனம் அறிய முடியும்? அகத்தியன், தொல்காப்பியன், வள்ளுவன், இளங்கோ, கம்பன் ஆகியோர் எழுதிய ஏடுகள் இருந்தால் அவற்றை நோக்கி அறியலாம். ஆயிரம் இரண்டாயிரம் ஆண்டுகள் வரை ஏடுகளைக் கெடாமல் காப்பாற்ற முடிந்திருந்தால் அக்காலத்து எழுத்துக்களை இன்றும் நாம் காணற்கூடும். ஆனால் அவைதாம் அழிந்து போய் விட்டனவே! எனவே, வேறு வழியைத்தான் நாடவேண்டும்.

அப்படியானால் வேறு வழி என்ன? "இளமையிற் கல்வி சிலையின் எழுத்து" என்ற முதுமொழியைக் கேட்டிருக்கிறீர்களல்லவா? அதன் பொருள் என்ன? "பாலப் பருவத்திலே கற்ற கல்வி, கல்லில் தோண்டிய எழுத்தைப் போல, அழியாமல் நிலைபெறும்" என்பது தானே? இதிலிருந்து கல்லில் எழுதும் முறையொன்று உண்டு என்பதும், அது அழியாத தன்மையுள்ளது என்பதும், தெரியவருகிறதல்லவா? ஆம்; நம் முன்னோர் நிலையாக இருக்க வேண்டிய செய்திகளை மலைப் பாறைகளிலும், குகைகளிலும், குடைவரை களிலும், கோயிலின் கற்சுவர்களிலும் பொறித்து வைத்துள்ளார்கள்.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட எழுத்துக்கள், கல்லில் பொறிக்கப்பட்ட தாலேதான், இன்றும் அழியாமல் நிலைத்து விளங்குகின்றன. அவற்றை வரலாற்றுத் துறையினர் 'கல்வெட்டு', 'கல்லெழுத்து', 'சிலாசாசனம்', என்றெல்லாம் கூறுவர்.

அவற்றுள் மிக மிகப் பழமையானவை என்று கருதப்படுபவை பண்டைக் குகை களில் காணப்படும் எழுத்துக்களாகும். அவை கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்று கல்வெட்டாராய்ச்சியாளர் கணித்துரைப்பார்கள். அதாவது அவை சுமார் 2300 ஆண்டுகட்கு முந்தியவை. இவற்றைப் பிராமி எழுத்துக்கள் என்று பல அறிஞர்கள் தொடக்க காலத்தில் மயங்கினர். ஆனால், அவை தமிழ் எழுத்துக்களே என்று சான்று களுடன் முதலில் உலகுக்குப் புலப்படுத்தியவர் கே. வி. சுப்ரமணிய ஐயர் அவர்களே. அவற்றை முற்காலத்தில் 'தாமிழி' என்று பிற மொழியினர் வழங்கினர். இந்தத் 'தாமிழி' எழுத்தே பிற பல மொழிகட்கும் வரிவடிவை அளித்தன என்றும் ஒரு சார் அறிஞர் கருதுவர்.

கி. மு. மூன்றாம் நூற்றாண்டை ஒட்டிய அவ்வகை எழுத்துக்கள் சித்தன்னவாசல், மாங்குளம், அழகர் மலை முதலிய இடங்களில் உள்ள பாறைகளில் காணப்படுகின்றன. அவ்வகை எழுத்துக்களைப் பின்னே காட்டப்பட்டிருக்கும் எழுத்துப் படங்கள் இரண்டிலும் முதல் வரியில் காணலாம்.

| நூற்றாண்டு Century | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கி. மு. 3 | | | | | | | | | | | |
| கி. பி. 2 | | | | | | | | | | | |
| கி. பி. 3 | | | | | | | | | | | |
| கி. பி. 4 | | | | | | | | | | | |
| கி. பி. 5 | | | | | | | | | | | |
| கி. பி. 6 | | | | | | | | | | | |
| கி. பி. 7 | | | | | | | | | | | |
| கி. பி. 8 | | | | | | | | | | | |
| கி. பி. 9 | | | | | | | | | | | |
| கி. பி. 10 | | | | | | | | | | | |
| கி. பி. 11 | | | | | | | | | | | |
| கி. பி. 12 | | | | | | | | | | | |
| கி. பி. 13 | | | | | | | | | | | |
| கி. பி. 14 | | | | | | | | | | | |
| கி. பி. 15 | | | | | | | | | | | |
| கி. பி. 16 | | | | | | | | | | | |
| கி. பி. 17 | | | | | | | | | | | |
| கி. பி. 18 | | | | | | | | | | | |
| கி. பி. 19 | | | | | | | | | | | |

| நூற்றாண்டு Century | க் | ங் | ச் | ஞ் | ட் | ண் | த் | ந் | ப் | ம் | ய் | ர் | ல் | வ் | ழ் | ள் | ற் | ன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கி.மு. 3 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 2 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 3 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 4 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 5 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 6 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 7 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 8 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 9 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 10 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 11 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 12 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 13 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 14 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 15 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 16 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 17 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 18 | | | | | | | | | | | | | | | | | | |
| கி.பி. 19 | | | | | | | | | | | | | | | | | | |

கி. மு. மூன்றாம் நூற்றாண்டுக்கும் கி. பி. இரண்டு அல்லது மூன்றாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் வரிவடிவில் குறிப்பிடத் தக்க பெருமாற்றம் எதுவும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. கி. பி. மூன்றாம் நூற்றாண்டை ஒட்டிக் குறிப்பிடத் தக்க மாற்றம் பெறத் தொடங்கியதைக் காணுகிறோம். ஆனால், மெய், உயிர்மெய் எழுத்துக்களில் ஏற்பட்டுள்ள மாற்றம் உயிர் எழுத்தில் ஏற்படவில்லை. உயிர் எழுத்தில் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டை ஒட்டியே மாற்றம் ஏற்படலாயிற்று எனத் தெரிகிறது. அதன் பின் உயிர், மெய், உயிர்மெய் யெழுத்துக்கள் யாவும் படிப்படியாய் வளர்ச்சி பெறத் தொடங்கியிருப்பது நன்கு புலப்படுகிறது.

முற்காலப் பாண்டியர், சோழர்களின் காலத்திற்குப் பின் பல்லவர் காலத்தை ஒட்டியே (அதாவது கி.பி. 600க்கு மேல்) தமிழ் எழுத்துக்களின் வரிவடிவம் செம்மை நெறியில் வளரத் தொடங்கிற்று. அவை பிற்காலப் பல்லவர் காலத்தில் ஒருநிலை வடிவை அடையலாயின. இது கி.பி. 750ஐ ஒட்டி என்று கொள்ளலாம். இப்படியே தமிழ் மொழி எழுத்துக்களின் வரிவடிவம் படிப்படியாய் வளர்ந்து வந்திருக்கிறது.

கி.பி. 9ஆம் நூற்றுண்டை ஒட்டிய பாண்டியர், சோழர் காலத்துக் கல்வெட்டுகளில் காணப்படுகிற எழுத்துக்கள் ஒருநிலை வடிவுடன் வனப்பும் பெற்று விளங்குகின்றன.

கி.பி. 12ஆம் நூற்றுண்டுக்குப் பின்னர் எழுத்துக்கள் இன்றைய எழுத்துக்களின் தொடக்க அமைப்பைப் பெரும்பாலும் பெற்றுவிட்டன என்று கூறலாம். கி.பி. 18ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் தமிழகத்திலிருந்து தமிழ் மொழிக்கு அரும்பணி யாற்றிய வீரமாமுனிவர் ஆகிய கொன்ஸ்டான்ஸ் ஜோஸெப் பெஷ்ஷி (Constanzo Giuseppe Beschi) தமிழ் வரிவடிவில் உள்ள சில சங்கடங்களைப் போக்கினுர்.

கால், ரகரம் இரண்டையும் ா எனவே எழுதியதை மாற்றி ரகரம் எழுதும்போது காலின் கீழே ஒரு சிறிய கோடு சேர்த்து ர என ஆக்கினுர். எகரம், ஏகாரம் இரண்டையும் எ என்றே எழுதி வந்ததை மாற்றி ஏகாரத்தைக் குறிக்க ஒரு சிறு அடிக்கோடு சேர்த்து ஏ என அமைத்தார். அப்படியே எகரம், ஏகாரக் குறியீடு இரண்டிற்கும் ெ என, ஒரு சுழி ஒன்றைக் கொம்பையே எழுதி வந்ததை மாற்றி ஏகாரத்தைக் குறிக்கும் பொழுது ே என, இரு சுழி ஒற்றைக் கொம்பை ஆக்கினுர்.

"மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்" என்று தொல்காப்பியம் பேசுகிறது. பல கல்வெட்டுக்களில் மெய்யெழுத்தின் மேற் புள்ளி காணப்படுகிறது. ஆயினும் ஓலை முதலியவற்றில் புள்ளி காணப்பெறுவதில்லை. அதையும் நடைமுறையில் கடைப்பிடிக்க வழி காட்டினுர். அவை எல்லாம் இன்று நமக்குச் சாதாரணமான ஒன்று என்றே தோன்றினுலும் அதனுல் ஏற்பட்ட பெரும்பயனைச் சிந்திக்கும் போதுதான் அதன் அருமைப்பாடு நமக்குப் புலப்படும்.

அதன் பிறகு கூட, அதாவது, கி.பி. 19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதிவரை, தலைப் புள்ளியும், ரகரக் கீழ்க் கோடும் பரவலாக எங்கும் கையாளப்பட்டதாகத் தெரியவில்லை. 19ஆம் நூற்றுண்டில் எழுதிய கடிதங்கள், கணக்குகள், கையெழுத்துக் காகிதப் புத்தகங்கள் ஆகியவற்றில் மெய்யின் தலைப்புள்ளி காணப்படவில்லை. ஓலையில் எழுதிவந்த பழக்கமே புள்ளியிடாமைக்குக் காரணமாக இருந்திருக்கலாம். ர வை எழுதும்போது ா போட்டு அதன் தலையில் ஒரு கோடிட்டு ா̄ என்று பிரித்துணர்த்தி வந்திருக்கின்றனர்.

சென்ற நூற்றுண்டு வரை நம் மொழியின் எழுத்துக்கள் எப்படி எல்லாம் மாற்றம் பெற்றுத் திருந்தி வந்துள்ளன என்பதை மேற்போக்காக ஓரளவு கண்டோம். அச்சு முதலிய வசதிகள் பெருகியுள்ள காரணத்தால் நம்மொழி எழுத்துக்களின் தோற்றத்தில், இனி, பெருத்த அளவு மாற்றம் ஏற்படமாட்டாது என்று நம்பலாம். ஆனுல் குறியீடு முதலியவற்றில் விரும்பத்தக்க மாற்றம் வேண்டும். அதற்குத் தமிழ்த்தாயின் நன் மைந்தர்கள் விருப்பு வெறுப்பற்ற நிலையில் நின்று சிந்தித்து முடிவெடுக்க வேண்டும்.

தமிழக அரசும், பல்கலைக் கழகங்களும், இத்துறையில் ஈடுபட வேண்டும் என்பதே எளியேன் வேண்டுதல்.

# தமிழ் எண்ணும், இலக்கமும். கல்வெட்டுக்களில் கண்டவண்ணம்

[சா. கணேசன்]

| இந்திய எண் | A.D. 2.C. | A.D. 3.C. | A.D. 4.C. | A.D. 10.C. | A.D. 11.C. | A.D. 13.C. | A.D. 15.C. | A.D. 18.C. | A.D. 20.C |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| அல்லது அராபிய எண் | கி.பி 2.ம் | கி.பி 3.ம் | கி.பி 4.ம் | கி.பி 10.ம் பாண் | கி.பி 11.ம் சோ. | கி.பி 13.ம் சோழ | கி.பி 15.ம் பாண் | கி.பி 18.ம் | இன்று |
| 1/16 | ? | ? | ? | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| 1/8 | ? | ? | ? | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| 1/4 | ? | ? | ? | வ | வ | வ | வ | வ | வ |
| 1/2 | ? | ? | ? | [illegible] | [illegible] | [illegible] | இ | இ | இ |
| 3/4 | ? | ? | ? | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| 1 | — | \ | \ | + | + | [illegible] | ௧ | ௧ | ௧ |
| 2 | = | = | // | 2 | 2 | 2 | ௨ | ௨ | ௨ |
| 3 | ≡ | ≡ | /// | [illegible] | [illegible] | [illegible] | ௩ | ௩ | ௩ |
| 4 | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | ௪ | ௪ | ௪ | ௪ |
| 5 | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | ௫ | ௫ | ௫ | ௫ |
| 6 | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | ௬ | ௬ | ௬ | ௬ |
| 7 | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | ௭ | ௭ | ௭ | ௭ |
| 8 | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | ௮ | ௮ | ௮ |
| 9 | [illegible] | [illegible] | ? | [illegible] | [illegible] | ௯ | ௯ | ௯ | ௯ |
| 10 | [illegible] | [illegible] | ? | ௰ | ௰ | ௰ | ௰ | ௰ | ௰ |
| 100 | [illegible] | [illegible] | ? | [illegible] | [illegible] | [illegible] | ௱ | ௱ | ௱ |
| 1000 | [illegible] | [illegible] | ? | [illegible] | [illegible] | [illegible] | ௲ | ௲ | ௲ |

# சங்க காலப் புலவர்கள்

['சங்க இலக்கியம்']

1. அகம்பன் மாலாதனார்
2. அஞ்சியத்தை மகள் நாகையார்
3. அஞ்சில் அஞ்சியார்
4. அஞ்சில் ஆந்தையார்
5. அடைநெடுங்கல்வியார்
6. அணிலாடு முன்றிலார்
7. அண்டர் மகன் குறுவழுதியார்
8. அதியன் விண்ணத்தனார்
9. அந்தி இளங்கீரனார்
10. அம்மூவனார்
11. அம்மெய்யன் நாகனார்
12. அரிசில் கிழார்
13. அல்லங் கீரனார்
14. அழிசி நச்சாத்தனார்
15. அள்ளூர் நன்முல்லையார்
16. அறிவுடைநம்பி
17. ஆசிரியன் பெருங்கண்ணன்
18. ஆடுதுறை மாசாத்தனார்
19. ஆதிமந்தி
20. ஆரிய அரசன் யாழ்ப்பிரமதத்தன்
21. ஆர்க்காடு கிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார்
22. ஆலங்குடி வங்கனார்
23. ஆலத்தூர் கிழார்
24. ஆலம்பேரி சாத்தனார்
25. ஆவியார்
26. ஆவூர் கிழார்
27. ஆவூர் கிழார் மகனார் கண்ணனார்
28. ஆவூர்க் காவிதிகள் சாதேவனார்
29. ஆவூர் மூலங் கிழார்
30. இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார்
31. இடைக்காடனார்
32. இடைக்குன்றூர் கிழார்
33. இடையன் சேந்தன் கொற்றனார்
34. இடையன் நெடுங்கீரனார்
35. இம்மென் கீரனார்
36. இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனார்
37. இருங்கோன் ஒல்லையாயன் செங்கண்ண [னார்
38. இருந்தையூர்க் கொற்றன் புலவன்
39. இரும்பிடர்த்தலையார்
40. இளங் கீரந்தையார்
41. இளங் கீரனார்
42. இளநாகனார்
43. இளந்திரையன்
44. இளந் தேவனார்
45. இளம்புல்லூர்க் காவிதி
46. இளம்பூதனார்
47. இளம்பெருவழுதி
48. இளம்போதியார்
49. இளவெயினனார்
50. இறங்குகுடிக் குன்றநாடன்
51. இறையனார்
52. இனிசந்த நாகனார்
53. ஈழத்துப் பூதன்தேவனார்
54. உகாய்க்குடி கிழார்
55. உக்கிரப் பெருவழுதி
56. உமட்டூர் கிழார் மகனார் பரங்கொற்றனார்
57. உம்பற்காட்டு இளங்கண்ணனார்
58. உருத்திரனார்
59. உலோச்சனார்
60. உவர்க்கண்ணூர்ப் புல்லங்கீரனார்
61. உழுந்தினைம் புலவர்
62. உறையனார்
63. உறையூர் இளம்பொன் வாணிகனார்
64. உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்
65. உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார்
66. உறையூர்ச் சல்லியங் குமரனார்
67. உறையூர்ச் சிறுகந்தனார்
68. உறையூர்ப் பல்காயனார்
69. உறையூர் மருத்துவன் தாமோதரனார்
70. உறையூர் முதுகண்ணன் சாத்தனார்
71. ஊட்டியார்
72. ஊண்பித்தை
73. ஊன்பொதி பசுங்குடையார்
74. எயிற்றியனார்
75. எயினந்தையார்
76. எருமை வெளியனார்

77. எருமை வெளியனார் மகனார் கடலனார்
78. எழூஉப்பன்றி நாகன்குமரனார்
79. ஐயாதிச் சிறுவெண்தேரையார்
80. ஐயூர் முடவனார்
81. ஐயூர் மூலங்கிழார்
82. ஒக்கூர் மாசாத்தனார்
83. ஒக்கூர் மாசாத்தியார்
84. ஒருசிறைப் பெரியனார்
85. ஒரூஉத்தனார்
86. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்
87. ஓதஞானி
88. ஓதலாந்தையார்
89. ஓரம்போகியார்
90. ஓரிற்பிச்சையார்
91. ஓரேருழவர்
92. ஔவையார்
93. கங்குல் வெள்ளத்தார்
94. கச்சிப்பேட்டு இளந்தச்சனார்
95. கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றனார்
96. கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார்
97. கடம்பனூர்ச் சாண்டிலியன்
98. கடலூர்ப் பல்கண்ணனார்
99. கடியலூர் உருத்திரங்கண்ணனார்
100. கடுந்தொடைக் காவினார்
101. கடுந்தோட் கரவீரன்
102. கடுவன் இளமள்ளனார்
103. கடுவன் இளவெயினனார்
104. கடுவன் மள்ளனார்
105. கணக்காயன் தத்தனார்
106. கணியன் பூங்குன்றனார்
107. கண்ணகனார்
108. கண்ணகாரன் கொற்றனார்
109. கண்ணங்கொற்றனார்
110. கண்ணம் புல்லனார்
111. கண்ணனார்
112. கதக்கண்ணனார்
113. கதப்பிள்ளையார்
114. கந்தரத்தனார்
115. கபிலர்
116. கயத்தூர் கிழார்
117. கயமனார்
118. கருங்குழலாதனார்
119. கரும்பிள்ளைப் பூதனார்
120. கருவூர் கிழார்
121. கருவூர்க் கண்ணம்பாளனார்
122. கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார்
123. கருவூர்க் கலிங்கத்தார்
124. கருவூர்க் கோசனார்
125. கருவூர்ச் சேரமான் சாத்தன்
126. கருவூர் நன்மார்பனார்
127. கருவூர்ப் பவுத்திரனார்
128. கருவூர்ப் பூதஞ்சாத்தனார் [னார்
129. கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாத
130. கல்பொரு சிறுநுரையார்
131. கல்லாடனார்
132. கவைமகன்
133. கழாத்தலையார்
134. கழார்க்கீரன் எயிற்றியனார்
135. கழார்க்கீரன் எயிற்றியார்
136. கழைதின் யானையார்
137. கள்ளிக்குடிப் பூதம் புல்லனார்
138. கள்ளில் ஆத்திரையனார்
139. காக்கைபாடினியார் நச்செள்ளையார்
140. காசிபன் கீரன்
141. காட்டூர்கிழார் மகனார் கண்ணனார்
142. காப்பியஞ் சேந்தனார்
143. காப்பியாற்றுக் காப்பியனார்
144. காமஞ்சேர் குளத்தார்
145. காரிகிழார்
146. காலெறி கடிகையார்
147. காவட்டனார்
148. காவற்பெண்டு
149. காவன்முல்லைப் பூதனார்
150. காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரத்தனார்
151. காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ண
னார்
152. காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார்
153. காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தன்
கண்ணன்
154. காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வாணிக
னார் மகனார் நப்பூதனார்
155. கிடங்கில் காவிதிக் கீரங்கண்ணனார்
156. கிடங்கில் காவிதிப் பெருங்கொற்றனார்
157. கிடங்கில் குலபதி நக்கண்ணனார்
158. கிள்ளி மங்கலங்கிழார் [னார்
159. கிள்ளி மங்கலங்கிழார் மகனார் சேரகோவ
160. கீரங்கீரனார்
161. கீரந்தையார்
162. குடபுலவியனார்
163. குடவாயிற் கீரத்தனார்
164. குட்டுவன் கண்ணனார்
165. குட்டுவன் கீரனார்
166. குண்டுகட் பாலியாதனார்
167. குதிரைத் தறியனார்
168. குப்பைக் கோழியார்
169. குமட்டூர்க் கண்ணனார்
170. குமுழிஞாழலார் நப்பசலையர்
171. குழற்றத்தனார்

172. குளம்பனூர்
173. குளம்பாதாயனூர்
174. குறமகள் இளவெயினி
175. குறமகள் குறியெயினி
176. குறியிறையார்
177. குறுங்கீரனூர்
178. குறுங்குடி மருதனூர்
179. குறுங்கோழியூர் கிழார்
180. குன்றம் பூதனூர்
181. குன்றியனூர்
182. குன்றூர்கிழார் மகனூர்
183. கூகைக்கோழியார்
184. கூடலூர் கிழார்
185. கூடலூர்ப் பல்கண்ணனூர்
186. கூவன்மைந்தன்
187. கூற்றங் குமரனூர்
188. கேசவனூர்
189. கொடிமங்கலத்து வாதுளி நற்சேந்தனூர்
190. கொட்டம்பலவனூர்
191. கொல்லன் அழிசி
192. கொல்லிக்கண்ணன்
193. கொள்ளம்பக்கனூர்
194. கொற்றங்கொற்றனூர்
195. கோக்குளமுற்றனூர்
196. கோடைபாடிய பெரும்பூதனூர்
197. கோட்டம்பலத்துத் துஞ்சிய சேரமான்
198. கோட்டியூர் நல்லந்தையார்
199. கோண்மா நெடுங்கோட்டனூர்
200. கோப்பெருஞ்சோழன்
201. கோவர்த்தனூர்
202. கோவூர் கிழார்
203. கோவேங்கைப் பெருங்கதவனூர்
204. கோழிக் கொற்றனூர்
205. கோளியூர்கிழார் மகனூர் செழியனூர்
206. கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனூர்
207. சங்கவருணர் என்னும் நாகரியர்
208. சத்திநாதனூர்
209. சல்லியங் குமரனூர்
210. சாகலாசனூர்
211. சாத்தந்தையார்
212. சாத்தனூர்
213. சிறு மோலிகனூர்
214. சிறுவெண்தேரையார்
215. சிறைக்குடி ஆந்தையார்
216. சீத்தலைச் சாத்தனூர்
217. செங்கண்ணனூர்
218. செம்பியனூர்
219. செம்புலப் பெயனீரார்
220. செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனூர்
221. செய்தி வள்ளுவன் பெருஞ்சாத்தன்
222. செல்லூர்கிழார் மகனூர் பெரும்பூதங் கொற்றனூர்
223. செல்லூர்க் கோசிகன் கண்ணனூர்
224. சேந்தங் கண்ணனூர்.
225. சேந்தம் பூதனூர்
226. சேந்தன் கீரனூர்
227. சேரமானெந்தை
228. சேரமான் இளங்குட்டுவன்
229. சேரமான் கணைக்காலிரும்பொறை
230. சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை [யார்
231. சோணாட்டு முகையலூர்ச் சிறுகருந்தும்பி
232. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்
233. சோழன் நலங்கிள்ளி
234. சோழன் நல்லுருத்திரன்
235. தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனூர்
236. தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனூர்
237. தனிமகனூர்
238. தாமப்பல் கண்ணனூர்
239. தாமோதரனூர்
240. தாயங் கண்ணனூர்
241. தாயங் கண்ணியார்
242. திப்புத் தோளார்
243. திருத்தாமனூர்
244. தீன்மதி நாகனூர்
245. தும்பிசேர் கீரனூர்
246. துறைக்குறுமாவிற் பாலங்கொற்றனூர்
247. துறையூர் ஓடைகிழார்
248. தூங்கலோரியார்
249. தேய்புரிப் பழங்கயிற்றினூர்
250. தேரதரன்
251. தேவகுலத்தார்
252. தேவனூர்
253. தொடித்தலை விழுத்தண்டினூர்
254. தொண்டி ஆமூர்ச் சாத்தனூர்
255. தொல் கபிலர்
256. நக்கண்ணையார்
257. நக்கீரர்
258. நப்பசலையார்
259. நப்பண்ணனூர்
260. நப்பாலத்தனூர்
261. நம்பிகுட்டுவன்
262. நரிவெரூஉத்தலையார்
263. நரைமுடி நெட்டையார்
264. நல்லச்சுதனூர்

265. நல்லந்துவனார்
266. நல்லழிசியார்
267. நல்லாவூர் கிழார்
268. நல்லிறையனார்
269. நல்லுருத்திரனார்
270. நல்லூர்ச் சிறு மேதாவியார்
271. நல்லெழுநியார்
272. நல்வழுதியார்
273. நல்விளக்கனார்
274. நல்வெள்ளியார்
275. நல்வேட்டனார்
276. நற்சேந்தனார்
277. நற்றங்கொற்றனார்
278. நற்றமனார்
279. நன்பலூர்ச் சிறு மேதாவியார்
280. நன்னாகனார்
281. நன்னாகையார்
282. நாகம்போத்தன்
283. நாமலார் மகன் இளங்கண்ணன்
284. நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார்
285. நெடுங்கழுத்துப் பரணர்
286. நெடும்பல்லியத்தனார்
287. நெடும்பல்லியத்தை
288. நெடுவெண்ணிலவினார்
289. நெட்டிமையார்
290. நெய்தற் கார்க்கியார்
291. நெய்தற் சாய்த்துய்த்த ஆவூர்கிழார்
292. நெய்தற்றத்தனார்
293. நொச்சி நியமங் கிழார்
294. நோய்பாடியார்
295. பக்குடுக்கை நன்கணியார்
296. படுமரத்து மோசிகீரனார்
297. படுமரத்து மோசிகொற்றனார்
298. பதடிவைகலார்
299. பதுமனார்
300. பரணர்
301. பராயனார்
302. பரூஉமோவாய்ப் பதுமனார்
303. பறநாட்டுப் பெருங்கொற்றனார்
304. பனம்பாரனார்
305. பாண்டரங் கண்ணனார் [செழியன்
306. பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்
307. பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார்
308. பாண்டியன் தலையாலங்கானத்துச்
செருவென்ற நெடுஞ்செழியன்
309. பாண்டியன் பன்னாடு தந்தான்
310. பாண்டியன் மாறன் வழுதி
311. பாரதம் பாடிய பெருந்தேவனார்
312. பாரி மகளிர்
313. பார் காப்பான்
314. பாலைக் கௌதமனார்
315. பாலை பாடிய பெருங்கடுங்கோ
316. பாவைக் கொட்டிலார்
317. பிசிராந்தையார்
318. பிரமசாரி
319. பிரமனார்
320. பிரான் சாத்தனார்
321. புதுக்கயத்து வண்ணக்கன் கம்பூர்கிழார்
322. புல்லாற்றூர் எயிற்றியனார்
323. பூங்கணுத்திரையார்
324. பூங்கண்ணன்
325. பூதங்கண்ணனார் [பெண்டு
326. பூதபாண்டியன்தேவி பெருங்கோப்
327. பூதம்புல்லனார்
328. பூதனார்
329. பூதன்தேவனார்
330. பெருங்கண்ணனார்
331. பெருங்குன்றூர் கிழார்
332. பெருங்கௌசிகனார்
333. பெருஞ்சாத்தனார்
334. பெருஞ்சித்திரனார்
335. பெருந்தலைச் சாத்தனார்
336. பெருந்தேவனார்
337. பெருந்தோட் குறுஞ்சாத்தன்
338. பெரும்பதுமனார்
339. பெரும்பாக்கன்
340. பெருவழுதி
341. பேயனார்
342. பேய்மகள் இளவெயினி
343. பேராலவாயர்
344. பேரிசாத்தனார்
345. பேரெயின் முறுவலார்
346. பொதுக்கயத்துக்கீரந்தை
347. பொதும்பில் கிழார் [யார்
348. பொதும்பில் கிழார் மகனார் வெண்கண்ணி
349. பொதும்பிற் புல்லாளங்கண்ணியார்
350. பொத்தியார்
351. பொய்கையார்
352. பொருந்தில் இளங்கீரனார்
353. பொன்மணியார்
354. பொன்முடியார்
355. பொன்னாகன்
356. போதனார்
357. போந்தைப் பசலையார்
358. மடல்பாடிய மாதங்கீரனார்
359. மதுரை அளக்கர் ஞாழார் மகனார்
மள்ளனார் [இளவேட்டனார்
360. மதுரை அறுவை வாணிகன்

361. மதுரை ஆசிரியர் கோடங் கொற்றனர்
362. மதுரை இளங்கண்ணிக் கௌசிகனர்
363. மதுரை இளங்கௌசிகனர்
364. மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனர்
365. மதுரை ஓலேக்கடைக் கண்ணம் புகுந்தாராயத்தனர்
366. மதுரை ஓலேக்கடையத்தார் நல்வெள்ளேயார்
367. மதுரைக் கடையத்தார் மகன் வெண்ணுகனர்
368. மதுரைக் கணக்காயனர்
369. மதுரைக் கண்டரதத்தனர்
370. மதுரைக் கண்ணத்தனர்
371. மதுரைக் கவுணியன் பூதத்தனர்
372. மதுரைக் கள்ளிற்கடையத்தன் வெண்ணுகனர்
373. மதுரைக் காமக்கணி நப்பாலத்தனர்
374. மதுரைக் காருலவியங் கூத்தனர்
375. மதுரைக் கூத்தனர்
376. மதுரைக் கொல்லன் புல்லன்
377. மதுரைக் கொல்லன் வெண்ணுகனர்
378. மதுரைச் சுள்ளம் போதனர்
379. மதுரைத் தத்தங்கண்ணனர்
380. மதுரைத் தமிழக் கூத்தன் நாகன் தேவனர்
381. மதுரைத் தமிழக் கூத்தனர்
382. மதுரைப் படைமங்க மன்னியார்
383. மதுரைப் பாலாசிரியர் சேந்தன் கொற்றனர்
384. மதுரைப் பாலாசிரியர் நப்பாலனர்
385. மதுரைப் பாலாசிரியர் நற்றமனர்
386. மதுரைப் புல்லங்கண்ணனர்
387. மதுரைப் பூதன் இளநாகனர்
388. மதுரைப் பூவண்ட நாகன் வேட்டனர்
389. மதுரைப் பெருங்கொல்லன்
390. மதுரைப் பெருமருதனர்
391. மதுரைப் பெருமரு திளநாகனர்
392. மதுரைப் போத்தனர்
393. மதுரை மருதங்கிழார் மகனர் சொகுத்தனர்
394. மதுரை மருதங்கிழார் மகனர் பெருங்கண்ணனர்
395. மதுரை மருதங்கிழார் மகன் இளம்போத்தன்
396. மதுரை வேளாசான்
397. மருங்கூர்கிழார் பெருங்கண்ணனர்
398. மருங்கூர்ப் பட்டினத்துச் சேந்தன் குமரனர்
399. மருங்கூர்ப்பாகை சாத்தன்பூதனர்
400. மருதம் பாடிய இளங்கடுங்கோ
401. மருதனிளநாகனர்
402. மலேயனர்
403. மள்ளனர்
404. மாங்குடி மருதனர்
405. மாடலூர் கிழார்
406. மாதீர்த்தன்
407. மாமிலாடன்
408. மாமூலனர்
409. மாயேண்டன்
410. மார்க்கண்டேயனர்
411. மாலேமாறன்
412. மாவளத்தன்
413. மாறோக்கத்துக் காமக்கணி நப்பாலத்தனர்
414. மாறோக்கத்து நப்பசலேயார்
415. மாற்பித்தியார்
416. மிளேக்கந்தன்
417. மிளேப்பெருங்கந்தன்
418. மிளேவேள் தித்தன்
419. மீனெறி தூண்டிலார்
420. முக்கல் ஆசான் நல்வெள்ளேயார்
421. முடங்கிக்கிடந்த நெடுஞ்சேரலாதன்
422. முடத் தாமக்கண்ணியார்
423. முடத் திருமாறன்
424. முதுகூத்தனர்
425. முதுவெங்கண்ணனர்
426. முப்பேர் நாகனர்
427. முரஞ்சியூர் முடிநாகராயர்
428. முள்ளியூர்ப் பூதியார்
429. மூலங் கீரனர்
430. மையோடக் கோவனர்
431. மோசிகண்ணத்தனர்
432. மோசி கீரனர்
433. மோசி கொற்றன்
434. மோசிக் கரையனர்
435. மோசி சாத்தனர்
436. மோதாசனர்
437. வடநெடுந் தத்தனர்
438. வடம வண்ணக்கன் தாமோதரன்
439. வடமோதங்கிழார்
440. வண்ணக்கன் சோரு மருங்குமரனர்
441. வண்ணப்புறக் கந்தரத்தனர்
442. வருமுலேயாரித்தி
443. வன்பரணர்
444. வாடாப்பிரமந்தன்
445. வாயிலான் தேவன்
446. வாயிலிளங் கண்ணன்
447. வான்மீகியார்

448. விட்டகுதிரையார்
449. விரிச்சியூர் நன்னாகனார்
450. விரியூர் நக்கனார்
451. வில்லக விரலினார்
452. விழிக்கட் பேதை பெருங்கண்ணனார்
453. விற்றூற்று மூதெயினனார்
454. விற்றூற்று வண்ணக்கன் தத்தனார்
455. வினைத்தொழில் சோகீரனார்
456. வீரை வெளியனார்
457. வீரை வெளியன் தித்தனார்
458. வெண்கண்ணனார்
459. வெண்கொற்றன்
460. வெண்ணிக் குயத்தியார்
461. வெண்பூதன்
462. வெண்பூதியார்
463. வெண் மணிப்பூதி
464. வெள்ளாடியனார்
465. வெள்ளியந்தின்னனார்
466. வெள்ளி வீதியார்
467. வெள்ளெருக்கிலையார்
468. வெள்ளைக்குடி நாகனார்
469. வெள்ளைமாளர்
470. வெறி பாடிய காமக்கண்ணியார்
471. வேட்டகண்ணன்
472. வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தன்
473. வேம்பற்றூர்க் குமரனார்






# சங்க காலத்து அரசர் முதலியோர்

[‘ சங்க இலக்கியம் ’]

அஃதை (அகுதை)
அக்குரன்
அஞ்சி
அண்டிரன் (ஆய்)
அதிகமான் அஞ்சிமகன் பொகுட்டெழினி
அதிகன்
அதியமான்
அதியமான் எழினி (பொகுட்டெழினி)
அதியமான் நெடுமானஞ்சி (அஞ்சி, அதிகன், அதியன், கடவுள் அஞ்சி, நெடுமிடல்)
அதியர்
அதியன்
அத்தி
அந்துவன்
அந்துவன் கீரன்
அந்துவன் சாத்தன்
அம்பர் கிழான் அருவந்தை
அருவாளர்
அவியன்
அழிசி
அறுகை
அன்னி
அன்னி மிஞிலி
ஆடுகோட் பாட்டுச் சேரலாதன்
ஆட்டனத்தி (அத்தி)
ஆதன் அவினி
ஆதன் அழிசி
ஆதன் எழினி (செல்லிக்கோமான்)
ஆதனுங்கன்
ஆதனோரி
ஆதி அருமன்
ஆதிமந்தி
ஆந்தை
ஆமூர் மல்லன்
ஆய் (அண்டிரன்)
ஆய் எயினன்
ஆரியப் பொருநன்
ஆரியர்
ஆரியவரசன் பிரகத்தன்
ஆரியவண்ணல்
ஆவியர்
இமயவரம்பன் தம்பி (பல்யானைச் செல்கெழு குட்டுவன்)
இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்
இயக்கன்
இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி
இளங்கோ வேண்மான்
இருங்கோவேள் (புலிகடிமால்)
இளங்கண்டீரக்கோ
இளங்குமணன்
இளந்தத்தன்
இளம்பல்கோசர்
இளம்பெருஞ் சென்னி
இளவெளிமான்
இளவிச்சிக்கோ
ஈர்ந்தூர் கிழான் தோயன் மாறன்
உதியன்
உதியஞ்சேரல்
உருவப் பஃறேரிளஞ் சேட்சென்னி
எயினர்
எயினன்
எருமை
எருமையூரன்
எவ்வி (நீடூர் கிழவோன்)
எழினி
எழுமுடி மார்பினெய்திய சேரல் (கடல் பிறக் கோட்டிய செங்குட்டுவன்)
ஏறைக்கோன்
ஏற்றை
ஏனாதி திருக்கிள்ளி
ஐயை
ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன்
ஒளிநாட்டார்
ஓய்மானாட்டு நல்லியக் கோடன்
ஓய்மான் வில்லியாதன்
ஓரி (ஆதனோரி, வல்விலோரி)
ஓவியர்
ஔவை

கஞ்சன்
கடலன்
கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்
கடவுட் பத்தினி (கண்ணகி)
கடவுள்-அஞ்சி
கடியநெடுவேட்டுவன்
கட்டி
கணையன்
கண்டீரக்கோப் பெருநள்ளி
கண்ணகி (பேகன் மனைவி)
கண்ணன் எழினி
கந்தன்
கபிலன்
கரிகாலன்
கரிகால் வளவன்
கரிகாற் சோழன்
கரிகாற் பெருவளத்தான்
கரும்பனூர் கிழான்
கழாத்தலையார்
கழுவுள்
களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல்
கள்வர் பெருமகன்
காரி (தேர்வண்மலையன், மலையமான் திருமுடிக் காரி, மலையன், முள்ளூர் மன்னன்)
காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி
கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி
கானப்பேர் தந்த உக்கிரப்பெருவழுதி
கிள்ளி
கிள்ளிவளவன்
குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறை
குடக்கோ நெடுஞ்சேரலாதன்
குடவர்
குடவர் கோமான் நெடுஞ்சேரலாதன்
குட்டுவர்
குட்டுவன்
குட்டுவன் இரும்பொறை
குட்டுவன்சேரல்
குமணன்
குறும்பியன்
கொங்கர்
கொடுமுடி
கொண்கானங் கிழான்
கொண்கான நன்னன்
கொற்கைக் கோமான்
கோசர்
கோதை
கோதைமார்பன்
கோப்பெருஞ்சோழன்
கோழியோன்
கௌரியர்
சிறுகுடிகிழான் பண்ணன்
செம்பியர்
செம்பியன்
செல்வக் கடுங்கோ
செல்வக் கடுங்கோ வாழியாதன்
செழியன்
சென்னியர்
சேட்சென்னி நலங்கிள்ளி
சேந்தன்
சேரமான் அந்துவஞ்சேரல் இரும்பொறை
சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன்
சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ் சேரல் இரும்பொறை
சேரமான் குடக்கோச் சேரல் இரும்பொறை
சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன்
சேரமான் குட்டுவன் கோதை
சேரமான் கோக்கோதைமார்பன்
சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன்
சேரமான் தகடுரெறிந்த பெருஞ்சேரல் இரும் பொறை
சேரமான் பாமுளூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி
சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ
சேரமான் பெருஞ்சேரலாதன்
சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன்
சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறை
சேரமான் மாரி வெண்கோ
சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை
சேரமான் வஞ்சன்
சேரலர்
சேரலாதன்
சேரல்
சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கவுணியன் விண்ணந்தாயன்
சோழன் இராசசூயம்வேட்டபெருநற்கிள்ளி
சோழன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நலங் கிள்ளி சேட்சென்னி
சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி
சோழன் கரிகாலன்
சோழன் கரிகாற் பெருவளத்தான்
சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமா வளவன்
சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவன்
சோழநாட்டுப் பிடவூர் கிழான் மகன் பெருஞ் சாத்தன்

சோழர்
சோழன்
சோழன் செங்கணன்
சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட் சென்னி
சோழன் நலங்கிள்ளி
சோழன் நலங்கிள்ளிதம்பி மாவளத்தான்
சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி
சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி
சோழன் மணக்கிள்ளி
சோழன் முடித்தலைக்கோப் பெருநற்கிள்ளி
சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளி
சோழிய ஏனாதி திருக்குட்டுவன்
ஞிமிலி
தந்துமாறன்
தருமபுத்திரன்
தழும்பன்
தாமான்தோன்றிக்கோன்
திதியன்
தித்தன்
தித்தன் வெளியன்
திருமாவுண்ணி
திரையன்
தூங்கல்
தூங்கெயிலெறிந்த தொடித்தோட்செம்பியன்
தென்பரதவர்
தென்னம்பொருப்பன்
தென்னர்
தென்னவர்
தென்னவன்
தென்னன்
தேர்வண்மலையன்
தொண்டைமான்
தொண்டைமான் இளந்திரையன்
தொண்டையர்
நந்தர்
நந்தன்
நம்பி நெடுஞ்செழியன்
நலங்கிள்ளி
நலங்கிள்ளி சேட்சென்னி
நல்லடி
நள்ளி
நன்னன்
நன்னன் ஆய்
நன்னன் உதியன்
நன்னன் வேண்மான்
நாஞ்சில் வள்ளுவன்
நாலைகிழவன் நாகன்
நிலந்தரு திருவின் நெடியோன்
நுணங்கு நுண்பனுவற் புலவன்
நெடுங்கிள்ளி
நெடும்பாரதாயனர்
நெடுமிடல் (அஞ்சி)
நெடுவேளாதன்
நெடுவேளாவி
பசும்பூட் பாண்டியன்
பசும்பூட் பொறையன்
பண்ணி
பரணர்
பரதவர்
பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன்னன்சேய் நன்னன்
பல்சாலை முதுகுடுமி (பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி)
பல்யானைச் செல்கெழு குட்டுவன்
பழையன்
பழையன் மாறன்
பாணன்
பாண்டியர்
பாண்டியன்
பாண்டியன் அறிவுடைநம்பி
பாண்டியன் கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி
பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதி
பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறன்
பாண்டியன் கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதி
பாண்டியன் கீரஞ்சாத்தனர்
பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி
பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன்
பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்
பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி
பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி
பாரி
பாரி மகளிர்
பிசிராந்தையார்
பிட்டங் கொற்றன்
பிட்டன் (வானவன் மறவன்)
பிண்டன்
புல்லி (கள்வர் கோமான்)
புன்றுறை

பூதபாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு
பூழியர்
பெரியன்
பெருஞ்சேரல் இரும்பொறை
பெருஞ்சோழன்
பெரும்பூட் சென்னி
பெரும்பூட் பொறையன்
பெருவாயில் நன்னன்
பேகன்
பொகுட்டெழினி
பொதுவர்
பொத்தி
பொருநன்
பொலம்பூட்கிள்ளி
பொறையன்
பொறையாற்றுகிழான்
மத்தி
மந்தி (ஆதிமந்தி)
மருதி
மலையமான்
மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன்
மலையமான் திருமுடிக்காரி
மலையமான் மக்கள்
மலையன்
மல்லிகிழான் காரி ஆதி
மழவர்
மழவர் பெருமகன் (அதியமான் நெடுமான் அஞ்சி)
மாங்குடி மருதன்
மாந்தரன்
மாந்தரன் பொறையன் கடுங்கோ
மாவன் (மையற்கோமான்)
மாறன்
மானவிறல் வேள்
மிஞிலி
மிலேச்சர்
முசுண்டை
முடியன்
முந்நீர் விழவின் நெடியோன்
மூவன்
மையூர் கிழான்
மோகூர்
மோசி
மோரியர்
யவனர்
யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை (வேழ நோக்கின் விறல்வெஞ் சேய்)
வடவடுகர்
வடபுலத்தரசு
வடபுல மன்னர்
வடவர்
வடிம்பலம்பநின்ற பாண்டியன் (முந்நீர்விழவின் நெடியோன்)
வடுகர்
வண்டன்
வம்ப மோரியர்
வம்ப வடுகர்
வல்லங் கிழான்
வல்லார் கிழான் பண்ணன்
வல்விலோரி
வழுதி
வளவன்
வாட்டாற்று எழினியாதன்
வாணன்
வானவரம்பன்
வானவரம்பன் (கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்)
வானவன்
விச்சி
விச்சிக்கோ
விச்சியர்
விரான்
வெளிமான்
வெளிமான் தம்பி
வெளியன் தித்தன் (வீரைவேண்மான்)
வெளியன் வேண்மான்
வெள்ளிவீதி
வேங்கை மார்பன்
வேண்மளிர்
வேண்மாள் அந்துவஞ்செள்ளை
வேண்மாள்
வேண்முது மாக்கள்
வேழநோக்கின் விறல்வெஞ்சேய்
வேளாவிக்கோமான்
வேளாவிக்கோமான் பதுமன்
வேளிர்
வேள்
வேள்பாரி
வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளி
வையாவிக்கோப் பெரும்பேகன்

# சங்க கால வள்ளல்கள்

டாக்டர் மு. வரதராசன்

பொருள் சேர்த்தவர் பொருள் இல்லாதவர்க்குக் கொடுத்து உதவ வேண்டும். அதனால் புகழ் பெற வேண்டும். அது தவிர உயிர் வாழ்க்கைக்கு நன்மை வேறொன்றும் இல்லை. இதுவே பழங் காலத் தமிழ்ச் சமுதாயத்தின் கொள்கையாக இருந்தது.

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு

என்று திருவள்ளுவர் அதனை எடுத்துச் சொல்கிறார். சங்க கால இலக்கியம் எனப்படும் புறநானூறு முதலாய பழந்தமிழ் நூல்களில் பலர் இந்தக் கொள்கையைப் போற்றி வாழ்ந்துள்ளனர் என்பதை அறியலாம்.

பழந்தமிழ் நாட்டை ஆண்டு வந்த சேர சோழ பாண்டிய வேந்தர்களில் சிலர் புலவர்க்கும் பிறர்க்கும் பொருள் கொடுத்து உதவிப் புகழ் பெற்றனர். சிற்றரசர்களில் சிலர் அவ்வாறு கொடைப் பண்பு உடையவர்களாய்ப் புகழுடன் வாழ்ந்துள்ளனர். வேந்தரும் குறுநில மன்னரும் அல்லாத செல்வர் சிலரும் அவ்வாறு புகழ்பட வாழ்க்கை நடத்தியுள்ளனர். அவர்களுள், பாரி முதலான எழுவர் மட்டும் தனிச்சிறப்புக்கு உரியவர்களாய் வள்ளல்கள் எனப் போற்றப்பட்டுள்ளனர். அதற்குக் காரணம், பத்துப்பாட்டுள் ஒன்றாகிய சிறுபாணாற்றுப்படை என்னும்பாட்டில் அந்த எழுவர் புகழையும் ஒருசேர எடுத்துரைத்துப் பாடியிருப்பதே எனலாம்.

எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம்
(சிறுபாணாற்றுப்படை, 113)

என நத்தத்தனார் என்ற புலவர் அந்தப் பழங் காலத்திலேயே அந்த எழுவரையும் ஈகை மேற் கொண்ட வள்ளல்கள் என்று புகழ்ந்த மொழியால், அவர்கள் எழு வள்ளல்கள் எனப் போற்றப் பட்டனர். கடைச்சங்க காலத்துப் பாடல்களில் நின்ற புகழ் உடையவராதலின், அவர்கள் கடையெழு வள்ளல்கள் என்று சுட்டப்பட்டனர் போலும். பெருஞ்சித்திரனார் என்ற புலவரும் தம் பாட்டு ஒன்றில் எழுவரையும் ஒருங்கே பாடியுள்ளார்.

பறம்பிற் கோமான் பாரியும் பிறங்குமிசைக்
கொல்லி ஆண்ட வல்வில் ஓரியும்
காரி ஊர்ந்து பேரமர்க் கடந்த
மாரி ஈகை மறப்போர் மலையனும்
ஊரா தேந்திய குதிரைக் கூர்வேல்
கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினியும்
ஈர்ந்தண் சிலம்பின் இருள்தூங்கு நளிமுழை
அருந்திறல் கடவுள் காக்கும் உயர்சிமைப்
பெருங்கல் நாடன் பேகனும் திருந்துமொழி
மோசி பாடிய ஆயும் ஆர்வமுற்று
உள்ளி வருநர் உலைவு நனிதீரத்
தள்ளாது ஈயும் தகைசால் வண்மைக்
கொள்ளார் ஓட்டிய நள்ளியும் எனவாங்கு
எழுவர் மாய்ந்த பின்றை
(புறநானூறு, 158)

கபிலர், பரணர் முதலாய புலவர்கள் எழுவரையும் ஒருங்கே பாடாவிடினும் இவர்களுள் பலரைப் பாடியுள்ளனர். இந்த எழுவர் அல்லாமல் வேறு சிலர் கொடைவள்ளல்களாய்ப் புகழ் பெற்றுள்ளனர். குமணன், பண்ணன் முதலானோர் வள்ளல்களாய் வாழ்ந்து பெரும்புகழ் பெற்றவர்களே. ஆயின், அவர்களை இந்த எழுவரோடு சேர்த்து எண்ணும் மரபு இல்லை. தனித்தனியே அவர்களைப் போற்றும் பாடல்கள் உண்டு.

எழு வள்ளல்கள் எனப் புகழப்படும் அவர்கள், பாரி, ஓரி, காரி, அதிகன், பேகன், ஆய், நள்ளி எனப்படுவோர். இவர்களுள் ஓரி, காரி, பேகன், நள்ளி ஆகிய நால்வரின் கொடைச் செயல்கள் பற்றி அறியத்தக்க குறிப்புகள் பலவாக இல்லை. பாரி, அதிகன், ஆய் பற்றிய செய்திகள் பல பாடல்களில் உள்ளன.

ஓரி: இவன் கொல்லிமலையைச் சார்ந்த நாட்டை ஆண்ட தலைவன்; கூத்தர்க்குப் பெரி

தும் உதவியவன்; தன் நாட்டையும் நல்கிய வள்ளல்.

காரி: இவன் மலையமானாட்டின் அரசன்; புலவர்க்கும் பிறர்க்கும் பெரும்பொருள் நல்கியவன்; புலவர்களின் அறிவுரையை மதித்து நடப்பவன்.

பேகன்: இவன் ஆவியர் குடியில் பிறந்தவன்; மலைநாட்டை ஆண்டவன்; மயில் குளிரால் நடுங்கியது என்று தன் உயர்ந்த போர்வையை அதற்கு நல்கி மகிழ்ந்தனன்.

நள்ளி: இவன் தோட்டி என்னும் மலையைச் சார்ந்த நாட்டின் தலைவன்; தன்னைச் சார்ந்தவர்க்குப் பலவகையாலும் வாழ்க்கைக்கு உரிய பொருள்களை ஈந்தவன்; தேரும் யானையும் இரப்பவர்க்குக் கொடுத்து உதவியவன்.

பாரி: இவன் பறம்பு நாட்டினை ஆண்டவன். அந்நாட்டில் முந்நூறு ஊர்கள் இருந்தனவாம். பறம்புமலை இயற்கைவளம் மிகுந்தது. இவன் தன் கொடைத் திறத்தால் பெரும் புகழ் பெற்று விளங்கினான். இவன் காலத்திற்குப் பின் பல நூற்றாண்டுகள் கழித்து வந்த சுந்தரமூர்த்தி நாயனார் சிறந்த வள்ளலுக்கு எடுத்துக்காட்டாகக் குறிப்பிடும் இடத்தில்,

> கொடுக்கிலா தானைப் பாரியே என்று
> கூறினும் கொடுப்பாரிலை

என்று பாரியின் புகழ் விளங்கும் வகையில் பாடியுள்ளார். நத்தத்தனார், ஔவையார், கபிலர், நக்கீரர், நன்னாகனார், பெருஞ்சித்திரனார், இளவேட்டனார், மிளைக்கந்தனார் ஆகிய சங்கப் புலவர்கள் பாரியைப் புகழ்ந்து பாடியுள்ளனர். அவர்களுள் கபிலர்க்குப் பாரி ஆருயிர் நண்பனாக விளங்கினான். பாரியை மூவேந்தர் பகைத்துப் படையெடுத்துப் பறம்பு நாட்டை முற்றுகையிட்ட காலத்திலும், கபிலர் பாரிக்கு உற்ற துணையாக இருந்து, மூவேந்தரையும் எதிர்த்துப் பாரியின் பெருமை விளங்குமாறு பாடினார். பாரி இறந்த பிறகு, பாரியின் மகளிர் இருவரையும் உடன் அழைத்துச் சென்று அவர்களின் திருமணத்திற்காக முயன்றார். பறம்புமலையை விட்டுப் பிரிந்து செல்லும் நிலை நேர்ந்ததற்காக நெக்குருகிக் கபிலர் பாடிய பாட்டுக்கள் நெஞ்சை நெகிழ்விப்பனவாக உள்ளன. தம் ஆருயிர் நண்பனாகிய பாரியின் பிரிவை நினைந்து நினைந்து வருந்திய அப்புலவர், இறுதியில் பிரிவாற்றாமல் பெண்ணையாற்றங் கரையில் தீக்குளித்தார். அவர்களின் நட்பு அவ்வளவு நெருங்கிய நட்பாக—விழுமிய நட்பாக இருந்தது.

ஒரு நாள் பாரி தன் மலைப்பகுதியில் வேட்டைக்குச் சென்று திரும்பியபோது வழியில் அழகாகப் பூத்துக் குலுங்கிய ஒரு முல்லைக்கொடி படர்வதற்கு ஏற்ற கொம்புகள் இல்லாமல் காற்றால் அலைந்துகொண்டிருந்ததைக் கண்டான். அந்தக் கொடி கொழுகொம்பு இல்லாமையால் துன்புறுவதாக உணரும் அளவிற்கு அவனுடைய மனம் இரக்கம் நிறைந்ததாக–மென்மைப் பண்பு உள்ளதாக—இருந்தது. தான் ஏறிவந்த தேரின் மீது இருந்தவாறே அந்த முல்லைக் கொடியை அணுகிச் சென்றான். அப்போது காற்றால் அலைப்புண்டு அந்தக்கொடி பாரியின் தேர்மீது சாய்ந்து காற்றில் அலைப்பு இல்லாமல் அமைதியாக இருந்தது. அதைக் கண்ட பாரி, தன் தேரை அந்தக் கொடி படர்வதற்கு உதவும்பொருட்டு அங்கேயே நிறுத்திவிட்டு, நடந்து வந்து தன் அரண்மனை அடைந்தான்.

> சிறுவீமுல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
> பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற்
> பறம்பின் கோமான் பாரி

(சிறுபாணாற்றுப்படை)

சிறு பூக்களை உடைய சிறிய முல்லைக்கொடிக்குப் பெரிய தேரையே அளித்தவன் என்ற புகழ் பெற்றான். பாடும் புலவர்களுக்கும் பாணர்களுக்கும் பரிசாகத் தேர்களை வழங்கிப் பழகிய பாரி வள்ளல், தன்னைப் பாடாத முல்லைக் கொடிக்கும் அதே முறையில் தேர் கொடுத்தானே என்று அவனுடைய கொடை மடத்தைக் கபிலர் புகழ்ந்து பாடியுள்ளார்.

> பூத்தலை அறாஅப் புனைகொடி முல்லை
> நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
> கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
> பரந்தோங்கு சிறப்பின் பாரி.

(புறநானூறு, 200)

மழையைவிட வன்மை மிகுந்தவன் வேள் பாரி என்று அவனுடைய கொடைச் சிறப்பையும் அவர் நயமாகப் புகழ்ந்துள்ளார். "பாரி பாரி என்று புலவர் எல்லாரும் பாரியையே புகழ்கிறார்களே! இந்த உலகத்தைக் காப்பாற்றுவோன் பாரிமட்டுமா? மழையும் இருக்கின்றதே! மழையும் உலகத்தைக் காப்பாற்றுகிறதே" என்றார்.

> பாரி பாரி என்று பல ஏத்திப்
> பாரியைப் புகழ்வர் செந்நாப் புலவர்

பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டீண்டு உலகுபுரப் பதுவே.

(புறநானூறு, 107)

ஆடல் பாடல் கலைகளில் பாரிக்கு ஈடுபாடு இருந்தது. அதனால் அந்தக் கலைகளில் வல்ல பாணர்க்கும் கூத்தர்க்கும் விறலியர்க்கும் அவன் கணக்கில்லாமல் வாரி வழங்கினான். மூவேந்தர்கள் முற்றுகையிட்டபோதும் கபிலர் அந்தப் பகை வேந்தர்களுக்கு இதை நினைவூட்டினார். "இந்தப் பாரியின் பறம்புமலையில் மரத்திற்கு ஒரு யானையாகக் கட்டி, இடமெல்லாம் தேர்களாகப் பரப்பிச் சேனையைப் பெருக்கி நீங்கள் முற்றுகையிட்டாலும், இந்த நாட்டை நீங்கள் கைப்பற்ற முடியாது. நீங்கள் பாணர்கள் போல் பாடிக்கொண்டு வர, உங்கள் மகளிர் ஆடிக்கொண்டு வர, நீங்கள் பரிசிலாகக் கேட்டால், பாரி இந்த நாட்டையும் மலையையும் ஒரு சேர உங்களுக்குக் கொடுத்துவிடுவான்" என்றார். மற்றொரு பாட்டில், "இந்தப் பறம்பு நாட்டில் முந்நூறு ஊர்கள் உள்ளன. முந்நூறு ஊர்களையும் பாரி தன்னை நாடி வந்த பரிசிலர்க்குக் கொடுத்துவிட்டான். இப்போது அந்த வள்ளலின் உரிமையாக உள்ள பொருள்கள் யான், பாரி, இந்தக் குன்று ஆகிய இவ்வளவே ஆகும். நீங்கள் இரந்து கேட்பீர்களானால், பாரியாகிய அவனே உங்கள் பொருளாக உங்களிடம் வந்து விடுவான்; மறுக்கமாட்டான்" என்றார். இவ்வாறே மற்றப் புலவர்களும் பாரியின் தலையாய வண்மையைச் சிறப்பித்துள்ளனர்.

**அதிகன் :** இவன் அதியமான் நெடுமான் அஞ்சி என்று கூறப்படுவான். கொங்கு நாட்டில் தகடூர் (தருமபுரி) என்னும் ஊரில் ஆட்சி புரிந்தவன். தொடக்கத்தில் அவன் புலவர்களைச் சிறிது புறக்கணித்தாற்போல் நடந்தான். பிறகு அவர்களிடம் பேரன்பு செலுத்தி அவர்களின் வாழ்விற்கு உரிய நல்லுதவிகள் பல செய்தான். சங்க காலத்தில் வாழ்ந்த ஔவையார் என்ற புலவர் பெருமாட்டியாரிடம் நெருங்கிப் பழகி நட்புரிமை பூண்டான். ஔவையார் அறிவாற்றலில் சிறந்தவராக விளங்கியமையால், ஒரு முறை தன்னோடு பகைத்த தொண்டைமான் என்னும் அரசனிடம் ஒருவரைத் தூதனுப்ப எண்ணியபோது, அந்தத் தூதுக்குத் தக்கவராக ஔவையாரையே தேர்ந்து அவனிடம் செல்லுமாறு வேண்டி அனுப்பினான். ஔவையார் தன்னைவிட மூத்தவராக, முதிய தோற்றத்துடன் விளங்கியதைக் கண்ட அதியமான், அப் புலவர் நெடுங்காலம் வாழவேண்டுமே என்று கவலை கொண்டான். வாழ்நாள் நீட்டிப்புக்கு உரிய நன்மருந்து வேண்டும் என்று பலரிடம் சொல்லி வைத்திருந்தான். அதியமான் தனக்காகவே அதனை நாடுகின்றான் என்று எண்ணிய மருத்துவர் உயர்ந்த நெல்லிக்கனிகளைத் தேடிக்கொண்டு போய்த் தந்தார். ஆயின், அவற்றை அதியமான் தான் உண்ணாமல், அவற்றின் பயனும் சொல்லாமல், ஔவையாரிடம் தந்து அவற்றை உண்ணுமாறு செய்தான். பிறகு உண்மையை உணர்ந்த புலவர், அவனுடைய விழுமிய உதவியை நினைந்து,

ஆதல் நின்னகத் தடக்கிச்
சாதல் நீங்க எமக்கீத் தனையே

என்று பாராட்டிப் புகழ்ந்து,

நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும! நிலமிசை யானே

(புறநானூறு, 91)

என வாயார வாழ்த்தினார். அதியமானிடம் பரிசில் பெறச் சென்றால் தவறாமல் பரிசில் கிடைக்கும் என்றும், ஒரு நாள் அல்லாமல் பல நாள் தொடர்ந்து பலரோடு சென்று உதவி கேட்டாலும் முதல்நாள் போலவே விரும்பி அன்போடு உதவுதல் அதியமானின் பண்பு என்றும் அவனுடைய வண்மை சிறப்பிக்கப் பட்டுள்ளது.

ஒருநாள் செல்லலம் இருநாள் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ.

(புறநானூறு, 101)

**ஆய் :** இவன் பொதிய மலையைச் சார்ந்த நாட்டை ஆண்டவன்; ஆய்க்குடியைச் சார்ந்தவன். ஆய் அண்டிரன் என்பது இவனுடைய பெயர். அந்த நாடு பல நாடுகளை உடையது; காடுகளில் யானைகள் கூட்டம் கூட்டமாக வாழும். அந்த யானைகளைப் பழக்கியபின், தன்னை நாடி வருவோர்க்குப் பரிசிலாக அவற்றை வழங்குவான். அவனைப் புகழ்ந்து பாடிய முடமோசியார், "வள்ளலே! உன் நாட்டில் பெண் யானை ஒவ்வொரு முறையும் பத்துப் பத்து யானைக் கன்றுகளைப் பெறுமோ? நீ இரந்து கேட்டவர்க்கு மகிழ்ந்து கொடுத்த யானைகளுக்குக் கணக்கே இல்லையே." என்றார். ஆயின் நாட்டில் யானைகள் மிகப் பலவாய்த் திரிதலைக் கண்ட புலவர், "இந்தக் காடுகளுக்கு இவ்வளவு யானைகள் எப்படிக் கிடைத்தன? இந்தக் காடுகளும் எங்களைப்போல் வேள் ஆயைப் பாடிப் பரிசு

பெற்றனவோ?" என்று பாடினர். வடக்கே இமயமலை எவ்வாறு இன்றியமையாத சிறப்பு உடையதோ, அவ்வாறே தெற்கே ஆய்குடியும் சிறப்பானது என்று ஒரு பாடல் பாராட்டு கின்றது.

"இந்தப் பிறப்பில் செய்த புண்ணியம் மறு பிறவிக்குப் பயன்படும் என்று அறத்தை விற்று வாங்கும் அறவிலை வாணிகன் அல்லன் ஆய். சான்றேர் சென்ற நெறி என்று கொண்டு அமை வது இந்த வள்ளலின் கொடைப் பண்பு" என் கிருர் முடமோசியார்:

இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்எனும்
அறவிலை வணிகன் ஆய்அலன்; பிறரும்
சான்றேர் சென்ற நெறிஎன
ஆங்குப் பட்டன்றுஅவன் கைவண்மையே

(புறநானூறு, 134)

பிறர்க்குக் கொடுத்துக் கொடுத்துப் பொருளெல் லாம் தொலைந்து இறுதியில் வறுமையுற்ற வள்ளல் ஆய். வறுமையால் அவனுடைய அரண் மனை பொலிவு இழந்தது. யானைகள் நிறைந் திருந்த பகுதிகள் வெறுமை உற்றன. யானை களின் கட்டுத்தறிகளை அடுத்துக் காட்டு மயில் கள் கூட்டமாக வந்து தங்கின. அணிகலன் களால் பொலிவு பெற்றிருந்த அரண்மனைப் பெண்கள், மங்கல நாண் தவிர மற்ற எந்த அணிகலனும் இல்லாத வறிய நிலை அடைந்தனர். "யாருக்கும் கொடுத்து உதவாமல் தாம் மட்டுமே இனிய உணவை உண்டு தம் வயிற்றை மட்டுமே நிரப்பும் மற்றச் செல்வர்களின் அரண் மனைகள் அவ்வாறு இல்லை" என்று முடமோசி யார் ஆய் உற்ற வறுமையை நினைந்து வருந்தும் பாடலிலும் அந்த வள்ளலின் கொடைச் சிறப்பு விளங்க வைத்தார்.

**குமணன்:** இவன் கொங்குநாட்டு முதிரமலைத் தலைவன். முன் குறித்த வள்ளல் எழுவரும் மறைந்தபிறகு வாழ்ந்தவன் இவன். பெருஞ்சித் திரனர் முதலாய புலவர் பலர்க்கு வாரி வழங்கிய வள்ளல் இவன். எக்காரணத்தாலோ, குமணனைத் துரத்திவிட்டு அவனுடைய தம்பி இளங்குமணன் ஆட்சியைக் கைப்பற்றினன். அண்ணனுடைய கொடைச் செயல்களும் இரக்கப் பண்பும் பற்றி இளங்குமணன் வெறுப்புற்றான். அவனுடைய ஆட்சியில் புலவரும் பிறரும் உதவிகள் பெற முடியவில்லை. மீண்டும் குமணனே ஆட்சிக்கு வந்து விடுவானே என்ற அச்சத்தால், குமண னுடைய தலையைக் கொண்டு வருபவருக்குப் பரிசு தருவதாகச் செய்தி வெளியிட்டான். பெருந் தலைச் சாத்தனர் என்ற புலவர் குமணனைக் காணும் பொருட்டு அவனைத் தேடிச் சென்றார். காட்டில் ஒரு மூலையில் ஒடுங்கிக் கிடந்த குமணனைக் கண்டதும் புலவர் மிக நொந்து வாடி னர். பிறகு வழக்கம்போல் வள்ளலின் புகழ் பாடி னர். அப்பாடலைக் கேட்டதும் குமணன் இரங்கி, "என்னைப் பாடிய இப்புலவர்க்குப் பரிசில் கொடுக்காமல் அனுப்புவதோ? என் நாட்டை இழந்து வந்ததைவிட இது கொடுமையாக இருக் கிறதே" என்று வருந்தினன். உடனே தம்பி, தன் தலைக்குப் பரிசு வைத்திருக்கும் ஏற்பாட்டை நினைந்து மகிழ்ச்சியுற்றான். தன்னிடமிருந்த வாளை எடுத்துத் தந்து, "இதோ உமக்கு தரவல்ல பொருள் ஒன்று இன்னும் என்னிடம் உள்ளது. என் தலையைக் கொண்டு போய்த் தந்து பணம் பெற்றுக் கொள்க" என்றான். ஆனல் புலவர் அதற்கு உடன்படவில்லை; தம்பி யிடம் சென்று அவன் திருந்துமாறு செய்தார். எல்லாவற்றையும் விடச் சிறந்ததாகிய தன் தலையையே பரிசிலாகக் கொடுக்க முன்வந்த கொடை நெஞ்சத்தைப் போற்றி உருகினர் புலவர்.

**பண்ணன்:** சோழ நாட்டில் காவிரிக் கரை யில் சிறுகுடி என்னும் ஊரில் வாழ்ந்த செல்வன் பண்ணன் என்பவன். அவனுடைய கொடைச் சிறப்பையும் தன்னலம் துறந்த வாழ்வையும் கண்ட புலவர் கொற்றங்கொற்றனர் என்பவர், "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் பண் ணன்" என்று பாராட்டியுள்ளார். கோவூர்கிழார், செயலூர் இளம்பொன் சாத்தன் கொற்றனர், மதுரை அளக்கர் ஞாழார்மகனர் மள்ளனர், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் ஆகியோரும் இவ்வள்ளலைப் புகழ்ந்துள்ளனர். இவர்களுள் சோழன் பாடிய பாட்டு, தனிச் சிறப்புடையதாகும். பசிப்பிணி மருத்துவன் என்று சோழன் இவ்வள்ளலைச் சிறப்பித் துள்ளான்.

நாட்டில் உணவுப் பஞ்சம் மிகுந்து மக்களைப் பசிப்பிணி வாட்டிய ஒரு காலத்தில் சோழன் மக்களின் துன்பத்தைத் தீர்க்க எவ்வளவோ முயன்றான். நாடெங்கும் சென்று பசியால் வாடு வோரைக் கண்டு அவர்களின் அல்லலைத் துடைக்கப் பாடுபட்டான். பண்ணன் என்ற செல்வன் சிறுகுடியைச் சார்ந்த பகுதியில் பலர்க் கும் உணவு அளித்து உதவி புரியும் செய்தி சோழனுக்கு எட்டியது. உடனே சோழவேந்தன் அந்த ஊரை நோக்கிச் சென்றான். ஊர்க்குத் தொலைவில் இருந்தபோதே, உணவைப் பலர்க்

குப் பங்கிடும் ஒலி கேட்டது ; பழுத்த மரங்களில் பறவைகளின் ஆரவாரம் கேட்பதுபோல் இருந்தது அந்த ஒலி. இன்னும் சிறிது நெருங்கிச் சென்றபோது, சிறுவர் கூட்டம் கூட்டமாக அணி அணியாக வெண்சோற்றுத் திரளைக் கையில் ஏந்தியவராய்ச் செல்லுதல் கண்டான் ; மழைக் காலத்தில் முட்டைகளைக் கொண்டு செல்லும் எறும்புகளின் வரிசைகள்போல் சிறுவரின் அணிகள் தோன்றின. " இன்னும் பண்ணன் வீடு வந்ததாகத் தெரியவில்லை. அந்தப் பசிப் பிணி மருத்துவன் பண்ணன் வீடு எங்கே? அருகே உள்ளதோ? இன்னும் தொலைவில் உள்ளதோ? கூறுங்கள் " என்று கேட்டான். " இத்தகைய கொடைவள்ளல் நெடுங்காலம் வாழ வேண்டும். யான் இனி வாழ்வதற்குரிய வாழ் நாளையும் அவனே பெற்று நெடுங்காலம் வாழ் வானாக " என்று சோழவேந்தன் சிறுகுடிகிழான் பண்ணனை வாயார வாழ்த்திப் பாடினான் ; அதனால் இந்த வள்ளல், வேந்தன் பாடும் புகழ் உடையவன் ஆனான்.

யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய.

(புறநானூறு, 173)

இவ்வாறு சங்க காலத்தில் வள்ளல்களாய் வாழ்ந்த பெருமக்கள் பலர். அவர்கள் தமிழிலக்கியத்தில் நின்று வாழும் சிறப்புற்றார்கள்.



# தமிழ் இலக்கியம்

இரா. முத்துக்குமாரசாமி

தமிழ் மொழி மிகத் தொன்மையானது. அவ்வாறே இதன் இலக்கியமும் மிகப் பழமை யானது. கிறித்து பிறப்பதற்கு ஐந்நூறு ஆண்டு கட்கு முன் இயற்றப்பட்ட பாடல்களிலிருந்து இன்றுவரை ஏறக்குறைய இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளில் தமிழ் இலக்கியம் அடைந்துள்ள வளர்ச்சி போற்றத்தக்கது. தமிழிலக்கியத்தின் பொற்காலமான சங்க காலத் திற்கு முன் தோன்றிய பல நூல்கள் கடல் கோள்களால் மறைந்து விட்டன என்பது துணிபு. முச்சங்கங்களில் முதலிரு சங்க காலங் களிலும் தோன்றிய நூல்களைப் பற்றிய குறிப்புக்கள் ஆங்காங்கே கிடைக்கின்றனவே தவிர, நூல் வடிவில் எதுவும் கிடைக்காதது தமிழரின் தவக்குறைவேயாகும்.

தமிழ் வளர்த்த மதுரைப் பதியின்கண் வீற்றிருந்த மூன்றும் சங்கத்தில் பெரும் புலவர்கள் பலர் இடம்பெற்றிருந்தனர். அவர்கள் ஆங்காங்கே தனித்தனியாகப் பாடிய பாடல்களே பின்னுல் தொகுக்கப்பெற்று நற்றிணை, குறுந் தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரி பாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்ற எட்டுத்தொகை நூல்களாகவும் திருமுரு காற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறு பாணுற்றுப்படை, பெரும்பாணுற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல் வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்ற பத்துப்பாடல்களைக் கொண்ட பத்துப்பாட்டாகவும் வகுக்கப்பெற்றது. இவற்றைப் பற்றி 'தொகை நூல்கள்' என்ற கட்டுரையில் விரிவாகக் காணலாம். இவற்றை பதினெண் மேற்கணக்கு நூல்கள் என்பர்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் என்று முன் னேரால் வரையறுக்கப்பட்டவை: நாலடியார், நான்மணிக்கடிகை, கார் நாற்பது, களவழி நாற்பது, இனியவை நாற்பது, இன்னு நாற்பது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, ஐந்திணையைம்பது, ஐந்திணையெழுபது, முது மொழிக் காஞ்சி, இன்னிலை, ஆசாரக்கோவை, திரிகடுகம், ஏலாதி, சிறுபஞ்சமூலம், பழமொழி, திருக்குறள் என்னும் பதினெட்டு நூல்களே யாகும். இவற்றில் இன்னிலைக்குரிய இடத்தில் கைந்நிலை என்ற நூலைச் சேர்ப்பாருமுளர்.

மேற்கணக்கு, கீழ்க்கணக்கு நூல்களான முப்பத்தியாறு நூல்களும் தோன்றிய காலத்தைப் பற்றிய ஆராய்ச்சி பலதிறப்பட்டது. கி. மு. நான்காம் நூற்ருண்டிலிருந்து கி. பி. இரண்டாம் நூற்ருண்டு வரையுள்ள இடைப்பட்ட ஆறு நூற்ருண்டுகளில் வாழ்ந்த புலவர்கள் பாடிய பாடல்களே எட்டுத்தொகை, பத்துப்பாடலி லுள்ள பாடல்கள். கீழ்க்கணக்கு நூல்களான 18 நூல்களும் ஒரே காலத்தில் தோன்றவில்லை. திருக்குறள் கி. மு. இரண்டாம் நூற்ருண்டில் தோன்றியது என்பர். பிற நூல்கள் கி. பி. இரண்டாம் நூற்ருண்டுக்கும் கி. பி. ஏழாம் நூற்ருண்டுக்கும் இடையில் தோன்றியவை.

அவற்றுள் நாலடியார் சமண முனிவர் நானூறு பேர் பாடிய 400 பாடல்களின் தொகுப்பு. நான்கு மணி போன்ற உண்மை களைத் தன்னகத்தே கொண்டுள்ள பாடல்கள் 103 கொண்ட நூலே **நான்மணிக்கடிகை.** இதை இயற்றியவர் விளம்பி நாகனுர். மதுரைக் கண்ணங்கூத்தனுர் இயற்றிய கார்நாற்பது கார் கால நிகழ்ச்சியையும் தலைவனின் வரவிற்காகக் காத்திருக்கும் தலைவியின் நிலையையும் விளக்கும் 40 பாடல்களைக் கொண்டது. சோழன் செங்கணு னின் போர்க்கள வெற்றியைச் சிறப்பித்துப் பாடுவது களவழி நாற்பது. இதன் ஆசிரியர் பொய்கையார். இனிய செயல்கள் இவையென விளக்கும் 40 பாடல்களைக் கொண்டது பூதஞ் சேந்தனுர் இயற்றிய இனியவை நாற்பது. இன்னுத பொருள்களை விளக்கும் 40 பாடல்களைக் கொண்டது இன்னு நாற்பது. பலர் புகழ் கபிலரே இதன் ஆசிரியர். ஐந்திணையில் ஒவ்வொரு திணைக்கும் பத்துப் பத்துப் பாட்டாக ஐம்பது பாடல்களைக் கொண்டதே கண்ணன்

சேந்தனு ரியற்றிய திணைமொழி ஐம்பது. திணைக்கு 30 பாடல்களாக ஐந்திணைக்கும் 150 பாடல்களைக் கொண்டது கணிமேதாவியார் இயற்றிய திணைமாலை நூற்றைம்பது. திணைக்குப் பத்தாக 50 பாடல்களைக் கொண்டது ஐந்திணை யைம்பது. இது மாறன் பொறையனுர் இயற்றியது. திணைக்குப் பதினுன்கு பாடல் களாக ஐந்திணைக்கும் எழுபது பாடல்களைக் கொண்டது மூவாதியார் இயற்றிய ஐந்திணை யெழுபது.

பத்துப் பாடல்களைக் கொண்ட அதிகாரம் பத்தினையுடையது முதுமொழிக்காஞ்சி. அறம், பொருள், இன்பம் என மூவகைப் பொருளை விளக்கும் இந்நூல் கூடலூர் கிழாரால் இயற்றப் பட்டது. பொய்கையார் பாடிய இன்னிலை அறம், பொருள், இன்பம், வீடு என நாற்பொருளையும் விளக்குவது. முன்னுேர் கைகொண்ட ஆசாரங் களை நூறு வெண்பாக்களில் எடுத்தியம்புவது பெருவாயின் முள்ளியார் இயற்றிய ஆசாரக் கோவை. ஒவ்வொரு பாடலிலும் மூன்று அரிய உண்மைகளை வைத்து நூறு பாடல்களை நல்லாதனுர் இயற்றியுள்ளார். அவையே திரி கடுகம் என்ற நூலாக உருவெடுத்துள்ளன. கணிமேதாவியார் இயற்றிய ஏலாதி ஏலம் முதலிய அறுவகை மருந்துகள் போல அரிய உண்மைகளைக் கூறும் எண்பது பாடல்களை யுடையது. ஐவகை மூலிகைகளைப்போல் மன நோய் நீக்கும் ஐவகை நீதிகளை ஒவ்வொரு பாடலிலும் அமைத்துக் காரியாசானுல் 100 பாடல்களில் பாடப் பெற்றது சிறுபஞ்ச மூலம். ஒவ்வொரு பாட்டினிறுதியிலும் ஒவ் வொரு பழமொழியை வைத்துப் பாடப்பெற்ற நானூறு வெண்பாக்களையுடையது பழமொழி நானூறு. இதை யியற்றியவர் முன்றுறையரை யனுர்.

கீழ்க்கணக்கு நூல்களுள் தலைசிறந்த நூல் திருவள்ளுவ நாயனுர் அருளிய திருக்குறள். அறம், பொருள், இன்பம் என முப்பால்களைக் கொண்ட இந்நூல் 1330 அரிய குறள் வெண்பாக்க ளாலானது. இது தமிழ்மறை என்று போற்றப் பெறுகின்றது. இதற்குப்பின் எழுந்த நூல்கள் அனைத்தும் இந்நூலின் கருத்துக்களை ஆங் காங்கே எடுத்தாண்டுள்ளதிலிருந்து இந்நூலின் பெருமை நன்கு தெரியவரும். இந்நூல் எழுந்த காலம் கி. மு. இரண்டாம் நூற்றுண்டென்பர்.

சேரன் தந்த சிலம்பும் சாத்தனருளிய மேகலையும் இரட்டைக் காப்பியங்களெனப் போற்றப்படுகின்றன. கற்புநெறி வழுவாத கண்ணகியைக் காப்பியத் தலைவியாகக் கொண்ட சிலப்பதிகாரம் இளங்கோவடிகளால் இயற்றப் பட்டது. முத்தமிழ்க் காப்பியமான இந்நூல் கி. பி. 2ஆம் நூற்றுண்டில் தோன்றியது. மாதவியின் மகளான மணிமேகலையைக் காப்பியத் தலைவியாகக் கொண்ட 'மணிமேகலை' என்ற காப்பியம் சாத்தனுர் என்னும் பெரும் புலவரால் இயற்றப் பெற்றது. இக்காப்பியம் சிலப்பதிகாரத்தை யொட்டி எழுந்ததெனலாம்.

கி. பி. இரண்டாம் நூற்றுண்டிற்குப்பின் ஆறும் நூற்றுண்டுவரை களப்பிரர் இடையிட்டுத் தமிழகத்தை ஆண்டு வந்ததனுல் சில நீதி நூல்களைத் தவிர பெருநூல்கள் எதுவும் எழவில்லை. பல்லவரின் ஆட்சி கி. பி. ஏழாம் நூற்றுண்டில் தலைதூக்கியபோது தமிழகத்தில் புது மலர்ச்சி உண்டாயிற்று.

மக்கள் சமயப்பற்று மிக்க விளங்கினர். சைவ சமயக் குரவருள் திருநாவுக்கரசு நாயனுரும் ஞானசம்பந்தரும் கி.பி. ஏழாம் நூற்றுண்டில் தோன்றி இறைவனுக்குப் பாமாலை சூட்ட லாயினர். திருத்தலங்கள் தோறும் சென்று அவர்கள் பாடிய பாடல்களே பின்னர், தேவார மாகத் தொகுக்கப்பெற்றது. அவர்களுக்குப் பின் மாணிக்கவாசகர் தோன்றி நெஞ்சக்கனகல்லை நெக்குருக வைக்கும் திருவாசகத்தையும் திருக் கோவையாரையும் இயற்றினுர். நால்வரில் நாலாமவரான சுந்தரத் தோழர் ஒன்பதாம் நூற்றுண்டில் தோன்றித் தேனினுமினிய தேவாரப் பாடல்களை அருளினுர்.

சைவ நன்னெறியை உய்விக்க வந்த தேவா ரத்தைப் போல வைணவ நெறியைப் போற்ற எழுந்த பிரபந்தங்கள் எழலாயின. பன்னிரு ஆழ்வார்களில் காலத்தால் முந்திய பொய்கை யாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்ற மூவரும் எட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர்கள். பொய்கையாழ்வார் முதலாவது திருவந்தாதி யினையும் பூதத்தாழ்வார் இரண்டாவது திருவந் தாதியினையும் பேயாழ்வார் மூன்றுவது திருவந் தாதியினையும் பாடினர். 9ஆம் நூற்றுண்டில் திருமழிசையாழ்வார் தோன்றி, திருச்சந்த விருத்தம், நான்முகம் திருவந்தாதி பாடினுர். இதே நூற்றுண்டில் நம்மாழ்வார், மதுரகவி யாழ்வார், குலசேகர ஆழ்வார், திருப்பா ணுழ்வார், திருமங்கையாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள் போன்ற ஆழ்வாராதிகள் தோன்றி தமிழ் இலக்கிய வாயிலாக வைணவ சமய நெறியைப் பரப்பினர்.

பெருந்தேவனுர் இயற்றிய பாரத வெண்பா வியாசரின் பாரதத்தைத் தமிழில் வெண்பா வகையில் இயம்ப முற்பட்ட நூல். இதில் சில பகுதிகளே இப்பொழுது கிடைக்கின்றன. மூன்ரும் நந்திவர்மன் மீது பாடப்பெற்ற நந்திக் கலம்பகம் இந் நூற்ருண்டிலேயே தோன்றியது.

ஒன்பது, பத்து நூற்ருண்டுகளில் காப்பிய நூல்கள் பல தோன்றின. ஐம்பெருங் காப்பியங் களில் சிலப்பதிகாரம், மணிமேகலை நீங்கலாக சீவக சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகியவை இக்காலத்திலேயே தோன்றின. ஐஞ்சிறு காப்பியங்கள் என வழங்கப்பெறும் நீலகேசி, சூளாமணி, உதயணன் கதை, யசோதர காவியம், நாககுமார காவியம் ஆகியவையும் இதே காலத்தில் எழுந்தன. இவை பெரும்பாலும் சமணம் அல்லது பௌத்த சமயத்தின் கோட்பாடுகளை விளக்க எழுந்த வையே.

சீவக சிந்தாமணியை இயற்றிய திருத்தக்க தேவர் 10ஆம் நூற்ருண்டில் வாழ்ந்தவர். சிந்தாமணி இன்பநூலென்றும் மணநூலென்றும் குறிக்கப்பெறும். விருத்தப்பாவானமைந்த இந் நூல் அப் பாவுக்குத் தமிழ் இலக்கியத்தில் சிறந்த இடத்தைத் தேடித்தந்தது. வளையாபதி, குண்டலகேசி காவியங்கள் இன்று முழுதும் கிடைக்கப் பெறவில்லை. குண்டலகேசியை இயற்றியவர் நாதகுத்தனுர் என்பர்.

உதயணனுடைய வரலாற்றைக் கொங்கு வேளிர் ‘பெருங்கதை’யென்னும் காவிய மாக்கினுர். கல்லாடனுர் என்னும் புலவர் மதுரையம்பதிப் பெருமானுன சிவனுரின் பெருமையையுணர்த்தும் ‘கல்லாடம்’ என்னும் நூலை இயற்றினுர். கல்லாடம் சொற்செறிவுக்குப் பெயர் பெற்றது.

பன்னிரு திருமுறைகளில் ஒன்பதாந் திரு முறையிலும் பதினேராந் திருமுறையிலும் சேர்க்கப்பெற்ற நூல்கள் பெரும்பாலும் இக் காலத்தில் எழுந்தனவே.

11ஆம் நூற்ருண்டில் சோழநாட்டை ஆண்டு வந்த முதற் குலோத்துங்க சோழன் காலத் தவரான செயங்கொண்டார் என்னும் புலவர் ‘கலிங்கத்துப் பரணி’யை இயற்றினுர். அவ் வரசன் கலிங்கத்தில் பெற்ற வென்றியைப் பாராட்ட எழுந்ததே இப்பரணி. இது பரணி நூல்களுள் தலைசிறந்தது.

இரண்டாம் குலோத்துங்கனின் அமைச்ச ராகப் பணியாற்றிய சேக்கிழார் சைவநாயன்மார் அறுபத்துமூவரின் வரலாற்றைக் கவிநய மிக்க வகையில் ‘திருத்தொண்டர்’ புராணமென்னும் நூலாக வடித்துள்ளார். கச்சியம்பதியைச் சார்ந்த கச்சியப்ப சிவாசாரியார் வடமொழிப் புராணத்தைத் தழுவிக் கந்தனது பெருமையைக் கூறும் கந்தபுராணத்தை இயற்றினுர்.

கன்னித் தமிழ் பாடி புகழ் பெற்ற கம்பர் என்னும் பெரும்புலவர் 12ஆம் நூற்ருண்டில் வாழ்ந்தவர். இராமனைக் காப்பியத் தலைவனுகக் கொண்ட இராமாயணத்தைத் தமிழில் பாடித் தமிழ்மொழிக்கு அழியாத புகழைத் தேடித் தந்துள்ளார் கம்பர். இதற்குப் பின்னும் முன்னும் இதையொத்த காவியம் எழவில்லை யாதலால், கம்பன் புகழ் தமிழ் நாட்டில் என்றென்றும் நிலைத்திருக்குமென்பதில் ஐய மில்லை. சடகோபரந்தாதி, சரசுவதியந்தாதி, ஏரெழுபது, சிலையெழுபது, திருக்கை வழக்கம் போன்ற பல சிறு நூல்களையும் கம்பர் இயற்றி யுள்ளார்.

கம்பன் காலத்தில் வாழ்ந்த பெரும் புலவர்கள் பலர். தக்கயாகப் பரணி, மூவருலா, குலோத் துங்கன் பிள்ளைத்தமிழ் போன்ற சிற்றிலக்கிய நூல்களை இயற்றிப் புகழ் பெற்ற ஒட்டக்கூத்தர்; வெண்பாவிற்கோர் புகழேந்தி என்று புகழப் பெற்ற நளவெண்பாவை இயற்றிய பூலவர் முதலியோர் அக்காலத்தினர்.

கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டில் சமய நூல்களுக்கும் இலக்கண இலக்கிய நூல்களுக்கும் விரிவான உரையெழுதும் முறை தொடங்கியது. பதினுன்கு சாத்திரம் என்று வழங்கப்பெறும் சைவ சித்தாந்தக் கொள்கையை விளக்கும் பதினுன்கு நூல்கள் இக்காலத்தே எழுந்தன. மெய்கண்டார் இயற்றிய சிவஞான போதம் முதலான பதினுன்கு நூல்கள் இதில் அடங்கும்.

தொல்காப்பியத்திற்கு இளம்பூரணர், பேராசி ரியர், சேனுவரையர், நச்சினுர்க்கினியர், கல்லாடர், தெய்வச்சிலையார் ஆகியோர் இக் காலத்தில் உரையெழுதினர். இவர்களுள் நச்சினுர்க்கினியரும் பேராசிரியரும் வேறு சில காப்பிய நூல்களுக்கும் உரையெழுதியுள்ளனர். பத்துப்பாட்டு, கலித்தொகை, சீவகசிந்தாமணி ஆகியவற்றுக்கு நச்சினுர்க்கினியர் உரையியற்றி னுர். திருக்கோவையாருக்கும் குறுந்தொகைக் கும் பேராசிரியர் எழுதிய உரை உண்டு. திருக் குறளுக்கும் பரிபாடலுக்கும் பரிமேலழகர் உரை செய்தார். சிலப்பதிகாரத்திற்கு அடியார்க்கு நல்லாரும் நன்னூலுக்கு மயிலைநாதரும் உரை

யெழுதினர். மணக்குடவர், பரிதியார், காளிங்கன் முதலியோர் திருக்குறளுக்கு உரை கண்டனர்.

இலக்கிய இலக்கண நூல்களுக்கு உரை யெழுந்தது போல வைணவப் பிரபந்தமான நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திற்கும் நஞ்சீயர் முதல் பெரியசீயர் வரை வட மொழியும் தமிழும் கலந்த மணிப்பிரவாள நடையில் உரை யாக்கினர்.

உரை நூல்கள் தோன்றியதை யடுத்து சைவ, வைணவ சமயங்களின் தத்துவங்களை விளக்கும் நூல்கள் பலவெழுந்தன. தத்துவராயரென்பார் அஞ்ஞைவதைப் பரணி, மோகவதைப் பரணி, பாடுதுறை, சசிவர்ணபோதம் போன்ற நூல்களை இயற்றினர். சைவசமயத்தை வளர்ப்பதற்காகத் திருவாவடுதுறை மடமும் தருமபுர மடமும் கி. பி. 14ஆம் நூற்றுண்டில் நிறுவப்பட்டன. இம்மடங்களின் தலைவர்களாயிருந்தவர்கள் பலர் அரிய தத்துவ நூல்களை இயற்றியுள்ளனர்.

பதினைந்தாம் நூற்ருண்டில் தனிப்பாடல்கள் பாடிப் புகழ்பெற்ற புலவர்கள் பலர் வாழ்ந்தனர். நகைச்சுவை பாடல்கள் பாடுவதில் வல்லவரான கவி காளமேகம் திருவானைக்கா உலாவை இயற்றியதோடு பல ஆசு கவிகளையும் பாடியுள் ளார். கச்சிக் கலம்பகம், திருவாமாத்தூர்க் கலம்பகம், தில்லைக் கலம்பகம், ஏகாம்பரநாத ருலா போன்ற பல சிற்றிலக்கிய நூல்களைப் பாடிய இரட்டையர் காளமேகத்திற்குப் பின் தோன்றியவர்.

சந்தப்பாடல்களால் கந்தப்பெருமானை அலங் கரித்த அருணகிரியார் வாழ்ந்ததும் அந் நூற்ருண்டில்தான். திருப்புகழ் பதினுயிரமும் கந்தரலங்காரம், கந்தரனுபூதி போன்ற சிறு நூல்களும் அவரால் பாடப்பெற்றவை. வட மொழியில் வழங்கி வந்த வியாச பாரதத்தை அருணகிரியார் காலத்தில் வாழ்ந்த வில்லி புத்தூரார் தமிழில் இயற்றினுர்.

பாண்டிய நாட்டினரான வீரகவிராயர் 16ஆம் நூற்ருண்டில் அரிச்சந்திர புராணத்தைப் பாடி ஞர். ஆண்டவனைப் பற்றியும் அடியார்களைப் பற்றியும் புராணங்கள் தோன்றியதுபோல, இறைவன் குடியுள்ள திருத்தலங்களின் பெருமை கூறும் தல புராணங்கள் அந்நூற்ருண்டில் தோன்றின. நிரம்ப அழகிய தேசிகர் சேது புராணமும் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல் புராணமும் அவற்றுள் குறிப்பிடத்தக்கவை.

புலவர்க் கௌடதமான நைடதம் அதிவீரராம பாண்டியனுல் இயற்றப்பட்டது. அத்துடன் கூர்மபுராணம், காசிகாண்டம், இலிங்க புராணம், மாக புராணம் போன்ற நூல்களும் இவரால் ஆக்கப்பெற்றன.

அட்டப் பிரபந்தத்தைப் பாடிய பிள்ளைப் பெருமாளையங்காரும் அருணசல புராணம், செவ்வந்திப் புராணம், திருவெண்காட்டுப் புராணம் முதலிய பல புராண நூல்களை இயற்றிய சைவ எல்லப்பநாவலரும் 17ஆம் நூற்ருண்டில் வாழ்ந்தவர்கள். இமய முதல் குமரிவரை சைவத்தைப் பரப்பிய குமரகுருபரர் மதுரைக் கலம்பகம், மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் போன்ற சிற்றிலக்கிய நூல்களையும், பிற சமய, இலக்கண, நீதி நூல்களையும் இயற்றினுர்.

ஒருதுறைக் கோவை பாடிய அமிர்த கவிராயர், சக்கரைப் புலவர், சவ்வாதுப் புலவர், படிக்காசுப் புலவர் போன்ரேரும் சிற்றிலக்கிய நூல்கள் பல பாடிய புலவர்களும் அந்நூற்ருண்டில் வாழ்ந் துள்ளனர். திருவாரூர் உலா, சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் போன்ற பல நூல்களைப் பாடிய அந்தகக்கவி வீரராகவ முதலியாரும் மருதூ ரந்தாதி இயற்றிய கடிகை முத்துப்புலவரும் நன்னெறி தந்த சிவப்பிரகாச சுவாமிகளும் அவர்களுள் குறிப்பிடத்தக்கோர் ஆவர். காளி தாசரின் இரகுவம்சம் அரசகேசரி என்பாரால் தமிழில் சிறுகாப்பியமாக மொழிபெயர்க்கப் பட்டது.

தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்ட மேலைநாட்டுக் கிறித்துவப் பாதிரியார்கள் தமிழ் நாட்டிற்கு 18ஆம் நூற்ருண்டில் வரத் தொடங்கினர். இத்தாலியிலிருந்து வந்த தத்துவபோதக சுவாமி களும் வீரமாமுனிவரும் பல தமிழ் நூல்களை இயற்றியுள்ளனர். தமிழ் உரைநடை வளர்ச்சிக் குப் பாடுபட்டவர்கள் மேலைநாட்டுப் பாதிரியார் கள் எனலாம். 'பரமார்த்த குரு கதை'யை இயற்றிய வீரமாமுனிவர் 'தேம்பாவணி' என்ற சிறு காப்பிய நூலையும் இலக்கண நூல்களையும் அகராதி நூல்களையும் தமிழ் மொழியில் ஆக்கி யுள்ளார்.

முகமதியப் புலவர்கள் பலர் தமிழ் மொழியின் வளர்ச்சிக்குத் தங்கள் பங்கைச் செலுத்தினர். பன்னீராயிரம் செய்யுட்களால் நபிகள் நாயகத் தின் வரலாற்றைப் பாடினுர் உமறுப்புலவர். சீருப் புராணம் என்னும் அந்நூல் முகமதியப் புலவர்கள் தமிழில் இயற்றிய நூல்களுள் தலை சிறந்த நூல். குணங்குடி மஸ்தான் பாடிய பக்திப்பாடல்களும் வண்ணக்களஞ்சியப் புலவர், நயினு முகமதுப் புலவர் ஆகியோர் பாடல்களும் குறிப்பிடத்தக்கன.

பாமரர்களும் படித்துப் பக்திப் பரவசமடையும் வண்ணம் எளிய நடையில் பக்திச் சுவை மிக்க பாடல்களைப் பாடினுர் தாயுமான சுவாமிகள். அபிராமி பட்டரால் இயற்றப்பெற்ற நூல் அபிராமியந்தாதி.

ஆசையுடன் பாடக்கூடிய நாடக நூல்கள் பல இந்நூற்றுண்டில் தோன்றலாயின. சீகாழி அருணுசலக் கவிராயர் இராம நாடகத்தை இயற்றினுர்.

சிவஞான யோகிகளான சிவஞான முனிவர் வடமொழி, தென்மொழி ஆகிய இரு கடல்களின் கரையையுங் கண்டவர். சிவஞான போதத்திற்கு இவரியற்றிய மாபாடிய உரையும் அமுதாம்பிகைப் பிள்ளைத்தமிழ், கலைசையந்தாதி போன்ற சிற்றிலக்கிய நூல்களும் இலக்கண, நீதி நூல்களும் தமிழ் மொழிக்கு ஆக்கம் தருபவை. திருத்தணிகையைச் சார்ந்த கச்சியப்ப முனிவர் திருத்தணிகைப் புராணம், காஞ்சிப் புராணம் பிற்பகுதி, விநாயக புராணம், பூவாளூர்ப் புராணம் போன்ற பல புராண நூல்களையும் வண்டுவிடு தூது, ஆற்றுப்படை போன்ற சிற்றிலக்கிய நூல்களையும் படைத்துள்ளார். கலைசைக்கோவை, கலைசைச்சிலேடை வெண்பா போன்ற பல சிற்றிலக்கிய நூல்களைப் படைத்தவர் தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் என்பார்.

காகிதத்தில் எழுதும் முறையும் அச்சிடும் வழக்கமும் பெருகியதால் 19 ஆம் நூற்றுண்டில் தமிழ் பல வழிகளிலும் வளர்ச்சியுற்றது. தமிழ் நூல்கள் செய்யுள் வடிவிலும் உரைநடை வடிவிலும் பெருவாரியாக வெளிவந்தன. பாமரர்களுக்காக நாடக நூல்களும் கதைப்பாடல்களும் வெளிவந்தன. தமிழர்தம் மொழி, பண்பாடு, வரலாறு போன்றவற்றை விளக்க ஆங்கில நூல்கள் பல தோன்றின.

சரவணப் பெருமாள் கவிராயர், இராமானுச கவிராயர், இராமச்சந்திர கவிராயர், வீரராகவ முதலியார் போன்ருேர் சிற்றிலக்கிய நூல்கள் பலவற்றை ஆக்கியருளினர்.

தமிழ் உரைநடை நூல்கள் ஆக்கிய புலவர்களுள் முதலில் குறிப்பிடத்தக்கவர் ஆறுமுக நாவலர். யாழ்ப்பாணத்தைச் சார்ந்த இவர் தமிழ் நூல்களைச் சிறந்த முறையில் பதிப்பிக்க முற்பட்டார். பரிமேலழகருரை, நன்னூற் காண்டிகை, திருக்கோவையார் போன்ற பல அரிய நூல்களை இவர் பதித்துள்ளதோடு பெரிய புராணம், கந்த புராணம், திருவிளையாடற் புராணம் போன்றவற்றிற்கு வசனமும் எழுதி வெளியிட்டுள்ளார்.

நாவலர் பிறந்த ஆண்டிலேயே தமிழகத்தில் தோன்றியவர் இராமலிங்க அடிகள். 19 ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த பாவலர்களுள் சிறந்தவர் இவர். எந்நெறியும் நன்னெறியே என்ற பரந்த நோக்கத்தையுடைய அடிகள் 'சமரச சன்மார்க்க சங்கத்'தை நிறுவித் தம் கொள்கையினைப் பரப்பி வந்தார். இவரியற்றிய இறை நலமிக்க பாடல்கள் 'திருவருட்பா' என்ற பெயரில் தொகுக்கப்பெற்றுள்ளன. 'மனுமுறை கண்ட வாசகம்' போன்ற உரைநடை நூல்களையும் இவர் இயற்றியுள்ளார்.

அடிகளுக்குப் பின் வாழ்ந்த பெரும்புலவர் மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளையாகும். நாளொன்றுக்கு முந்நூறு பாடல்கள் பாடும் திறன்மிக்க இவர் திருநாகைக் காரோணப் புராணம், திருக்குடந்தைப் புராணம் முதலிய பதினுறு தல புராணங்கள் பாடியுள்ளார். 9 பிள்ளைத் தமிழ் நூல்களும் 11 அந்தாதிகளும் 2 கலம்பகங்களும் 4 மாலைகளும் ஒரு கோவையும் ஓர் உலாவும் இவரால் பாடப்பெற்றன. இத்தனை நூல்களை இயற்றியதோடு பல மாணவர்களுக்கும் பாடம் சொல்லியுள்ளார். இவரிடம் பாடங் கேட்டவர்களில் குறிப்பிடத்தக்கோர் டாக்டர் உ. வே. சாமிநாதையரும் தியாகராசச் செட்டியாரும் ஆவர்.

தமிழ்ச் செய்யுள் நூலுக்கும் உரைநடை நூலுள் புதுவகையான புதின நூலுக்கும் பாலமமைத்தவர் முனிசீப் வேதநாயகம் பிள்ளை. பெண்மதிமாலை, நீதிநூல் போன்ற செய்யுள் நூல்களை இயற்றியுள்ள இவர் தமிழில் முதல் புதினமான பிரதாப முதலியார் சரித்திரத்தையும் படைத்துள்ளார். இவரியற்றிய சுகுணசுந்தரி வரலாறும் புதினமே.

இராமலிங்க அடிகளின் சமகாலப் புலவரான முருகதாச சுவாமிகள் பல அரிய நூல்களை இயற்றியுள்ளார். தில்லைத் திருவாயிரம், பழனித் திருவாயிரம் போன்ற ஆயிரம் பாக்களையுடைய நூல்களையும் கோவை, கலம்பகம் போன்ற சிற்றிலக்கிய நூல்களையும் ஆமாத்தூர்த் தல புராணம் போன்ற புராண நூல்களையும் இவர் ஆக்கியுள்ளார். எழுபது புலவர்களின் வரலாற்றைப் 'புலவர் புராணம்' என்ற நூலில் பாடியுள்ளார். இவர் பாடல்களில் மறைந்தன போக எஞ்சியிருப்பவை ஐம்பதினுயிரத்துக்கும் மேற்பட்ட பாடல்களாகும்.

இராமநாதபுரத்தை யாண்டுவந்த சேதுபதி மன்னர்கள் தமிழ் மொழியின் ஆக்கத்திற்குப் பேருதவி செய்துள்ளார். முத்துராமலிங்க சேதுபதி, பாஸ்கர சேதுபதி, பொன்னுசாமித் தேவர், பாண்டித்துரைத்தேவர் ஆகியோர் அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்.

அழகிய சொக்கநாதபிள்ளை, பூண்டி அரங்கநாத முதலியார், காஞ்சிபுரம் சபாபதி முதலியார் முதலியோர் பல சிற்றிலக்கிய நூல்களை இயற்றியுள்ளனர்.

சென்ற நூற்றாண்டில் தமிழ் மொழியின் ஆக்கத்திற்குத் தொண்டாற்றிய மேனாட்டறிஞர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் டாக்டர் கால்டுவெல், டாக்டர் ஜி. யு. போப் போன்றவர்களாகும். 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணத்'தைக் கால்டுவெல் வகுத்தார். போப் துரைமகனார் திருக்குறள், நாலடியார், திருவாசகம் ஆகிய மூன்றையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்ததோடு, மேனாட்டார் தமிழ் பயில்வதற்கு உதவும் வகையில் பல கருவி நூல்களையும் உருவாக்கினார்.

யாழ்ப்பாணத்தைச் சார்ந்த சி. வை. தாமோதரம் பிள்ளை யென்பார் தமிழ் இலக்கிய இலக்கண நூல்களை மிகத் தெளிவான முறையில் பதிப்பித்தார். சூளாமணி, வீரசோழியம், கலித்தொகை, இறையனாரகப்பொருள், தொல்காப்பிய உரைகள் முதலியவற்றை மிக நல்ல முறையில் பதிப்பித்தார்.

நாஞ்சில் நாட்டினரான பேராசிரியர் பி. சுந்தரம் பிள்ளை 'மனோன்மணியம்' என்ற புதுவகை நாடக நூலை எழுதினார். மேனாட்டு நாடக முறையைத் தழுவி எழுதப்பட்ட இந் நாடகம் நல்ல நாடக இலக்கியமாக விளங்குகின்றது.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த பெரும்புலவர்கள் பலர். தற்காலக் கவிதைக்குத் தலைவராக விளங்கும் சுப்பிரமணிய பாரதியார் தமிழ்க் கவிதைக்குப் புதுப் பொலிவை யூட்டினார். பாட்டுக்கொரு புலவரெனப் போற்றப்பெறும் பாரதியின் படைப்புக்கள் கவிதைத் தொகுதிகளாக வெளிவந்துள்ளன. பாஞ்சாலி சபதம், கண்ணன் பாட்டு, குயில் பாட்டு போன்ற அரிய நூல்களை இவர் யாத்துள்ளார்.

இந் நூற்றாண்டின் தலைசிறந்த பதிப்பாசிரியரான டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் பழந்தமிழ் இலக்கியங்களைத் தமிழர்கட்கு மீட்டுத் தந்தார். தமிழ் இலக்கியத்தின் பெருமையைத் தழைக்கச் செய்தவர் இவர். புறநானூறு, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல் என்ற ஐந்து தொகை நூல்களையும், சிலம்பு, மேகலை, சிந்தாமணி போன்ற காப்பிய நூல்களையும் பல புராண, சிற்றிலக்கிய நூல்களையும் இவர் பதிப்பித்துள்ளார். தமிழ் நூல் பதிப்புத்துறை இவரால் புத்தொளி பெற்றதெனலாம்.

இந்த நூற்றாண்டில் தமிழ் இலக்கியத்திற்குத் தொண்டு செய்தவர்களை ஆராய்ச்சியாளர்கள், கவிஞர்கள், நாடக ஆசிரியர்கள், புதினக்காரர்கள் சிறுகதை எழுத்தாளர்கள் என்று பல வகையாகப் பிரிக்கலாம்.

சோழவந்தான் அரசஞ் சண்முகனார் 'தொல்காப்பியப் பாயிரவிருத்தி' 'வள்ளுவர் நேரிசை' முதலிய நூல்களை வெளியிட்டுள்ளார். பரிதிமாற் கலைஞரெனப் பெயர் மாற்றம் செய்து கொண்ட வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் கலாவதி, மானவதி போன்ற நாடக நூல்களையும் நாடக வியலையும் தமிழ்மொழி வரலாற்றையும் எழுதியுள்ளார். பம்மல் சம்பந்த முதலியாரும் சங்கரதாச சுவாமிகளும் மேடைகளுக்கேற்ற நாடகங்களை யெழுதி நாடக இலக்கியத்தை வளர்த்தனர்.

பல்வகை ஆராய்ச்சி உரைநடை நூல்களையெழுதியவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் மறைமலையடிகள், நாவலர் சோமசுந்தர பாரதியார், திரு. வி. கலியாணசுந்தரனார், மு. ராகவையங்கார், ரா. இராகவையங்கார், எஸ். வையாபுரிப் பிள்ளை, டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை, டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார், டாக்டர் மா. இராசமாணிக்கனார் போன்ற பலராவர். தனித் தமிழ் நடையைத் தோற்றுவித்த மறைமலையடிகள் ஐம்பதுக்கு மேற்பட்ட பலதுறை நூல்களை இயற்றியுள்ளார். உரைநடையில் தமக்கெனத் தனிவகையை அமைத்துக்கொண்ட திரு. வி. கலியாணசுந்தரனாரின் பணி தமிழ் உரைநடை வளர்ச்சிக்குப் பேருதவி செய்துள்ளது. பல வகை ஆராய்ச்சிகளைச் செய்துள்ள மு. இராகவையங்கார், நாவலர் சோமசுந்தர பாரதியார் போன்றோர் ஆராய்ச்சித்துறைக்குப் பேருதவி செய்துள்ளனர்.

தமிழ் நூல்களைச் செவ்வையான முறையில் பதித்து வெளியிட்டுத் தமிழ்நூல் பதிப்பு முறையில் தமக்கெனத் தனிப்பெருமை தேடிக் கொண்டவர் எஸ். வையாபுரிப் பிள்ளை. ஆராய்ச்சி நூல்களியற்றிப் பெருந்தொண்டாற்றியவர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை. திரு

வள்ளுவர் நூல்நயம், ஊரும் பேரும் போன்ற பல நூல்களை இவர் படைத்துள்ளார்.

பாரதியாருக்குப் பின் தமிழ்க் கவிதைத் துறையில் புகழ் பெற்று விளங்கியவர்கள் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையும் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனும் ஆவர். கவிமணியின் கவிதைகள் 'மலரும் மாலையும்' என்ற நூல் வடிவில் வெளிவந்துள்ளன. புரட்சிக் கவிஞரின் படைப்புக்கள் பல நூல்களாக உள்ளன. 'பாரதிதாசன் கவிதைகள்' என்ற தலைப்பில் 3 தொகுதிகளும் சேரதாண்டவம், பாண்டியன் பரிசு போன்ற தனி நூல்கள் பலவும் வெளியாகியுள்ளன.

இருபதாம் நூற்றுண்டில் வளர்ச்சியடைந்துள்ள துறைகளாகக் குறிக்கத்தக்கன நாவல் என்ற புதினத் துறையும் சிறுகதைத் துறையுமாகும். புதினத்துறையில் கல்கி குறிப்பிடத்தக்கவர். அலைஓசை போன்ற சமூகக் கதைகளையும் சிவகாமியின் சபதம் போன்ற வரலாற்றுப் புதினங்களையும் இவர் படைத்துள்ளார்.

சிறுகதைத் துறையில் குறிப்பிடத்தக்கவர் புதுமைப் பித்தன். கற்பனை வளமிக்க இவர் கதைகளில் கடவுள்கூட பங்கேற்றுள்ளார். இவர் கதைகள் பல தொகுதிகளாக வெளிவந்துள்ளன.

இவர்களைத் தவிர இத்துறைகளில் பலர் சிறந்து விளங்கியுள்ளனர். எனினும் இடச் சுருக்கம் காரணமாக எல்லோரையும் பற்றி எழுதுவதென்பது இயலாததாயிற்று.



# இலக்கண நூல்கள்

இரா. முத்துக்குமாரசாமி

ஒரு மொழியின் ஆக்கத்திற்கு அடிப்படை இலக்கணமே. இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் இயம்பப் பெறுகிறது. இலக்கிய மின்றேல் இலக்கணமில்லை. எனினும் இலக்கணம்தான் மொழியின் வளர்ச்சிக்கு உதவுகிறதென்பதில் யாதோரையமுமில்லை. முன் எழுந்த இலக்கண நூல்களிற் கூறப்பட்டுள்ள விதிகளின் அடியொற்றியே பின்வரும் இலக்கியங்கள் எழுகின்றன. எனவே, இலக்கியமும் இலக்கணமும் மொழியின் இரு கண்களென இயம்பலாம்.

தமிழ் தொன்மையான மொழி. இலக்கண இலக்கிய வளமுடைய மொழி. ஈராயிரத்து ஐந்நூறு ஆண்டுகட்கு முன்னர்த் தோன்றிய இலக்கிய இலக்கண நூல்கள் இன்றும் நம்மிடையே உலவுகின்றன.

இலக்கணத்தைத் தமிழ் நூலார் ஐவகையாகப் பிரித்துள்ளனர். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பவையே அவை. எழுத்திலக்கணமென்பது எழுத்தின் வகை, பிறப்பு, வரிவடிவு, புணர்ச்சிமுறை முதலியவற்றை விளக்குவது. சொற்களின் பல்வேறு பகுதிகளும் அவை பயிலுமுறையும் சொல்லிலக்கணத்தில் விளக்கப்பெறும். பொருள் என்பது தமிழனின் அகவாழ்க்கையை விளக்கும் அகப்பொருளையும் புறவாழ்க்கையை விளக்கும் புறப்பொருளையும் கொண்டது. செய்யுளுறுப்புக்களை விளக்கிப் பாவியற்றும் யாப்பு முறையை இயம்புவதே யாப்பிலக்கணம். செய்யுள்களில் இடம் பெறும் உவமை உருவகம் முதலிய அணிநயங்களை விளக்குவது அணியிலக்கணம்.

தொல்காப்பியர் காலத்தில் இலக்கணம் எழுத்து, சொல், பொருள் என மூன்று வகையாகவே பிரிக்கப்பட்டிருந்தது. பிற்காலத்தில் தோன்றிய யாப்பு, அணி என்ற பிரிவுகள் தொல்காப்பியத்தில் பொருள் அதிகாரத்தில் முறையே செய்யுளியலிலும் உவமையியலிலும் அடங்கியுள்ளன. அவற்றில் கூறப்பட்ட கருத்துக்களே பின்னர் தனித்தனிப் பிரிவுகளாக உருவாயின. இறையனுரகப் பொருள் உரை எழுந்த காலத்தில் மேற்கூறப்பட்ட மூன்ருேடு யாப்பும் சேர்க்கப்பட்டுத் தமிழ் இலக்கணம் நான்கு பிரிவுகளாக வளர்ச்சி யடைந்தது. ஐந்தாவதான அணியிலக்கணம் தண்டியாசிரியர் தண்டியலங்காரமென்ற அணியிலக்கண நூலை எழுதிய பின்பே தனிப் பிரிவாக வளர்ச்சியடைந்தது.

தமிழ் இலக்கண நூல்கள் அனைத்துமே இவ்வைந்து உறுப்புக்களையும் விளக்குகின்றன என்று கூறுதல் இயலாது. இவற்றில் இரண்டு கூறுவனவும் மூன்று கூறுவனவும் தனித்தனியே ஓரிலக்கணத்தைக் கூறுவனவுமாகப் பல நூல்கள் வெளிவந்துள்ளன. தனித்தனியாக இலக்கணம் கூறவேண்டிய நிலையெழுந்தபோதுபொருள் இலக்கணம் இருவகையாகப் பிரிக்கப் பெற்றுத் தமிழரின் அகவொழுக்கத்தை விரிக்கும் அகப்பொருள் இலக்கணமாகவும் புறவொழுக்கத்தை விளக்கும் புறப்பொருள் இலக்கணமாகவும் மலர்ந்தது.

முதல் தமிழ் இலக்கண நூலைச் செய்தவர் அகத்தியர் என்பது தமிழ் வழக்கு. இவர் வடபுலத்திலிருந்து தென்புலம் போந்த தமிழ் முனி என்றும் கூறப்படுகிறது. இவர் இயற்றியதாகக் கூறப்படும் இலக்கணம் 'அகத்தியம்' என்ற பெயரிலேயே உலவியதாகத் தெரிகிறது. இது முதலிரு சங்கங்களுக்கும் இலக்கணமாக விளங்கிற்றென்று சொல்லப்படுகிறது. இந்நூல் கடல் கோளால் மறைவுற்றிருக்கலாமெனத் தெரிகிறது. இப்பொழுது பேரகத்தியத் திரட்டு, சிற்றகத்தியத் திரட்டு என்று வழங்கப்பெறும் இலக்கண நூல்கள் முதல் அகத்தியர் இயற்றியதென ஒப்புக்கொள்வார் குறைவு. அப்பெயரையுடைய பிற்காலப் புலவர் ஒருவர் இந்நூல்களை இயற்றியிருக்கலாமெனக் கருதப்படுகின்றது.

அகத்தியனுரின் மாணக்கர் பன்னிருவர் இருந்தனரெனப் புறப்பொருள் வெண்பாமாலைப் பாயிரம் குறிப்பிடுகிறது. அவர்களுள் ஒருவரே ஒல்காப் புகழ் பெற்ற 'தொல்காப்பியம்' என்னும் நூலை இயற்றிய தொல்காப்பியர். நமக்குக்

கிடைக்கும் தமிழ் இலக்கண நூல்களில் மிகப் பழமையானது தொல்காப்பியமே. தொல்காப் பியரின் காலம் இதுவெனத் துணிந்து கூற முடியாதாயினும், பெரும்பாலான தமிழ் அறிஞர் ஒத்துக்கொண்ட காலம், கி. மு. ஐந்தாம் நூற் றுண்டு என்பதே. 'அதங்கோட்டாசான்' என்று தொல்காப்பியர் குறிப்பிடப்பெறுவதால், அவர் திருவாங்கூர் என இன்று வழங்கும் திருவிதாங் கோட்டையைச் சார்ந்தவர் என்று கூறுவர்.

தொல்காப்பியர் நூலில் ஆங்காங்கு 'என்ப' 'என்மனுர் புலவர்' என்று குறிப்பிடுவதால், அவருக்கு முன் பல தமிழ்ப்புலவர்கள் வாழ்ந்துள ரென்பதும், பல தமிழ் இலக்கிய, இலக்கண நூல்கள் இருந்திருக்க வேண்டுமென்பதும் துணிபு.

தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என மூன்று அதிகாரங்களையுடையது. எழுத்துக் களின் வகை, அவற்றின் பெயர் முதலாக, சொற் களின் புணர்ச்சி வரை எழுத்திலக்கணத்தை ஒன்பது இயல்களில் விளக்கியுள்ளார் ஆசிரியர். சொற்கள் தொடர்களாக அமையும்போது அவற் றிடை இலங்க வேண்டிய பொருத்தங்களையும் நால்வகைச் சொற்களான பெயர், வினை, இடை, உரி என்பவற்றையும் சொல்லதிகாரம் விளக்கு கின்றது. பண்டைத் தமிழர் வாழ்வின் சிறப் பெனப் போற்றப்படும் அகப் புற வொழுக்கங் களின் இலக்கணங்களையும் செய்யுள் நலத்திற்கு இன்றியமையாத சுவை, உவமை, யாப்பு போன்றவற்றின் இலக்கணங்களையும் பொருளதி காரம் தெளிவுபடுத்துகின்றது.

மூன்று அதிகாரங்களுக்குமாகச் சேர்த்து மொத்தம் ஆயிரத்து அறுநூறுக்கும் மேற்பட்ட நூற்பாக்கள் உள்ளன.

தொல்காப்பியத்தின் சிறப்பு அதற்கு உரை யெழுதிய உரையாசிரியர்களால் பெருமளவுக்கு ஓங்கியது எனலாம். இவ்விழுமிய நூலுக்கு உரை கண்டவர்கள் இளம்பூரணர், பேராசிரியர், சேனுவரையர், நச்சினுர்க்கினியர், தெய்வச்சிலை யார், கல்லாடனுர் என அறுவர். பிற்காலத்தில் எழுந்த உரைகாரர்களுள் குறிப்பிடத்தக்கவர் சிவஞான முனிவரும் சோழவந்தான் அரசஞ் சண்முகனுருமாவர்.

தொல்காப்பிய உரையாசிரியர்களுள் காலத் தால் முந்தியவர் இளம்பூரணர். அத்துடன் தொல்காப்பியம் முழுவதற்குமே உரை கண்டவர் இவர். இவர்தம் உரையின் சிறப்பினை உணர்ந்த பிற்கால உரையாசிரியர்கள் இவரைப் பெயர் கூறிச் சுட்டாது உரையாசிரியர் என்றே குறிப் பிட்டு வந்துள்ளனர். இது அவர்தம் புகழையும் உரையின் சிறப்பினையும் நன்கு எடுத்துக் காட்டு கின்றது. மிகத் தெளிவாக ஆற்றெழுக்கு போன்ற நடையில் உரை எழுதியுள்ள இளம் பூரணர் கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டைச் சார்ந்தவர். தொல்காப்பியத்தின் மூன்று அதி காரங்களுக்கும் இவர் உரையெழுதியிருப்பினும் எழுத்ததிகாரத்திற்கு இவர் எழுதியுள்ள உரையே புலவர்களால் பெரிதும் போற்றப்படுகின்றது.

பதின்மூன்றும் நூற்றுண்டில் வாழ்ந்த சேனு வரையர் தொல்காப்பியம் சொல்லதிகாரத்துக்கு எழுதியுள்ள உரை கற்ருேர் அனைவராலுமே போற்றப்படுகின்றது. வடநூற்கடலை நிலை கண்டுணர்ந்த சேனுவரையரின் உரை சற்றுக் கடினமாயிருப்பினும் அது அவர்தம் புலமையை நன்கு எடுத்துக் காட்டுகின்றது. உரையாசிரி யரின் கருத்துக்களுக்குப் பல இடங்களில் இவர் மாறுபட்டிருப்பினும் முன்ஞேர் மொழி பொருளை இவர் பொன்னே போல் போற்றியிருக்கிருர் என்பது தெளிவு.

அவருக்குப் பின் தோன்றிய பேராசிரியர் பொருளதிகாரம் முழுவதுக்குமே உரையெழுதி யுள்ளாரெனத் தெரிகிறது. ஆனல் தற்பொழுது கிடைத்திருப்பது மெய்ப்பாட்டியல், உவம இயல், செய்யுளியல், மரபியல் என்ற நான்கு இயல் களுக்கு எழுதப்பட்ட உரையே. எனினும், இப் பகுதிக்கு இவர் உரையைவிட வேறு சிறந்த உரை எழவில்லையெனலாம். பதின்மூன்றும் நூற் ருண்டின் இடைப் பகுதியில் இவர் வாழ்ந்தார் என்று கூறுவர்.

உச்சிமேல் புலவர் கொள் நச்சினுர்க்கினியர் தொல்காப்பியம் முழுவதுக்குமே உரையெழுதி யுள்ளார். இருப்பினும் பொருளதிகாரத்திலுள்ள மெய்ப்பாட்டியல், உவம இயல், மரபியல் ஆகிய மூன்றுக்கும் இவர் எழுதிய உரை பிற்காலத்தில் கிடைக்கவில்லை. இவர்தம் உரை இலக்கிய மேற் கோள் மிக்குடையது. பதின்மூன்றும் நூற்றுண் டின் பிற்பகுதியில் இவர் வாழ்ந்திருக்கலாமெனக் கருதப்படுகின்றது.

சொல்லதிகாரத்திற்கு மட்டுமே தெய்வச்சிலை யார் என்பார் உரையியற்றியிருக்கலாமெனத் தெரிகின்றது. 14ஆம் நூற்றுண்டின் பிற்பகுதி யில் வாழ்ந்ததாகக் கருதப்படும் இவர்தம் உரையை விருத்தியுரையென்று குறிப்பிட்டுள் ளார்.

கல்லாடனுர் என்பார் தொல்காப்பியம் சொல் லதிகாரத்திற்கு எழுதியுள்ள உரை அண்மையில் நூல் வடிவில் வெளிவந்துள்ளது. இவர் கி.பி. பதினைந்தாம் நூற்றுண்டில் வாழ்ந்திருக்கலா மென்பர்.

18ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சிவஞான முனிவர் தொல்காப்பியப் பாயிரத்துக்கும் முதற் சூத்திரத்துக்கும் விருத்தியுரை யியற்றியுள்ளார். முன்னவர் உரைகளில் இவர்தம் கருத்துக்கு முரண்பட்ட இடங்களையெல்லாம் இவர் துணிந்து மறுத்துள்ளார்.

சோழவந்தான் அரசஞ் சண்முகனார் தொல் காப்பியப் பாயிரம், நூன் மரபு, மொழி மரபு ஆகிய மூன்று பகுதிகளுக்கும் உரையெழுதி யுள்ளார். இவர்தம் உரை 'சண்முக விருத்தி' எனவும் அழைக்கப்பெறும். இவர்தம் பாயிர உரை மட்டுமே நூல் வடிவில் வெளிவந்துள்ளது. 1868இல் தோன்றிய சண்முகனார் 1915இல் மறைவுற்றார்.

தொல்காப்பிய நூலுக்குப் பல விளக்க நூல் களும் அதன் உரைகளின் பல பதிப்புக்களும் வெளிவந்துள்ளன. அதன் ஆங்கில மொழி பெயர்ப்புக்களும் வெளியிடப் பெற்றுள்ளன.

தொல்காப்பியத்திற்குப் பின்னர் எழுந்த இலக்கண நூல்களை ஐந்திலக்கணமும் கூறும் நூல்கள், தனித்தனி இலக்கணம் கூறும் நூல்க ளென்று பிரிக்கலாம். தொல்காப்பியத்திற்கு முன் தோன்றி மறைந்த மா புரணம், பூத புராணம் போன்ற இலக்கண நூல்கள் ஐந்திலக் கணங்களும் கூறியனவா என்பது தெரியவில்லை. தொல்காப்பியத்திற்குப் பின் தோன்றிய ஐந்திலக் கண நூல்களுள் முதலில் குறிப்பிடத்தக்கது வீர சோழியமே.

பாண்டி நாட்டைச் சார்ந்த புத்தமித்திரனார் என்பார் இயற்றியதே வீரசோழியம். சோழ மன்னர்களுள் ஒருவரான வீரராசேந்திரனின் விருப்பத்திற்கிணங்க இந்நூல் எழுந்ததாகலின் இந்நூல் அவர்தம் பெயரைத்தழுவி வீரசோழியம் எனப் பெயர் பெற்றது. வீரராசேந்திரனின் ஆட்சிக் காலம் கி. பி. 1063—1070 ஆகும். எனவே இந்நூலும் அக்காலத்தில்தான் எழுதப் பட்டிருக்க வேண்டுமென்பது துணிபு.

இது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐந்து அதிகாரங்களையுடையது. மொத்தம் 186 நூற்பாக்கள் இதன்கண் பயின்று வந்துள் ளன. தமிழிலக்கணத்தை எழுதப் புகுந்த இந் நூலாசிரியர் வடமொழி இலக்கணத்தையும் தழுவி இந்நூலை எழுதியுள்ளதால் இது பெருவழக்கற்றுப் போயிற்று எனலாம். பெருந்தேவனார் என்பார் இந்நூலுக்கு விரிவான உரையொன்று எழுதி யுள்ளார். பல சிறப்புக்களையுடைய இவ்வுரை மூலநூல் பரவாத காரணத்தால் தனக்குரிய புகழையும் அடையாது நிற்கின்றது. இவ்வுரை யாசிரியர் மூலநூலாசிரியர் வாழ்ந்த காலத் திற்கு மிக அண்மையிலேயே வாழ்ந்திருக் கிறார்.

வீரசோழியத்திற்கு அடுத்ததாக ஐந்திலக் கணங்களையும் விரிக்க முற்பட்ட நூல் இலக்கண விளக்கமே. திருவாரூரினரான வைத்தியநாத தேசிகர் என்பார் இதை இயற்றினார். பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் இவர்.

எழுத்து முதல் பொருளீறாக இந்நூல் ஐந்து அதிகாரங்களாலானது. மொத்தம் 941 நூற் பாக்களையுடையது. முன்னோர் மொழி பொரு ளன்றி அவர் சொல்லையும் பொன்னேபோல் போற்றுவமென்ற வகையில், தொல்காப்பியம், நன்னூல், யாப்பு, தண்டி போன்ற நூல்களி லுள்ள நூற்பாக்களைப் பலவிடங்களில் அவ்வாறே பெய்து வைத்துள்ளார். எனினும், தாம் மாறு பட்ட இடங்களிலெல்லாம் தம் கருத்தைப் பதிந்து வைக்க இவர் தவறவில்லை. இதற்கு உரிய உரை யையும் இவரே எழுதியுள்ளார். சில குறை பாடுடைத்தாயினும் இந்நூல் 'குட்டித் தொல் காப்பியம்' என்று வழங்கப்பெறுகின்றது.

இவர் இவ்வாறு தம் மனம்போன வகையில் முன்னோர் நூல்களை எடுத்துக் கையாண்டும் மாறுபட்ட இடங்களில் புதுக் கருத்துக்களைப் பெய்து வைத்தும் நூலை இயற்றியுள்ளதை மறுத்து நெல்லையைச் சார்ந்த சிவஞான முனிவர் 'இலக்கண விளக்கச் சூறாவளி' என்ற நூலை இயற்றியுள்ளார். வைத்தியநாத தேசிகரின் புதிய கருத்துக்களை இவர் வன்மையாகக் கண்டித்துள்ளார்.

மேலைநாட்டிலிருந்து சமயத்தைப் பரப்பவந்த கிறித்தவப் பாதிரியார்கள் தமிழ்மொழி வளர்ச் சிக்குப் பெருந்தொண்டாற்றியுள்ளனர். அவர் களுள் ஒருவரான வீரமாமுனிவர் என்ற பெஸ்கி பாதிரியார் 'தொன்னூல் விளக்க'த்தை இயற்றி னார். வீரமாமுனிவரின் காலம் கி. பி. 1680—1747 ஆகும்.

அருந்தமிழ் இலக்கணம் ஐந்தையும் விரித்து விளக்கும் தொன்னூல் விளக்கம் 370 நூற்பாக் களையுடையது. தொல்காப்பியம், நன்னூல், வீர சோழியம், யாப்பு, தண்டி முதலிய பல நூல் களைத் தழுவி இந்நூல் செய்யப்பட்டுள்ளது. சில இடங்களில் புதுப்புது மாறுதல்களையும் வீரமா முனிவர் செய்துள்ளார்.

இலக்கண மைந்தையும் கூறும் நூல்களுள் இறுதியாகக் கூறத்தக்கது முத்து வீரியம். சென்ற நூற்றாண்டில் இந்நூல் தோன்றியிருந் தும்கூட, இது மிக அருகிய வழக்கிலேயே உள்ளது. முத்துவீர உபாத்தியாயர் என்பார் இயற்றிய இந்நூல் 1889இல் முழுதும் அச்சிடப்

பெற்றது. 1286 நூற்பாக்களால் ஆகிய இந் நூலுக்குத் திருநெல்வேலியில் வாழ்ந்த திருப் பாற்கடல் நாதக் கவிராயர் உரையெழுதியுள்ளார். இவரும் முன்னோர் இயற்றிய நூற்பாக்கள் பல வற்றைத் தம் நூலில் அப்படியே பொதிந்து வைத்துள்ளார். இக்காரணத்தினாலேயே பின்னர் எழுந்த இலக்கண நூல்கள் பெருவழக்கற்றுப் போயின எனலாம்.

இனி ஐந்திலக்கணமுங் கூறுது தனித்தனி இலக்கணம் மட்டுமே கூறும் நூல்களை நோக்க லாம். எழுத்திலக்கணம் மட்டுமே கூறும் தனி நூல் இதுவரை எழவில்லை எனலாம். எழுத்தும் சொல்லும் பகரும் நூல்கள் இரண்டு. அவற்றுள் நேமிநாதம் முதலில் தோன்றிற்று. 12ஆம் நூற் ருண்டில் வாழ்ந்த குணவீர பண்டிதரென்னும் புலவர் நேமிநாத அடிகள் என்னும் சமண முனி வரின் பெயரால் எழுத்தும் சொல்லும் கூறும் நேமிநாதத்தை இயற்றினுர். தொண்டை நாட் டைச் சார்ந்த இப்புலவர் சமண சமயச் சார்புடை யவர்.

நேமிநாதத்தில் எழுத்ததிகாரம் உட்பிரி வற்றது. சொல்லதிகாரம் ஒன்பது இயல்களை யுடையது. மொத்தம் 97 நூற்பாக்கள் இதில் உள்ளன. பெரும்பாலும் தொல்காப்பியரின் இலக்கண விதிகளை ஒட்டியே இந்நூலாசிரியர் தம் நூலை எழுதியுள்ளதால், தொல்காப்பியம் என்னும் கடலைக் கடக்கத் தம் நூல் ஒரு பட காகப் பயன்படுமென்று குறிப்பிட்டுள்ளார்.

இதற்கு அடுத்துத் தோன்றிய நூல் நன் னூல். இது பெயரால் மட்டுமன்றி இயல்பாலும் எளிமையாலும் நன்னூலே. எழுத்தும் சொல் லும் பகரும் இந்நூலை இயற்றியவர் பவணந்தி முனிவராகும். இவர் சமண சமயத்தினர். சீயகங்கன் என்னும் கங்க நாட்டு மன்னனின் விருப்பால் எழுந்ததே நன்னூல். 13ஆம் நூற்ருண்டின் தொடக்கத்தில் எழுந்தது இந் நூல்.

தொல்காப்பியத்தைப் பெரும்பாலும் அடி யொற்றிச் சென்று கால வேறுபாட்டால் மொழி யின் கண் உண்டான மாறுபாட்டைத் தம் நூலில் பவணந்தியார் குறித்து வைத்துள்ளார். மொத்தம் 462 நூற்பாக்களை நன்னூல் கொண் டுள்ளது. தொல்காப்பியத்தைக் கற்குமுன் நன்னூல் கற்க வேண்டுமென்ற பழக்கம் நீண்ட காலமாக உள்ளதால் இந்நூல் எல்லோராலும் போற்றப்பட்டு படிக்கப்பட்டு வருகின்றது.

இதன் பெருவழக்கைக் கண்டு பல உரைகள் எழலாயின. விருத்தியுரையில் சிவஞான முனிவர் இயற்றியதும் காண்டிகை யுரையில் ஆறுமுக நாவலர் எழுதியதுமே பல்லோராலும் பயிலப் பெறுகின்றன.

சொல்லிலக்கணம் மட்டுமே கூறும் நூல்கள் இரண்டு பிற்காலத்தில் எழுந்தன. 17ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த சுப்பிர மணிய தீட்சிதர் 'பிரயோக விவேகம்' என்னும் நூலை இயற்றினுர். தமிழுக்கும் வடமொழிக்கும் உள்ள இலக்கண ஒப்புமையைக் காட்டுவான் வேண்டிப் பெரிதும் வடமொழி இலக்கணத் தையே தழுவித் தமிழிலக்கணத்தை எழுதினுர் இந்நூலாசிரியர்.

காரக படலம், சமாச படலம், தத்தித படலம், திங்குப் படலம் என நால்வகைப் படலங்களையுடைய இந்நூலில் 51 செய்யுள்கள் உள்ளன.

இந்நூலுக்கு நூலாசிரியரே உரையுமெழுதி யுள்ளார். நூலிலும் உரையிலும் முன்னெழுந்த நூல்களைப் பல இடங்களில் தழுவிச் சென்ருலும், சில இடங்களில் முன்னோரின் கருத்துக்களை வன்மையாகக் கண்டிக்கின்ருர்.

இந்நூலெழுந்த காலத்தை யொட்டியே மற்ருெரு சொல்லிலக்கண நூலான 'இலக்கணக் கொத்து'ம் தோன்றிற்று. இதை இயற்றியவர் திருநெல்வேலியைச் சார்ந்த சாமிநாத தேசிகர் ஆவர். பலர் நூல்களினும் பலர் உரைகளினும் சிதறிக்கிடந்த சில விதிகளை ஒவ்வொரு சூத்திரத் தால் ஒருங்கே அறியக் கிடத்தலின் இலக்கணக் கொத்து என்று காரணப் பெயர் பெற்றதாக நூலாசிரியரே குறிப்பிட்டுள்ளார். இவர் வட மொழியின் பாற்கொண்ட பற்றின் மிகுதி காரண மாகத் தமிழ் மொழியைத் தாழ்த்த முற்பட்டார். இதன் பயனுக, இவர் நூல் பயில்வாரற்றுப் பயன் குறைந்து போயிற்று.

தொல்காப்பியர் இலக்கணத்தை மூவகையாகப் பிரித்திருக்கப் பின்வந்தோர் அதை ஐந்தாக வகைப்படுத்தினர். காப்பியர் கூறிய பொருள் பிற்காலத்தில் அகம், புறம் என்ற இருவகையைக் கொண்ட பொருளாகவும் யாப்பாகவும் அணியாக வும் பிரிவுபட்டு வளர்ச்சியுற்றது.

அகப்பொருள் இலக்கண மென்பது அக வொழுக்கத்தை விளக்குவது. இதற்கு எழுந்த முதல் இலக்கண நூல் 'இறையனுரகப் பொருள்'. அழலவர் சோதி அருமறைக் கடவுளே இதை இயற்றினுர் என்று கூறுவர். இறையனுர் என்னும் இயற்றமிழ்ப் புலவர் ஒருவரே இதை இயற்றியிருப்பார் என்பார் ஒரு சாரார்.

களவியல், கற்பியல் என்ற இரு பிரிவையுடைய இந்நூலில் 60 நூற்பாக்கள் உள்ளன. நூற்

பாக்கள் திட்ப நுட்ப மிக்கு விளங்கினும் எளிமை யானவை.

இந்நூலுக்கு நக்கீரர் இயற்றியதாகக் கூறப் படும் உரையொன்றுளது. சங்க காலத் தைச் சார்ந்த நக்கீரர் இவ்வுரையை எழுதி வில்லையென்றும் பிற்காலத்தில் வாழ்ந்த நக்கீரர் என்ற பெயரையுடைய வேருெருவர் இதை இயற்றியிருக்கலாமென்றுஞ் சிலர் கூறுவர்.

எவ்வாறிருப்பினும் இவ்வுரை கற்பார் மனங் களிக்க வைக்கும் என்பதில் ஐயமில்லை. முத்தமிழ் வளர்த்த முச்சங்கங்களைப் பற்றியும் கடல் கோளால் தமிழகத்தின் பெரும் பகுதியும் தமிழ் நூல்கள் பலவும் அழிவுற்றதைப் பற்றியும் நமக்கு முதன் முதல் எடுத்துக் கூறுவது இவ்வுரையே.

இறையனுரின் களவியலுக்குப்பின் அகப் பொருள் இலக்கணத்தை நன்கு விளக்கும் நூல் அகப்பொருள் விளக்கம் என்பதாகும். பாண்டி நாட்டில் வாழ்ந்ததாகக் கூறப்படும் நாற் கவிராச நம்பி என்னும் புலவரே இந்நூலை இயற் றினுர். இவர் 12ஆம் நூற்ருண்டின் பிற்பகுதி யில் வாழ்ந்தவர்.

அகத்திணையியல், களவியல், வரைவியல், கற்பியல், ஒழிபியல் என்ற ஐந்து இயல்களோடு விளங்கும் இந்நூலில் மொத்தம் 252 நூற்பாக் கள் உள்ளன. தமிழரின் அகவொழுக்கத்தைப் பற்றி மிகச் சிறந்த முறையில் விரிவாக இந்நூல் எழுதப் பெற்றுள்ளது. இந்நூலுக்கு நூலா சிரியர் உட்படப் பலர் உரையெதியுள்ளனர்.

இதற்குப் பின்னெழுந்த 'களவியற் காரிகை' அகப்பொருளை விளக்கும் நூலே. இதன் ஆசிரியர் இன்னுரென்று தெரியவில்லை. இந் நூல் முழுதும் கிடைக்கப் பெறவில்லை. கிடைத்த 53 நூற்பாக்களை மட்டும் எஸ். வையாபுரிப் பிள்ளை வெளியிட்டுள்ளார். இதற்குச் சிறந்த உரையும் உள்ளது.

'தமிழ் நெறி விளக்க' மென்னும் நூல் அகப்பொருளை மட்டும் விளக்கும் 25 நூற்பாக் களை யுடையது. இஃது ஐந்திலக்கணத்தையும் விளக்க எழுந்த பெரு நூலென்பர்.

16ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்பார் 'மாறனகப் பொருள்' என்னும் அகப்பொருளிலக்கண நூலை இயற்றியுள்ளார். இதிலும் நம்பியகப் பொருளில் உள்ளதைப் போலவே ஐந்து இயல்கள் உள்ளன. ஆனுல் இப்பொழுது கிடைத்திருப்பன நடுமூன்று இயல்களே. இவற்றில் 106 நூற் பாக்கள் உள்ளன. தொல்காப்பியத்தையும் நம்பி யகப்பொருளையும் பெரும்பாலும் ஒத்து சிறிது வேறுபட்டும் இந்நூல் காணப்படு கின்றது.

நான்காவது பிரிவான யாப்பு என்பது செய்யுள் களை யாக்கும் முறையை விளக்குவது. எப் பொருளையும் பாவடிவிலேயே இயம்புவது என்பது பழைய முறை. எனவே பாவியற்றும் முறையை விளக்கப் பல நூல்கள் எழலாயின. முத்தமிழ் வித்தகரான அகத்தியர் பாட்டியல் ஒன்றை இயற்றியதாகக் கூறுவர். சங்க காலத் தில் வாழ்ந்த காக்கை பாடினியார் பெருங் காக்கை பாடினியம், சிறு காக்கை பாடினியம் என்று இரு பாட்டியல் நூல்களை இயற்றியதாகத் தெரிகின்றது. இவ்வாறே நத்தத்தனர் இயற்றிய நத்தத்தம், பிற அவிநயப் புறனடை, செய்யுளி யல் போன்ற பல நூல்கள் தோன்றி மறைந்து விட்டன.

இப்பொழுது நமக்குக் கிடைக்கும் நூல்களில் பழமையானது 'யாப்பருங்கலம்' என்னும் நூலாகும். 10ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த அமிர்தசாகரனுர் இந்நூலை இயற்றினுர். இவர் சமணர். உறுப்பியல், செய்யுளியல், ஒழி பியல் என மூன்று இயல்களையுடைய இந்நூலில் 96 நூற்பாக்கள் உள்ளன. வெண்பா முதலான ஐவகைப் பாக்களுக்கு இது இலக்கணம் கூறு கின்றது. இதற்கு குணசாகரர் என்னும் புலவர் விருத்தியுரை எழுதியுள்ளார்.

யாப்பருங்கலத்தை இயற்றிய அமிர்தசாகரரே அதன் சுருக்கமான யாப்பருங்கலக் காரிகையை யும் இயற்றினுர். யாப்பிலக்கண விதிகளைக் கட்டளைக் கலித்துறைகளில் கூறியதனுலும் செய்யுள்கள் அனைத்தும் மகடூஉ முன்னிலையாக அமைந்திருத்தலானும் காரிகை என்ற பெயர் சூட்டப்பெற்ற தென்பர்.

உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல் என மூன்று இயல்களையுடைய இந்நூலில் மொத்தம் 60 காரிகைகள் உள்ளன. உறுப்பியல் செய் யுளின் உறுப்புக்களையும் செய்யுளியல் பாவும் பாவினங்களையும் ஒழிபியல் முற்கூறப்பட்ட இரு இயல்களில் கூருப்பெருத செய்திகளையும் விளக்கு கின்றன. கவி பாடுவோர்க்கு இந்நூல் மிக்க துணையாக உள்ளதால் காரிகை கற்காத தமிழ்ப் புலவர்களே இருக்க மாட்டார்கள் என்று துணிய லாம். யாப்பருங்கலத்திற்கு விருத்தியுரை செய்த குணசாகரரே காரிகைக்கும் உரை செய் துள்ளார். காரிகை தோன்றிய பின்னர் யாப்பைப் பற்றிய நூல்கள் பல எழுந்தன வெனினும், காரிகையின் வழக்கு சற்றேனும் குறையவில்லை.

காரிகைக்குப்பின் தோன்றிய பாட்டியல் நூல்

களுள் முதன்மையானது 'பன்னிரு பாட்டியல்' ஆகும். இது ஒரு தொகுப்பு நூல். பொய்கை யார், பரணர் போன்ற புலவர் பதின்மூன்று பேர் பாடிய 358 நூற்பாக்கள் இதில் உள்ளன. இப் புலவர்களின் பெயர்கள் இவர்கள் சங்க காலத்தில் வாழ்ந்த புலவர்களோ என்ற ஐயத்தைத் தோற்றுவிக்கலாம். ஆனால் நூலின் நடையை யும் அமைப்பையும் நோக்கும்போது இது கி. பி. 10 அல்லது 11ஆம் நூற்றாண்டில் தோன்றி யிருக்கலாமெனத் தெரிகிறது. 66 வகை சிறு பிரபந்தங்களின் இலக்கணத்தை இது விளக்கு கின்றது.

வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப் பாட்டியல் வெண்பாக்களால் யாப்பிலக்கணத்தை விளக்குவது. குணவீர பண்டிதர் தம் ஆசிரிய ரான வச்சணந்தி முனிவரைச் சிறப்பிக்கும் பொருட்டுத் தம் நூலுக்கு வச்சணந்தி மாலை என்ற பெயரைச் சூட்டி யிருக்கலாம். இவர் கி. பி. 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.

மொழியியல், செய்யுளியல், பொதுவியலென மூன்று இயல்கள் இந் நூலிலுள்ளன. மொத்தம் 103 வெண்பாக்கள் இதில் உள்ளன. இந் நூலுக்குப் பழைய உரை ஒன்று உண்டு.

இதை அடுத்துத் தோன்றிய பாட்டியல் நூல் நவநீதப் பாட்டியல் ஆகும். இதன் ஆசிரியர் நவநீத நடன் ஆவர். பரத நாட்டியத்திற் சிறந்தவரான இவர் நடனத்தை யொட்டிப் பாடப் பெறும் பாடல்களுக்கு இலக்கணம் கூறவே இந்நூலை எழுதினாரென்பர். முதல் மொழியியல், செய்யுள் மொழியியல், பொது மொழியியல் என மூன்று பிரிவுகளையுடைய இந் நூல் 102 கட்டளைக் கலித்துறைகளாலானது. பழைய உரையுடன் கூடிய இந்நூலின் காலம் கி. பி. 13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும்.

'வரையறுத்த பாட்டியல்' என்பது கட்டளைக் கலித்துறைகளாலான பத்துச் செய்யுள்களில் பாட்டியல் கூறும் பொருத்தங்கள் பத்தினுள் மங்கலப் பொருத்தத்தை மட்டும் எடுத்துக் கொண்டு அது இன்னது என்று வரையறுத்துக் கூறுவது.

கி. பி. 15ஆம் நூற்றாண்டில் எழுந்த 'சிதம் பரப் பாட்டியல்' ஆசிரியர் பரஞ்சோதியாரால் இயற்றப் பெற்றது. தனிநிலைச் செய்யுளுக்கும் தொடர்நிலைச் செய்யுளுக்கும் இலக்கணம் கூறும் இந்நூலில் உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல், பொருத்தவியல், மரபியல் என ஐந்து இயல்கள் உள்ளன. மொத்தம் 47 எண் சீர்க்கழி நெடில் ஆசிரிய விருத்தங்களைக் கொண்டது இந்நூல். இதன் முதன் மூன்று இயல்களுக்கு உரை உள்ளது. இது யாப்பருங் கலக் காரிகை போல் யாப்பிலக்கணம் முழுவதை யுமே கூறும் நூலாகும்.

மாறன் பாப்பாவினமென வழங்கப்பெறும் பாப்பாவினம் வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி, மருட்பா என்ற ஐவகைப் பாக்களுக்கும் பாவினங்களுக்கும் பரிபாடலுக்கும் இலக்கண மும் இலக்கியமும் இயம்புகின்றது. இதன் ஆசிரியர் திருக்குருகைப் பெருமாள் கவிராயர். இவர் 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். மொத்தம் 140 பாடல்கள் இதில் உள்ளன.

கி.பி. 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த குமரகுரு பரர் இயற்றிய நூல் சிதம்பரச் செய்யுட் கோவை. இது ஐவகைப் பாவின் இலக்கணம் கூறுவது. மொத்தம் 84 செய்யுட்கள் இதில் உள்ளன. பெரும்பாலும் காரிகையைத் தழுவியே இந் நூலெழுதப்பட்டுள்ளது.

வேம்பத்தூர் பாப்புவையர் என்ற முத்து வேங்கட சுப்பையர் 'பிரபந்த தீபிகை' என்ற 96 வகை பிரபந்தங்களின் இலக்கணம் கூறும் நூலொன்றை இயற்றியதாகத் தெரிகிறது.

பாவகைகளில் வண்ணப்பா என்பது ஒரு வகை. இதன் இலக்கணத்தை விரித்துக்கூற மகான் வண்ணச் சரபம் திருப்புகழ்த் தண்டபாணி சுவாமிகள் 'வண்ணத்தியல்பு' என்ற ஒரு நூலை இயற்றியுள்ளார். சென்ற நூற்றாண்டில் வாழ்ந்தவர் இவர்.

சென்னை டி. வீரபத்திர முதலியார் என்பார் தமிழ் இலக்கியத்தில் பிற்காலத்தில் பெரு வழக்கி லிருந்த விருத்தப் பாவிற்கு இலக்கணம் வகுத் துள்ளார். 'விருத்தப்பாவியல்' என்னும் இந் நூல் 182 நூற்பாக்கள் கொண்ட பன்னிரண்டு படலங்களையுடையது. விருத்தப்பாவின் வகை களுக்கு விரிவான இலக்கணம் கூறுவது இது ஒன்றே. இந் நூலாசிரியரின் காலம் 1855–1910 ஆகும்.

ஐந்தாவது இலக்கணமாகிய அணியிலக்கணத் தைப் பற்றித் தனி நூல்கள் சில தோன்றின. தொல்காப்பியர் உவமை அணி ஒன்றை மட்டுமே சிறப்பாக எண்ணியதால் அணியியல் என்று தனி யாகக் கூறாது உவமையியலிலேயே அதை அடக்கி விட்டார். அணியிலக்கணம் கூறும் நூல்களுள் சிறந்தது தண்டியலங்காரம். தண்டி என்னும் புலவர் இயற்றிய இவ்வணியிலக்கணம் வட மொழி இலக்கணத்தைத் தழுவி எழுதப்பட்டது என்பர்.

பொதுவணியியல், பொருளணியியல், சொல் லணியியல் என்னும் மூன்று இயல்களையுடைய இந்நூலில் 126 நூற்பாக்கள் உள்ளன. பெருங்

காப்பியமும் சிறுகாப்பியமும் இன்னவாறு அமைய வேண்டுமென்று இந்நூல் கூறுகின்றது. இதன்கண் தன்மை முதலாக பாவிகம் ஈறுக 35 அணிகளுக்கு இலக்கணம் கூறப்பட்டுள்ளது. இந் நூல் தோன்றிய காலம் கி. பி. 12ஆம் நூற்றுண்டாகும்.

அகப் பொருளுக்கும் யாப்புக்கும் தனித்தனி இலக்கண நூல்கள் எழுதிய திருக்குருகைப் பெருமாள் கவிராயர் அணியிலக்கணத்தை விளக்க 'மாறனலங்காரம்' என்ற நூலை இயற்றியுள்ளார். பாயிரம், பொதுவியல், பொருளணியியல், சொல்லணியியல், எச்சவியல் என்னும் ஐந்து இயல்கள் இந்நூலில் உள்ளன. இதில் 64 அணிகளுக்கு இலக்கணம் கூறப்பட்டுள்ளது. மொத்தம் 327 நூற்பாக்கள் இதன்கண் இடம் பெற்றுள்ளன. காரிரத்தினக் கவிராயர் என்பார் இயற்றிய உரை இந்நூலுக்கு உள்ளது. கி. பி. 16ஆம் நூற்றுண்டில் எழுந்த நூல் இது.

அணியிலக்கணம் கூறும் நூலுள் அடுத்துக் குறிப்பிடத்தக்கது 'குவலயானந்தம்' என்பது. வடமொழி இலக்கணத்தைப் பெரிதும் தழுவி எழுதப்பட்டது இந்நூல். இதை இயற்றியவர் மாணிக்கவாசகர். கி. பி. 19ஆம் நூற்றுண்டில் எழுந்தது இது.

மு. இராகவையங்காரின் தந்தையரான முத்துசாமி ஐயங்கார் வடமொழி அணி இலக்கண நூலான சந்திரா லோகத்தை ஆசிரியப்பாவில் மொழி பெயர்த்துள்ளார். இந்நூல் மதுரைத் தமிழ்ச் சங்கத்தால் வெளியிடப் பெற்றுள்ளது.

இதுவரை ஐந்திலக்கணம் கூறும் நூல்களையே பார்த்தோம். இந்த நூற்றுண்டில் வாழ்ந்த தண்டபாணி சுவாமிகள் 'அறுவகையிலக்கணம்' என்ற நூலையியற்றியுள்ளார். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐந்தோடு புலமையிலக்கணம் என்ற ஒன்றையும் சேர்த்து அறுவகையிலக்கணம் என்று பெயரிட்டுள்ளார். ஆனால், நூலிலும் புணர்ச்சி இலக்கணமும் சொல்லிலக்கணமும் கூறும் ஏழாமிலக்கணம் என்ற ஒரு பிரிவையும் சேர்த்துள்ளார். இந்த ஏழு பிரிவுகளிலும் மொத்தம் 319 நூற்பாக்கள் உள்ளன.

அகத்தியர் முத்தமிழுக்கும் இலக்கணம் வகுத்ததாகக் கூறுவர். ஆனால் அது மறைந்து போயிற்று. அகத்தியர் என்ற பெயரையுடைய வேறொரு புலவர் இயற்றியதாகக் கருதப்படும் நூற்பாக்கள் பேரகத்தியத் திரட்டு என்ற பெயரில் நூலாக வெளிவந்துள்ளன. இவற்றை முதலில் தொகுத்து வெளியிட்டவர் களத்தூர் வேதகிரி முதலியார். அதன்பின் 1912இல் வேறு சில நூற்பாக்களையும் சேர்த்து ச. பவாநந்தம் பிள்ளை வெளியிட்டுள்ளார். இதில் 164 நூற்பாக்கள் உள்ளன. நூல் ஐந்து படலங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது.



# தொகை நூல்கள்

தொகை நூலென்பது தனியொரு புலவர் பாடிய பாடல்களன்றிப் பல்வேறு புலவர்கள் பல்வேறு சூழ்நிலைகளில் பாடிய தனிப் பாடல்களின் தொகுப்பு நூலேயாகும். புலவர்கள் தொடர்நிலைச் செய்யுளாகப் பாடும் பாக்கள் தனி நூலாக வெளிவந்து மக்களால் போற்றிப் பாதுகாக்கப்படுகின்றன. ஆனால் தனித்தனியாகப் பாடும் பாடல்கள் பின்னோர் தொகுத்து நூலாக வெளியிட்டாலன்றி அவ்வாறே மறைந்து போகின்றன. இதனால் சொன்னயமும் பொருணயமும் மிக்க தனிப்பாடல்கள் பின்னோர்களுக்குப் பயன்படாது போகின்றன. இக்குறையைத் தவிர்க்கும் பொருட்டுத் தொகை நூல்கள் அவ்வப்போது தோன்றியுள்ளன.

தொகை நூல்களில் இருவகை உள்ளன. முன்னர் நூல் வடிவில் வெளிவராது சிதறிக் கிடக்கும் புலவர்கள் பாடிய பாடல்களைத் தொகுத்து வெளியிடுவது ஒருவகை. மற்றொன்று பல நூல்களில் இலைமறை காய்மறை போன்று விரவிக் கிடக்கும் பல பொருள்கள் பற்றிய பல பாடல்களை ஒருங்கறிதல் எளிதாகாமையால், அவற்றை ஒருங்கே எளிதினுணரவும் ஒரு பொருள் குறித்துப் பல புலவர்களுடைய கருத்தையும் ஒருங்கே அறிந்து கொள்ளவும் முன் வெளிவந்த நூல்களிலுள்ள சிறந்த பாடல்களைத் தொகுத்தலுமாகும்.

சங்கச் சான்றோர்கள் பாடிய பாடல்களனைத்துமே நமக்குத் தொகை நூல்களின் வாயிலாகத்தான் கிடைக்கின்றன. சங்க இலக்கியம் என்பது எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என்ற மூன்றின் தொகையே. எட்டுத்தொகை என வழங்கப்பெறுவது ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, கலித்தொகை, பரிபாடல், பதிற்றுப்பத்து, புறநானூறு என்ற எட்டுதொகை நூல்களே. இவற்றுள் முதல் ஐந்தும் அகப்பொருள் பற்றியும் இறுதியாக உள்ள மூன்றும் புறப்பொருள் பற்றியும் அமைந்துள்ளன.

'ஐங்குறு நூறு' என்பது ஐந்திணையைப்பற்றி ஐந்து புலவர்கள் பாடிய ஐந்நூறு பாடல்களின் தொகுப்பாகும். ஒவ்வொரு பாடலும் 3 முதல் 6 அடிவரையுள்ளது. மருதத்தினைப்பற்றி ஓரம் போகியாரும் நெய்தலைப் பற்றி அம்மூவனாரும் குறிஞ்சியைப்பற்றிக் கபிலரும் பாலையைப்பற்றி ஓதலாந்தையாரும் முல்லையைப் பற்றிப் பேயனாரும் தனித்தனி நூறு பாடல்கள் பாடியுள்ளனர். இந்நூலைத் தொகுத்தவர் புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் என்பவர்.

அகத்திணைப் பாக்களுள் 4 முதல் 8 அடிவரையுள்ள 400 பாடல்களின் தொகுப்பே 'குறுந்தொகை' யாகும். இவை 205 புலவர்களால் பாடப்பெற்றவை. இதைத் தொகுத்தவர் பூரிக்கோ என்னும் புலவர் ஆவர்.

ஒன்பது அடிமுதல் 12 அடி வரையுள்ள பாடல்களின் தொகுப்பே 'நற்றிணை'யாகும். அகத்துறை பற்றிய 400 பாடல்கள் இதில் உள்ளன. பன்னாடு தந்த மாறன் வழுதி என்ற அரசனே இதைத் தொகுப்பித்தான். 175 புலவர்கள் பாடிய பாடல்கள் நற்றிணையில் உள்ளன.

அகத்திணை யொழுக்கத்தைப் பற்றி 13 அடிக்குக் குறையாதும் 31 அடிக்கு மிகாதுமுள்ள 400 பாடல்களின் தொகுப்பே 'அகநானூறு' என்பது. இதனை நெடுந்தொகை என்றுங் கூறுவர். இதன்கண் 145 புலவர்கள் பாடிய பாடல்கள் இடம் பெற்றுள்ளன. களிற்றியானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக் கோவை என்ற மூன்று பகுதிகளாக இந்நூல் வகுக்கப்பட்டுள்ளது.

'கற்றறிந்தோர் ஏத்துங் கலி' யெனப்படும் கலித்தொகை பா அமைப்பால் பெயர் பெற்றது. ஐந்திணையைப் பற்றிய கலிப்பாவானியற்றப் பெற்ற 150 பாடல்கள் இதில் உள்ளன. பாலை பெருங்கடுங்கோவாலும் குறிஞ்சி கபிலராலும் மருதம் மருதனிளநாகனாலும் முல்லை சோழன் நல்லுருத்திரனாலும் நெய்தல் ஆசிரியர் நல்லந்துவனாலும் பாடப்பெற்றுள்ளன. பாலைக் கலியுள் 35-ம் குறிஞ்சிக் கலியில் 29-ம் மருதக் கலியில் 35-ம் முல்லைக் கலியில் 17-ம் நெய்தற் கலியில் 33-ம் பாடல்கள் உள்ளன.

பரிபாடலென்னும் பாவகையால் தொகுக்கப்

பட்ட நூல் பரிபாடல். இதில் இசையோடு பாடத்தக்க 22 பாடல்கள் உள்ளன. குறைந்தது 25 அடியும் மிகுந்தது 140 அடியுமாக உள்ள பாடல்கள் திருமால், முருகன், வையை ஆகியோ ரின் மேல் பாடப்பெற்றனவாக உள்ளன.

சேர மன்னர்கள் பதின்மரைப் பத்துப் புலவர் கள் தனித்தனியே பாடிய பப்பத்து அகவற் பாக்களின் தொகுதியே பதிற்றுப்பத்து. இவற் றுள் முதல் பத்தும் கடைசிப் பத்தும் கிடைக்க வில்லை. பாடிய புலவர்கள் குமட்டூர்க்கண்ணனார், பாலைக்கௌதமனார், காப்பியாற்றுக்காப்பியனார், முதலானோர். பாடப்பெற்ற மன்னர்கள் இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன், பல்யானைச் செல் கெழு குட்டுவன் முதலானோர். பாடிய புலவர் ஒவ்வொருவருக்கும் பாடல் பெற்ற மன்னர்கள் பல்வேறு வகையான பரிசில்களை அளித்துச் சிறப்பித்துள்ளனர்.

புறநானூறு தமிழர்தம் வீரவரலாற்றை எடுத் துக்காட்டும் நூல். 400 ஆசிரியப் பாக்களைக் கொண்டது. ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் பாடியவரின் பெயரும் பாடப்பெற்றவரின் பெயரும் திணையும் துறையும் கொடுக்கப் பெற்றுள்ளன. இதிலுள்ள பாடல்களனைத்தும் சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் வெற்றிச் சிறப்பையும் அவர்களுக்குப் புலவர்கள் ஆங் காங்கு செவியுறிவுறு என்ற வகையில் எடுத்துக் கூறிய கருத்துக்களையும் விளக்குகின்றன.

பத்துப் பாட்டு என்பது அளவான் நீண்ட பத்துப் பாடல்களின் தொகுதியே. இதன்கண் திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப் பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநல் வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப் பாலை, மலைபடு கடாம் என்ற பத்துப் பாடல்கள் உள்ளன. இவற்றைப் பாடியவர் நக்கீரர், முடத்தாமக் கண்ணியார், ஒய்மா நாட்டு நல்லி யக் கோடன் முதலியோர்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் நாலடி யார் ஒன்று மட்டுமே தொகை நூலாகும். மதுரையைச் சுற்றியுள்ள எண்பெருங் குன்றங் களில் வாழ்ந்து வந்த சமண முனிவர் எண்ணா யிரவர் எழுதிய எண்ணாயிரம் வெண்பாக்கள் ஆற்றிலே செல்லவிட ஆற்று நீரை எதிர்த்துச் சென்ற 400 வெண்பாக்களை மட்டும் பதுமனார் என்னும் புலவர் எடுத்துத் தொகுத்து 'நாலடியார்' என்னும் பெயரிட்டார் என்பர். நீதியைப் புகட்டும் இந்நூல் 40 அதிகாரங்களை யுடையது.

கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்குப் பிறகு சைவ, வைணவ சமயப் பாடல்கள் பல தோன்றின. சைவ சமயக் குரவர்களான அப்பர், சம்பந்தர், சுந்தரர், மணிவாசகர் முதலானோரும் வைணவ சமயத்தைச் சார்ந்த ஆழ்வார்களும் ஆயிரக் கணக்கான பக்திச் சுவை மிக்க பாடல்களையும் பாசுரங்களையும் பாடலாயினர்.

சைவ சமயப் பாடல்கள் நம்பியாண்டார் நம்பி என்பாரால் பன்னிரு திருமுறையாக வகுக்கப் பெற்றது. இதில் ஒன்பதாந் திருமுறையும் பதினொராந் திருமுறையும் தனியொருவர் பாடிய பாடல்களாக அமையாது பலர் பாடிய சிறு நூல்களின் தொகுப்பாக உள்ளது. ஒன்பதாந் திருமுறை திருமாளிகைத் தேவர் முதலாக சேதிராயர் ஈறாக ஒன்பது பேர் பாடிய சிறு நூல் களின் தொகுப்பாகும். திருவாலவாயுடையார் முதலாக நம்பியாண்டார் நம்பி ஈறாகப் பன் னிருவர் பாடிய நூல்களின் தொகுப்பே பதினொராந் திருமுறை.

ஆழ்வார்கள் அருளிச் செய்த பாசுரங்கள் நாத முனிகளால் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமாகத் தொகுக்கப்பட்டது. பொய்கையார், பூதத்தாழ் வார், பேயாழ்வார் முதலாகப் பன்னிரு ஆழ்வார் களின் பாசுரங்கள் நாலாயிரம் கொண்டதே இந் நூல். இதன்கண் உள்ள இயற்பா முதலாழ்வார் மூவர் முதலியோர் பாடியவற்றின் தொகுதியே.

சைவ சமயப் பக்திப் பாடல்கள் பன்னிரு திருமுறையாகத் தொகுக்கப்பெற்றது போலச் சைவ சமயத் தத்துவங்களை விளக்கும் திரு வுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞான போதம், சிவஞான சித்தியார் முதலான பதினான்கு நூல்கள் 'பதினான்கு சாத்திரம்' என்று தலைப்பில் தொகுக்கப் பெற்றன. இவற் றுள் பன்னிரு சூத்திரங்களை மட்டுமே கொண்ட 'சிவஞான போதம்' தலைசிறந்த நூலாகும்.

சித்தாந்த தத்துவங்களை விளக்கும் மற்றொரு நூல் 'சிவப்பிரகாசப் பெருந்திரட்டு' என்ப தாகும். 137 நூல்களினின்றும் தொகுக்கப்பட்ட 2813 பாடல்கள் இப் பெருந்திரட்டில் உள்ளன. இந்நூல் கலைக்கட்டளை, அநுபவக் கட்டளை என்ற இரு பிரிவுகளையுடையது. 'சிவப்பிரகாசக் குறுந்திரட்டு' என்ற மற்றொரு நூலும் உள்ளது. பெருந்திரட்டு நூலிலுள்ள பல பாடல்களையும் வேறு பாடல்களையும் சேர்த்துத் தொகுத்தது குறுந்திரட்டு. இதில் 1390 பாடல்கள் உள்ளன. பெருந்திரட்டைத் தொகுத்தவர் சொரூபானந்த சுவாமிகள். குறுந்திரட்டைத் தொகுத்தவர் தத்துவராய சுவாமிகள்.

பன்னிரு திருமுறைகளில் உள்ள பாடல்களில் சிறந்தனவற்றைத் தொகுத்துப் பின்வந்தோர்

பலர் பல திரட்டு நூல்களைத் தொகுத்து வெளியிடலாயினர். அவற்றுள் முதன்மையானது 'அகத்தியர் தேவாரத் திரட்டு' என்பதாகும். 11ஆம் நூற்றாண்டிற்குப் பின் வாழ்ந்த அகத்தியர் என்ற ஒரு புலவர் தொகுத்ததே இத் திரட்டு. இதன் கண் தேவார முழுப் பதிகங்கள் 62-ம் திருவாசக முழுப் பதிகங்கள் 5-ம் தொகுக்கப்பெற்றுள்ளன. அதன்பின் உமாபதி சிவம் என்னும் சித்தானந்தச் செல்வர் 99 தேவாரப் பதிகங்களைத் தொகுத்தெடுத்து 'அருண்முறைத் திரட்டு' என்ற பெயரில் வெளியிட்டார். பின்னர் கயப்பாக்கம் சதாசிவச் செட்டியாரவர்கள் 'திராவிட வேதத் திரட்டு' என்ற தலைப்பில் தாம் தெரிந்தெடுத்த தேவாரப் பதிகங்களை வெளியிட்டார். சித்தாந்த பண்டிதர் ப. இராமநாதப் பிள்ளை என்பார் பன்னிருத் திருமுறைப் பாடல்கள் 18327 பாடல்களுள்ளும் 2835 திருப்பாடல்களைத் தொகுத்தது 'பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு' என்ற தலைப்பில் 1961இல் வெளியாகியுள்ளது.

இலக்கண நூல்களுள்ளும் பலர் பாடித் தொகுக்கப்பெற்ற தொகை நூல்கள் உள்ளன. அகத்தியர் மாணாக்கர் பன்னிருவர் பாடிய நூல்களின் தொகுப்பே பன்னிரு படலம் என்பது. புறப்பொருள் இலக்கணம் கூறும் இந்நூல் புறப்பொருள் வெண்பா மாலைக்கு முதனூலாகும். இது தற்போது கிடைக்கவில்லை. பாட்டியல் நூல்களுள் சிறந்ததான 'பன்னிரு பாட்டியல்' என்ற நூலும் தொகை நூலேயாகும். இதன் ஆசிரியர்களின் பெயர்கள் சங்கத்துச் சான்றோர்களின் பெயர்கள் போல, பொய்கையார், பரணர், இந்திரகாளியார் என்று காணப்படினும் இவர்கள் பிற்காலப் புலவர்கள் என்றே கருதப் படுகின்றது. பொய்கையார் முதல் பெருங் குன்றூர் கிழார் வரை 13 புலவர்கள் பாடிய 232 நூற்பாக்களால் ஆனது இந்நூல்.

இவையன்றித் தனித் தனிப் பாடல்களாகப் பல்வேறு பொருள் பற்றி வெவ்வேறு காலத்தில் வாழ்ந்த பல்வேறு புலவர்கள் பாடிய தனிப் பாடல்களும் பல நூல்களினின்றும் சிறந்தனவாகத் தெரிந்தெடுக்கப்பெற்ற பாடல்களும் தொகுக்கப்பெற்றுத் திரட்டு நூல்களாகப் பல நூல்கள் வெளிவந்துள்ளன.

பல்வேறு பொருள்கள்மீது பாடப்பெற்ற அகவற்பாக்களைத் தொகுத்து வெளியிட்ட நூல் 'ஆசிரிய மாலை' என்பது. இதன் பாடல்கள் பல இலக்கிய இலக்கண உரையாசிரியர்களால் ஆங்காங்கு மேற்கோளாக எடுத்தாளப்பட்டுள்ளன. இந்நூலிலிருந்து எடுக்கப்பெற்ற 16 பாடல்கள் 'புறத்திரட்டு' என்னும் நூலில் சேர்க்கப்பெற்றுள்ளன.

இவ்வாறே பல்வேறு நூல்களின்றும் தேர்ந்தெடுத்துத் தொகுக்கப்பெற்ற நூல் 'புறத்திரட்டு' ஆகும். அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற மூன்று பகுதிகளை இந்நூல் பெற்றுள்ளது. இது தொகுக்கப்பட்ட காலம் இதுவென்று தெரியவில்லை. பழைய ஓலைச் சுவடியிலிருந்து எஸ். வையாபுரிப் பிள்ளை பதிப்பித்துள்ள நூலில் 1570 பாடல்கள் உள்ளன. காலவெள்ளத்தில் மறைந்துபோன பல நூல்களைப் பற்றிய செய்திகளும் அவற்றின் பாடல்கள் சிலவும் புறத்திரட்டின் மூலம் நமக்குக் கிடைக்கின்றன. ஐம்பெருங் காப்பியங்களுள் அழிந்துபோன வளையாபதி, குண்டலகேசி ஆகிய இரண்டின் சில பாடல்களும் தகடூர் யாத்திரை, முத்தொள்ளாயிரம், சாந்தி புராணம், பெரும்பொருள் விளக்கம் முதலிய நூல்களின் சில பகுதிகளும் இப் புறத்திரட்டின் மூலம்தான் நமக்குக் கிடைக்கின்றன. எனவே பல வகைகளில் நமக்குக் கிடைத்த திரட்டு நூல்களில் தலை சிறந்தது இப் புறத்திரட்டு எனலாம்.

சங்க காலந் தொடங்கி இற்றைக்கு ஏறக் குறைய 300 ஆண்டுகள் வரை அவ்வப்போது தோன்றிப் புலமையால் மேம்பட்ட தமிழ் நாவலர் பலருடைய சில பாட்டுக்களைத் தொகுத்துத் தருவது 'தமிழ் நாவலர் சரிதை' என்னும் நூல். இதனைத் தொகுத்தவரின் பெயர் தெரிந்திலது. இறையனூர் முதல் அந்தகக் கவி வீரராகவ முதலியார் வரை 51 புலவர்களுடைய 269 பாடல்கள் இதிலுள்ளன.

மேனாட்டார் தமிழ் கற்பதற்காக எளிய பாடல்களைக் குறள், நாலடியார் போன்ற நீதி நூல்களிலிருந்து தொகுத்து, 'தமிழ்ச் செய்யுட் கலம்பகம்' என்ற பெயரில் ஜி. யு. போப் துரைமகனார் வெளியிட்டுள்ளார். இதன் இரண்டாம் பதிப்பு 1859இல் வெளிவந்துள்ளது. இதில் 612 பாடல்கள் தொகுக்கப்பெற்றுள்ளன. கல்வி, புல்லறிவாண்மை போன்ற பல தலைப்புக்களில் போப் நூலைத் தொகுத்துள்ளார்.

மு. சி. பூரணலிங்கம் பிள்ளை 'செய்யுட் கோவை' என்னும் பெயரிய தொகை நூலை 1895இல் வெளியிட்டார். கடவுள் வாழ்த்து முதல் பன்னெறி யீறாகக் கூறும் 44 பொருட் பாகுபாடுகளையுடையது.

இவ்வாறு பொருட் செறிவுடைய பாடல்களைப் பல்வேறு நூல்களிலிருந்து திரட்டித் தொகுத்துத் தர பாண்டித்துரைத் தேவர் முயன்றார். இதன் பயனாக வெளிவந்த நூலே 'பன்னூற்றிரட்டு'.

இது 1898இல் வெளியாயிற்று. புராணங்கள், காப்பியங்கள், சங்க இலக்கியங்களினின்று தொகுக்கப்பெற்ற 1647 பாடல்கள் இத்திரட்டில் இடம் பெற்றுள்ளன. கடவுள் வாழ்த்து முதலாக கற்பனே வரை 54 அதிகாரங்களாக வகுக்கப் பட்டுள்ளது. இது அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலுங் கூறும் நூல்.

சைவ சயமக் கோட்பாடுகளையும் சின்னங்களையும் விளக்கும் பாடல்கள் சைவ நூல் பல வற்றுள்ளும் ஆங்காங்கு அமைந்திருத்தல் கண்டு அவற்றை ஒன்று சேர்த்து ஒரு நூல் வடிவில் கொண்டுவர முயன்ருர் பாண்டித்துரைத் தேவர். இதன் விளைவாக வெளிவந்த 'சைவ மஞ்சரி' என்னும் நூல் அருணகிரி புராணம் போன்ற புராண நூல்களிலிருந்தும் சிவதரு மோத்தரம் போன்ற சைவசித்தாந்த நூல் களினின்றும் தொகுக்கப்பட்ட 1316 செய்யுட்களை உடையது. கடவுள் வாழ்த்து முதல் ஒழிபு ஈருக 19 அதிகாரங்கள் உடையது.

சிவபுராணம் முதலாகப் பல புராணங்களிலும் முதற்கண் அமைந்துள்ள கடவுள் வணக்கப் பாடல்களைத் தொகுத்து விநாயகக் கடவுள் முதல் சிவசரணர் வரை பல தெய்வங்களின் பெயர்க் கீழும் அடியார்களின் பெயர்க் கீழும் தொகுத்து அளித்துள்ள நூல் சிவபுராணுதி தோத்திர மஞ்சரி. இதைத் தொகுத்தவர் க. வ. திருவேங்கட நாயுடு. 1898இல் வெளியான இந்நூலில் 1400க்கு மேற்பட்ட பாடல்கள் தொகுக்கப் பெற்றுள்ளன.

காப்பியங்களும் சிற்றிலக்கியங்களும் பல இயற்றிய கம்பர், காளமேகம் போன்ற புலவர் கள் பல சூழ்நிலையில் சுவைமிக்க தனிப்பாடல் களைப் பாடியுள்ளனர். இவை பெருநூலில் இடம் பெருது தனிநூலாக வெளிவரவும் இயலாது அழிந்து போகலாயின. இவற்றைத் தொகுத்துப் பாதுகாக்க வேண்டுமென்ற அவாவினல் இராம நாதபுரம் சமஸ்தானத்தைச் சார்ந்த பொன்னு சாமித்தேவர் தனிப்பாடல்களைத் தொகுத்து வெளியிட்டார். பிற்காலத்தில் தனிப்பாடல் திரட்டுகள் பல வெளிவருவதற்கு இவருடைய முதல் முயற்சி பெரிதுந்துணைபுரிந்தது எனலாம்.

பொன்னுசாமித் தேவர் தொகுத்ததை அவர் அனுமதியோடு மயிலத்தைச் சேர்ந்த சுப்பிர மணிய சுவாமிகள் பார்வையிட்டு 1907இல் பதிப் பித்தார். இப்பதிப்பில் 1291 பாடல்கள் உள்ளன.

முறையூரில் வாழ்ந்து வந்த பழ. சி. சண்முகஞ் செட்டியார் முன்னெழுந்த தனிப்பாடல் திரட்டை விட விரிவாகத் தொகுக்க முற்பட்டார். அவர் வேண்டுகோட்கிணங்க மு. ரா. கந்தசாமிக் கவிராயர் தொகுத்த தனிப்பாடல்கள் 'தனிச் செய்யுட் சிந்தாமணி' என்ற பெயரில் 1908இல் வெளியாயிற்று. 182 புலவர்கள் பாடிய 3815 பாடல்கள் இதன்கண் உள்ளன. ஆசிரியர் வரலாற்றுக் குறிப்பு மட்டும் கொடுக்கப் பட்டுள்ளது.

கலாரத்நாகரம் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப் பெற்ற தனிச்செய்யுட் சிந்தாமணி 154 புலவர்கள் பாடிய 2850 பாடல்களுடன் விளங்குகின்றது.

முன்வெளியான தனிப்பாடல் திரட்டுகள் உரையேது மின்றி வெளியாயின. மகாவித்து வான் கா. இராமசாமி நாயுடு தனிப்பாடல்களுக்கு உரையெழுதி இரண்டு பாகமாக 1913இல் வெளி யிட்டார். முதல் தொகுதியில் காளமேகப் புலவர், பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் ஈருக 30 புலவர்கள் பாடிய 839 பாடல்களும் இரண்டாம் தொகுதியில் பல வித்துவான்கள் பாடிய 850 பாடல்களும் உள்ளன.

பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை 'தனிப் பாடற்றிரட்டு' உரை இரு பகுதிகளாக 1939இல் வெளிவந்தது. முதல் பகுதியில் கி.மு. 17க்கு முற்பட்ட 35 புலவர்களின் 850 பாடல்களும் இரண்டாம் பகுதியில் பிற்காலப் புலவர் 57 பேர் பாடிய 433 பாடல்களும் உள்ளன. கா. சு. பிள்ளை விளக்கமான வகையில் இவற்றுக்கு உரையெழுதியுள்ளார்.

1960இல் சென்னை அரசினர் ஓலைச்சுவடி நிலையம் 1057 தனிப்பாடல்களைக் கொண்ட 'தனிப்பாடற்றிரட்டு' நூலை வெளியிட்டுள்ளது.

இதுவரை வெளியாகியுள்ள தனிப்பாடல் திரட்டு களில் இறுதியாக வெளியானது சு. அ. இராம சாமிப் புலவர் தொகுத்து வெளியிட்டுள்ள தனிப் பாடல் திரட்டு ஆகும். 1963இல் இது நான்கு பகுதிகளாக வெளிவந்துள்ளது. 566 புலவர்கள் கள் பாடிய 3717 பாடல்கள் இதன்கண் உள்ளன. முற்காலப் புலவர்கள் பாடிய பாடல்களோடு தற்காலத்தில் வாழும் புலவர்களுடைய தனிப் பாடல்களும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. பாடல் களுக்குக் குறிப்புரையும் உள்ளது.

பண்டை இலக்கிய, இலக்கண நூலுரைகளில் மேற்கோளாகவும் பிறவாருகவும் ஆளப்பட்டுள்ள சொற்செறிவும் பொருட்செறிவுமுள்ள பாடல் களைத் தொகுத்து 'பெருந்தொகை' என்ற பெயரில் 1935இல் மு. இராகவையங்கார் வெளி யிட்டுள்ளார். தொல்காப்பியம், யாப்பருங்கலம், காரிகை, வீரசோழியம் முதலிய இலக்கண நூல் களின் பழைய உரைகளினின்றும் முற்கால பிற்கால இலக்கிய உரைகளினின்றும் கிடைத்த 2200க்கு மேற்பட்ட தனிப்பாடல்கள் இத்தொகை

யில் உள்ளன. கடவுள் வாழ்த்து, அறவியல், பொருளியல், இன்பவியல், ஒழிபியல் என ஐந்தியல்களாக வகுக்கப்பட்ட இந்நூலில் முதல் மூன்று இயல்களைக்கொண்ட பகுதி மட்டும் முதற்பகுதியாக வெளிவந்தது. இறுதியிலுள்ள இரண்டு இயல்களும் வெளிவரவில்லை.

சேர மன்னர்களின் பெருமையைக் கூறும் 'சேரவேந்தர் செய்யுட்கோவை' என்னும் தொகுப்புநூல் மு. இராகவையங்காரால் தொகுக்கப்பெற்று 1951இல் வெளியாயிற்று. சேர மன்னர்கள் பாடியனவும் அவர்கள் மீது பாடப் பெற்றனவும் சேரநாடு, நகர் ஆகியவற்றின் வரலாறு சேரர் வரலாறு கூறுவனவுமான தனிப் பாடல்களையும் தொகுத்து இரு தொகுதிகளாக வெளியிட்டுள்ளார் ஆசிரியர். சேரநாட்டின் இலக்கிய, வரலாற்றுச் சிறப்பை இந்நூல் பெரிது முணர்த்துகின்றது.

'செஞ்சொற் கவிக்கோவை' என்னும் தொகுப்பு நூல் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை யால் தொகுக்கப் பெற்று 1957இல் வெளியா யிற்று. சங்ககாலம் முதல் இருபதாம் நூற்றாண்டு வரை தோன்றிய இனிய தமிழ்ப்பாடல்கள் சில வற்றின் தொகுப்பே இந்நூல். சங்க இலக்கியத் திலிருந்து பாரதியார் பாட்டுவரை ஐம்பதுக்கு மேற்பட்ட நூல்களிலிருந்து எடுக்கப்பெற்ற 250 பாடல்கள் இதில் இடம் பெற்றுள்ளன.

இதே முறையில் சங்க காலம் முதல் தற்காலம் வரை எழுந்த நூல்களில் சிறந்த பாடல்கள் 1200 எடுத்து டாக்டர் சேதுப்பிள்ளை 1960இல் 'தமிழ்க் கவிதைக் களஞ்சியம்' என்ற பெயரில் தொகுத்து வெளியிட்டார்.

கல்வெட்டுக்களில் காணப்பெறும் செய்யுட்கள் மு. இராகவையங்காரால் தொகுக்கப்பெற்று 'சாஸனத் தமிழ்க் கவி சரிதம்' என்ற நூலில் வெளிவந்துள்ளது. இதன்கண் நூற்றுக்கு மேற் பட்ட சாசனச் செய்யுள்கள் உள்ளன. இது 1937இல் பதிப்பிக்கப்பெற்றது.

பழைய கல்வெட்டுக்களில் காணப்படும் செய்யுட்களைத் தொகுத்து 'சாசனச் செய்யுள் மஞ்சரி' என்ற பெயரில் மயிலை சீனி வேங்கட சாமி வெளியிட்டுள்ளார். 1959இல் வெளியான இந்நூல் எண்பதுக்கு மேற்பட்ட சாசனங் களிலிருந்து செய்யுள்கள் தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன.



# நிகண்டுகளும்-அகராதிகளும்
## (TAMIL DICTIONARIES)

[கொற்கையூரன்]

சொற்பொரு ளுணர்த்தும் அகராதி முறை தமிழ் மொழியில் நீண்ட காலமாக வழக்கிலுள்ளது. ஆனால் இன்றுள்ள அகராதி முறைக்கும் தொடக்கத்திலிருந்த அகராதி முறைக்கும் பல வேறுபாடுக ளுண்டு. இன்றுள்ள முறை பொருள் விளக்கப் பெறும் சொற்களை அகர வரிசைப்படி தொகுத்தலாகும். எந்தச் சொல்லுக்குப் பொருள் தேவையானாலும் அகர வரிசையில் உடனே பார்த்துப் பொருளறிந்து கொள்ளக் கூடிய எளிய முறை இது.

பண்டைய முறையில் சொல்லுக் குரிய பொருள் செய்யுள் வடிவில் தரப்பட்டிருக்கும். இச் செய்யுள்கள் அடங்கிய நூலே 'நிகண்டு' எனப் பெயர் பெற்றது. எந்தத் துறையைப் பற்றி நூலெழுதினாலும் அதைச் செய்யுள் வடிவிலே செய்வது என்பது பழைய முறை. அவ்வாறே நிகண்டுகளும் செய்யுள் வடிவிலே வெளிவந்தன. இதிலுள்ள செய்யுள்களை எளிதில் மனப்பாடம் செய்துகொள்ளலாம்.

### நிகண்டுகள் :

பிற்காலத்தி லெழுந்த நிகண்டுகளுக்கு இலக்கணமாகத் திகழுவது தொல்காப்பியத்திலுள்ள உரியிய லாகும். அதில் உரிச் சொற்களுக் குரிய பொருள்களைத் தொல்காப்பியர் சூத்திர வடிவிலே அளித்துள்ளார்.

நிகண்டுகள் வரிசையில் முதன் முதலாக எழுந்த நிகண்டு சேந்தன் திவாகரம் எனலாம். அதற்குமுன் சில நிகண்டுகள் தோன்றியிருக்கலாம். ஆனால் அவற்றைப் பற்றிய செய்தி ஏதும் கிடைக்கவில்லை. 'ஆதி திவாகரம்' என்ற நிகண்டு இருந்தது என்பாரும், சேந்தன் திவாகரமே ஆதி திவாகரம் என்பாரும் உளர்.

சேந்தன் திவாகரம் கி பி.ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றியது. இதன் ஆசிரியர் திவாகரர் என்பவர். இவர் தம்மையாதரித்த காவிரிப் பெரும்பதி அம்பற்கு அதிபதியான சேந்தன் என்பானின் பெயரைத் தம் பெயரோடிணைத்து 'சேந்தன் திவாகரம்' என்று தம் நூலுக்குப் பெயரிட்டார் என்பர். இத் திவாகரத்தில் 'தெய்வப் பெயர்த் தொகுதி' முதலாகப் 'பல் பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி' ஈறுகப் பன்னிரு தொகுதிகள் உள்ளன. இவற்றில் ஒரு பொருளுக் குரிய பல பெயர்களும் ஒரு சொல்லுக் குரிய பல பொருள்களும், பல பொருள்களைக் குறிக்கும் ஒரு சொல்லும், விளக்கப்பட்டுள்ளன. இதில் ஏறக்குறைய 9500 சொற்களுக்குப் பொருள் விளக்கப்பட்டுள்ளது.

திவாகரத்திற்கு அடுத்துத் தோன்றிய நிகண்டு 'பிங்கலந்தை' என வழங்கப் பெறும் பிங்கல நிகண்டாகும். இதை இயற்றியவர் பிங்கல முனிவர். இவர் திவாகரத்தை இயற்றிய திவாகரரின் மகனர் என்று சிலர் கருதுகின்றனர். இந்நூல் தோன்றிய காலம் எட்டாம் நூற்றாண்டு ஆகும். இதில் வான்வகை முதலாக ஒரு சொல் பல் பொருள்வகை யீருகப் பதிது பிரிவுகள் உள்ளன. திவாகரம் ஒவ்வொரு பிரிவுக்கும் தொகுதியென்று பெயரிட்டிருக்க, பிங்கலந்தை வகையென்று ஒவ்வொரு பிரிவையும் குறிக்கின்றது. பிங்கலந்தை பெரும்பாலும் திவாகரத்தை அடியொற்றிப் பின்பற்றியுள்ளது. ஆங்காங்குச் சில சொற்களைக் கூட்டியுங் குறைத்தும் அமைக்கப்பட்டுள்ளது. இதில் மொத்தம் 4121 நூற்பாக்கள் உள்ளன.

மண்டல புருடர் என்பார் இயற்றிய சூடாமணி நிகண்டு கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டில் தோன்றியது. திவாகர நிகண்டு, பிங்கலந்தை ஆகிய நிகண்டுகளுக்குப் பின் தோன்றிய சூடாமணி நிகண்டு நிகண்டுகளுள் எல்லாம் தலைசிறந்த நிகண்டு எனலாம். இதை நிகண்டு சூடாமணி என்றுங் கூறுவர். பிற்காலத்தில் அறிஞர் அனைவருமே இந்நிகண்டைப் போற்றிப் படிக்கலாயினர். திவாகரமும் பிங்கலந்தைதையும் சூத்திரங்களாலே பொருளை விளக்க

முற்பட்டதால் கற்பதற்குச் சற்றுக் கடினமாக இருந்தன. இக் குறையைப் போக்குவதற் கென்றே சூடாமணியைத் தாம் விருத்தப் பாவா லியற்றி யிருப்பதாக மண்டல புருடர் சிறப்புப் பாயிரத்தில் குறிப்பிட்டுள்ளார்.

சூடாமணி தேவப் பெயர்த் தொகுதி முதலாகப் பல் பெயர்க் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி யீருகப் பன்னிரண்டு பிரிவுகளையுடையது. சில பதிப்புகளில் 1125 செய்யுட்களும் சிலவற்றில் 1197 செய்யுட்களும் உள்ளன. ஏறத்தாழ பன்னீ ராயிரம் சொற்களுக்கு இந் நிகண்டில் பொருள் விளக்கப்பட்டுள்ளது.

சூடாமணிக்கு அடுத்துத்தோன்றியது அகராதி நிகண்டு. முன்னெழுந்த நிகண்டுகளனைத்தும் ஒரு சொல் பல பொருள், ஒரு பொருள் பல பெயர், பல பொருள் ஒரு சொல் என மூவகை யாக அமைந்திருக்க ஒரு சொல் பல பொருள் மட்டுமே உணர்த்தும் நிகண்டுகள் பின்னர் எழலாயின. அவற்றுள் முதலாவதாக அகராதி நிகண்டைக் குறிப்பிடலாம். இது சூத்திரப் பாவகையாலானது. இதில் முதலெழுத்துக்கள் மட்டும் அகர வரிசையில் அமைக்கப்பட்டுள்ளன. அகராதிப் பேர்த்தொகுதி தொடங்கி வகராதிப் பேர்த் தொகுதி முடியப் பத்துத் தொகுதிகள் இதில் உள்ளன. மொத்தம் 3334 நூற்பாக் களால் அமைந்தது இந்நூல். கி. பி. 1594இல் சிதம்பர ரேவண சித்தர் என்பாரால் இயற்றப் பெற்றது.

சூடாமணிக்குப் பின் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது உரிச் சொல் நிகண்டு. காங்கேயர் என்பா ரால் 17ஆம் நூற்றாண்டில் இது இயற்றப் பெற்றது. 287 வெண்பாக்களை உடையது. தேவப் பெயர்த் தொகுதி முதல் பல்பெயர்க் கொரு பெயர்த் தொகுதி யீருகப் பன்னிரு தொகுதிகளை யுடையது. இலக்கிய வழக்கிலுள்ள திரி சொற்களுக்கும் உரிச் சொற்களுக்கும் இது பொருள் கூறுவதால் உரிச் சொல் நிகண்டு எனப் பெயர் பெற்றது.

'தேவை' என்னும் இராமேச்சுரத்தில் வாழ்ந்த கயாதரர் இயற்றிய கயாதர நிகண்டு பல்வேறு சிறப்புக்களையுடையது. இது 15ஆம் நூற்றாண் டில் தோன்றியதென்ப. மகடூஉ முன்னிலையாகக் கட்டளைக் கலித்துறையால் யாக்கப் பெற்றது இது. அத்துடன் வேறெந்த நிகண்டிலும் காணாதவகையில் இந்நூல் அந்தாதித் தொடை யாக அமைந்துள்ளது. மனனஞ் செய்வோர்க்கு இம்முறை எளிதானதாகும். தெய்வப் பெயரியல் தொடங்கி ஒரு சொல் பல் பொருளியல் ஈறுகப் பதினேர் இயல்கள் இதிலுள்ளன. 566 பாடல் களாலாய இந்நூல் ஏறக்குறைய பதினோராயிரம் சொற்களுக்குப் பொருள் கூறுகின்றது.

திவாகரமும் சூடாமணியும் மேற்கொண்ட 11 அல்லது 12 என்ற முறையைக் கைவிட்டுத் திவா கரரைப் பின்பற்றி 56 பிரிவுகளில் அமைக்கப் பெற்றது கைலாச நிகண்டு சூளாமணி. இந் நிகண்டினை இயற்றியவரின் பெயரும் காலமும் தெரியவில்லையாயினும் கி. பி. 15ஆம் நூற்றாண் டில் இது தோன்றியிருக்கலாமெனத் தெரிகிறது. விண்ணவர் வகை முதல் ஊர்வன வகை முடிய 49 பிரிவுகளும் அதன்பின் 7 பிரிவுகளுமாக மொத்தம் 56 பிரிவுகள் உள்ளன. சூத்திரங்கள் பெரும்பாலும் பிங்கலந்தையை யொட்டியே அமைந்துள்ளன.

இந் நிகண்டு தோன்றி ஒரு நூற்றாண்டிற்குப் பிறகு தோன்றியது பல்பொருட் சூளாமணி. நெல்லை மாவட்டத்தைச் சார்ந்த மடசையைச் சார்ந்த சிதம்பர பாரதியார் இயற்றிய இந் நிகண்டு கி. பி. 1700-ல் தோன்றியது. வடமொழி நூலான அமரகோசத்தைப் பின்பற்றித் தமது நூலை இந்நூலாசிரியர் மூன்று காண்டங்களாகப் பிரித்துள்ளார். முதற்காண்டம் ஒரு சொல் ஒரு பெயர்த் தொகுதியும் இரண்டாங்காண்டம் ஒரு சொல் பல பொருட் தொகுதியும் மூன்றாங்காண்டம் பல்பெயர்க் கூட்டத்தொரு பெயர்த் தொகுதியுமா கும். ஐயாயிரத்துக்கு மேற்பட்ட சொற்கள் இதி லுள்ளன.

கி.பி. 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சில நிகண்டுகள் எழுந்தன. அவற்றுள் ஒன்று பொதிகை நிகண்டு. திருநெல்வேலி மாவட்டக் காரரான சாமிநாதக் கவிராயர் இயற்றியது. இரு பகுதிகளையுடையது. முதற்பகுதியில் தெய்வப் பெயர்த்தொகுதி முதலாக ஒருசொல் பலபொருட் பெயர்த்தொகுதி யீருகப் பத்துப் பிரிவுகளை உடை யது. மொத்தம் 491 பாடல்களை உடையது. 15000 சொற்களுக்குமேல் இதில் பொருள் விளக் கப்பட்டுள்ளது. இரண்டாம் பகுதியில் அகர வருக்கம் முதல் வகர வருக்கம் வரை அகர வரிசையில் பொருள் விளக்கப்பெற்றுள்ளது. இதில் 2228 நூற்பாக்கள் உள்ளன.

திருவேங்கடபாரதி இயற்றிய பாரதிதீபம் இக் காலத்திலெழுந்ததாகும். இந் நூல் கட்டளைக் கலித்துறையாலானது. தெய்வப்பெயர்த்தொகுதி முதலாக 12 தொகுதிகளையுடையது. 737 பாட்டுக் களாலாய இந்நிகண்டில் ஏறக்குறைய 15000 சொற்கள் இடம் பெற்றுள்ளன.

தொண்டை நாட்டினரான ஆண்டிப்புலவர் இயற்றியது ஆசிரிய நிகண்டு. அடியளவால் நீண்ட ஆசிரிய விருத்தத்தா லானது. இதன்

கண்ணுள்ள 263 பாடல்கள் 11 தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. பன்னிரண்டு சீர்களாலான அடி நான்கைக் கொண்டு பாடல் அமைந்திருப் பினும் பொருட்பெயர்களை மிகுதியாகக் கொண்டு எளிய நடையில் அமைந்துள்ளது இந்நூல். சொற்பொருள்களை இத்தனை என எண்ணால் வரையறுத்துப் பதினொராந் தொகுதியில் விளக் கப்பட்டுள்ளது இந்நிகண்டின் தனிச்சிறப்பாகும்.

தன் முன்னெழுந்த நிகண்டுக ளனைத்திலு முள்ள ஒரு சொற் பலபொருட் பெயர்களைத் தொகுத்து எதுகை முறையிலமைத்து 700 விருத்தங்களால் ஆக்கியது அரும்பொருள் விளக்க நிகண்டு. இதை இயற்றியவர் அருமருந் தைய தேசிகர். இது தோன்றிய ஆண்டு கி.பி. 1763ஆகும். ஈற்றெழுத்தை நோக்கி அகர வரிசைப்படுத்தியுள்ளது இந் நிகண்டு. ககர வெதுகை முதல் னகரவெதுகை வரை 18 பிரிவு களையுடையது இது. இதில் 3200க்கு மேற்பட்ட சொற்களுக்குப் பொருள் கூறப்பட்டுள்ளது.

18ஆம் நூற்றுண்டின் இறுதியில் தோன்றி யிருக்கலாமெனக் கருதப்படுவது பொருட் டொகை நிகண்டு. புதுக்கோட்டை சுப்பிரமணிய பாரதி ஆக்கியது. பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதியை விரிவாக்கி எழுதப்பட்டது. மொத்தம் 1000 நூற்பாக்களைக் கொண்டது.

1810ஐ ஒட்டி எழுந்தது சிவசுப்பிரமணியக் கவிராயர் இயற்றிய நாமதீப நிகண்டு. இஃது ஒரு பொருட் பல்பெயர்த் தொகுதியாய் விளங் குவது. 808 வெண்பாக்களா லாய இந்நூல் நான்கு படலங்களையும் 16 உட்பிரிவுகளையும் உடையது. ஏறக்குறைய பன்னீராயிரம் சொற்கள் இதிலிடம் பெற்றுள்ளன.

19ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த களத்தூர் வேதகிரி முதலியார் சூடாமணியின் பதினோராம் பகுதியை மட்டும் தனியே எடுத்து விரிவாக்கி 'வேதகிரியார் சூடாமணி' என்ற பெயரில் வெளியிட்டார். சூடாமணியில் 310 நூற் பாக்களிருக்க வேதகிரியார் சூடாமணியில் 600 நூற்பாக்கள் உள்ளன.

கீழ்வேளூர் சுப்பிரமணிய தேசிகர், முன் வெளி வந்த நிகண்டுச் சொற்களைத் தொகுத்து கந்த சுவாமியம் என்னும் நிகண்டை இயற்றியுள்ளார். இதன் முதலிரு பகுதிகள் 1844இல் வெளி வந்துள்ளன.

சூடாமணியின் பதினோராந் தொகுதியைப் பின்பற்றித் திருநெல்வேலிக் கவிராயர் முத்து சுவாமி பிள்ளை 'நாநார்த்த தீபிகை' என்னும் நிகண்டை ஆக்கியுள்ளார். வடமொழிச் சொற் களைப் பெரிதும் மேற்கொண்ட இந்நிகண்டு 1102 விருத்தங்களாலமைந்தது. எதுகையை அடிப் படையாகக் கொண்டு 18 பிரிவுகளா லாயது. தமிழில் கலந்துவிட்ட எண்ணிறந்த வடசொற் களுக்குப் பொருள் கூற எழுந்ததே இந் நிகண்டு.

யாழ்ப்பாணம் வைத்தியலிங்கம்பிள்ளை 1874-ல் சிந்தாமணி நிகண்டை வெளியிட்டார். ஒரு சொல்லுக்கு ஒரு பொருளை மட்டுமே கூறுவது. 400 விருத்தங்களாலானது. எதுகையைப் பின் பற்றி 18 பிரிவுகளைக் கொண்டது. வடமொழிச் சொற்கள் இதில் நிரம்ப இடம்பெற்றுள்ளன.

19ஆம் நூற்றுண்டின் இறுதியில் வாழ்ந்த அருணாசலநாவலர் சூடாமணியின் 11ஆம் தொகு தியை விரிவாக்கி விரிவுநிகண்டை இயற்றினர். ஆயிரத்துக்கு மேற்பட்ட விருத்தப்பாக்க ளாலானது இது.

இவையன்றி, சோதிடம், மருத்துவம் போன்ற துறைகளிலும் நிகண்டுகள் தோன்றியுள்ளன. எனினும் மேனாட்டு முறையைப் பின்பற்றி அகராதிகள் தமிழில் வெளிவரத் தொடங்கியபின் இந் நிகண்டுகளின் செல்வாக்கு குறைவுற்றுப் பயன்படுத்துவோருங் குறைந்து போயினர்.

### முற்கால அகராதிகள் :

தமிழில் மேனாட்டு முறையைப் பின்பற்றி அகராதி தோன்றியது 17ஆம் நூற்றாண்டில் தான். இம்முறையைப் புகுத்தித் தமிழ் மொழிக்குப் புதுப்பொலிவை உண்டாக்கியவர் கள் மேனாட்டுப் பாதிரிமார்கள் எனலாம். புதிய முறையில் முதன்முதல் தோன்றிய அகராதி தமிழ்-போர்ச்சுக்கீசிய அகராதியாகும். ஆந்தம் தெ பிரோயன் சா என்ற பாதிரியார் 1679இல் இதை வெளியிட்டார். மலைநாட்டி லுள்ள அம்பலக் காட்டில் அச்சிடப்பெற்றது. தமிழ்ச் சொற்களை அகரவரிசை முறையில் கொடுத்து அவற்றுக்கு இணையான போர்ச்சுகீசியச் சொற் களை எதிராகக் கொடுத்துள்ளது.

அடுத்து எழுந்தது சீகன் பால்கு பாதிரியார் இயற்றிய 'திக்சினேரியம் தமுலிகம்' என்னும் தமிழ் அகராதியாகும். இது பெருவாரியாகப் பரவவில்லை.

இத்தாலி நாட்டிலிருந்து தமிழகம் போந்த பெஸ்கி என்னும் வீரமாமுனிவர் தொகுத்த சதுரகராதி கி.பி. 1732இல் உருவானது. 'சதுர்' என்ற வடசொல்லுக்கு நான்கு என்பது பொருள். பெயர், பொருள், தொகை, தொடை என நால் வகைச் சொற்களுக்குத் தனித்தனியாகப் பொருள் கொடுக்கப்பட்டுள்ளதால் இது சது ரகராதி எனப் பெயர் பெற்றது. இதில் பன்னீராயி

ரம் சொற்களுக்குமேல் பொருள் விளக்கப்பட்டுள்ளது. இந்நூல் 1824இல் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. இதன் திருத்திய பதிப்புக்கள் பின்னால் வெளிவந்தன.

சதுரகராதி தொகுக்கப்பெற்ற காலத்திற்கும் அச்சேறிய காலத்திற்குமிடையே சில அகராதிகள் தோன்றின. வீரமாமுனிவரே சதுரகராதியன்றி தமிழ்-இலத்தீன் அகராதியை 1742லும் இலத்தீன்-தமிழ் அகராதியை 1744லும் இயற்றினார். இவர் தொகுத்த பிற அகராதிகள் தமிழ்-பிரெஞ்சு, தமிழ்-ஆங்கிலம், போர்ச்சுகீசியம்-இலத்தீன்-தமிழ் அகராதிகளும் வட்டார வழக்கு அகராதிகளும் ஆகும்.

### தமிழ்–ஆங்கில அகராதிகள் :

கி.பி. 1779இல் அச்சிடப்பெற்ற தமிழ்-ஆங்கில அகராதி சில சிறப்புகளையுடையது. முதன்முதல் அச்சிடப்பெற்ற தமிழ்-ஆங்கில அகராதி இதுவே. பெப்ரிசியசும் பிரெய்தாப்டும் சேர்ந்து தொகுத்த இவ்வகராதியின் பெயர் 'தமிழும் இங்கிலேசுமாயிருக்கிற அகராதி'. இதன் பெயர் ஆங்கிலத்தில் A Malabar and English Dictionary என்பதாகும். ஆங்கிலத்தில் மலபார் என்று குறிப்பிட்டதன் காரணத்தை ஆசிரியர்கள் கீழ்வருமாறு விளக்கியுள்ளனர். தமிழ்மொழியை மலபார் மொழியன்றே ஐரோப்பியர் பொதுவாகக் குறிப்பிடுகிறார்கள் என்ற குறிப்பு முகப்புப் பக்கத்திலேயே கொடுக்கப்பட்டுள்ளது. இது சென்னைக்கு அடுத்துள்ள வெப்பேரியில் அச்சிடப்பெற்றது.

இதற்கு அடுத்தாற்போன்று தோன்றிய தமிழ்-ஆங்கில அகராதி ராட்லர் என்னும் பாதிரியாரால் தொகுக்கப்பெற்றது. இது பெப்ரீசியசு அகராதியைவிட நான்கு அல்லது ஐந்து மடங்கு பெரியது எனலாம். சதுரகராதியினின்றும் பல சொற்கள் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. இது நான்கு பகுதிகளாக முறையே 1834, 1837, 1839, 1841 ஆண்டுகளில் வெளிவந்துள்ளது.

'தமிழ் மாணவன்' என்று தம்மை யழைத்துக்கொண்ட ஜி. யு. போப் துரைமகனார் இயற்றிய தமிழ்-ஆங்கில அகராதி 1859இல் பதிப்பிக்கப்பெற்றது. தமிழ் இலக்கியங்களை மேனாட்டார் படித்து மகிழ வேண்டு மென்பதற் காகக் குறள், நாலடியார் போன்ற இலக்கியங்களிலுள்ள சொற்களைத் தொகுத்து இவ்வகராதியில் சேர்த்துள்ளார். அளவில் சிறியது என்றாலும் பயன் மிக்கது.

வின்சுலோ தமிழ்-ஆங்கில அகராதி 1862இல் தோன்றியது. மிரான் வின்சுலோ என்ற பாதிரியார் தொகுத்துள்ள இவ்வகராதி பல்வேறு சிறப்புக்களையுடையது. தமிழ் அகராதி வரலாற்றில் எல்லைக்கல் போன்று அமைந்துள்ளது. பின் எழுந்த அகராதிகளுக்கு, குறிப்பாக சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட தமிழ் 'லெக்சிக'னுக்கு இவ்வகராதி சிறந்த அடிப்படையாகவும் வழிகாட்டியாகவும் அமைந்தது எனலாம். இதில் ஒவ்வொரு சொல்லுக்கும் தமிழிலும் ஆங்கிலத்திலும் பொருள் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. தமிழில் கலந்துவிட்ட வடசொற்களை உடுக்குறியிட்டுப் பிரித்துக் காட்டுகின்றது.

1870இல் சென்னை மாநிலக் கல்வித் துறையினரின் பார்வையில் கிளாசிகல் தமிழ்-ஆங்கில அகராதி வெளியாயிற்று. பள்ளி மாணவர்களுக்குப் பயன்பட வேண்டுமென்ற நோக்கத்தோடு உருவாக்கப்பட்டது இது.

விசுவநாத பிள்ளை என்பார் 1888இல் தமிழ் ஆங்கில அகராதியொன்றை வெளியிட்டார். ராட்லர், வின்சுலோ ஆகியோர் இயற்றிய அகராதிகளினின்றும் தொகுத்துச் சேர்க்க வேண்டியவற்றைச் சேர்த்து நடுத்தரமான அளவில் உருவாக்கப் பெற்றது இவ்வகராதி.

தரங்கம்பாடியிலுள்ள கிறித்து மத சங்கத்தார் 1897இல் வெளியிட்ட தமிழ்-ஆங்கில அகராதி முன் குறிப்பிட்டது போல பெப்ரீசியசு, வின்சுலோ ஆகியோர் தொகுத்த அகராதிகளின் சுருக்கமேயாகும். இதைத் தரங்கம்பாடி அகராதி என்று குறிப்பிடுவர்.

தமிழ் ஆங்கில அகராதிகளில் அளவில் மிகப் பெரியதும் என்றென்றைக்கும் நிலைத்திருக்கக் கூடியதுமான 'தமிழ் லெக்சிகன்' இந்நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றியது. சென்னைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் பல்வேறு அறிஞர்கள் சேர்ந்து இதைப் பதிப்பித்தனர்.

இதன்கண் தமிழ்ச் சொற்களின் வேர்ப்பகுதி தெளிவாக்கப்படுவதுடன் சொற்கள் கையாளப் பெற்றுள்ள இலக்கியப் பகுதிகளும், மேற்கோள்களாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. சொற்கள் மட்டுமன்றி உவமத் தொடர்களுக்கும் மரபுத் தொடர்களுக்கும் பொருள் தரப்பட்டுள்ளது. 4000 பக்க அளவில் வெளியான இவ்வகராதி 1923இல் அச்சிடத் தொடங்கப்பெற்று 1936இல் முடிவுற்றது.

பல வகைகளில் சிறப்புற்று விளங்கும் இப் பேரகராதியைத் தொகுத்த பதிப்பாசிரியர் குழுவின் தலைமைப் பொறுப்பேற்றவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் சேண்ட்லர், சு. அனவரத

விநாயகம் பிள்ளை, சி. பி. வேங்கடராமையா, எஸ். வையாபுரிப் பிள்ளை ஆகியோராவர்.

சித்த வைத்தியத் துறையில் அனுபவம் பெற்ற டி. வி. சாம்பசிவம் பிள்ளை என்பார் விரிவான தமிழ் ஆங்கில மருத்துவ அகராதியொன்றைத் தொகுக்க முற்பட்டு அவ்வகராதியின் முதல் தொகுதியை மட்டும் 1000 பக்கங்களுக்கு மேற்பட்ட அளவில் வெளியிட்டார். அதில் அகரம் முதல் கௌகாரம் வரையுள்ள சொற்களுக்குப் பொருள் கொடுக்கப்பட்டுள்ளது. சித்த வைத்தியத் தொடர்பான சொற்களுக்கு மிகத் தெளிவான வகையில் பொருள் விளக்கப்பட்டுள்ளது. இதன் எஞ்சிய பகுதி வெளி வராமற் போனது தவக் குறைவேயாகும்.

தமிழ் ஆங்கில அகராதியின் சுருக்கமான பதிப்பு 1955இல் வெளியான தமிழ் லெக்சிகனின் சுருக்கமான நூலே. லிப்கோ வெளியிட்டுள்ள தமிழ் தமிழ் ஆங்கில அகராதி இவ்வரிசையில் கடைசியாகத் குறிப்பிடத்தக்கதாகும்.

## ஆங்கிலம்–தமிழ் அகராதிகள் :

கி. பி. 1779 இல் தமிழ்-ஆங்கில அகராதி வெளியான பின் ஆங்கிலம் மலபார் எனப்படும் ஆங்கிலம்-தமிழ் அகராதி 1786இல் வெளியானது. இதுவே முதன் முதல் அச்சிடப்பெற்ற ஆங்கிலம் தமிழ் அகராதியெனலாம். இதுவும் வெப்பேரியில்தான் அச்சிடப்பெற்றது. 1844இல் ஸ்பால்டிங் என்பார் ஆங்கிலத் தமிழகராதியொன்றைத் தொகுத்து வெளியிட்டார். பெர்சிவல் என்னும் பாதிரியார் ஆங்கிலத் தமிழ் அகராதியொன்றைத் தொகுத்தார்.

1888இல் வின்சுலோ தொகுத்த ஆங்கிலம்-தமிழ் அகராதி வெளிப்பட்டது. மேனாட்டார் தமிழ் கற்பதற்குத் துணை புரிவதற்காக இது தொகுக்கப் பெற்றது. 1500 பக்கங்களை யுடையது.

இருபதாம் நூற்றாண்டின் முற் பகுதியில் தோன்றிய ஆங்கிலம்- தமிழ் அகராதிகள் பள்ளியில் பயிலும் மாணவர்களுக்குப் பயனளிக்கும் வகையில் சுருங்கிய அளவிலேயே வெளிவரலாயின. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை டி. ஏ. சுவாமிநாத ஐயர் இயற்றிய ஆங்கிலம்-தமிழ் அகராதி (1909); பி. என். சங்கரநாராயண பிள்ளை தொகுத்த ஆங்கிலம்-தமிழ்—ஆங்கில அகராதி (1914) கே. வி. சுப்பையர் (1932) ஏ. எம். எஸ். ராகவன் (1952) ஆகியோர் தொகுத்த அகராதிகள் லிப்கோ அகராதி (1950) ஸ்ரீமகள் அகராதி (1955) ரவி மாணவர் அகராதி (1964).

இவற்றுக்கிடையில் தனிச்சிறப்புடைய சில அகராதிகள் தோன்றின. 1936இல் பி. இராமநாதன் தொகுத்து வெளியிட்ட ஆங்கிலம்-தமிழ் அகராதி கற்றோர்க்குப் பயன்படும் வகையில் அமைந்தது.

பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் தொகுத்து, சைவசித்தாந்தக் கழகம் வெளியிட்ட கழக ஆங்கிலத் தமிழ்க் கையகராதி ஆங்கிலச் சொற்களுக்குக் கூடிய வரை தூய தமிழ்ச் சொற்களால் பொருள் விளக்கியுள்ளது. இதன் முதல் பதிப்பு 1952இல் வெளியானது.

ஆங்கிலம்-தமிழ் அகராதிகளில் இறுதியாக வெளிவந்ததும் மிகக் குறிப்பிடத் தக்கதுமான அகராதி சென்னைப் பல்கலைக் கழகம் தொகுத்து வெளியிட்ட ஆங்கிலம்-தமிழ்ச் சொற்களஞ்சியமாகும். டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியாரைத் தலைமைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளிவந்த இவ்வகராதி மிகப் பெரிய அளவில் அமைந்துள்ளது. 1223 பக்கங்களையுடைய இவ்வகராதி மூன்று தொகுதிகளாக முறையே 1963, 64, 65 ஆண்டுகளில் வெளியாயிற்று.

வளர்ந்து வரும் அகராதித் தொகுப்பு முறையைக் கையாண்டு மேனாட்டு அகராதிகளுக்கொப்ப மிக விளக்கமாகப் பொருள் விளக்கியுள்ளது இவ்வகராதி. ஆக்ஸ்போர்டு இங்கிலீஷ் (சுருக்க) அகராதியை அடிப்படையாகக்கொண்டு உருவாக்கப் பெற்றதே இச் சொற்களஞ்சியம்.

## தமிழ்–தமிழ் அகராதிகள் :

சதுரகராதிக்குப் பின் வெளியான தமிழ்-தமிழ் அகராதிகளுள் முதன்மையானது மானிப்பாய் அகராதி. யாழ்ப்பாண அகராதி என்றும் இது வழங்கப்பெறும். தமிழ்ச் சொல்லுக்குத் தமிழிலேயே பொருளை விளக்குவது இது. சதுரகராதியைப் பின்பற்றி இதுவும் நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதில் ஏறக்குறைய அறுபதினாயிரம் சொற்கள் இடம்பெற்றுள்ளன. 1842இல் இது ஸ்பால்டிங் என்ற பாதிரியாரால் தொகுக்கப்பெற்று அச்சிடப்பெற்றது.

இதன்பின் 1883இல் விசயரங்க முதலியார் என்பவரால் பையடக்கத் தமிழகராதியொன்று வெளியிடப் பெற்றது. முன் வந்த அகராதிகள் மாணவர்க்குப் பயில்வதற்கரியதாயிருப்பவே இது தொகுக்கப்பெற்றது. இதில் மூவாயிரம் சொற்கள் தொகுக்கப்பெற்றுள்ளன.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நா. கதிரைவேற் பிள்ளையகராதி வெளிவந்தது. அடுத்து, யாழ்ப்பாணத்தைச் சார்ந்த சி. வ. கதிரைவேற் பிள்ளையவர்கள் தொகுத்த தமிழ்ச் சொல்லகராதி 1904இல் வெளிவந்தது. மிக

விரிவான முறையில் தொகுக்கப்பெற்ற இவ் வகராதி மூன்று பகுதிகளாக வந்தது. 1800 பக்கங்களைக் கொண்ட இவ்வகராதியில் ஏறத்தாழ அறுபத்தியையாயிரம் சொற்கள் உள்ளன. இதையடுத்து மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் தொகுக்கப்பெற்ற அகராதி மூன்று தொகுதி களாக வெளிவந்தது.

மதுரை த. குப்புசாமி நாயுடு இயல், இசை, நாடக நூல்களான பரத சேனாபதீயம், இசை நுணுக்கம், சங்க இலக்கியம், காப்பியம், இலக் கண நூல்கள், நிகண்டுகள் ஆகியவற்றை ஆதார மாகக் கொண்டு தொகுத்தது 'தமிழ்ப் பேரக ராதி'. 1906இல் இது பதிப்பிக்கப் பெற்றது. சொற்பொருளை விளக்க ஆங்காங்கே படங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. அகராதி பெயர், பொருள், தொகை, தொடை என நால்வகையா கப் பிரிக்கப்பட்டுள்ளது. 1000 பக்கங்களுக்கு மேற்பட்டது.

1909இல் அச்சிடப்பெற்ற இருபதாம் நூற்றாண் டுத் தமிழகராதி பி. இராமநாதன் என்பவரால் தொகுக்கப் பெற்றது. மாணவர்கட்கு மட்டு மன்றிக் கற்றோர்க்கும் பயன்படும் வகையில் ஓரளவு விரிவாகவும் படங்களோடும் அமைந்தது. வண்ணக் களஞ்சியம் நாகலிங்க முனிவர் 1911 இல் காரனேசன் தமிழ் மொழியகராதியை வெளி யிட்டார். கதிரைவேற் பிள்ளை அகராதியை அடிப்படையாக வைத்துக்கொண்டு கூட்டியும் குறைத்தும் தொகுக்கப் பெற்றது. நான்கு தொகுதிகளாக இது வெளியாயிற்று.

1914இல் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த அ. குமாரசுவாமிப் புலவர் இலக்கிய நூல்களைப் படிப்போர்க்குப் பயன்படும் பொருட்டு இலக்கிய நூல்களினின்று சொற்களைத் தொகுத்துப் பொருள் விளக்கம் கொடுத்து 'இலக்கியச் சொல்லகராதியை' வெளியிட்டார். கா. நமச் சிவாய முதலியார் தொகுத்த 'தமிழ்மொழி யகராதி' 1918இல் வெளிவந்தது. பழைய நிகண்டுகளையும் இலக்கிய நூல்களையும் வட நூலகராதிகளையும் துணையாகக் கொண்டு தொகுக்கப்பெற்றது சொற்பொருள் விளக்க மென்னும் தமிழகராதி. இதைத் தொகுத்தவர் யாழ்ப்பாணத்தைச் சார்ந்தவரான ச. சுப்பிர மணிய சாஸ்திரிகள். இது 1924இல் அச் சேறியது.

நடைமுறை வழக்கிலிருக்கும் சொற்களுக்குப் பொருளுணர்த்துவதற்காகத் 'தற்காலத் தமிழ்ச் சொல்லகராதி'யைப் பவானந்தம்பிள்ளை 1925-ல் வெளிப்படுத்தினர். நெல்லையில் வாழ்ந்த எஸ். சங்கரலிங்க முதலியார் ஜூபிலி தமிழ்ப் பேரகராதியை 1386 பக்க அளவில் நான்கு தொகுதிகளாக வெளியிட்டார். பெரும்பாலும் தமிழ் மாணவர் கற்கும் தமிழ் இலக்கிய நூல்களி லுள்ள தமிழ், வடமொழிச் சொற்களுக்குப் பொருள் கொடுக்க வேண்டுமென்ற நோக்கத் தோடு தொகுக்கப்பெற்றது இளைஞர் தமிழ்க் கையகராதி. இதைத் தொகுத்தவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை. 1928இல் இது பதிப்பிக்கப்பெற்றது. கும்பகோணம் சா. வை. ஸ்வாமி ஐயர் தொகுத்தது மணி அகராதி. பதிப்பிக்கப்பெற்ற ஆண்டு 1934. நால்வகை அகராதிகளுள் பொருள் அகராதியின்கண் அடங்கும் சொற்களுள் ஒரே சொல்லுக்குரிய பல பொருள்கள் தொகுக்கப்பெற்று 110 தலைப்பு களின் கீழ் பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

ஆனந்த விகடன் அகராதி 1935இல் 2040 பக்கங்களுடன் வெளியிடப்பட்டது. 2300க்கு மேற்பட்ட பக்கங்களைக் கொண்டு இரு தொகுதி களாக வெளியானது மதுரைத் தமிழ்ப் பேரகராதி. இதை இ. மா. கோபாலகிருஷ்ண கோன் 1937இல் வெளியிட்டார். ஊத்தங்கரை பி. ஆர். அப்பாயச் செட்டியார் 1938இல் தொகுத்தது எதுகை அகராதி. ஈற்றெழுத்து ஒன்றி வரும் சொற்களை அகரவரிசைப் படுத்தித் தருவது இது. ஒரெழுத்துச் சொல்லிலிருந்து ஆறெழுத்துச் சொல் வரை ஆறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 1000 பக்கங்களுடையது.

சைவ சித்தாந்தக் கழகம் 1940இல் வெளியிட்ட கழகத் தமிழ்க் கையகராதி இலக்கியச் சொற்களுள் கடினமான சொற்களுக்குப் பொருள் தெரிய உதவுவது. சேலை சகதேவ முதலியாரும் காழி. சிவ. கண்ணுசாமிப் பிள்ளையும் தொகுத் தது இது. ணகர னகர, றகர ரகர வேறுபாடுகளை அறியாது தமிழ்ச் சொற்களைத் தவருகக் கையாளுவது பெருவழக்காயுள்ளதை எடுத்துக் காட்டுவதற்காக இத்தகைய சொற்களை அருகரு கில் கொடுத்துப் பொருள் விளக்கியுள்ளார் எஸ். நடராசன் என்பார். இவர் தொகுத்த இவ்வகராதியின் பெயர் கார்த்திகேயினி புது முறை அகராதி என்பதாகும். 1949இல் இது வெளிவந்தது.

1950க்குப் பின் வெளிவந்த தமிழ்-தமிழ் அகராதிகளுள் குறிப்பிடத்தக்கவை லிப்கோ தமிழ்-தமிழ் அகராதி, ந. சி. கந்தையா பிள்ளை தொகுத்து வெளியிட்ட 'செந்தமிழ் அகராதி' (1950), ஐயம்பெருமாள் கோனர் தொகுத்த கோனர் தமிழ்க் கையகராதி (1955), பாலூர் கண்ணப்ப முதலியாரால் உருவாக்கப்பெற்ற தமிழ் இலக்கிய அகராதி (1957), பி. எஸ். எப்.

மார்ட் வெளியிட்டுள்ள 'கம்பர் தமிழ் அகராதி', சைவ சித்தாந்தக் கழகம் வெளியிட்டுள்ள 'கழகத் தமிழகராதி' (1965) முதலியன வாம்.

### தமிழ்—பிற மொழி அகராதிகள் :

தமிழ் பிற மொழி அகராதிகளில் 19ஆம் நூற்ருண்டில் தோன்றியவை பிரெஞ்சு-தமிழ், தமிழ்-பிரெஞ்சு அகராதி, இதைத் தொகுத்தவர் ஏ. பிளான். வெளியிடப்பட்ட ஆண்டு 1831. முழே, துபே என்ற கிறித்துவப் பாதிரியார் புதுவையில் வாழ்ந்தபோது தொகுத்தவை இலத்தீன்-பிரெஞ்சு-தமிழ் அகராதியும் (1846) தமிழ்-பிரெஞ்சு அகராதியும் (1855) ஆகும். இவர்களே பின்னர் பிரெஞ்சு-தமிழ் அகராதியையும் வெளியிட்டுள்ளனர். குரி பாதிரியார் தொகுத்த தமுழிகோ - லாடினம் என்னும் தமிழ் இலத்தீன் அகராதி 1867இல் அச்சானது.

இந்த நூற்ருண்டில் தோன்றிய தமிழ் பிற மொழி அகராதிகள் சில. நே. ஈ. வெங்கடேச சர்மா என்பவர் 1937இல் தமிழ் சம்சுகிருத அகராதியையும், சம்சுகிருத-தமிழ் அகராதியையும் வெளியிட்டார். திருவரங்க நீலாம்பிகை அம்மையார் தொகுத்த வடசொல் தமிழ் அகர வரிசை தமிழில் கலந்துள்ள வடசொற்களை நீக்கித் தனித்தமிழ் பயில விரும்புவோர்க்குப் பயன் தருவது.

மேனுட்டு மொழியியற் பேரறிஞர்களான டி. பர்ரோவும், எம். பி. எமனேவும் சேர்ந்து வெளியிட்டுள்ள திராவிட மொழிகளின் சொல் வரலாற்று அகராதி (Dravidian Etymological Dictionary) திராவிட மொழியியல் ஆராய்ச்சிக்குப் பயன் தருவது. முதற்கண் தமிழ்ச்சொல் கொடுக்கப்பெற்று அதன்பின் அச்சொற்களுக்குத் தொடர்பான திராவிட மொழிச் சொற்க ளனைத்தும் கொடுக்கப்பட்டுள்ளன. தமிழ் மொழியிலிருந்து பிற திராவிட மொழிகளுக்கும் இந்தோ ஆரிய மொழிகளுக்கும் சென்றுள்ள சொற்களை இதில் தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளனர் இதன் தொகுப்பாசிரியர்கள். 4572 சொற்களுக்கு ஒப்புமை கூறும் இந்நூல் 1961இல் வெளியானது. 600 பக்கங்களுடையது.

1960இல் தமிழ்-ருஷ்ய அகராதி பியாதிகோர்ஸ்கி, ரூதின் ஆகியோரால் தொகுக்கப்பெற்று மாஸ்கோவில் அச்சிடப்பெற்றது. 38000 தமிழ்ச் சொற்களுக்கு ருஷ்ய மொழியில் பொருள் விளக்கப்பட்டுள்ளது.

மலாய் மொழியைக் கற்க விரும்பும் தமிழர்களுக்கு 1962இல் மலாய் தமிழ் அகராதி எம். ஏ. சாமி என்பவரால் தொகுக்கப்பெற்றது.

அந்திரோனவ், இப்ரஹீமவ் என்ற ருஷ்ய மொழி அறிஞர்கள் தொகுத்த ருஷ்ய தமிழ் அகராதி மாஸ்கோவில் 1965இல் வெளியானது. 24000 ருஷ்யச் சொற்களுக்கு இவ்வகராதியில் தமிழில் பொருள் கூறப்பட்டுள்ளது.

### பிற வகை அகராதிகள் :

தமிழ்ச்சொற் பிறப்பு அகராதி இல்லாத குறையைப் போக்க இலங்கையைச் சார்ந்த ஞானப்பிரகாச அடிகளார் முயன்ருர். தமது ஆழ்ந்த புலமையைக் கொண்டு இவ்வகராதியை வெளியிட் முற்பட்ட இவர் இதன் முதற் பகுதியை 1938இல் வெளியிட்டார். தமிழ் வேர்ச் சொற்களின் துணைகொண்டே உலக மொழிகளின் சொற்கள் தோன்றிப் பல்வேறு வடிவங் கொண்டன என்பதை உலகுக்கு எடுத்துக்காட்டவே, அடிகள் இதைத் தொகுத்தார். தமிழ்ச் சொல்லுக்கு ஒப்பியல் முறையில் இணையான பிற திராவிட மொழிகள், இலத்தீன், செர்மனி, கோதிக் மொழிச் சொற்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. ஒரு சிறு பகுதி மட்டுமே வெளியானபின் எஞ்சிய பகுதிகள் வெளிவராமற் போயின.

தமிழ் மொழியின் கண்ணுள்ள அடுக்கு மொழிகளைத் தொகுத்து அடுக்குமொழி அகராதி (1964)யும் எதிர்ப்பதங்களைத் தொகுத்து எதிர்ப் பத அகராதி (1965) என்றும் ஒலிக்குறிப்புச் சொற்களைத் தொகுத்து ஒலிக்குறிப்பகராதி (1966) என்றும் மூன்று வெவ்வேறு அகராதிகளை மு. சதாசிவம் தொகுத்துள்ளார். மேலும், விநாயகர் அருட் செல்வம், திருமகள் அருட் செல்வம், கலைமகள் அருட் செல்வம் என்ற பெயர்களில் அவ்வக் கடவுளர்க்குப் பல நூல்களிலும் காணப்படும் சொல் அல்லது சொற்றொடர்ப் பெயர்களைக் கொண்ட அகராதிகளையும் இவர் தொகுத்து வெளியிட்டுள்ளார்.

இதுகாறும் பார்த்தவை சொற்பொருளுரைக்கும் அகராதிகளாகும். இவையன்றிப் பெயர்களுக்கு விரிவான முறையில் விளக்கம் கூறும் கலைக்களஞ்சியம் போன்ற நூல்கள் தமிழில் தோன்றியுள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை அபிதான கோசம், சிறப்புப் பெயரகராதி, அபிதான சிந்தாமணி, தமிழ்ப்புலவரகராதி ஆகியவை. இவை கூறும் பொருளனைத்தும் ஒருங்கே தன்னகத்துட் கொண்டு விரிவான முறையில் தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரால்

வெளியிடப்பட்ட அரிய படைப்பு தமிழ்க் கலைக் களஞ்சியம் ஆகும்.

அபிதானகோசம் என்பது யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த ஆ. முத்துத்தம்பி பிள்ளையால் 1902இல் தொகுக்கப்பெற்றது. 400 பக்கங்களுடையது. ஈக்காடு இரத்தினவேலு முதலியார் தொகுத்து வெளியிட்ட சிறப்புப் பெயரகராதி 1903இல் அச்சிடப்பெற்றது. 740 பக்கங்களுடைய இதில் தெய்வங்கள், ஊர்கள், புலவர்கள் ஆகியோரின் பெயர்களும் அவற்றிற்குரிய விளக்கமும் கொடுக்கப்பட்டுள்ளன.

மேலைநாடுகளில் பல்பொருட் களஞ்சியங்கள் பல வந்தவுடன் அவற்றைப்போல் தமிழிலும் வெளியிட வேண்டுமென்று ஆ. சிங்காரவேலு முதலியார் 'அபிதான சிந்தாமணி' என்னும் நூலை வெளியிட்டார். இதன் முதற் பதிப்பு 1910லும் (1050 பக்.) இரண்டாம் பதிப்பு 1936லும் (1634 பக்.) வெளியாயின.

ந.சி. கந்தையா பிள்ளை தொகுத்த தமிழ்ப் புலவரகராதி தமிழ்ப் புலவர்களின் வரலாற்றைச் சுருக்கமாகத் தரும் பயன் மிக்க நூல்.

அறிவியல் முதல் இயக்கம் வரை பல்வேறு துறைகளிலுமுள்ள செய்திகளைத் தொகுத்து அளிக்க முற்பட்டது. 'கலைக்களஞ்சியம்' திரு. ம. ப. பெரியசாமித்தூரன் அவர்களைத் தலைமைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளியிடப்பட்டது. இந்நூல் 9 தொகுதிகளாக வெளிவந்துள்ளது. முதல் தொகுதி 1954இலும் ஒன்பதாம் தொகுதி 1961லும் ஆக ஒன்பது ஆண்டுகளில் ஒன்பது தொகுதிகள் வெளிவந்துள்ளன. மொத்தம் 7000 பக்கங்களுக்கு மேலுள்ளன. இக்கலைக் களஞ்சியம் தமிழ் மொழியின் கருவூலமாகும்.



# தமிழ்நாட்டுத் தோத்திரங்களும் சாத்திரங்களும்

ந. ரா. முருகவேள்

" சொல்லும் பொருள்எலாம் ஆனூர் தாமே
தோத்திரமும் சாத்திரமும் ஆனூர் தாமே "

திருநாவுக்கரசர்.

## முன்னுரை :

தமிழ்நாடு எத்தனையோ வகைகளில் தனிப் பெரும் சிறப்புடையது. " செவ்விய மதுரம் சேர்ந்த நற்பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொற் கவிதை "களால் அமைந்த, அழகிய இனிய தோத்திர நூல்களையும், அரிய பெரிய சாத்திரங்களையும் ஏராளமாகப் பெற்றிருப்பதும் தமிழ் நாட்டின் பலவகைச் சிறப்புக்களில் ஒன்ருகும். " இங்கிலாந்து நாடு வேறு பிறிது எதனுலும் அன்றித் தனது கவிதைகளினுலேயே இத்துணைச் சிறந்த புகழ் வாய்ந்ததாக விளங்குகின்றது ?' [1] என மேத்யூ ஆர்னல்டு என்னும் ஆங்கில அறிஞர் குறிப்பிடுகிருர். அம்முறையில், தமிழ்நாட்டிற்குத் தனிப்பெருஞ் சிறப்பை விளைவித்துப் புகழ் பரப்பிக் கொண்டிருப்பன சாத்திரங்களும் தோத்திரங்களுமாக அமைந்த பல தண்டமிழ்க் கவிதை இலக்கியங்களே எனலாம்.

தமிழ்நாட்டில் சைவம்—வைனவம்—சமணம்—பௌத்தம்—இஸ்லாமியம்—கிறித்தவம் போன்ற பல சமயங்கள், நலமுற வளர்ந்து நிலவி வருகின்றன. அச்சமயங்களுள் ஒவ்வொன்றுக்கும் உரியனவாய், எத்தனையோ பல புகழ்நூல் (தோத்திர நூல்)களும், பொருள்நூல் (சாத்திர நூல்)களும் விளங்கி வருகின்றன. அவைகள் அனைத்தையும் பற்றி, இச்சிறு கட்டுரையில் குறிப்பிடுதல் இயலுவதன்று. ஆதலின், ' தோத்திரம்—சாத்திரம் ' எனத் தொன்றுதொட்டு வரையறை செய்து போற்றி வழங்கி வரப் பெறும் சிறப்புடைய சைவத் தமிழ் இலக்கியங்கள், ஒரு சிலவற்றைப் பற்றி மட்டும், இயன்ற அளவில் சுருக்கமாக இக்கட்டுரையில் காண்போம்.

## தோத்திரங்கள் :

தமிழ்மொழிக்கண் உள்ள அளவற்ற பல தோத்திர நூல்களுள், மிகவும் பழமையும் பெருமையும் தெய்வீகமும் வாய்ந்து திகழ்வன வாய்த், தமிழகச் சான்ருேர் பெருமக்களால் போற்றிப் பாராட்டப் பெறுவன, பன்னிரு திருமுறைகள் எனப்படுவனவாகும். கலையறிவு உணர்வால் மட்டுமே பாடப்பெறும் ஏனைய பிற உலகியற் கவிதைகளைக் காட்டிலும், இறையருள் உணர்வாற் பாடப்பெற்ற திருமுறைகள் ஆகிய நிறைமொழிப் பாடல்கள், எல்லாவகையாலும் ஏற்றம் மிக்குடையன. பிற்காலத்தே தோன்றியருளிய ஆயிரமாயிரம் அறிஞர்களும், ஆன்ருேர்களும் சான்ருேர்களும் ஆகிய அனைவரும், திருமுறைகளைச் செவ்விதின் ஓதியே சிறப்புற்று உயர்ந்து உய்ந்தனர் என நாம் துணிந்து கூறலாம்.

## மறுமலர்ச்சிப் புற வகை நூல்கள் :

சங்க காலத்திற்குப் பின்னர்ச் சில நூற்ருண்டுகள் (கி. பி. 300—600), தமிழ் நாட்டில் நிலவிய இருண்ட காலச் சூழ்நிலைபால், மங்கி மழுங்கிக் கிடந்த தமிழ்மொழியும், இலக்கியமும் கவிதையும், கலைகளும், தமிழர் வாழ்வும் ஆகியவையெல்லாம், திருமுறைகளால்தான் மீண்டும் தழைத்துச் செழித்துச் சிறப்பெய்தின. தமிழகம் பல்லாற்றனும் புத்துயிர்ப்பும் புத்துணர்ச்சியும் பெற்று வளர்தற்குத் திருமுறை ஆசிரியர்களே காரணர்கள் ஆவர். திருமுறைகளை " மறுமலர்ச்சி இலக்கியங்கள் " (Renaissance Literature) என நாம் குறிப்பிடுதல் பொருந்தும். சங்க கால நூல்களின் நடையும் போக்கும்

[1] " By nothing in England so glorious as by her poetry."—*Matthew Arnold*.

கருத்தும் அமைப்பும், திருமுறைகளின் நடையும், போக்கும், கருத்தும் தனித்தனியே வெவ்வேருக அமைந்த மேம்பாடுடையனவாகும்.

திருமுறைப் பாடல்கள், நாட்டின் பல பகுதிகளிலும் மூலே முடுக்குகளிலும் சென்று பாடப் பெற்று, மக்கள் உள்ளத்தைக் கொள்ளே கொண்டு பரவி நின்ற மாட்சிமை வாய்ந்தவை. ஆதலின், அவற்றை 'மக்கள் இலக்கியங்கள்' எனவும் நாம் குறிப்பிடலாம். திருமுறைகளில் சொல் புதிது; பொருள் புதிது; நடை புதிது; சுவை புதிது; இவ்வாற்ருல் அவற்றை 'புதுமைப் பேரிலக்கியங்கள்' எனக் கூறுதலும் பொருந்தும். திருமுறைகளின் அருமை பெருமைகளுக்கு அளவேயில்லே.

**பன்னிரு திருமுறைகள் :**

திருமுறைகள் பன்னிரண்டு என்று வரையறை செய்யப் பெற்றுள்ளன. அவற்றுள் முதல் மூன்று திருமுறைகள் திருஞான சம்பந்தர் பாடியனவாகும். இவைகள் தூய சிறந்த நடை நலனும், மிகுந்த இசை இனிமையும், உயர்ந்த கலேத் திறனும், எழில் கனிந்த இயற்கைப் புனேவுகளும் செறிந்து, இளமைக்குரிய பெருமித உணர்ச்சியும் வீறும் பெற்று, ஒப்புயர்வற்றுப் பொலிந்து விளங்குகின்றன.

திருநாவுக்கரசர் பாடல்கள், மூன்று நான்கு ஐந்தாம் திருமுறைகளாகத் தொகுக்கப் பெற்றுள்ளன. அறிவு முதிர்ந்து, அனுபவம் பழுத்து, தத்துவம் செறிந்து, உருக்கம் மிகுந்து, மக்கள் வாழ்க்கைக்கு உறுதி பயக்கும் உயரிய கருத்துக்களேத் திட்ப நுட்பமுறவும், சுவை பெருகவும், திருநாவுக்கரசரின் பாடல்களே அறிவுறுத்துகின்றன.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்தது, ஏழாம் திருமறை. கலேயழகும், இசை இனிமையும், நகைச்சுவை நலமும் பிறவும் கலந்து நிறைந்து, மனித வாழ்வியலின் அனுபவ வாய்மைகளேத் திறம்பட விளக்குகின்றது, ஏழாம் திருமுறை.

மாணிக்க வாசகர் அருளிய திருவாசகம், திருச்சிற்றம்பலக் கோவையார் என்னும் நூல்கள் இரண்டும், எட்டாம் திருமுறை எனப்படும். இவற்றுள் திருவாசகம், அழகிய இனிய கருத்துச் செறிவும், அயரா அன்பு நலனும், இறையருளுணர்வில் ஆரா இயற்கை அவாவும் வேட்கையும் மிகுந்து, எளிமை இனிமை தெளிவு முதலிய சிறப்பியல்புகள் அமைந்து, கல்லேப் பிசைந்து கனியாக்கவல்ல உருக்கமும் நெகிழ்ச்சியும் சிறந்து, ஒப்புயர்வில்லாத பக்திப் பெருநூலாக ஒளிர்கின்றது. இறையருளேத் தேடி அலேந்து, முயன்று பெற்று உய்யும் ஓர் உயிரின் பலதிற உள்ளுணர்ச்சிகளின் வளர்ச்சிப் படிநிலேகளேத் தெளிவுற விளக்கிக் காட்டும் திறனில், திருவாசகம் போலச் சிறந்த நூல், வேறென்றில்லே. தன்னே ஓதுபவர்களின் சிந்தையெலாம் தெளிவித்துச் சிவமாக்கி உய்விக்க வல்ல சிறப்பினது திருவாசகம்.

திருச்சிற்றம்பலக் கோவையார், சங்க கால நல்லிசைப் புலவர் பெருமக்கள் பாடிய அகப் பொருட் காதல் உணர்ச்சியோடு, அருட் பொருளாகிய கடவுளுணர்ச்சியையும், கலந்தியைத்துப் பிணேத்துப் பாடிக், கலேநலமெலாம் கனிந்த மெய்யுணர்வுக் கருத்துக்கள் செறிந்து திகழகின்ற, செந்தமிழ்ப் பெரும் கருவூலம் ஆகும். இதனேக் குமரகுருபர அடிகள், "காமம் சான்ற ஞானப்பனுவல்" எனப் புகழ்ந்து பாராட்டிப் போற்றியுள்ளார்.

திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்னும் பாடல்கள் ஒன்பதாம் திருமுறையாக வழங்கப் பெறும். திருமாளிகைத் தேவர், சேந்தனர், கருவூர்த் தேவர், பூந்துருத்திநம்பி காட நம்பி, கண்டராதித்த தேவர், வேணுட்டடிகள், திருவாலி அமுதனர், புருடோத்தம நம்பி, சேதிராயர் என்னும் சான்ருேர்கள் ஒன்பதின்மரும் பாடிய பாடல்களின் தொகுதியே, ஒன்பதாம் திருமுறை. இதன்கண் கண்டராதித்த சோழர் (கி. பி. 949—957) பாடிய பாடல்களும், முதலாம் இராஜராஜ சோழன் (கி.பி. 985—1014) கட்டிய தஞ்சை இராசராசேச்சுரம் பற்றிய பாடல்களும், இராசேந்திர சோழன் (கி.பி. 1012—1014) கட்டுவித்த கங்கை கொண்ட சோழேச்சுரம் பற்றிய பாடல்களும் அமைந்திருத்தல் குறிப்பிடத்தக்கது.

திருமூலர் அருளிய திருமந்திரம் என்னும் நுண்பொருள் மறைநூல், பத்தாம் திருமுறையாகும். ஆராய்ச்சி அநுபூதி என்னும் இருவகை நெறிகளுள், அநுபூதி என்னும் இறையருட் பேற்று இயல் நெறியால், நம்மனேர் இறைவனே அடைந்து உய்யுமாறு பலதிற யோகப் பயிற்சி முறைகளேயும், ஐந்தெழுத்து முதலிய அரிய பல மந்திரங்களேயும், அவற்றை உருவேற்றுதற்குரிய பலவகைச் 'சக்கர' அமைப்புக்களேயும், சிறந்துயர்ந்த தத்துவ ஞானப் பொருள்களேயும், அழகிய இனிய உலகியல் நீதிக் கருத்துக்களேயும், ஓதற்கு எளியவாய் உணர்தற்கு அரியவாய்ச்

சிந்தனைக்கு இனியவாய் உள்ள சிறந்த பாடல்களால் திறம்பட விளக்குகின்றது. இதனை, 'ஞானம் முதல் நான்கும் மலர் நற்றிருமந்திர மாலை' எனச் சேக்கிழார் அடிகள் சிறப்பித்துக் கூறியருளுகின்றார்.

பதினொன்றும் திருமுறை, திருவாலவாயுடையார், காரைக்கால் அம்மையார், ஐயடிகள் காடவர்கோன், சேரமான் பெருமாள், நக்கீர தேவர், கல்லாட தேவர், கபில தேவர், பரண தேவர், இளம்பெருமானடிகள், அதிரா அடிகள், பட்டினத்தார், நம்பியாண்டார் நம்பிகள் என்னும் பன்னிருவர் பாடியது; நாற்பது பனுவல்கள் கொண்டது. சங்க கால நூலாகக் கருதப்பெறும் திருமுருகாற்றுப்படை இதன்கண் சேர்க்கப் பெற்றுள்ளது. விநாயகரைப் பற்றிய புகழ் நூல்கள் இரண்டும் (மும்மணிக்கோவை, இரட்டை மணிமாலை), இதன்கண் இடம் பெற்றுள்ளன.

ஆசிரியர் சேக்கிழார் பெருமான் இயற்றியருளிய பெரிய புராணம் என்னும் திருத்தொண்டர் புராணம், பன்னிரண்டாம் திருமுறையாகும். இது நாயன்மார்கள் எனப்படும் அறுபத்து மூன்று சிவனடியார்களின் வரலாற்றை அழகுற விளக்கியருளும் ஒப்புயர்வற்ற நூலாகும். கி.பி. 6-ஆம் நூற்றாண்டு முதல் 12-ஆம் நூற்றாண்டு வரை உள்ள தமிழகத்தின் சமய சமுதாய வரலாற்று நிகழ்ச்சிகளையும், செய்திகளையும் அறிந்து கொள்வதற்குப் பயன்படும் ஓர் அரும்பெரும் களஞ்சியமாகப் பெரிய புராணம் அமைந்து திகழ்கின்றது. தமிழகத்தின் 'தேசிய காவியம்' (National Epic) என்று பெரியபுராணத்தைக் குறிப்பிடுதல் பொருந்தும்.

மேற்குறித்த இப்பன்னிரு திருமுறைகள், தமிழ்நாட்டின் புகழ் மிக்க புனிதப் பெரும் தோத்திர நூல்களாகும். இவற்றின் அடிப்படையில் தமிழகத்தில் எண்ணிறந்த எத்துணையோ பல தோத்திர நூல்கள் எழுந்துள்ளன. அவற்றுள் அருணகிரி நாதர் பாடிய, "திருப்புகழ்", இராமலிங்கர் அருளிய "திருவருட்பா" முதலியன, மிகவும் சிறப்பாக குறிப்பிடத் தக்கவை.

சைவ சமயத்தின் பக்திநெறிப் பாடல்களாகிய இத்திருமுறைப் பாடல்களின் சிறப்பியல்பினை ஓர்ந்துணர்ந்து, மேலை நாட்டறிஞர்கள் பலர் பாராட்டிப் போற்றியுள்ளனர்.[2]

**சைவ சித்தாந்த சாத்திரங்கள் :**

இப்பன்னிரு சைவத் திருமுறைகளின் சிறந்த பெரும் பிழிவாகத் தோன்றியனவே, சைவ சித்தாந்த சாத்திரங்கள் எனப்படும். இவற்றை "மெய்கண்ட நூல்கள்" எனவும் குறிப்பிடுவதுண்டு.

> உந்தி களிறு உயர்போதம் சித்தியார்
> பிந்திருபா உண்மை பிரகாசம்—வந்த அருட்
> பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
> உண்மைநெறி சங்கற்பம் உற்று.

(1) **திருவுந்தியார்** : திருவியலூர் உய்யவந்த தேவர் இயற்றியது. (கி. பி. 1147). இது தாழிசைகள் 45 கொண்டது. சமய அனுபவ உண்மைகளை விடுகதைகள் போல விளக்குவது. 'உந்தீபற' என்னும் தொடர், ஒவ்வொரு பாடலின் முடிவிலும் வருவதனால், இஃது இப்பெயர் பெற்றது.

(2) **திருக்களிற்றுப் படியார்.** இதன் ஆசிரியர் திருக்கடவூர் உய்யவந்த தேவர் (கி.பி. 1178). திருவுந்தியாரைப் பின்பற்றி, அதன் விளக்கமாக 100 வெண்பாக்களால் இயற்றப் பெற்றது. இதன் ஆசிரியர் தில்லைக்குச் சென்று கூத்தப் பிரானை வணங்கி, இந்நூலை அங்குள்ள திருக்களிற்றுப் படி என்னுமிடத்தில் வைக்க, சிற்ப வடிவில் இருந்த களிறு தன் துதிக்கையால் இந்நூலை எடுத்துக் கூத்தப் பிரானின் திருவடிகளில் வைத்தது. அதனால் இந்நூற்கு இப்பெயர் வழங்கலாயிற்று. திருவாசகம், திருக்குறள் ஆகியவற்றின் பாடல்களை, இந்நூலாசிரியர் விதந்தெடுத்து மேற்கோளாகக் காட்டிப் பாடியுள்ளார். நாயன்மார்களின் வரலாறுகள் பலவும் இதன்கண் எடுத்துப் போற்றப்பட்டுள்ளன.

---

[2] "No cult in the world has produced a richer devotional literature, or one more instinct with brilliance of imagination, fervour of feeling and grace of expression".

—*L. D. Barnett*: The Heart of India, p. 82.

"In no literature with which I am acquainted has the individual religious life—has itss truggles and dejections, its hopes and fears, its confidence and triumph—received a delineation more frank and more profound."

—*Charles Eliot*: Hinduism and Buddhism, Vol. II, p. 27

(3) சிவஞான போதம்: சாத்திரங்களுள் மிகவும் தலைமை வாய்ந்தது. மெய்கண்டார் என்னும் சான்றோர் (கி. பி. 1232) இயற்றியது. தன்னை ஓதுபவர்க்குச் சிவஞானத்தைப் போதிப்பதாகலின் இப்பெயர் பெற்றது. பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் உண்மைகளைத் தருக்க நெறி பிறழாமல் விளக்குவது. பன்னிரண்டு சூத்திரங்கள் உடையது. "திருக்குறள் ஆகிய தமிழ்வேதம் பசு; திருமூலர் திருமந்திரம் ஆகிய ஆகமம் அப்பசுவின் பால்; அப்பர் சம்பந்தர் சுந்தரர் மாணிக்கவாசகர் என்னும் நால்வரின் பாடல்களாகிய திருமுறைகள் அப்பாலின் நறு நெய்; மெய்கண்டார் இயற்றிய சிவஞான போதம், அந்நெய்யின் இனிய சுவையாகும்" என்று, பலவகைகளில் இதனைப் பெரியோர்கள் பாராட்டியுள்ளனர்.

வேதம் பசு; அதன்பால் மெய்யா கமம்; நால்வர்
ஓதும் தமிழ், அதனின் உள்ளுறும்நெய்;-போதமிகு
நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெ மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறம்.

(4) சிவஞான சித்தியார்: இது சிவஞான போதத்தின் வழிநூல். அவர்தம் மாணவராகிய அருள்நந்தி சிவாசாரியர் இயற்றியது. ஓதுபவர்க்குச் சிவஞானம் சித்திக்குமாறு செய்வது. பரபக்கம் (301 செய்யுள்), சுபக்கம் (323 செய்யுள்) என்னும் இரு பிரிவுகளைக் கொண்டது. "பாரிலுள்ள நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே ஓர் விருத்தப் பாதி போதும்" எனக் குரு ஞான சம்பந்தர், தாயுமானவர் முதலிய சான்றோர்கள் இதனைப் போற்றியுள்ளனர். "சிவத்துக்கு மேல் இல்லை தெய்வம்; சிவஞான சித்திக்கு மேல் இல்லை நூல்" என்பது பழமொழி.

(5) இருபா இருபஃது: இந்நூல், அருள் நந்தி சிவாசாரியார் தமது ஞானாசிரியராகிய மெய்கண்டார்பால் வினவிய ஐயங்களையும், அவற்றிற்கு அவர் கூறிய விடைகளையும் சுருக்கித் தொகுத்துத் தரும் முறையில், 20 பாடல்களால் இயன்றுள்ளது.

(6) உண்மை விளக்கம்: மெய்கண்டாரின் மாணவராகிய திருவதிகை மனவாசகம் கடந்தார் இயற்றியது. ஆன்ம தத்துவம்—வித்தியா தத்துவம்—சுத்த தத்துவம், ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்கள், உயிரியல்பு, பதியியல்பு, ஐந்தெழுத்து, நடராச தத்துவம், அத்துவித முத்தி, குருலிங்க சங்கம வழிபாடு என்பனவற்றை, 53 வெண்பாக்களால் விளக்குகின்றது.

(7) சிவப்பிரகாசம்: சைவ சித்தாந்த சந்தான ஆசிரியர்கள் நால்வருள் ஒருவர் மறைஞான சம்பந்தர்; இஃது அவர்தம் மாணவர் தில்லைக் கொன்றவன்குடி உமாபதி சிவாசாரியர் இயற்றியது. ஓதுபவர்பால் சிவத்தின் பிரகாசம் ஏற்படுமாறு செய்யும் இயல்பு பற்றி இப்பெயர் பெற்றது. சிவஞான போதத்தின் சார்பு நூல். பதி பசு பாச இலக்கணம், சகல கேவல நிலைகள், தத்துவத் தோற்றங்கள், முத்தி பேதங்கள், அவத்தை நிலைகள், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, ஆன்ம லாபம் முதலிய பல பொருள்களை விளக்குவது. 100 பாடல்கள் கொண்டது.

(8) திருவருட் பயன்: திருக்குறளைப் பின்பற்றி, அதன் நடையில், 100 குறள் வெண்பாக்களால், 10 அதிகாரங்களில் தத்துவப் பொருள்களை விளக்குவது. உமாபதிசிவம் இயற்றியது. இறைவனின் திருவருளாகிய பயனை அடையச் செய்விக்க வல்லது.

(9) வினா வெண்பா: உமாபதி சிவம் இயற்றியது. 13 வெண்பாக்கள் கொண்டது. தம்முடைய ஐயங்களைத் தமது குருவாகிய மறைஞான சம்பந்தரிடம் வினவியறியும் முறையில், இதனை உமாபதி சிவம் இயற்றியருளினர். 13 வெண்பாக்கள் கொண்டது.

(10) போற்றிப் பஃறொடை: தமது ஞானாசிரியரைப் போற்றும் முறையில், உமாபதி சிவம் இயற்றியது. இறைவன் உயிர்க்குச் செய்யும் பலவகை உதவிகளையும் விளக்கிப் போற்றுவது.

(11) கொடிக்கவி: தில்லைத் திருவிழாவில், கொடியேற்றத்தின் பொருட்டு, உமாபதி சிவம் பாடியது. 4 வெண்பாக்கள் கொண்டது. ஐந்தெழுத்தின் உண்மையை அறிவுறுத்துவது.

(12) நெஞ்சு விடுதூது: உமாபதி சிவம் தமது நெஞ்சைத் தம்முடைய குருவாகிய மறைஞான சம்பந்தரிடம் சென்று, அவர்தம் கொன்றை மாலையை வாங்கி வருமாறு, தூது விடுக்கும் முறையில் கலிவெண்பாவாற் பாடியது.

(13) உண்மை நெறி விளக்கம்: சைவ சித்தாந்த நூல்களில் 'தசகாரியம்' எனப்படும் பத்து வகை அருளியல் அனுபவங்களைச் சுருக்கமாகத் தொகுத்துத் தருவது (6 பாடல்கள்). இதனை இயற்றியவர் சீகாழித் தத்துவ நாதர் எனவும், உமாபதி சிவம் எனவும் கூறுவர்.

(14) சங்கற்ப நிராகரணம்: சிவஞான சித்தியாரின் பரபக்கம் போல, மாயாவாதம், ஐக்கிய வாதம், பாடாணவாதம், பேதவாதம் முதலிய பல் வேறு சமயங்களின் கொள்கைகளையும், அவை பொருந்தாமைக்குரிய காரணங்களையும் திட்ப நுட்பம் அமைய விளக்கிச் செல்வது. இதனை உமாபதிசிவம், சகம் 1235 (கி. பி. 1313) ஆம் ஆண்டில் இயற்றியதாகக் குறிப்பிட்டுள்ளார். வரலாற்று ஆராய்ச்சிக்கு இக் குறிப்பு மிகவும் பயன்படுவதாகும்.

முடிவுரை:

இச் சாத்திரங்கள் பதினான்கும், தமிழகத்துச் சமய வாழ்வில் சிறப்பிடம் பெற்று விளங்குகின்றன. இவற்றை அடிப்படையும் உயிர்ப்புமாகக் கொண்டே, திருவாவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள், குன்றக்குடி முதலிய புகழ்மிக்க சைவ ஆதீனங்கள், பலவும் தோன்றிப் பல நூற்றுண்டுகளாக நிலைபெற்று வருகின்றன.

"சைவ சித்தாந்தம் என்னும் தத்துவக் கொள்கையானது மிக விரிந்தும் பெரும் செல்வாக்கு வாய்ந்ததும், ஐயத்துக்கு இடமின்றி உண்மையிலேயே பெருமதிப்புக்கு உரியதும், இந்திய நாட்டிலுள்ள சமயக் கொள்கைகளுள் எல்லாம் தலைசிறந்ததுமாக விளங்குகின்றது. இது தனிச் சிறப்பாகத் தென்னிந்தியாவிற்கே உரிய தமிழ் மதம் (கொள்கை) ஆகும். தென்னிந்திய மக்களின் மிகச் சிறந்த பேரறிவின் பெருவிளைவே சைவ சித்தாந்தம்" என்று, பேரறிஞர் ஜி. யூ. போப்[3] அவர்கள் கூறியிருப்பது, நாம் இங்குச் சிந்தித்தற்குரியது.



[3] "The Saiva Siddhantha system is the most elaborate, influential and undoubtedly the most intrinsically valuable of all the religions of India. It is peculiarly the *South-Indian* and *Tamil Religion*. Saiva Siddhantha Philosophy is the choicest product of the Dravidian intellect."

—*The Rev. Dr. G. U. Pope.*

# பரதம்—அதன் முத்திரைகள்

சா. கணேசன்

கூத்து, நட்டம், நாடகம் என்றெல்லாம் சொல்லப்படும் ஆடல் தமிழரின் தனிப்பெருங் கலைகளுள் ஒன்று. பாவம், ராகம், தாளம் அதன் அடிப்படை. அந்த மூன்று சொற்களின் முதல் எழுத்து (ப-ர-த) முறைப்படி அமைய, மூன்று சொற்களின் இறுதி எழுத்து (ம்) இறுதியில் அமைய, 'பரதம்' என்ற பொருள் சிறந்த சொல்லே இக்கலைக்குப் பெயராயிற்று. இன்று உலகெலாம் புகழ் பூண்டு மிளிர்ந்தாலும் இது முழுக்க முழுக்கத் தமிழ்க்கலையே! தமிழ் நிலத்திலேதான் முளைத்துக் கிளைத்து மலர்ந்து மணம் பரப்பிற்று.

இக்கலை தமிழ்க்கலை என்பதற்கும், இக்கலையில் தமிழர் எத்துணை ஈடுபாடு கொண்டவர் என்பதற்கும் சான்றுகள் பல காட்டலாம். என்றாலும், கூத்தையே உருவமாக்கி, அதைத் தெய்வமாக மூர்த்திகரித்து, கூத்தப்பிரான், ஆடவல்லான், அம்பலத்தாடி, நடராசன் என்றெல்லாம் பற்பல பெயர்கள் சூட்டிக் கோயிலும் கட்டி அதனுள் வைத்துப் போற்றி, வாழ்த்தி வணங்கி வழிபட்டுக் கொண்டாடி வரும், வேறெங்கும் காணமுடியாத, அருமை ஒன்றே போதாதா?

இக்கலை பற்றிய இலக்கண நூல்கள், விளக்க நூல்கள் பற்பல இருந்திருக்கின்றன; இன்றும் சில உள. அவற்றை யெல்லாம் ஆய்ந்து, தேர்ந்து அக்காலத்து அறிஞர் மொழியாக, நூல் மொழியாக விளங்கிய சம்ஸ்கிருதத்தில் ஒரு நற்கலைஞர் 'பரத சாஸ்திரம்' (பரத-கலை) என்னும் பெயரால் நூலொன்றை ஆக்கி அளித்துள்ளார். அவர் பெயர் அறியக் கூடாமையால் "பரத முனிவர்" என்று பிற்காலத்தவர் வழங்கலாயினர். அந்த நூலின் அடிப்படையில் பின்னர் பல்வேறு நூல்கள் சம்ஸ்கிருதத்திலும், தமிழிலும், தெலுங்கிலும் தோன்றலாயின, அல்லது ஒன்றிலிருந்து மற்றொன்றிற்கு மொழி பெயர்க்கப்படலாயின. காலஞ்சென்ற முது பெருங்கலைஞர் ஆனந்த குமாரசாமி அவர்கள் 'Mirror of Gesture' என்ற பெயரில் அபிநய தர்ப்பணம் என்ற நூலை மொழிபெயர்த்துள்ளதும் ஈண்டு மனக்கொளத் தக்கதாகும்.

பரதத்தின் உயிர்நாடி பாவம். அபிநயத்தின் மூலமே பாவம் வெளிப்படும். அபிநயம் என்பதும் ஒரு வகை மொழிதான். ஆனால், ஒலியோ, ஒலிக்கூட்டமான சொல்லோ இன்றி இயங்குவது அம்மொழி. என்றாலும், சொல் இல்லாமலேயே, பொருளை அல்லது கருத்தை உணர்த்த வல்லது அபிநயம். எல்லா மொழியினர்க்கும் அது பொது. எனவே, அதை 'மொழியா மொழி' என்றோ, அல்லது 'பொருள் மொழி' என்றோ கூறலாம்.

மற்ற மொழிகளைப் போலவே அதற்கும் நெடுங்கணக்கு (அரிச்சுவடி) உண்டு. கைகளே எழுத்துக்களாகும். அதிலும், உயிர், மெய், உயிர்மெய் என மூவகை உண்டு. அவற்றை, முறையே தொழிற்கை, எழிற்கை, இணைக்கை என்பது தமிழ்நெறி. சம்ஸ்கிருதத்தில் அசம்யுதம் (தனிக்கை) சம்யுதம் (இணைக்கை) என இருவகையே உண்டு. முத்திரை பிடித்த தனிக் கையை தொழிற்கை (அசம்யுத ஹஸ்தம்) என்போம். முத்திரை பிடித்து இரு கையும் சேர்ந்து தொழிற்படுவதை இணைக்கை (சம்யுத ஹஸ்தம்) என்போம். ஒருகை முத்திரை பிடித்திருக்கும் போது, தொழிற்படாமல் வறிதேயிருக்கும் கைக்குத் தமிழில் மட்டுமே (எழிற்கை-என்று) பெயர் சுட்டப்படுகிறது. இனி கூத்தியலின் பொது, அடிப்படையில் ஒரு சிறிதை மட்டும் பார்த்துவிட்டுப் பிடி வேறுபாட்டை (ஹஸ்த பேதத்தை)க் காண்போம்.

கூத்தியலை மூன்று வகையாகவும், ஐந்து வகையாகவும் கணிப்பர் நூலோர். பெரும்பாலோர் மூவகையாகவே கொள்வர். மூன்றாவது: நிருத்தம், நிருத்தியம், நாட்டியம் என்பனவாம்.

1. நிருத்தம் (Dance): பாவ—அபிநயச் சார்பின்றித் தாளத்தையே தழுவி இயல்வது இது. சதி, சதிர் எனவும் பெயர் பெறும். இது "தாண்டவம், நிருத்தியம், நாட்டியம் என மூவகையுடையது" எனச் சிலம்பு பேசும்.

2. நிருத்தியம் (Pantomime): பாவங்களைப் பொழிந்து ரச உணர்வை ஊட்டுவது இது.

3. நாட்டியம் (Drama): பழங் கதையைத் தழுவி இயல்வது இது. இதை நாடகம் எனச் சிலம்பு கூறும்.

நடனம், நாட்டியம், தாண்டவம், நிருத்தியம், நிருத்தம் எனும் ஐவகை ஆடலும் சக்திமார் ஐவர்க்காக இறைவன் ஆடியவை என்னும் 'பரத சேனபதீயம்.'

பெண்வேடத்துடன் ஆண் ஆடுவது நடனம் என்றும், ஆண்வேடத்துடன் பெண் ஆடுவது நாட்டியம் என்றும், ஆண் ஆணாகவே ஆடுவது நிருத்தியம் என்றும், பெண் பெண்ணாகவே ஆடுவது நிருத்தம் என்றும் இறைவன் ஆடுவது தாண்டவம் என்றும் ஒருசார் நூலோர் கூறுவர்.

ஆண்களது ஆட்டம் தாண்டவம் எனவும், மகளிர் ஆடல் லாஸ்யம் எனவும் கூறுவது பொது மரபு. தாண்டவத்தில் ஒரு சிறப்பு இயல்பு உத்தான தாண்டவம் ஆகும். இது முழுக்க முழுக்க நின்றுகொண்டே ஆடி அபி நயித்தலாகும்.

அங்ஙனமே, லாஸ்யத்தின் சிறப்பியல்பு ஒன்றுண்டு. சுகுமார லாஸ்யம் எனப்படும் அது நிற்காமல் இருந்தும், கிடந்துமே அபிநயித்த லாகும்.

அபிநயத்திற்கு உடல் உறுப்புகளே உதவு பவை. உறுப்புகளை மூவகையாகப் பிரிப்பர் நூலோர். இதை "த்ரையங்கம்" அல்லது "திரியாங்கம்" என்பர் வடநூலார். அவை யாவன:

(1) முதலுறுப்பு (அங்கம்)
(2) இணையுறுப்பு (பிரத்தியாங்கம்)
(3) துணையுறுப்பு (உபாங்கம்)

1. தலை, மார்பு, கை, விரல், இடை, பக்கம், பாதம் ஆகிய ஏழும் முதலுறுப்பாம்.

2. தோள், முதுகு, கழுத்து, வயிறு, மணிக்கட்டு, தொடை, முழங்கால், கணைக்கால் ஆகிய எட்டும் இணையுறுப்பு ஆகும்.

3. விழி, இமை, புருவம், கன்னம், மூக்கு, மூச்சு, பல், உதடு, நாக்கு, மோவாய், வாய், முகம் ஆகிய பன்னிரண்டும் துணையுறுப்பு ஆகும்.

மேலே கண்ட உறுப்புக்கள் தொழிற்படும் போது ஏற்படும் நிலை வேறுபாடுகளின் அடிப் படையால் அவ்வந் நிலைவேறுபாடுகட்கும் தனித் தனிப் பெயர்கள் உண்டு. அன்றியும், உறுப்பு நிலை வேறுபாடுகளின் (அங்க பேதங்களின்) எண்ணிக்கை நூல்கள்தோறும் வேறுபடுகின் றன. எடுத்துக்காட்டாக, தலைக்கு நிலை வேறு பாடுகள் (சிரோபேதம்) ஒன்பது, பதின்மூன்று, பத்தொன்பது, இருபத்துநான்கு, முப்பத்து மூன்று என்று நூல்களுள் காணப்படுகின்றன. தமிழ் நூல்களுள் ஒன்பது, பத்தொன்பது என்ற இரு கொள்கையே புலப்படுத்தப்படுகின்றன.

அப்படியே கண்ணின் அபிநய விநியோக நிலை கொண்டு எட்டு, ஒன்பது, முப்பத்தாறு, நாற் பத்து நான்கு என வேறுபாடுகள் (நயன பேதம்) பல நூல்களால் புலப்படுத்தப் படுகின்றன. இவற்றையும் இவை போன்ற பிற உறுப்புநிலை வேறுபாடுகளையும் சிலப்பதிகாரம், பரதநாட்டிய சாஸ்திரம், அபிநய தர்ப்பணம், (Mirror of Gesture) மகாபரத சூடாமணி, பரத சேனபதீ யம், பரத சங்கிரகம், தச ரூபகம், சங்கீத முக்தா வலி, சங்கீத சாராம்ருதம், பரத கலைச் சித்திரம் போன்ற நூல்களின் வாயிலாய் விளக்கமாய்த் தெரிந்துகொள்ளலாம். எனவே, இனி பிடி வேறு பாட்டை, (ஹஸ்த பேதம் என்னும்) முத்திரை களைக் காண்போம்.

இணையாத் தொழிற்கை (அசம்யுத ஹஸ்தம்) என்னும் ஒற்றைக்கை முத்திரை பிடிப்பதை "கரகரணம்" என்றும் வடநூலார் கூறுவர். அவை இருபத்தெட்டு என தொகைப்படுத்துவர் பெரும்பாலோர். முப்பதெனத் தொகுத்தாரும் உளர்.

அபிநயதர்ப்பணம், பரதகலைச்சித்திரம் போன் றவை கூறும் முத்திரைகளை முதலில் காண்போம்.

1. பதாகம் (கொடி)
2. திரிபதாகம் (முக்காற்கொடி)
3. அர்த்தபதாகம் (அரைக்கொடி)
4. கர்த்தரீமுகம் (கத்திரிக்கோல் அலகுகள்)
5. மயூரம் (மயில்)
6. அர்த்தசந்திரன் (அரை மதி, இளம் பிறை)
7. அராளம் (வளைந்தது)
8. சுகதுண்டம் (கிளி மூக்கு)
9. முஷ்டி (முட்டிக் கை)
10. சிகரம் (உச்சி)
11. கபித்தம் (விளாம்பழம்)
12. கடகாமுகம் (வளையல் வாய்)
13. சூசி (ஊசி)
14. சந்திரகலா (மதியின் கலை)
15. பதும கோசம் (குவிந்த தாமரை)
16. சர்ப்ப சீர்ஷம் (பாம்புத் தலை)
17. மிருக சீர்ஷம் (மான் தலை)
18. சிங்க முகம் (சிங்கத் தலை)
19. காங்கூலம்
20. அல பதுமம் (அலர்ந்த தாமரை)
21. சதுரம் (நாற்கோணம்)
22. பிரமரம் (வண்டு)

23. ஹம்ஸாஸ்யம் (அன்னத்தின் அலகு)
24. ஹம்ஸபக்ஷம் (அன்னச்சிறகு)
25. ஸந்தம்சம் (இடுக்கி)
26. முகுளம் (மொட்டு)
27. தாம்ரசூடம் (சேவற்கொண்டை)
28. திரிசூலம் (முத்தலைவேல்)

இங்கே காணப்படும் 28ல் சந்திரகலா, திரிசூலம் ஆகிய இரண்டையும் நீக்கி, பரணம், பூர்ணநாபம் ஆகிய இரண்டையும் கூட்டி 28 ஹஸ்த பேதங்களை மகாபரத சூடாமணி கூறும்.

பரதசாஸ்திரம், மாயூரம், சந்திரகலை, சிங்கமுகம், திரிசூலம் ஆகிய நான்கினையும் நீக்கி விட்டு 24 ஹஸ்த பேதங்களை உணர்த்தும்.

சங்கீத ரத்னகரம் 24 ஹஸ்த பேதங்களையே சொல்லும். ஆனால், அர்த்தபதாகத்தை நீக்கி ஊர்ணநாபத்தை (பூர்ணநாபம்தான்) சேர்த்துப் பேசும்.

ஆனால், சிலப்பதிகார உரை (1 : 3 : 18) முப்பத்துமூன்று ஹஸ்தபேதம் கூறுகிறது. அவற்றுள் இருபது மேலேகூறிய 28ல் உள்ளவை. ஏனைய பதின்மூன்று அவற்றில் வேறுபட்டவையாகும். அவற்றுள் கடகம், கபோதம், இலதை, சங்கு போன்றவை இணைக்கை முத்திரைக்குரியவை.

இந்த இருபத்தெட்டுடன் வியாக்ரம், அர்த்தசூசி சேர்த்து முப்பதென்பாரும், வியாக்ரம், ஊர்ணநாபம் சேர்த்து முப்பதென்பாரும் உண்டு.

இனி, இணைக்கை (சம்யுத ஹஸ்தம்) பற்றிக் கவனிப்போம்.

சிலப்பதிகாரம் இணைக்கை நிலை வேறுபாட்டை பதினைந்தென வகுக்கும். பரத சாஸ்திரமும், சங்கீதரத்னகரமும் பதின்மூன்று எனக் கூறும். ஆனந்த குமாரசுவாமியின் ஆங்கில மொழி பெயர்ப்பு இருபத்துநான்கு எனப் பேசும். அபிநய தர்ப்பணம் சம்ஸ்கிருத, தமிழ் நூல்கள் இருபத்துமூன்று என்று நிர்ணயிக்கின்றன. பரதகலைச் சித்திரமும் 23 என்றே குறிக்கிறது. மகாபரத சூடாமணியோ,

“ஆகிய சம்யுதக்கை அருளிய நாற்பதுக்கும்”
என நாற்பது ஹஸ்த பேதங்கள் என்கிறது. இனி, அந்த இருபத்துமூன்று இணைக்கை நிலை வேறுபாடுகளைக் காண்போம்.

1. அஞ்சலி (கும்பிடுதல்)
2. கபோதம் (புரு)
3. கற்கடம் (நண்டு)
4. ஸ்வஸ்திகம் (குறுக்கிடுதல்)
5. டோலம் (ஊஞ்சல்)
6. புஷ்பபுடம் (மலர்க்குடலை)
7. உத்சங்கம் (நல்-அணைவு)
8. சிவலிங்கம் (தெய்வப்பிரதிஷ்டை)
9. கடகாவர்த்தனம் (பூசை-ஆசி கூறல்)
10. கர்த்தரீஸ்வஸ்திதம் (கத்தரிக் குறுக்கீடு)
11. சகடம் (வண்டி)
12. சங்கம் (சங்கு)
13. சக்கரம் (சக்கராயுதம்)
14. சம்புடம் (மூடிப் பத்திரப்படுத்தல்)
15. பாசம் (கட்டு)
16. கீலகம் (நட்புப்பிணைப்பு)
17. மத்ச்யம் (மீன்)
18. கூர்மம் (ஆமை)
19. வராகம் (பன்றி)
20. கருடன் (கருடப் பறவை)
21. நாகபந்தம் (பாம்புப் பிணையல்)
22. கட்வா (கட்டில் - மஞ்சம்)
23. பேருண்டம் (அண்ட பேரண்டம் என்னும் இணைபிரியா பேருண்டப்பறவை)

மேலே கண்ட இருபத்துமூன்று முத்திரைகளையும் அதற்கும் மேலே கண்ட இருபத்தெட்டு முத்திரைகளையும் கொண்டு தேவர்கள், மனிதர்கள், தாவரம் முதலிய எல்லா உயிர் வர்க்கங்கள், எண்ணம், செயல், உணர்ச்சி முதலிய அனைத்தையும் பிற உறுப்புகளின் துணையோடு நோக்குவோர்க்கு உணர்த்த வல்லது இக்கலை. முத்திரைகளின் பொருள் தெரிந்து நோக்குவோர் எல்லை இல்லா இன்பம் அடைவர்.

முத்திரைப் படங்களையும் அவற்றின் பொருளையும் பின் பக்கங்களில் காண்க !

## அசம்யுத ஹஸ்தங்கள் என்னும் ஒற்றைக்கை முத்திரைகள்



1. பதாகம்



2. திரிபதாகம்



3. அர்த்தபதாகம்



4. கர்த்தரீமுகம்



5. மயூரம்



6. அர்த்தசந்திரன்



7. அராளம்



8. சுகதுண்டம்



9. முஷ்டி



10. சிகரம்



11. கபித்தம்



12. கடகாமுகம்
(ஒரு வகை)



12. கடகாமுகம்
(மற்றொரு வகை)



12. கடகாமுகம்
(பிறிதொரு வகை)



13. சூசி



14. சந்திரகலா



15. பதுமகோசம்



16. சர்ப்பசீர்ஷம்


17. மிருகசீர்ஷம்


18. சிங்கமுகம்


19. காங்கூலம்


20. அலபதுமம்


21. சதுரம்


22. பிரமரம்


23. ஹம்ஸாஸ்யம்


24. ஹம்ஸபக்ஷம்


25. ஸந்தம்சம்



26. முகுளம்



27. தாம்ரசூடம்
(ஒருவகை)



27. தாம்ரசூடம்
(மற்றொருவகை)



28. திரிசூலம்



29. வியாக்ரம்



30. அர்த்தசூசி

---



1. அஞ்சலி



2. கபோதம்



3. கற்கடம்



4. ஸ்வஸ்திகம்



5. டோளம்



6. புஷ்பபுடம்



7. உத்சங்கம்



8. சிவலிங்கம்



9. கடகாவர்த்தம்



10. கர்த்தரீ ஸ்வஸ்திகம்



11. சகடம்



12. சங்கம்



13. சக்கரம்



14. சம்புடம்



15. பாசம்



16. கீலகம்



17. மத்ச்யம்



18. கூர்மம்



19. வராகம்



20. கருடன்



21. நாகபந்தம்



22. கட்வா



23. பேருண்டம்

# THE DANCE-FORMS OF THE EARLY TAMILS

V. RAMASUBRAMANIAM
(AUNDY)

**1. The Tamil Tradition :**

The "*Śilappadhikāram*" records that Ūrvasi was cursed by the sage Agasthya for her inadvertent behaviour towards Jayantha, the son of Indra, and was, in consequence, born as a courtesan, by name Mādhavi, and her paramour born as a reed in the Malaya mountains. The art of "*Koothu*" was thus introduced to the Tamils.

Mādhavi, one of the heroines of "*Śilapadhikāram*", was a descendent of the first Mādhavi, the incarnation of Ūrvasi.

**2. The Bharathan Tradition :**

The "*Nātyaśāstra*" informs us that God Brahma invented "*Nāṭya*" and taught it to Bharatha-Muni and his hundred sons, creating 23 apsaras to enable them to entertain the celestials. Bramha himself composed two plays, "*The Amritha-Manthna*" and the "*Tripura-Dahana*" in dialogue and action, and, when the latter was enacted before Lord Śiva, that God advised Bharatha's party to learn from Thaṇḍu and Nandikeswara. his attendants, the art of dance also and incorporate it in their performances. They did so and enriched the "*Nātya*" Art.

In a third recorded play, "The Lakshmī-Swayamvara", Ūrvasi, a newly-created apsaras, in her infatuation far the mortal king, Purūravas, bungled her role as Lakshmi and was, in consequence cursed by Bharatha and Indra to go down to the earth to be with her paramour for a prescribed period. The art of dance was thus brought to the world of men by Ūrvasi herself. But, as it was misused by her colleagues, including Purūravas, to vilify and satirise the sages and other holy personalities, Brahma banned the Art itself and cursed the actors and actresses to sudra-hood. Ūrvaśi too was recalled to Heaven, while Purūravas was assassinated by his courtiers.

Two generations later, Nahusha, the grandson of Ūrvaśi and Purūravas, saw a dance-drama in heaven during a reception accorded to him by Indra, and he solicited the latter to restore the art to his people. The ban was there-upon removed but the curse remained.

**3. Whence did Ilango-Adigal get his version ?**

Adiyārku-Nallār, (12th Century A.D.), the learned commentator of "Śilappadhikāram", informs us of the disappearance even in his time of several valuable works in Tamil, among which were "*Akathiyam*" and "*Bharatham*", two *distinct* treatises on the art of "*Nātaka-Thamizh*" or Dramatics. Presumably, therefore, the author of the epic must have got his tradition about Mādhavi, Jayantha and Agasthya from the "*Akathiyam*".

The existence of serveral schools of acting in ancient India is referred to by Pānini (5th Gent. B.C.), when explaining the etymology of the words '*Śailālinah*' and '*Kriśaāśvinah*'. As Agasthya was a direct desciple of God Śiva Himself, according to Tamil Tradition, the art of

dance, as learnt by him and expounded to his 12 desciples, might have differed to some extent from that learnt by Bharatha's sons indirectly from Taṇḍu and Nandikeswara. Though the source of the art was Śiva or Irayanār, its later developments were inevitably independent and indigenous to the respective Sanskrit and Tamil cultures. Hence the variant traditions.

*Ilango-Adigal* refers to the sage of the Pothiyil Hills, but never even mentions the name of *Bharatha-Muni*, even though his '*Arangetru-k-Kāthai*' leads us to suppose that he must have been familiar with the subject-matter of *Bharatha's* '*Nāṭyaśastra*'. And he makes *Mādhavi* dance some of the minor dramatic forms coming under the category of 'Nritya', without using either that word or '*Nāṭya*', but indroducing instead the ambiguous term '*Nāṭaka*'. Even among the eleven '*Āḍals*', rendered by his danseuse heroine, *Mādhavi*, many are foreign to the '*Nāṭya-Śāstra*'. While Bharatha's treatise refers but casually to the existance of eighteen minor dramatic forms, (Uparupakas), Ilangō Aḍigal's eleven aḍals seen to have been actual living folk-dances of his time.

**4. Some 'Tholkāppiam' References:**

In printitive Tamil land, dancing went by the names of '*Koothu*' (கூத்து), '*Āttam*' (ஆட்டம்) and '*Kunippu*' (குனிப்பு). Tholkappianar refers to several varieties of it. "From the sutras 60 & 76, it is obvious that there were two kinds of dancing, viz. *Vallikkoothu* (வள்ளிக் கூத்து) and *Kazhanilaikkoothu* (கழநிலைக் கூத்து). Vallikkoothu was perhaps in honour of the Goddess Valli. But Kazhanilaikkoothu was of a higher order. It was arranged in honour of a young soldier, who stood boldly in the front rank of the army and offerred stout fight, while others retreated. On his victorious return, it was usual that his friends presented him with what is known as '*Vīrakkazhal*' (வீரக்கழல்), an anklet, and indulged in a dance.

"Besides these two "Koothus", there was one other with was known as '*Ādal*' (ஆடல்). *Sutra* 61 of '*Purathinai Iyal*' refers to '*Velanveriādal*' (வேலன் வெறியாடல்). The chief feature of this dance was to offer animal sacrifices to the God Murugan and, in the course of such worship, one got possessed with the spirit of the God and began to dance; others in the crowd responded by joining in it.

"There was another kind of Āḍal, which forms one of twelve 'Thurais' (துறைகள்), under the sub-division of '*Thumbaithiṇai*' (தும்பைத் திணை).

"In the section of the '*Purathinai Iyal*' (புறத்திணை இயல்), it points to one method of '*Celebrating*' a fellow-king, fallen dead heroically in the field of action. It was a custom then that, when once a king, who led the host, fell in battle, to whatsoever side he might belong, other kings stopped the fight, surrounded his dead body and honoured it by a kind of dancing, in which a skilled display of swords was a feature" [V. R. R. Dikshitar in 'Studies in Tamil Literature & History']

For reasons of space more references from '*Tholkāppiam*' are not attempted.

**5. Some 'Silappadhikāram' References**

The erudite Aḍiyārku-nallār classified dance into several pairs of subdivisions, consistent with their character. His major classification was the division into '*Ahakkoothu*' (அகக்கூத்து) and '*Puṛakkoothu*' (புறக்கூத்து). Ahakkoothu depicted the emotional re-actions of a character as rendered by a dancer, while the Puṛakkoothu was a representation of deeds of valour and acrobatics. A second classification was into '*Śānthikkoothu*' (சாந்திக் கூத்து.) and '*Vinodakkoothu*' (விநோதக் கூத்து). The former seems to be a collective name

for four *methods* of dancing—viz. '*Sokkam*' (சொக்கம்), pure dance, '*Meyk koothu*' (மெய்க்கூத்து), emotional dance, '*Avinayam*' (அவிநயம்), dance with gestures, & '*Nāṭakam*' (நாடகம்), dance-drama. These were indulged in by the dancer in a mood of aesthetic repose as an offering to a deity he wished to propitiate or appease. This comes under '*Ahakkoothu*'. The Vinodakkoothu, which had an appeal to the masses, was of eleven varieties, mostly spectacular.

A third classification of dance was into Venri (வென்றி), 'Vaśai' (வசை) and 'Vinodam' (விநோதம்). These came under Purakkoothu and designated the various modes adopted by a victor in a battle to express his joy, viz. glorifying himself, satirising his opponents and indulging in merriment and laughter.

There were, besides these, other classifications as well, such as Deśi (தேசி) and '*Mārgam*' (மார்க்கம்), distinguishing the indigenous from exotic dance-forms, such as '*Āryakkoothu*' (ஆரியக்கூத்து), '*Vadukakkoothu*' (வடுகக் கூத்து) '*Singalakkoothu*' (சிங்களக்கூத்து), & C. '*Vethiyal*' (வேத்தியல்) and '*Pothuviyal*' (பொதுவியல்) were one more pair based on the status of the characters according as they were kings or common people.

*Adiyārku-Nallār* has given us copious quotationas from such uncurrent Tamil works as '*Agathiyam*' (அகத்தியம்), '*Seyitrium*' (செயிற்றியம்), '*Jayantham*' (சயந்தம்), '*Guna-Nool*' (குணநூல்), '*Mathivānam*' (மதிவாணம்), &c., detailing the significance, characteristics and utility of the above varieties of dances, whether purely pantomimic or accompanied by music. But, leaving aside these theoretical classifications, let us proceed to look at his descriptions of the eleven folk-dances referred to by Ilango-Adigal in '*Śilappadhikāram*'. He quotes the following popular stanza:

"கடைய, மயிராணி, மரக்கால், விந்தை கந்தன்
குடை, துடி, அல்லியம், மல், கும்பம், சுடர் விழியாற்
பட்ட மதன் பேடு, திருப்பாவை, அரன் பாண்டரங்கம்,
கொட்டி இவை காண் பதினோர் கூத்து".

Kadayam, Ayirāni, Marakkāl, Kudai, Thudi, Alliyam, Mal, Kumbham, Peḍu, Pāvai, Paṇḍarangam & Koṭṭi where the eleven dances enumerated in the above verse.

These again were further classified into two groups of six and five each or, seven and four, according to the postures of the performers when dancing, either standing or otherwise. The standing-posture dances were Alliyam, Koṭṭi, Kuḍai, Kuḍam, Mal and Paṇḍarangam, while the rest were rendered either sitting or lying down. "எழுவகைக் கூத்தும் இழிகுலத்தோரை, ஆடவகுத்தனன் அகத்தியன் தானே!" (Adiyarkunallar). Obviously these were folk-dances.

**6. Description of the eleven dances:**

(a) *Alliyam* has been equated with the 'Hallīśaka' of the Nāṭyaśāstra, the Rāsa dance of Western India, and the Kuravai & the Kummi of the Tamils. It is a group-dance of seven, eight or nine women, with or without the participation of men, holding each other's hands and going round and round in a circle with songs of love or heroism. This is too very well-known to every Indian to need any further description.

(b) *Koṭṭi* or *Koḍu-Koṭṭi-c-Chedam* (கொடு கொட்டிச் சேதம்) is a heroic dance done by either a single male dancer, impersonating Ardhanārīśvara, (அர்த்த நாரீசுவரன்), or by a man and a woman, representing Śiva and Pārvati, performing their Cosmic dances. The famous reference to Kootha-c-Chakkaiyan of Parayoor (பறையூர் கூத்தச் சாக்கையன்), in the Vanchi Kāṇḍam of 'Śilappadhikāram', entertaining Cheran Senguṭṭuvan with such a cosmic dance, is a classic example.

“ திரு நிலைச் சேவடிச் சிலம்பு வாய் புலம்பவும்,
பரிதரு செங்கையிற் படுபறை யார்ப்பவும்,
செங்கணுயிரம் திருக் குறிப் பருளவும்,
செஞ்சடை சென்று திசைமுகமலம்பவும்,
பாடகம் பதையாது, சூடகம் துளங்காது,
மேகலை ஒலியாது, மென் முலை அசையாது,
வார் குழையாடாது, மணி குழலவிழாது,
உமையவள் ஒரு திற னகை வோங்கிய
இமையவனுடிய கொட்டிச் சேதம்
பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்
கூத்தச் சாக்கையனுடலில் மகிழ்ந்தவள்.”

(Nadukarkathai—66-77).

The hymn of the Saivite Saint, beginning with the words ‘*Virittha Senjadai Aḍa*’...... (விரித்த செஞ்சடை யாட), is another well-known description. Most of the *Nataraja & Ardhanariswara* images of Tamil Nadu are sculptural representations of this type of dance. It is noteworthy that the ‘*Nāṭyaśāstra*’ does not give any such description of such a world-famous dance. It was a sort of ecstatic dance (Veṛi-Āḍal) and had innumerable variants. The word ‘*Chedm*’ in its sub-title signifies that the story content of this dance was ‘cut out’ from a major Puranic episode.

(c) *Kuḍa-k-koothu* (குடக்கூத்து) has several variants, the commonest being the ‘*Karagam*’ (கரகம்), where the dancer balances one or more pots in tiers on his head and dances acrobatic feats to the beats of the drum. But there is another, more difficult, described in the ‘*Kaḍalāḍu Kathai*’ (கடலாடு காதை) of ‘Śilappadhikāram’, whose counterpart we do not find in any of the north Indian styles. Its votaries, the cowherds, seem to have considered it as one of the favourite dances of their tribal God, Sri Krishana. One of the dictionaries say ‘*Kudathāḍal Kunreduthanāḍal*’, (குடத்தாடல் குன்றெடுத்தானுடல்). The ‘*Paripāḍal*’ (பரிபாடல்) 111-7-43, says ‘*Iḍavala, Kuḍavala, Kovala, Kāvala*’ (இடவல, குடவல, கோவல, காவல). The *Periyalvār Thirumozhi*’ (பெரியாள்வார் திருமொழி) (11-7) describes this in praising Krishna thus (குடங்களெடுத் தேறவிட்டுக் கூத்தாடவல்ல எங்கோவே! (2ஆம் பத்து 7ஆம் திருமொழி). The dancer balances a tier of pots on his head, and a few more on his shoulders, and, throwing up some in the air, catches them as they fall in succession, thus keeping up a continuous line of pots going round as in a game of ‘*Ammanai*’. The pots may be of mud or metal.

The following references may be of interest:

“ குடமாடு கூத்தன் கோவிந்தன்.”
(நாச்சியார், திருமொழி.)

“ குடமாடிக் கோவலனுய் மேவி என் நெஞ்சம்
இடமாகக் கொண்ட இறை.”
(இயற்பா-2ஆம் திரு.-பர. 98.)

“ குடமாடி இம்மண்ணும் விண்ணும் குலுங்க
உலகளந்து நடமாடிய பெருமாள்.”
(இயற்பா-திரு.-பர. 38.)

A very fine sculpture of the above dance is found in the famous Vishnu temple of Thirukkodithānam, one of the 13 holy temples of Kerala, visited by one or the other of the Alvars.

It is a bas-Relief, carved on one of the side-railings of the three steps leading to the central sanctum sanctorum of the temple. ‘*Śilappadhikāram*’ & *Adiyārku-Nallār* say that the dance was rendered by Sri Krishna after his victory over the demon king, Bāṇānsura, at Soṇagara on the occasion of the open celebration of the marriage of Ushā & Aniruddha.

(d) ‘*Kuḍai-k-kotthu*’ (குடைக்கூத்து), is yet another dance depicted in the same temple on the other railing of the steps leading to the sanctorum. Here, a young man is represented as balancing himself on a rope with umbrellas in his hands. The ‘*Chūḍāmaṇi Nighanṭu*’ says that this is a dance by the six-faced God, *Murugan*, (ஆறுமுகத்தோனுடல் குடை). Adiyārkunallār also informs us that, in a naval battle with Asuras, Murugan had to shield his face and body with a parasol. Evidently the Lord had been

crossing the Pāmban Strait on a rope fastened on either shores and, even while balancing himself with one umbrella, he had to protect himself with the other against the stones and arrows of the enemy thrown from the boats floating below.

(e) *Mallāḍal* (மல்லாடல்). This is a representation of Krishna's and Bala-rama's wrestling match with Muṣthika and Chaṇūra just before the killing of Kamsa. Here the dancer mimics the movements, gestures and the poses of a wrestler fighting against an opponent. One can imagine the suspense-ful interest of the audience, if such a pantomimic dance is rendered realistically.

(f) *Pāṇḍarangam* (பாண்டரங்கம்) This seems to be a dance rendered by a man, costumed and made–up as *Bhairavi*, smeared all over with white ashes, dancing a violent dance on a burial ground. It is said that it was originally done by Śiva Himself, when Brahma was charioteering his car with the four vedas as horses and when all the celestials too were looking at the dancer in dismay.

(g) The non-standing posture-types of dances begin with the seventh of this series-viz., *Thudi* (துடி). This is explained as a dance, rendered to the accompaniment of a low-sounding leather-covered percussion instrument, called the *Thudi-p-Parai* (துடிப்பறை). It is said to have been performed independently by two sets of deities, viz , Murugan and the Seven Divine Maidens. But Adiyārku-Nallār states that when the demon Sūra-Padma hid himself in disguise after his defeat at a sea-fight, Lord Muruga danced this, using the sea waves as his stage. Presumably this must have been a raft-dance, rendered to the accompaniment of some boat-song and a drum. If the drum be not held by the dancer himself, the dance could be done in a sitting posture in imitation of a man rowing a boat.

(h) "*Peḍu*" (பேடு) is the eighth type, said to have been rendered by a man in a eunuch's costume-viz., having long plaited hair, decked with flowers, with a face painted like a woman but having a beard without moustache, possessing bulging feminine breasts and a slender waist, but having two strong masculine arms bedecked with a number of bangles, and wearing tight corslets, nose-rings, and anklets. The lower parts of the body were hidden by a sari worn in the faminine way and tightened with a waist-band. This mirth-provoking, ludicrous costume-dance by a male dancer, is said to have been done originally by Pradyumna, Sri Krishna's son, to divert the attentions of Banasura's guardsmen and sentries, to enable Sri Krishna's soldiers to secure entry into the fort of Sonagara. Full realistic effect could be achieved if the dancer took up sitting, lying, stooping and other postures conveying sex appeal. This type of dance and some others of the above-said dances are even now occasionally rendered by some devotees at Tirupati on particular festival days.

(i) The nineth dance goes by the name of "*Marakkāl Adal*" (மரக்கால் ஆடல்), meaning "*A Dance with Wooden Legs*". (Marakkāl does not connote in this context the common grain-measure current in south Tamil Nādu). This dance has two other synonyms, viz , Kali-Natam (கலி நடம்) and Kazhaik-koothu (கழாய்க் கூத்து), the latter meaning 'a dance on bamboo-poles'. A beautiful specimen of this old dance occurs in a bas-relief, sculptured in the Aṇḍāl temple of Srivillipputtur, discovered very recently by Sri Saw. Ganesan of Karaikkudi. Here the dancer balances himself standing on two six-foot-long poles and dances to the accompaniment of a two-faced drum

played by his wife. Originally, the goddess Durga is said to have resorted to this dance-device to walk over the ground strewn by the demons with snakes, scorpions, and many other poisonous creatures. Evidently she must have disguised herself as one or the other of such quadrupeds as the horse, the bull, the buffalo, the elephant or the camel, and used four rods for her hands and legs. The golden-deer-device of the demon Mareecha in the "*Rāmāyaṇa*", was another more famous example, illustrating the type of "*Vizhunthāḍal*" (விழுந்தாடல்).

(g) "*Pāvai*" (பாவை) is the tenth variety, in which a poison-maiden (Kolli-p-Pavai-கொல்லிப் பாவை), appeared as a temptress or Mohini to seduce the enemy demon. Aḍiyārku-Nallār declares that this dance was rendered originally by Mahālakshmi to help the soldiers of Sri Krishna to secure entry into Banasura's Fort. But we have more classic episodes of Mohinis occuring elsewhere, where Vishnu himself disguises as a temptress, as in the story of "*Bhasmāsura-Mohini*" (பஸ்மாசுர மோகினி) and also in the "*Amrita-Manthana*" (அமிர்த மந்தனம்). Here too the danseuese must have been doing the dance in sitting and lying postures, provocative of erotic sentiments.

(k) The eleventh and the last type is '*Kaḍayam*' (கடையம்) meaning "*The last*". This is said to have been rendered by Indrāṇi in an open ground near the northern gate of Bānāsura's city. Nothing more is known about the nature of the dance. But there are references to Indrāṇi's expertness in sexual postures in the Vrishākapi Hymns of the "*Rig-Veda*" and in Vātsyāyana's "*Kama-sutra*", which makes us speculate that this dance must have been one in a lying posture, exhibiting certain sexual postures.

**7. Conclusion :**

All the current folk-dances of our Tamil land are but the variants of one or the other of the above-mentioned eleven dance-types, which were probably classified by Agasthya in his "*Akathiam*". Many exotic forces have operated on them in various epochs of history, but the indigenous Tamil tradition persists still. That was perhaps why Dr. S. K. Chatterji, the great linguist and historian of Indian Culture, is said to have remarked elsewhere that "fourteen annas in the rupee of Indian culture" is non-Aryan.

[கட்டுரைக் கருத்து :

இந்திரன் மகன் ஜயந்தனைக் காதலித்துத் தாளமும் சுருதியும் தப்பி ஆடியதால் நாடகக் கணிகை ஊர்வசியை அகத்திய முனிவர் சாபமிட்டார் என்றும், அவள் மாதவி என்ற நடனமாதாகப் பிறந்து கூத்துக்கலையைத் தமிழகத்துக்குக் கொணர்ந்தாள் என்றும் தமிழ் இலக்கியங்கள் கூறும்.

புரூரவனைக் காதலித்த நடிகை ஊர்வசி தன் வசனங்களைத் தப்பாகப் பேசியதால், பரத முனிவரின் சாபத்தால் பூலோகத்தில் அவதரித்துப் புரூரரவனையே மணந்து, நாட்டியக் கலையை உலகிற்கு அளித்தாள் என்பது வடமொழி மரபு.

தமிழர் கூத்தின் மரபு தமிழ் "நாடக வழக்"கின் வழி "ஆகத்தியம்" என்ற நாடகத் தமிழ் இலக்கண நூலிலிருந்து வந்தது என்பது திரு. "ஆண்டி"யின் கொள்கை. தமிழர்களில் நடனக் கலை தனிப்பட்டதென்பதற்குள்ள சான்றுகளை அவர் இக்கட்டுரையில் "தொல்காப்பியம்" 'சிலப்பதிகாரம்' 'தேவாரம்' 'திவ்வியப் பிரபந்தம்' முதலிய பண்டைத் தமிழ் நூல்களிலிருந்து எடுத்துத் தந்துள்ளார். தமிழர்களின் நாட்டுப்புற நடன வகைகளையும், நாகரீக ஆட்டங்களையும், அவைகளின் பாகுபாடுகளையும், இக்கட்டுரையில் விவரித்துவிட்டு, குறிப்பாக இளங்கோவடிகளும் அடியார்க்கு நல்லாரும் (குறிப்பிட்டுள்ள பதினோராடல்களையும் பற்பல உதாரணங்களுடன் விளக்கியுள்ளார். அப்பதினோராடல்களின் பட்டிகை இம்மலரில் இன்னொரு பக்கத்தில் தரப்பட்டுள்ளது—ஆசிரியர்].

# தமிழ் இசைச் செல்வம்

டாக்டர். ஏ. எஸ். தனபாண்டியன்

தமிழ் மொழியை, "முத்தமிழ்" என்று தனிப் பெருஞ்சிறப்புடன் போற்றி வந்தவர் நம் முன்னோர். ஏனெனில் இயல், இசை, நாடகம் என்ற முக்கூறுகளும் தமிழ் என்ற அடிமரத்தி லிருந்து கிளைத்துள்ளன. உலகில் இன்றுவரை வழக்கில் உள்ளனவும், இல்லாதனவுமான பிற மொழிகளுக்கு இச்சிறப்பு அமையவில்லை. இது மொழி அறிஞர்களின் துணிபு.

உயர்திணை, அஃறிணை எனப்படும் அனைத் தையும் தன் வயப்படுத்தி இசைய வைக்கின்ற காரணத்தாலும், இறைவனைப் போற்றி பண் பாடும் அன்பரை இசைய வைப்பதாலும், பண்ணும் பாடலும் இசைந்து நிற்பதாலும், சங்கீதத்திற்குத் தமிழர் இசையென்ற பெயரைச் சூட்டினர். இசையை ஒரு களிப்பூட்டும் கலை யாக மட்டும் கைக்கொள்ளாமல், காதலாகிக் கசிந்துருகிக் கண்ணீர் மல்கிக் கானம் பாடிக் கடவுளின் பேரின்பத்தில் திளைக்கவே தமிழர் இசையைக் கைக்கொண்டனர். பழந்தமிழர் தோல்கருவி, துளைக் கருவி, கஞ்சக் கருவி நரம்புக் கருவி ஆகியவைகளைத் துணைக்கொண்டு இசைக் கலையை வளர்த்தனர். இசையமைப்பதற் குரிய இலக்கணங்களையும் படைத்தனர். இசை ஆராய்ச்சிக்கு ஏழிசைச் சங்கம் கண்டனர். அகத்தியம், பெருநாரை, பெருங்குருகு, பேரிசை, சிற்றிசை, இசைமரபு, இசை நுணுக் கம், சிலப்பதிகாரம் முதலிய அநேக இசை நாடக நூல்களை உருவாக்கினர். இசைக்கு அடிப்படையான சுரங்களையும், சுருதிகளையும், நுட்ப சுருதிகளையும் பண் (இராகம்) உண்டாக் கும் முறைகளையும் நுணுகி ஆய்ந்து கடைப் பிடித்தனர். இவ்வாறு பழந்தமிழ் மக்கள் பாடி வந்த இசைகள் 12,000 ஆகும். தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருவாய்மொழி முதலியவற்றை இவ்வழியில் இன்றும் இசை வல்லுநர்கள் பாடி வருவதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லார் கருத்தும் அரும்பதவுரையாசிரியர் கருத்தும் பூர்வ தமிழ் மக்களின் இசைத் திறனைப் பற்றி அறிந்துகொள்ள மிகவும் பயன் படுகின்றன.

அடியார்க்கு நல்லார் இசை நுணுக்கம், இந்திர காவியம், பஞ்சமரபு, பரத சேனுபதீயம், மதிவாணர் நாடகத் தமிழ்நூல் முதலிய நூல் களையும் இன்னும் பல பூர்வ நூல்களில் சிற்சில சூத்திரங்களையும் ஆதாரமாகக் கொண்டு சிலப் பதிகாரத்திற்கு உரை எழுதியிருக்கிறார். இவர் காட்டிய மேற்கோள்களைக் கொண்டு இசைத் தமிழ், நாடகத்தமிழ் நூல்களாகிய பல சங்கீத நூல்கள் பிற்காலத்தில் அழிந்து போயினதாகத் தெரிகிறது. சிலப்பதிகார அரும்பத உரையில் சங்கீத விஷயமான மிக அருமையான குறிப்பு கள் காணப்படுகின்றன.

"நாதமே முக்கலை நாதமூ வெழுத்து
நாதமே முக்குணம் நாதமே முப்பொருள்
நாதம் மூவுல காகி விரிந்து
நாதமாம் பரத்தில் லயித்தது பாரே.
நாதம் பரத்தில் லயித்திடு மதனல்
நாதம் அறிந்திடப் பரமும் அறியலாம்"

(அகவல்)

"நாதமே ஆதியென்றும், அண்ட புவன சரா சரங்கள் யாவும் அதனல் உண்டாயின என்றும் காண்கின்றோம். உயிர்கள் கீழ் மேல் ஆறு ஸ்தானங்களைப் படிப்படியாய்ப் பெற்று விளங்கி நிற்பது போல. ஜீவர்களின் ஓசையும் மத்திமம் வரை ஆறு ஸ்தானங்களும், அதன்மேம் ஆறு ஸ்தானங்களுமாகப் பன்னிரண்டு விதமாகப் பிரிந்து ஏழு சுரங்களாய் விளங்கி நிற்கின்றன. பன்னிரண்டு ஆதாரம் பெற்ற ஜீவனுடைய தத்துவங்களின் விவரம் சொல்லவந்த இடத்தில் 24, 48, 96 ஆகப் பிரித்துச் சொன்னதுபோல், சங்கீத சாஸ்திரத்தில் வழங்கிவரும் 12 சுரங்களை யும் 24 சுருதிகளாகவும், 48, 96 நுட்ப சுருதி களாகவும் பிரித்துள்ளனர்.

பூர்வ தமிழ் மக்கள் வழங்கி வந்த இசைத் தமிழ் நூலில் சொல்லப்படும் முறைகளைக்

கவனிக்கையில், சில அரிய விஷயங்கள் காணக் கிடைக்கின்றன. அவர்கள் ச - ப, ச - ப, முறையாகவும், ச - ம, ச - ம முறையாகவும், சுரஞானத்தைக் கொண்டு ஒரு ஸ்தாயியில் சுரங்கள் கண்டு பிடித்திருக்கிருர்கள் என்று சிலப்பதிகாரத்தில் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு இராசி வட்டத்தில் 12 வீடுகள் அமைத்து, அவற்றில் ச - ப ஏழாவது இராசியென்றும் அதற்கு 7ஆவது 7ஆவது ஆகத் தொட்ட சுரத்திற்குத் திரும்ப வரும்பொழுது, 12 ஸ்வரத்தைக் கொடுக்கிறதென்றும் நாம் தெளிவாகக் காணலாம். இதை வல முறை அல்லது ஆரோகண முறை யென்று சொல்லுகிருர்கள். இதுபோலவே ச - ம, ச - ம முறையாக 5ஆவது 5ஆவது இராசியாக, இட முறையாய் முன்கிடைத்த பன்னிரு சுரங்களும் கிடைக்கின்றனவென்று சொல்லுகிருர்கள்.

> " வரன்முறை மருங்கின் ஐந்தினு மேழினும்
> உழை முதலாகவும் உழையீருகவும்
> குரல் முதலாகவும் குரலீருகவும் "

என்பதினல் ஒரு ஸ்தாயியில் வரும் 12 சுரங்களும், சம அளவான ஓசையுடையவைகளாய் வருகின்றனவென்று அறிகிரேம்.

பாலை என்பது பகுப்பு அல்லது வகை என்று பொருள்படும். அது ஆயப்பாலை, வட்டப்பாலை, திரிகோணப்பாலை, சதுரப்பாலை என நான்கு வகைப்படும். இவைபற்றிய விவரங்களை, சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவையில் காணலாம்.

ஒரு இராசி வட்டத்தில் ச - ப, ச - ப முறையாக வரும் அரை, அரையான பன்னிரு சுரங்களும், ச - ம, ச - ம வாக இட முறையாய் வரும் பன்னிரு சுரங்களும் அவைகளில் கிரக மாற்றும் பொழுது உண்டாகும் செம்பாலை, படுமலைப் பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப் பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை முதலிய ஏழு பாலைகளும் மற்றும் சிறு பாலைகளும் உண்டாகும் விதத்தைச் சொல்லும் முறை ஆயப் பாலையாகும். ச, ரி, க, ம, ப, த, நி என்ற ஏழு ஸ்வரத்தையும் கிரகமாற்றிச் செல்லும் பொழுது தற்காலத்தில் வழங்கும் சங்கராபரணம், கரகரப்ரியா, தோடி, கல்யாணி, அரிகாம்போதி, நடபைரவி, சுத்த தோடி என்னும் இராகங்கள் கிடைக்கின்றன.

ஒரு இராசி வட்டத்தில் ச - ப, ச - ம முறையில் வரும் பன்னிரு அரைச்சுரங்களையும் இரண்டிரண்டு அலகாகப் பிரித்து 24 அலகாக்கி விளரி கைக்கிளைகளில் ஒவ்வொரு அலகு குறைத்துக் கமகமாய் வாசிக்கும் மருதம், குறிஞ்சி, நெய்தல், பாலை என்னும் நால்வகை யாழ்களை அவை ஒவ்வொன்றிலுண்டாகும் அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் போன்ற 16 ஜாதிப்பண்களையும் பற்றிச் சொல்லும் முறை வட்டப் பாலை.

ஒவ்வொரு அலகில் கமகமாய்ப் பாடிய வட்டப்பாலை முறையைப் போல் ½ அலகு கமகமாய்ப்பாடும் முறை திரிகோணப் பாலையாகும்.

திரிகோணப் பாலை முறையைப் போல ச - ப முறையில் வரும் இரண்டு சுரங்களில் கால், கால் அலகு கமகமாய் வாசிக்கும் முறை சதுரப் பாலையாகும்.

> " ஆயத்துக்கீரா றுநான்கு வட்டத்துக்
> கேயுங்கோணத்துக் கிரட்டிப்புத்—தூயவிசை
> நுண்மைக் கதிலிரட்டி நோனலகு மோர்நிலைக்கிங்
> கெண்மூன்று கேள்வி கொண்டெண் "

என்ற இசை மரபு வெண்பாவில் சொல்லியபடி,

ஒரு ஆயப் பாலையில் வரும் 12 அரைச்சுரங்களையும், வட்டப் பாலையில் வரும் 24 ஆக, கால் சுரங்களையும், திரிகோணப்பாலையில் வரும் 48 ஆக அரைக்கால் சுரங்களையும் சதுரப் பாலையில் வரும் 96 ஆக வீசம் சுரங்களையும், நுட்பமாய்க் கண்டறிந்த தமிழ் மக்கள் தம் நுண்ணறிவிற் கேற்ப யாழ் வாசிப்பதிலும், இராகம் ஆளத்தி (இராகம் ஆலாபனம்) செய்வதிலும், அவிநயிப்பதிலும், நடனம் செய்வதிலும், தாளத்திலும், குழலிலும், கணிதத்திலும், சோதிடத்திலும் மிகச் சிறந்த அறிவுடையவர்களாய் விளங்கிஞர்கள் என்று அறிகிரேம்.

வானமண்டலத்தை 12 இராசிகளாகப் பிரித்து, அவைகளில் சஞ்சரிக்கும் ஏழு கிரகங்களில் கதி பேதங்களினுல் உண்டாகும் வெவ்வேறு சஞ்சாரத்தைக் குறிக்கும் எண்ணிறந்த சாதகங்களைப் போலவும், அவைகளின் பலன்களைப் போலவும், முற்றிலும் ஒத்திருக்கும் விதமாக சங்கீத சாஸ்திரத்தையும் தமிழர் படைத்துள்ளனர். ஒரு ஸ்தாயியை 12 சம அளவாகப் பிரித்து அவைகளில் 7 சுரங்கள் வரவேண்டிய இடங்களையும், அவைகளைக் கிரகம் மாற்றும் பொழுது உண்டாகும் அளவிறந்த இராக பேதங்களையும் நுட்பமான சுருதிகள் சேர்ந்து வரும் பொழுது உண்டாகும் அளவிறந்த மூர்ச்சனை பேதங்களையும் கண்டறிந்தார்கள். மேலும் கிரகங்கள் நட்பு, ஆட்சி, உச்சம், திரிகோணம், நீசம், பகை முதலிய இடங்களை அடைய பலன் வெவ்வேருவது போலவே, சங்கீதத்தில் வழங்கி

வரும் 7 சுரங்களும் இணை, பகை, கிளை, நட்பு என்ற இடங்களில் பேதம் பெற்று இனிமையும் செயலும் ஆகிய இவைகளில் வேறுபடுகின்றன. ஒரு இராசிச் சக்கரத்தில் 2, 4, 5, 7, 9, 11, 12 ஆகிய இடங்கள் சுபஸ்தானங்கள் என்றும் 3, 6, 8, 10 ஆகிய இடங்கள் பகை ஸ்தானங்கள் என்றும் கொள்ளப்படுவது போலவே சங்கீத சாஸ்திரத்திலும் காண்கிறோம்.

உடற்கூறு, தத்துவம், யோகம், வைத்தியம், பூகோளம் முதலிய சாஸ்திரங்களிலும் ஏழு சுரங்களைப் போல் 7, 7 ஆகவும் 12 ஆகவும், 24, 48, 96 ஆகவும் அமைந்த இலக்கங்களும் ஓசை அலைகளின் கணக்கும் யோக சாஸ்திரத்தில் உண்மையும், மனிதனுடைய தூல சூட்சும காரண சாரங்களில் விளங்குகின்றன வென்றும் அம் முறைப்படியே ஒரு யாழின் அமைப்பும் அதன் ஓசையும் கணக்கும் ஒத்து வருகின்றன வென்றும் அறிகிறோம்.

தஞ்சை சரஸ்வதி மஹாலிலுள்ள "மேளதிகார லட்சணம்" என்ற தெலுங்கு நூலில், பிரம்ம மேளத்தில் வழங்கி வரும் 24 சுருதிகளின் பெயர்கள் சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம். (அதன் குறிப்பு "கருணாமிர்த சாகரம்" முதல் புத்தகம் 864-ம் பக்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது.)

இசைத் தமிழில் வழங்கி வந்த சுரம் சுருதிகளையும், நுட்ப சுருதிகளையும், பழங்காலத்தில் வழங்கி வந்த தமிழ்ப் பண்முறைகளையும், யாழையும், கிரக சுரம் மாற்றுவதையும் இன்னும் இசை சம்பந்தமான பல அரிய விஷயங்களையும் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் எழுதிய "கருணாமிர்த சாகரம்" (முதல் பாகம்) என்னும் இசை ஆராய்ச்சி நூலில் காணலாம்.

தியாகராஜ ஸ்வாமிகள் முதலிய மகான்கள் புதிதாகச் செய்த அநேக பதங்களும் கீர்த்தனங்களும், கிருதிகளும், இராகமாலிகைகளும் தற்காலம் வழங்கி வருகின்றன. தமிழ் மக்கள் பழமையாக வழங்கி வந்த இராகங்களில் இவர்கள் வெகுகாலம் பழகி வந்த பழக்கத்தாலும் சுர ஞானத்தாலும் தெய்வ பக்தியினாலும் அவற்றைப் படைத்தனர். ஆனால் கீர்த்தனங்கள் எழுதுவதற்குரிய முக்கிய விதிகளைத் தம்முடைய பின்னடியார் எவருக்காவது சொல்லி வைத்ததாகவோ எழுதி வைத்ததாகவோ தெரியவில்லை. ஆனால், தெய்வ அருளால் இராகங்களின் ஜீவ நிலையைக் காட்டி யாவரும் பின்பற்றும்படியான உயர்ந்த மார்க்கத்தை விளங்க வைத்துள்ளனர்.

ஒரு இராகத்தை ஸ்புடம் பண்ணிக் கணக்கிட்டு அதிலிருந்து ஜீவசுரமும், அதற்கு இணை கிளையான சுரங்களில் அமுதவைப்பு வருவதையும், இன்னும் பாடலமுதம் தெரிந்து கீதம், கீர்த்தனம், பதம், சுரஜதி, வர்ணம் முதலானவைகளில் பழந்தமிழ் மக்கள் தேர்ச்சி பெற்றிருந்தார்கள் என்று அறிகிறோம்.

இத்துறையில் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் பல வருட காலம் முயன்று ஆராய்ச்சி நடத்தி ஒரு ராகத்தை புடம் செய்து கீதம், கீர்த்தனை, சுரஜதி, வர்ணங்கள் முதலியவற்றை இயற்றும் முறையை எழுதி வைத்திருந்தார். அவைகளை ஆய்ந்து கருணாமிர்த சாகரம் இரண்டாம் புத்தகமாக, ஆபிரகாம் பண்டிதர் அவர்களின் குமாரனும் குமாரத்தியுமான ஆ. சுந்தர பாண்டியன் அவர்களும், மரகதவல்லி துரைபாண்டியன் அவர்களும் வெளியிட்டனர். ஆபிரகாம் பண்டிதர் அவர்கள் இருக்கும்பொழுதே குமாரத்தி மரகதவல்லி துரை பாண்டியன் அம்மையாரைக் கொண்டு மாயாமாளவ கௌளை, கருடத்துவனி முதலிய நடைமுறையிலுள்ள இராகங்களிலும், கனகாங்கி, நாகபூஷணி முதலிய அபூர்வ இராகங்களிலும், ஆனந்த ரூபா, சுந்தராங்கி முதலிய புதிதாக உண்டாக்கப்பட்ட இராகங்களிலும் கீதம் கீர்த்தனை முதலியவற்றை இயற்றி இரண்டாம் நூலின் இறுதியில் ஸ்புடம் செய்து விளங்கியுள்ளார்கள்.

இசையை முறையோடும் பொருளோடும் பாடிப் பரமனைத் துதித்துப் பிறவிப் பயனை அடையவேண்டுமென்பதே நம் முன்னோர்களின் நோக்கமாகும்.

என்று மழியாத பேரின்பத்திற்கு மனதைப் பக்குவப்படுத்துவதும், பக்குவமடைந்தவரைப் பரவசப்படுத்துவதும், பரவசமடைந்தவர் ஆனந்தத்தை அறிவிப்பதும் நாதமும் கீதமுமே. நாதத்தால் உலகெல்லாம் படைத்து அவற்றிற்குயிர் வடிவாக நின்ற முதல்வனே நாதமாம். ஜீவர்களின் ஜீவனாயும், உணர்வில் அறிவாயும், அறிவினில் ஆனந்தமாயும், ஆனந்தத்தில் நாதமாக அமைந்து நின்ற நாதமூர்த்தியை இன்னிசை கொண்டு துதித்து நல்லிசை பெற்றார்கள் பெரியோர்கள். இதுவே தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவர்களின் வாழ்வின் குறிக்கோளாக அமைந்தது.

தமிழிசைக் கலைக்கு இத்துணை அரும்பாடு பட்டு நிலையான இரு பெரும் ஆராய்ச்சி நூல்களை இயற்றித் தந்த அவருக்குத் தமிழ் உலகம் என்றும் கடமைப்பட்டுள்ளது.

# தமிழிசைப் பண்கள்

குடந்தை ப. சுந்தரேசன்

பழந்தமிழ் மக்கள் தனித்துக் கண்டுணர்ந்த இசைக் கலைக்கு உரிய இசை, மற்ற நாடுகளில் வழங்குவது போன்று ஏழே என்பது தெளிவு. இசைகள், முதலில் ஒன்ருய், பின்னர் மூன்ருய், அதன் பின்னர் ஐந்தாய், பிறகே ஏழாக அறியப்பெற்றன. தொடங்கும் இசையிலிருந்து அடுத் தடுத்து இடையே, ஒன்று தோன்ருது ஒலிகளை வரையறை செய்த முறையில் நுண்ணெலிகள் இருபத்தியிரண்டு என்றே தமிழில் உறுதி செய்யப்பெற்றன. அவற்றைத் தொழிற்படுத்தும் முறையில் அதன் விரிவு பதினேராயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றென்று என்று எடுத்துக்காட்டப்பெற்றது. அவை, யாழின்கண் நரப்படைவால் உரைக்கப்பட்டதென அடியார்க்கு நல்லார் கூறினர். அவற்றை ஆதியிசைகள் என்றும் அவர் கூறினர்.

ஒலித்தொகுதிகளாய இசைக் கலைக்கு முதலிடம் கொடுத்து அதனைப்பற்றி நிற்கின்ற மொழி, அதாவது, தமிழ் மொழியை இசைத் தமிழ் என்றும், தமிழை முதன்மையாக நின்று அதனைப்பற்றி நிற்கும் இசையை தமிழிசை என்றும் கூறப்பெறுவது பண்டைய தமிழ் வழக்கு. இசைகள் மூன்று வரை பண்ணுதும் நீர்மை பெறுவதில்லை. நான்கிசைகள், ஐந்திசைகள் ஏழிசைகள், அவையெல்லாம் பண்ணுதும் பெற்றிமையை உடையன. தமிழிசைப் பண்கள் பலவாயினும் மூறையே ஏழு பாலைகளின் வழி, வகுத்து நிறுவப்பெற்றவை நூற்று மூன்று என்று கூறுவதே தமிழ் வழக்கு. அவையும் பண்ணும் திறமுமாக நிறுவப்பெற்றன. இசை ஏழின் முதலமைப்பை தாரம், குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி என்பது பண்டைய வழக்கு. இவ்வேழிசைகளின் நிலைகளை, தாரமுறை, குரல்முறை, இளிமுறை எனவும் வகைப் படுத்தப்பட்டன. ஐந்திசைகளை உணரப்பெற்ற பின்னரே ஏழிசைகள் நன்கு உணரப் பெற்றன. தார முறையில் முதலைந்திசைகளைப் பொதுவாக அட்டவணைப்படுத்தி அறியலாம்.

முதலைந்திசைகளின் முதலமைப்பு

| | | | | |
|---|---|---|---|---|
| தாரம் | குரல் | துத்தம் | உழை | இளி |
| குரல் | துத்தம் | உழை | இளி | தாரம் |
| துத்தம் | உழை | இளி | தாரம் | குரல் |
| உழை | இளி | தாரம் | குரல் | துத்தம் |
| இளி | தாரம் | குரல் | துத்தம் | உழை |

தார முறையில் முதலேழிசைகளும், கீழ்க்கண்டவாறே அமைவதை அறியலாம்.

முதலேழிசைகளின் முதலமைப்பு

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி |
| குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி | தாரம் |
| துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி | தாரம் | குரல் |
| கைக்கிளை | உழை | இளி | விளரி | தாரம் | குரல் | துத்தம் |
| உழை | இளி | விளரி | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை |
| இளி | விளரி | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை |
| விளரி | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி |

இவ்விசை முறைகளை முறையே ஒவ்வொன்ருக எடுத்து நிறுவி, அலகு முறைகளையும் குறித்து, முதலைந்திசைப் பண்களையும், முதலேழ் பெரும்பாலைகளையும் கொண்ட பன்னிரண்டு பண்கள் பற்றி மட்டும் இக்கட்டுரையில் விளக்கந் தருவதற்கு முற்படுகின்றேன். அவற்றிற்கு உரிய இசைப் பெயர்களின் தற்காலப் பெயர் முறைகளையும், பண்களுக்குரிய தற்கால இராகப் பெயர் முறைகளையும் உடன் குறிக்கின்றேன். பண்டைய இசைத்தமிழ் முறையில் பல்வேறு பகுப்பு முறைகள் இருந்தபோழ்தினும், ஏழிசைகளில் முதல் இசை தாரம் என்பதனை 'தாரம் உய்த்தது பாணர்க்கருளோடே' என்ற திருஞானசம்பந்தரது திருவருட் சொற்களும், 'தலையினதாரஞ் செய்யுந் தாரம்' 'தன்னமும் தாரமும் தன்வழிப் படர' 'முற்ருேன்றியது தாரம்' என்ற உரையாசிரியரது சொற்களும் நன்கு வலியுறுத்தும். இதனை நன்கு உறுதிப்பாட்டுடன் உணர்ந்த எம் அருட்டிரு விபுலானந்த அடிகளார், 'தார நரம்பே முதலில் தோன்றியது என்பது பழந் தமிழிசை நூற்றுணிவு' என எடுத்துக் காட்டி அதற்குரிய அலகுக் கணித முறைகளையும் நன்கு செவ்வைப்படுத்திஞர் இங்கு விளக்குகின்ற முறைமையில்,

## பண் – 1

முதல் ஐந்திசையின் முதல் நிரல், அதன் அலகுமுறைத் தொகுதியுடன் இயல்பான நிலையில்,

| இசை | தாரம் | குரல் | துத்தம் | உழை | இளி |
|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 4 | 8 | 13 | 17 |

என நிற்பதால், இப்பண், பழங்காலத்தில் தாரப்பண், ஆசான்திறம், காந்தாரம் என்று கூறப்பெற்று, தற்காலம் இசையலகு முறைகளை, சுருதிகளாக ஷட்ஜம், சதுச்ருதிருஷபம், அந்தர காந்தாரம், பஞ்சமம், சதுச்ருதிதைவதம் என்ற வகையில் மோகன ராகம் என்றே வழக்கில் இருந்து விளங்குவது நன்கு புலனுகிறது. திருவாசகம் எனும் ஒப்பற்ற அருட் பாடல்கள் பெரும்பாலும் மோகனத்தில் பாடப்பெறுவதே இதற்குப் பெருஞ் சான்ருகும். முழுமுதற் பரம் பொருளுக்கே உரிய பாடல்கள் முதற் பண்ணிலேயே பாடுவது இயல்பே.

## பண் – 2

முதல் ஏழிசையின் முதற்ருெகுதி, அதனலகுமுறைப் பகுதியுடன் இயல்பான வகையில்,

| இசை | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி |
|---|---|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 4 | 8 | 12 | 13 | 17 | 21 |

என அமைந்து நின்று தாரம் தாரமாய மேற்செம்பாலை அல்லது தாரங்குரலாய மேற்செம்பாலை என்று கூறப்பெற்றது. இப்பாலையே மூன்று முறையிலும் நிரனிறையாகவும், எதிர்நிரனிறை ஆகவும் நிற்கும் நிலை வருமாறு :-

| தார முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர்நிரனிறை |
| மேற்செம்பாலை | தாரம் | கைக்கிளை |

| குரல் முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர்நிரனிறை |
| மேற்செம்பாலை | துத்தம் | இளி |

| இளி முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர்நிரனிறை |
| மேற்செம்பாலை | விளரி | துத்தம் |

இப்பாலையின் அலகு நிலைகளை, இக்காலம் ஷட்ஜம், சதுச்ருதிருஷபம், அந்தரகாந்தாரம், பிரதி மத்யமம், பஞ்சமம், சதுச்ருதிதைவதம், காகலிநிஷாதம் என்று அறியப்படுவதால் மேச கல்யாணி மேளம் அல்லது கல்யாணி ராகம் எனக் கூறும் நிலையில் வழக்கில் இருப்பதை அறியலாம். இப்பாலை, எல்லா இசைகளையும் பேரிசையாகக் கொண்டு அமைதலால் பேரிசைப்பாலை எனவும் பெயர் பெறும்.

### பண் – 3

முதலைந்திசையின் இரண்டாம்நிரல், அதன் அலகுமுறைத் தொகுதியுடன் இயல்பான நிலையில்,

| இசை | குரல் | துத்தம் | உழை | இளி | தாரம் |
|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 4 | 9 | 13 | 18 |

என நிற்பதால், இப்பண் பழங்காலத்தில் குறற்பண், செந்திறம், செந்துருத்தி என்று கூறப்பெற்று தற்காலம் இசையலகு முறைகளை, சுருதிகளாக ஷட்ஜம், சதுச்ருதிருஷபம், சுத்தமத்யமம், பஞ்சமம், கைசிகிநிஷாதம் என்ற வகையில் மத்யமாவதி ராகம் என்றே வழக்கில் இருந்து விளங்குவது நன்கு புலனாகும்.

### பண் – 4

முதலேழிசையின் இரண்டாம் நிரல், அதன் அலகுமுறைப் பகுதியுடன் இயல்பான வகையில்,

| இசை | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி | தாரம் |
|---|---|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 4 | 8 | 9 | 13 | 17 | 18 |

என அமைந்து நின்று குரல் தாரமாய செம்பாலை அல்லது குரல் குரலாய செம்பாலை என்று கூறப்பெற்று மூன்று முறையிலும் நிரனிறையாகவும், எதிர்நிரனிறையாகவும் நிற்கும் நிலை வருமாறு. குறிஞ்சியாழ் என்றும் இப்பாலை பெயர் பெறும்.

| தார முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர்நிரனிறை |
| செம்பாலை | குரல் | துத்தம் |

| குரல் முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர்நிரனிறை |
| செம்பாலை | கைக்கிளை | உழை |

| இளி முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர் நிரனிறை |
| செம்பாலை | தாரம் | குரல் |

இப்பாலையின் அலகு நிலைகளை, இக்காலம் ஷட்ஜம், சதுச்ருதிருஷபம், அந்தரகாந்தாரம், சுத்தமத்யமம், பஞ்சமம், சதுச்ருதிதைவதம், கைசிகிநிஷாதம் என்று அறியப்படுவதால், அரிகாம்போதி மேளம் அல்லது அரிகாம்போதி ராகம் எனக் கூறும் நிலையில் வழக்கில் இருப்பதை அறியலாம்.

## பண் – 5

முதலைந்திசையின் மூன்றும் நிரல், அதன் அலகுமுறைத் தொகுதியுடன் இயல்பான நிலையில்,

| இசை | துத்தம் | உழை | இளி | தாரம் | குரல் |
|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 5 | 9 | 14 | 18 |

என நிற்பதால், இப்பண் பழங்காலத்தில், துத்தப்பண் வடுகு, இந்தளம் என்று கூறப்பெற்று தற்காலம் இசை அலகுமுறைகளை, சுருதிகளாக ஷட்ஜம், சாதாரணகாந்தாரம் சுத்தமத்யமம், சுத்ததைவதம், கைசிகிநிஷாதம் 'என்ற வகையில் இந்தோள ராகம் என்றே வழக்கில் இருந்து விளங்குவது நன்கு புலனாகிறது.

## பண் – 6

முதலேழிசையின் மூன்றும் நிரல், அதன் அலகுமுறைப் பகுதியுடன் இயல்பான வகையில்,

| இசை | துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி | தாரம் | குரல் |
|---|---|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 4 | 5 | 9 | 13 | 14 | 18 |

என அமைந்து நின்று, துத்தம் தாரமாய படுமலைப்பாலை அல்லது துத்தங் குரலாய படுமலைப்பாலை என்று கூறப்பெற்று மூன்று முறையிலும் நிரனிரையாகவும், எதிர் நிரனிறையாகவும் நிற்கும் நிலை வருமாறு முல்லை யாழெனவும், செவ்வழியாழ் எனவும் இப்பாலை பெயர்பெறும்.

| தார முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர் நிரனிறை |
| படுமலைப்பாலை | துத்தம் | குரல் |

| குரல் முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர் நிரனிறை |
| படுமலைப்பாலை | உழை | கைக்கிளை |

| இளி முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர் நிரனிறை |
| படுமலைப்பாலை | குரல் | தாரம் |

இப்பாலையின் அலகு நிலைகளை, இக்காலம் ஷட்ஜம், சதுச்ருதிருஷபம், சாதாரண காந்தாராம், சுத்த மத்யமம், பஞ்சமம், சுத்ததைவதம், கைசிகிநிஷாதம் என்றறியப்படுவதால், நடபைரவி மேளம் அல்லது நடபைரவி ராகம் எனக் கூறும் நிலையில் வழக்கில் இருப்பதறியலாம்.

## பண் – 7

முதல் ஐந்திசையில் கைக்கிளை அமையாமையினுல், கைக்கிளை முதலாய ஐந்திசை என்பதொன்றில்லை. ஆனுல், கைக்கிளை முதலாய ஏழிசையமைதி, முதல் ஏழிசையின் நான்காந் தொகுதியாக நிற்கிறது. அதன் அலகு முறைகள் இயல்பான வகையில்,

| இசை | கைக்கிளை | உழை | இளி | விளரி | தாரம் | குரல் | துத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 1 | 5 | 9 | 10 | 14 | 18 |

என அமைந்து நின்று கைக்கிளை தாரமாய செவ்வழிப்பாலை அல்லது கைக்கிளை குரலாய செவ்வழிப்பாலை என்று கூறப்பெற்று மூன்று முறையிலும், நிரனிறையாகவும், எதிர் நிரனிறை ஆகவும், நிற்கும் நிலை வருமாறு :

| தார முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர் நிரனிறை |
| செவ்வழிப்பாலை | கைக்கிளை | தாரம் |

| குரல் முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர் நிரனிறை |
| செவ்வழிப்பாலை | இளி | துத்தம் |

| இளி முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர் நிரனிறை |
| செவ்வழிப்பாலை | துத்தம் | விளரி |

இப்பாலையின் அலகு நிலைகளை, இக்காலம் ஷட்ஜம், ஒரு சுருதிச் சுத்தருஷபம், சாதாரண காந்தாரம், சுத்தமத்யமம், பத்துச்சுருதி பிரதி மத்யமம், சுத்ததைவதம், கைசிகிநிஷாதம் என்றறியப்படுவதால், இப்பாலையை சரியான பஞ்சமம் உள்ள பாலையாகக் கொள்வதற்கில்லை. ஆகையால் பிற்காலத்தார் இப்பாலையினை ஒரு மேளமாகக் கொள்ளவில்லை. மேளமாகக் கொள்ளாது போனுலும், கருவியில் மட்டும் இசைக்கக் கூடியதாக உளது என்பது

வெளிப்படை. பாடுவதற்குப் பொருந்தாது என்பதும் உறுதி. பழங்காலத்தில் செவ்வழிப்பாலை என்று சிறப்பிக்கப்பெற்றிருப்பதால், இல்காலத்தும் நாம் செவ்வழிப்பாலை என்றே கூறலாம்.

"பாலை யாழொடு செவ்வழிப் பண் கொள" என்று திருநாவுக்கரசர் கூறியருளினமையால் இப்பாலை, பாலையாழ் என்ற அரும்பாலையினுள் அடங்கிவிடுமென்பது ஆராய்ச்சி முறைமையால் அறிந்துகொளற்பாலதாகும்.

## பண் – 8

முதலைந்திசையின் நான்காம் நிரல், அதன் அலகு முறைத் தொகுதியுடன் இயல்பான நிலையில்,

| இசை | உழை | இளி | தாரம் | குரல் | துத்தம் |
|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 4 | 9 | 13 | 17 |

என நிற்பதால், இப்பண் பழங்காலத்தில் உழைப்பண், சாதாளி என்று கூறப்பெற்று தற்காலம் இசையலகு முறைகளை சுருதிகளாக ஷட்ஜம், சதுச்ருதிருஷபம், சுத்தமத்யமம், பஞ்சமம், சதுச்ருதிதைவதம் என்ற வகையில் சுத்த சாவேரி ராகம் என்றே வழக்கில் இருந்து விளங்குவது நன்கு புலனுகிறது.

## பண் – 9

முதல் ஏழிசையின் ஐந்தாம் நிரல், அதனலகு முறைப் பகுதியுடன் இயல்பான வகையில்,

| இசை | உழை | இளி | விளரி | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை |
|---|---|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 4 | 8 | 9 | 13 | 17 | 21 |

என அமைந்து நின்று, உழை தாரமாய அரும்பாலை என்று, அல்லது உழை குரலாய அரும்பாலை என்று கூறப்பெற்று மூன்று முறையிலும் நிரனிறையாகவும், எதிர்நிரனிறை ஆகவும் நிற்கும் நிலை வருமாறு, பாலையாழ் என்றும் இப்பாலை பெயர் பெறும்.

| தார முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர்நிரனிறை |
| அரும்பாலை | உழை | விளரி |

| குரல் முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர்நிரனிறை |
| அரும்பாலை | விளரி | குரல் |

| இளி முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர்நிரனிறை |
| அரும்பாலை | கைக்கிளை | இளி |

இப்பாலையின் அலகு நிலைகளை, இக்காலம் ஷட்ஜம், சதுச்ருதிருஷபம், அந்தரகாந்தாரம், சுத்தமத்யமம், பஞ்சமம், சதுச்ருதிதைவதம், காகலிநிஷாதம் என்று அறியப்படுவதால், தீரசங்கராபரண மேளம் அல்லது சங்கராபரண ராகம் எனக் கூறும் நிலையில் வழக்கில் இருப்பதை அறியலாம்.

## பண் – 10

முதலைந்திசையின் ஐந்தாம் நிரல், அதன் அலகு முறைத் தொகுதியுடன் இயல்பான நிலையில்,

| இசை | இளி | தாரம் | குரல் | துத்தம் | உழை |
|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 5 | 9 | 13 | 18 |

என நிற்பதால், இப்பண் பழங்காலத்தில் இளிப்பண் எனக் கூறப்பெற்று தனுசி எனவும் கூறப் பெற்றது. தற்காலம் இசையலகு முறைகளை, சுருதிகளாக ஷட்ஜம், சாதாரண காந்தாரம், சுத்தமத்யமம், பஞ்சமம், கைசிகிநிஷாதம் என்ற வகையில் சுத்ததன்யாசி ராகம் அல்லது உதயரவிச்சந்திரிகா ராகம் என இரண்டு பெயர்களைக் கொண்ட ஒரே இராகமாக வழக்கில் இருந்து விளங்குவது நன்கு புலனாகின்றது.

## பண் – 11

முதலேழிசையின் ஆறும் நிரல், அதன் அலகு முறைப் பகுதியுடன் இயல்பான வகையில்,

| இசை | இளி | விளரி | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை |
|---|---|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 4 | 5 | 9 | 13 | 17 | 18 |

என அமைந்து நின்று இளி தாரமாய கோடிப்பாலை அல்லது இளி குரலாய கோடிப்பாலை என்று கூறப்பெற்று, மூன்று முறையிலும் நிரனிறையாகவும், எதிர் நிரநிறையாகவும் நிற்கும் நிலை வரு மாறு, மருதயாழ் என்றும் இப்பாலை பெயர்பெறும்.

| தார முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர் நிரனிறை |
| கோடிப்பாலை | இளி | இளி |

| குரல் முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர் நிரனிறை |
| கோடிப்பாலை | தாரம் | தாரம் |

| இளி முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர் நிரனிறை |
| கோடிப்பாலை | உழை | உழை |

இப்பாலையின் அலகு நிலைகளை, இக்காலம் ஷட்ஜம், சதுச்ருதிருஷபம், சாதாரண காந்தாரம், சுத்த மத்யமம், பஞ்சமம், சதுச்ருதிதைவதம், கைசிகிநிஷாதம் என்று அறியப்படுவதால்,

கரஹரப்பிரியா மேளம் அல்லது கரஹரப்பிரியா ராகம் எனக் கூறும் நிலையில் வழக்கில் இருப்பதை அறியலாம். ஏழு பெரும் பாலைகளில் இப்பாலையே மிகச் சிறப்பு வாய்ந்து விளங்குவதாகும். யான் வெளியிடப்போகும் "பாணர்கள் பயிற்றுவித்த இசை முறை" என்ற இசை நூலில் இதன் கருத்தினை விரிவாக அறிந்துணரலாம்.

## பண் – 12

முதலைந்திசையில் விளரி என்ற இசை அமையாததால் விளரி முதலாய ஐந்திசை என்பதொன்றில்லை. விளரி முதலாய ஏழிசை நிரல், முதலேழிசையின் ஏழாம் நிரலாக நிற்பது தெளிவு. அந்நிரல் அதனலகு முறைப் பகுதியுடன் இயல்பான வகையில்,

| இசை | விளரி | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி |
|---|---|---|---|---|---|---|---|
| அலகு | 0 | 1 | 5 | 9 | 13 | 14 | 18 |

என அமைந்து நின்று, விளரிதாரமாய விளரிப்பாலை என்று, அல்லது விளரி குரலாய விளரிப்பாலை என்று கூறப்பெற்று, மூன்று முறையிலும் நிரனிறையாகவும், எதிர்நிரனிறையாகவும் நிற்கும் நிலை வருமாறு:–

| தார முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர்நிரனிறை |
| விளரிப்பாலை | விளரி | உழை |

| குரல் முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர்நிரனிறை |
| விளரிப்பாலை | குரல் | விளரி |

| இளி முறையில் பாலை | தொடங்கும் இசை | |
|---|---|---|
| | நிரனிறை | எதிர்நிரனிறை |
| விளரிப்பாலை | இளி | கைக்கிளை |

இப்பாலையின் அலகுநிலைகளை, இக்காலம் ஷட்ஜம், சுத்தருஷபம், சாதாரண காந்தாரம், சுத்த மத்யமம், பஞ்சமம், சுத்ததைவதம், கைசிகிநிஷாதம் என்றறியப்படுவதால் அனுமத்தோடி மேளம் அல்லது தோடிராகம் எனக் கூறும் நிலையில் வழக்கில் இருப்பதை அறியலாம். இப்பாலை எல்லா இசைகளையும் சிற்றிசையாகக் கொண்டமைதலால் சிற்றிசைப் பாலை எனவும் பெயர் பெறும்.

"பண் என்றது — நரப்படைவால் நிறந்தோன்றப் பண்ணப்படாநின்ற பண்ணும், பண்ணியற்றிறமும், திறமும், திறத்திறமும்" என்றார் சிலப்பதிகார அரும்பத உரைகாரர். பண், பண்ணியற்றிறம், திறம், திறத்திறம் எனுமிவை சம்பூரணம், சாடவம், ஔடவம், சதுர்த்தம் என வடமொழிப் பெயரானும் வழங்கும் என்றார் அடியார்க்கு நல்லார்.

இக் கட்டுரையில் ஐந்து திறங்களும், ஏழு பெரும் பண்களும் விளக்கப்பெற்றன. யான் வெளியிட்டுள்ள முதலைந்திசை நிரல், முதலேழிசை நிரல் என்ற இசையேடிரண்டிலும் இப்பண்களைப் பற்றி அறியலாம்.

# தமிழகத்து இசைக் கருவிகள்

பேராசிரியர் எஸ். இராமநாதன்

ஒரு நாட்டின் இசை வளர்ச்சியை அதன் இசைக் கருவிகளைக் கொண்டு மதிப்பிடுவர். தமிழகத்தில் மிகப் பழங்காலத்திலேயே பல்வேறு இசைக் கருவிகள் வழங்கி வந்தமை சங்க நூல்களாலும், சிலப்பதிகாரம், தேவாரம் முதலியவற்றில் உள்ள அகச் சான்றுகளாலும் தெளியக் கிடக்கின்றது.

இசைக் கருவிகள் தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக் கருவி, கஞ்சக் கருவி என்ற நான்கு பிரிவுகளில் அடங்கும். இந்நான்கு வகைக் கருவிகளும் தமிழகத்தில் வழங்கி வந்துள்ளன.

**நரம்புக் கருவிகள் :**

யாழ்—தமிழகத்தின் இசைக் கருவிகளில் யாழ் மிகவும் தொன்மை வாய்ந்ததாகும். இனிமைக்கு எடுத்துக்காட்டாகத் தெய்வப் புலமைத் திருவள்ளுவனர் யாழையும் குழலையும் எடுத்தோதியிருப்பதனுல், இதன் சிறப்புத் தெளிவாகும். குறிஞ்சி நில வேடரின் வில்லிலிருந்து யாழ் தோன்றியது என்பது ஆராய்ச்சியாளர் முடிபு. இருவேறு வில்நாண்களின் ஒலி வேறுபட்டிருப்பதைக் கண்டு ஒரே வில்லில் பல் நரம்புகளை இட்டு மீட்டியபோது யாழ் பிறந்தது. குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழிசைக்கும் ஏழு நரம்புகளைக் கட்டி அவற்றை விரலினுல் மீட்டி இசை உண்டாக்கினர்.

பத்தர், கோடு, ஆணி, நரம்பு, திவவு, தந்திரிகரம் என்பவை யாழ் உறுப்புக்கள்.

ஏழு நரம்புகளையுடையது செங்கோட்டியாழ் என்றும் பதினன்கு நரம்புகளையுடையது சகோட யாழ் என்றும் பத்தொன்பது நரம்புடையது மகர யாழ் என்றும் இருபத்தொன்று நரம்புடையது பேரியாழ் என்றும் அழைக்கப்பெற்றது.

நாரதப் பேரியாழ் என்பது ஆயிரம் நரம்புகளையுடையது என்பர். கி. பி. ஏழாவது நூற்றுண்டில் திருஞானசம்பந்தர் பாடுகையில் திருநீலகண்ட யாழ்ப்பாணர் யாழ் வாசித்துத் துணைபுரிந்ததாக அறிகின்ருேம். திருப்பாணுழ்வாரும் யாழ் வாசிப்பவரே.

சங்கீத ரத்திஞகரத்தில் (13ஆம் நூற்ருண்டு) குறிக்கப்பெறும் சுரமண்டலம் யாழின் வடிவமே. சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் வரை வைத்தீசுவரன் கோயிலில் இக்கருவியை இசைக்கும் ‘சுரமண்டலிப் பண்டாரம்’. இருந்து வந்ததாகத் தெரிகின்றது.

பர்மா தேசத்தில் இன்றும் வழக்கிலுள்ள ஸான் (Sawn) என்னும் கருவி யாழின் பண்டைய வடிவமே. யாழைப் போன்ற ஹார்ப் (Harp) என்னும் கருவி மேல் நாடுகளில் வழங்கி வருகின்றது.

வீணை : சங்க நூல்களில் வீணையைப் பற்றிய குறிப்பு இல்லை. சிலப்பதிகாரத்தில் “நாரதன் வீணை நயந்தெரி பாடலும்” என்ற அடி உள்ளது. ஏழாம் நூற்ருண்டில் அப்பரும், சம்பந்தரும் பாடிய தேவாரத்தில் வீணை பல இடங்களில் குறிப்பிடப்படுகின்றது.

“மாசில் வீணையும் மாலை மதியமும்”

“மிக நல்ல வீணை தடவி”

சமுத்திரகுப்தன் நாணயத்திலுள்ள யாழ் போன்ற கருவியை வீணை என்றே கூறுவதால், வீணை முதலில் யாழ் போன்றிருந்து படிப்படியாக வளர்ச்சியடைந்ததெனத் துணியலாம்.

“இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்” என்று மணிக்கவாசகர் கூறுவதிலிருந்து இரண்டும் வேறு வேறு கருவிகள் என்பது தெளிவாகின்றது. சுரப்பலகை (finger-board) உடைய ல்யூட் (lute) போன்ற கருவி வீணை என வழங்கியதெனக் கருதலாம்.

சங்கீத ரத்திஞகரத்தில் கின்னரி என்ற நரப்புக் கருவியில் பதினன்கு மெட்டுக்கள் (frets) இருந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. 11ஆம் நூற்ருண்டினைச் சேர்ந்த பேலூர் கோயிலில் மெட்டுக்கள் வைத்த வீணையின் சிற்பம் காணப்படுகிறது.

1550இல் எழுதப்பெற்ற சுரமேள கலாநிதி என்னும் நூலில் வீணையின் வடிவமும், உறுப்புக் களும் தெளிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன. வாசிக்கும் தந்திகள் நான்கும், சுருதித் தந்திகள் மூன்றுமாக மொத்தம் ஏழு தந்திகள் உடைய தென்றும் ஆறு மெட்டுக்கள் உடையதென்றும் கூறப்பட்டுள்ளது. பின்னர் இது 15 மெட்டுக்கள் ஆகி, தஞ்சையை யாண்ட இரகுநாத நாயகனின் (1610) மந்திரியான கோவிந்த தீட்சதரால் 24 மெட்டுக்கள் அமைக்கப் பெற்று இப்போதுள்ள வடிவத்தை அடைந்தது.

வீணை பலாமரத்தில் குடைந்தும்-செதுக்கியும் செய்யப்படுவது. இன்று தஞ்சை, திருச்சி, திருவனந்தபுரம், மைசூர், விஜயநகரம் ஆகிய விடங்களில் வீணைத்தச்சர்களால் இக்கருவி செய்யப்படுகின்றது.

கோட்டு வாத்தியம் : நூல்களில் மெட்டுக்கள் இல்லாத வீணை "நிஸ்ஸாரிக வீணை" என்று குறிப்பிடப்படுகின்றது. கோடு அல்லது மரத் துண்டினால் வாசிக்கப்படும் இக்கருவி கோட்டு வாத்தியம் என்றும் மகாநாடக வீணை என்றும் கூறப்படும். இதுவும் பலாமரத்தினால் ஆனதே.

தம்பூர் : நான்கு தந்திகள் கொண்ட கருவி; விரலினால் மீட்டி வாசிக்கப்படும் ; சுருதிக்காகப் பயன்படுவது.

பாரசீகத்து இசைக் கருவியாகிய தான்பூர் என்பதோடு தொடர்புடையது என்று ஆராய்ச்சி யாளர் சிலர் கருதுகின்றனர்.

சுரகெத்து : தோற்றத்தில் தம்பூர் போன்றது ; இரு குச்சிகளால் வாசிக்கப்படுவது ; துணைத்தாள வாத்தியம். ஆவுடையார் கோயி லில் வழிபாட்டின்போது வாசிக்கப்பட்டு வருகின்றது.

சுரபத்து : தொட்டி வடிவம் உள்ள குடத்தின் மேல் தோலால் மூடப்பட்டு, பட்டு நூலினால் ஆன நரம்புகள் உடையது. எருக்கம் வேரினால் மீட்டி வாசிக்கப்படுவது. புதுக்கோட்டை, எட்டையா புரம், திருவாங்கூர் அரசவைகளில் போற்றப் பட்டு வந்தது. சுவாதித் திருநாள் இதை வாசிப் பதில் வல்லவர். 1938இல் புதுக்கோட்டையில் மல்லாரி ராவ் என்பவர் இதை வாசிக்கக் கேட்டிருக்கிறேன். இப்போது இக்கருவியை வாசிப்பவர் யாரும் இருப்பதாகத் தெரியவில்லை.

துந்தினா : சுரையினால் ஆன குடத்துடன் மூங்கில் கழியிணைந்த ஒரே தந்தியுடைய கருவி ; தெருப் பாடகர்கள் இதை மீட்டிக்கொண்டு வீடு தோறும் செல்வர். இதுவே சிங்கிநாத வீணை எனப்படும்.

வயலின் : சங்கீத ரத்தினாகரத்தில் குதிரை மயிர் கட்டிய வில்லினால் வாசிக்கப்பெற்ற ஒரு வீணை வகை கூறப்பட்டுள்ளது. வடநாட்டில் இன்று வழங்கிவரும் சாரங்கி என்ற கருவியாதல் கூடும். சாரங்கதேவர் தம்பேரிலேயே அமைந்த சாரங்க வீணை மருவி சாரங்கியாகியிருக்கலாம். திருநெல்வேலியிலுள்ள கோயிலில் இன்றும் தேவாரத்திற்குத் துணையாகச் சாரங்கி வாசிக்கப் பட்டு வருகிறது. மேலும், மைசூரில் 12ஆம் நூற்றாண்டுக்கு முன்னரே வில்லால் வாசிக்கப் படும் கருவியின் சிற்பம் காணப்படுகின்றது. ஆயினும், தற்போதைய வயலின் என்ற கருவி மேல்நாட்டிலிருந்து இங்கு வந்ததே.

150 ஆண்டுகளுக்கு முன்னர் முத்துசாமி தீட்சிதருடைய தம்பியாகிய பாலுசாமி தீட்சி தரும் மாணவராகிய வடிவேல் நட்டுவனாருமே முதன் முதலாக மேனாட்டவரிடமிருந்து வயலின் கற்று இதை நம் இசைக்குப் பயன்படுத்தினர்.

## துளைக் கருவிகள்:

குழல் : காடுகளில் வண்டுகளால் துளையுண்ட மூங்கில்கள் மீது காற்று வீச ஒலியுண்டாவதைக் கண்ட முல்லைநில மக்கள் கண்ட கருவி இது. பண்டைத் தமிழிசையின் அடிப்படைப் பாலை யாகிய செம்பாலைப் பண்ணிற்குரிய சுரங்கள் இதன் துளைகளில் பிறக்கும்.

பழங்காலத்தில் ஐம்புழைக் குழல்களும், எழு புழைக் குழல்களும் இருந்தனவாகத் தெரிகிறது. ஐம்புழைக் குழலில் கிளை நரம்புகள் ஐந்தும் பேசும் முல்லைப் பண்ணின் இசைகளுக்குரிய துளைகள் இருந்திருக்க வேண்டும்.

அண்மையில் மடகாஸ்கர் தீவில் ஐம்புழைக் குழல்கள், புதைபொருள் ஆராய்ச்சியினரால் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன.

யாழ் முதலிய கருவிகளோடு இசைக்கும் போது குழலே முதன்மையாக இருந்தது.

"குழல் வழி நின்றது யாழே"—சிலப்.

நாகசுரம் : இது குழல் வகையைச் சேர்ந் ததே ; ஆயினும் நறுக்கு (Reed) என்ற உறுப்பும், அணைசும் உண்டு. அணைசு ஒலி பெருக்கியாகப் பயன்படுவதால் இதன் ஒலி வெகுதூரம் கேட்கும். கோயில்களில் திருவிழாக் காலங்களிலும் திருமணத்தின்போதும் இதன் ஒலி தவறாமல் கேட்கும். இதை மங்கல வாத்தியம் என்பர்.

ஒத்து : இது நாகசுரத்திற்குச் சுருதியாகப் பயன்படுவது.

மகுடி : பாம்புப்பிடாரர்கள் வாசிக்கும் இக் கருவி இரு குழாய்கள் கொண்டது. ஒன்று

சுருதியாகப் பணி செய்யும்; மற்ருென்றில் உள்ள துளைகளில் இசை பிறக்கும்.

சங்கு: பழங்காலத்தில் போர்களில் இது முழங்கியதாக அறிகிருேம். சில கோயில்களில் வழிபாட்டின்போது வாசிக்கப் படுகின்றது. நையாண்டி மேளத்தில் துணைத்தாள வாத்திய மாகவும் பயன்படுவதுண்டு.

திருச்சின்னம்: இரு நீண்ட குழல்கள் கொண்டதோர் கருவி. திருவிழாக்களில் சுவாமி வீதியுலா வரும்போது தெருக்களில் முழக்கப் படுவது. பூரி, எக்காளம், கொம்பு முதலியவை யும் கோயில்களில் பயன்படுபவையே.

முகவீணை: இதனைச் சிறிய நாகசுரம் எனலாம். இது நாட்டியத்தில் பயன்படு கின்றது.

### தோற் கருவிகள் :

மத்தளம்: பழந்தமிழ் நூல்களில் இதனைத் தண்ணுமை என்று வழங்குவர். "மத்து ஓசைப் பெயர்; இடையிடனுகிய கருவிகட்கெல்லாம் தளமாதலான் மத்தளமாயிற்று" என்பர் சிலம்பின் உரையாசிரியர். மிருதங்கம் என்பதும் இதுவே.

தவில்: இதன் வலப்புறம் கையினுலும் இடப்புறம் குணிலாலும் வாசிக்கப்படுவது. நாகசுரத்திற்குத் துணையாகப் பயன்படும்.

கஞ்சிரா: இதனைச் சிறுபறை எனலாம்; ஒரு கையினுல் வாசிக்கப்படுவது. உட்புறம் தண் ணீர் தெளித்துச் சுருதி சேர்த்துக்கொள்வர்.

கோயில்களில் பஞ்சமுக வாத்தியம், கிடி கிட்டி, உடல், நகரா, டமாரம், டவண்டை, சூரியப்பிறை, சந்திரப்பிறை முதலிய கருவிகள் பயன்படும்.

நாட்டுப்பாடல் இசையில் உடுக்கை, பம்பை, டேப் முதலியவை பயன்படுகின்றன.

அரசாங்கச் செய்திகளைத் தெரிவிக்க தமுக்கு, தம்பட்டம் முதலியவை பயன்படும். போரில் முரசு முழங்கியது.

கஞ்சக் கருவிகள்: உலோகத்தினுல் செய் தவை.

சேமக்கலம்: பண்டாரங்கள் தெருக்களில் இதனைக் குச்சியினுல் அடித்து ஒலியுண்டாக்கிக் கொண்டு பாடிச் செல்வர்.

ஜாலரா: தேவாரக் குழு முதலாகப் பலர் சேர்ந்து பாடும்போது ஜாலரா, குழித்தாளம் முதலியவை பயன்படும். காலட்சேபத்திலும் நாட்டியத்திலும் தாளம் பயன்படுகின்றது. நாடகங்களிலும் தாளம் பயன்பட்டு வந்தது.

### மற்றக் கருவிகள் :

மேற்கூறிய நான்கு வகைகளிலும் அகப் படாத கருவிகளும் உண்டு.

ஜலதரங்கம்: பீங்கான் கிண்ணங்களில் தண்ணீரை நிரப்பி இரு குச்சிகளால் அடித்து வாசிக்கப்படுவது. பண்டை நூல்களில் 64 கலை களில் ஒன்ருகக் கூறப்பட்டுள்ளது.

கடம்: பண்ணுருட்டி, இராமநாதபுரம் ஆகிய இடங்களில் ஒருவகைக் களிமண்ணுல் செய்து சூளையில் வைக்கப்பட்ட இக்கருவி மிருதங்கத் துடன் துணைத் தாள வாத்தியமாகப் பயன் படுகிறது.

மோர்சிங்: உலோகத்தினுல் செய்த இக்கருவி வாயில் வைத்து அதன் நாக்கை விரலினுல் மீட்டி வாசிக்கப்படுவது. மேனுடுகளில் இதனை (Jew's Harp) என்பர்.

பழந்தமிழ் நூல்களில் குறிக்கப்பெறும் இசைக் கருவிகள் தேவாரத்தில் கொக்கரை, மொந்தை, கின்னரம், கத்திரிகை, குட முழவம், கொடுகொட்டி, துடி, படகம் முத லான கருவிகள் கூறப்பட்டுள்ளன.

சிலப்பதிகாரத்தில் உள்ள ஆமந்திரிகை இடக்கை என்ற கருவியே என்பர் அரும்பத வுரைகாரர். தவத்திரு விபுலானந்த வடிகள் இதனை ஆர்க்கெஸ்ட்ரா என்பர்.

அடியார்க்கு நல்லார் உரையில் பேரிகை, படகம், உடுக்கை, மத்தளம், சல்லிகை, கரடிகை, திமிலை, குடமுழா, தக்கை, கணப் பறை, தமருகம், தண்ணுமை, தடாரி, அந்தரி, முழவு, சந்திர வளையம், மொந்தை, முரசு, கண்விடு தூம்பு, நிசாளம், துடுமை, சிறுபறை, அடக்கம், தகுனிச்சம், விரலேறு, பாகம், உபாங்கம், நாழிகைப்பறை, துடி, பெரும்பறை என்ற தோலாற் செய்த கருவிகளின் பெயர் கொடுக்கப்பட்டுள்ளன.

சல்லிகை: சல் என்ற ஓசையுடையதென்றும், ஆவஞ்சி குடுக்கை அல்லது இடக்கை என்றும், கரடிகை கரடி கத்தினுற் போன்ற ஒலியுடைய தென்றும் கூறுவர் அடியார்க்கு நல்லார்.

மேற்கூறிய கருவிகள் யாவும் செயற்கைக் கருவிகளாகும். இயற்கையில் அமைந்த மனிதன் குரலையும் மிடற்றுக் கருவி என்று கூறுவ துண்டு.

# தமிழ்ப்பணியாற்றிய வெளிநாட்டறிஞர்கள்

டாக்டர் கா. மீனுட்சி சுந்தரம்,
தமிழ்த்துறைத் தலைவர், அரசினர் கலைக் கல்லூரி, கோயமுத்தூர்

முன்னுரை :

உலகெங்கும் தமிழன் பெருமை இன்று சுடரொளி விட்டுப் பரவி உயர்ந்து நிற்கின்றது. இதற்கு மூலகாரணமாவார் யார்? குடத்தினுள் இருந்த விளக்கைக் குன்றின் மேலிட்ட விளக்காகச் செய்த பெருமை யாரைச் சாரும்? தமிழை மறுமலர்ச்சி அடையச்செய்து பெருமைப்படுத்தியவர்களில் வெளிநாட்டறிஞர்கள் சிறந்த இடம் பெறுவர்.

தமிழ்மொழியினை மத அடிப்படையில் வளர்த்தவர்கள் பலர். சமணரும் சைவரும் வைணவரும் தத்தம் மதத்தைப் பரப்பும் வாயிலாகத் தமிழுக்குப் பல அரிய தொண்டுகளைச் செய்துள்ளனர். அந்த வரிசையில் கிறித்துவ மதத்தைச் சார்ந்த வெளிநாட்டறிஞர்கள் ஆற்றிய அரும்பணி மேலோங்கி நிற்கின்றது. அவர்கள் தொடாத பொருளில்லை; நுழையாத துறையில்லை; தொட்டவை ஒளி வீசின; நுழைந்தவை நுண்ணறிவை நல்கின. இவர்கள் நுழையும்வரை தமிழில் செய்யுள் பேராறுகளே ஓடின. உரைநடை நூல்கள் சிறு ஓடைகள் போல் அங்கொன்றும் இங்கொன்றுமாக இருந்தன. செய்யுட் பேராறுகளை சிறு நதிகளாக்கி இன்றைய நிலையில் உரைநடை, பேராறுகளாக ஓடிக்கொண்டிருப்பதை எவரும் மறுக்கவியலாது. சமயம், மருத்துவம், வரலாறு, இலக்கியம், இலக்கணம், நிலநூல், விஞ்ஞானம் இன்ன பிற துறைகளில் அவர்கள் புகுந்து பல புதுமைகளை உரைநடையில் எழுதிக் காட்டிவிட்டனர்.

தமிழனின் தனியாட்சி குலைந்து மகமதியர்களும் மராட்டியர்களும் தெலுங்கர்களும் செல்வாக்குப் பெற்று அல்லோல கல்லோலப்பட்டிருந்த காலத்தில், பிற நாட்டறிஞர்கள் தமிழகத்தில் கால் வைத்தனர். தமிழ்ப்பற்று சிறிதுமின்றி ஆட்சியையே குறிக்கோளாகக் கொண்டிருந்த சமுதாயச் சூழ்நிலையில் நடுநிலைமையோடு பிற நாட்டறிஞர்கள் தமிழ்மொழியில் நுழைந்து கற்று ஆய்ந்து பல நூல்களையும், முறைகளையும் ஆக்கி நமக்குத் தந்தமை நம் ஆகூழே என்றால் மிகையாகாது.

இலக்கணம் :

'தமிழ் தனிமொழியில்லை; சம்ஸ்கிருதத்தின் ஒரு பிள்ளை. தமிழை ஒரு தனிமொழி எனச் சொல்ல நாம் நாணமடைய வேண்டும். "ஐந்தெழுத்தால் ஒரு பாடை" என்று அறையவே நாணுவர்'. இவ்வாறெல்லாம் தமிழ் பற்றிப் பேசப்பட்டது. அப்பேர்ப்பட்ட ஒரு சூழ்நிலையில் வெளிநாட்டறிஞர்கள் தோன்றி, "வடமொழி வேறு; தமிழ்மொழி வேறு; தமிழ் மொழி தனி இனத்தைச் சார்ந்தது" என உலகறியப் பறை சாற்றினர். தமிழ் இலக்கணங்களில் தோய்ந்து தமிழனுக்காகவும் வெளிநாட்டாருக்காகவும் இலக்கண நூல்கள் பல படைக்கப் பட்டன. பால்டே (Balde) என்னும் டச்சுக்காரரே முதன் முதலில் இலக்கணங் குறித்து எழுதிய வெளிநாட்டறிஞர் என இன்றைய நிலையில் தெரிய வருகின்றது. இவர் மிகச் சுருங்கிய அளவிலேயே இலக்கணங் குறித்துப் பேசியுள்ளார். விரிந்த முறையில் ஆழ்ந்து சிறிது தெளிந்த நிலையில் சொல்லிய முதற் பெருமை வீரமா முனிவர் என்னும் பெஸ்ஷி (Beschi) அவர்களையே சாரும். வீரமாமுனிவர் இலத்தீன் மொழியிலும் தமிழ்மொழியிலும் இலக்கண நெறிகளை வரைந்து காட்டியுள்ளார். இலக்கிய நெறித் தமிழினை செந்தமிழ் என்னும் பெயரால் இலத்தீன் மொழியில் மேலைநாட்டார்க்கு அறிமுகப்படுத்தியுள்ளார். தமிழ் இலக்கியம் கற்க விரும்பும் மேலைநாட்டார்க்கு இது ஒரு கைவிளக்காகும். மக்கள் பேச்சு மொழியில் சில சிதைந்த வழக்குகள் காணப்பட்டன. தமிழனோடு வந்து பழக விரும்பும் மேலைநாட்டார்க்குப் பேச்சு மொழியின் இயல்பைக் காட்டுவதற்காகக் கொடுந்தமிழ் என்னும் இலக்கண

நூலை இலத்தீனில் யாத்தார். இவ்விரு நூல்களும் இன்றைய நிலையில் ஆங்கிலப் பெயர்ப்பில் கிடைக்கின்றன. தமிழ்மொழியாம் பூட்டினைத் திறப்பதற்குக் கிளேவிஸ் (Clavis) என்னும் சாவியாம் நூலை ஐரோப்பிய மத பிரச்சாரர்களுக்காக இலத்தீனில் எழுதியுள்ளார். இம் மூன்று நூல்களிலுமே நம்மொழியின் பொருளதிகாரத்தின் சிறப்பான அகம், புறம், களவு, கற்பு ஆகியவை எடுத்து விரித்துப் பேசாமை குறிப்பிடத்தக்கது. தமிழ்மொழி இலக்கண நூலையொட்டி ஐந்திலக்கணத் தொன்னூல் விளக்கம் என்னும் நூலைச் சுருங்கிய, தெளிவான, செறிவான நூற்பாக்களால் யாத்துத் தமிழறிஞர்கட்கு வீரமாமுனிவர் தந்துள்ளார். இந்நூலில் பொருளதிகாரம் என்னும் தலைப்பில் தமிழ் மரபை அடியோடு மாற்றித் திருத்திக் கூறியிருப்பது கூர்ந்து நோக்கத்தக்கது. தமிழ் மரபுப் பொருளதிகாரத்திற்கும் இவர் கூறும் பொருளதிகாரத்திற்கும் சில சொற்களின் ஒற்றுமை மட்டுமே காணப்படுகின்றதல்லாமல் கருத்துப் பொதுமை எங்கும் காணப்படவில்லை. இலக்கியம் அமைப்பவன் கைக்கொள்ள வேண்டிய முறைகளாக மேனாட்டார் கருதும் இலக்கியத் திறனாய்வுக் கருத்துக்களை இந்த அதிகாரத்தில் கூறியிருக்கின்றார் எனச் சொல்லி அமைதியுறலாம். தமிழனுக்கு ஒரு புது நெறியைக் காட்டியுள்ளார்; ஆனாலும், தமிழரின் அரும்பெரும் பழைய பண்பாட்டை, நாகரிகத்தை இவர் எங்கும் எடுத்துக்காட்டாமை தமிழர்க்கு வருத்தத்தைத் தாராமல் போகாது.

பீம்ஸ் (Beams), எல்லீஸ் (Ellis), எட்வர்டு தாமஸ் (Edward Thomas), டாக்டர் கால்டுவெல் போன்ற அறிஞர்கள் தமிழ் எழுத்துமுறை, எழுத்துக்கள் ஆகியவற்றைப்பற்றி நல்ல முறையில் ஆராய்ச்சியைத் தொடங்கி வைத்துத் தமிழர்களை அவற்றில் ஊன்றி ஈடுபடுமாறு தூண்டிவிட்டுள்ளனர். இவ்வகை ஆராய்ச்சி தமிழர்க்குப் புதிது.

டாக்டர் கால்டுவெல் தோன்றிய பின்னரே தமிழின் தனித்தன்மை உலகிற்கு ஞாயிறாயிற்று. எழுத்தோசை, எழுத்து வடிவம், சொல், பகுப்பு, தொகை வாக்கியம், பொருட்கூறு, வாக்கிய அமைப்பு போன்ற பலவேறு தன்மைகளிலும் வடமொழி அடங்கியுள்ள இந்தோ ஐரோப்பிய குடும்பத்தினின்றும் தமிழ்மொழி தனியாய்த் தலைநிமிர்ந்து நிற்பதைச் சுட்டி, விரித்து அறிவுறுத்திக் காட்டிய சான்றாண்மை கால்டுவெல்லையே சாரும். கன்னடம், தெலுங்கு, மலையாளம் போன்ற பல்வேறு மொழிகள் தமிழைத் தமக்கை யாகக் கொண்டு ஒரு குடும்பமாய் அமைவதை முதன் முதலாக வெளிக்காட்டியவர் கால்டுவெல்லே. ரேனியஸ் (Rhenius), டாக்டர் கிரால் (Graul), பெஸ்ஷி (Beschi), போன்றவர்களின் ஓரிரு பிழைபட்ட கருத்துக்களைச் சுட்டிக் காட்டி மேலைநாட்டார்க்கு உண்மையுரை வழங்கிய சிறப்பும் இவருடையதேயாம்.

ரேனியஸ் (Rhenius) ஆங்கிலத்தில் ஆக்கிய இலக்கண நூல் வீரமாமுனிவர் நூலை விடத் தெளிவாகவும் தூய்மையாகவும் காணப்படுகிறது.

டாக்டர் போப் வினா விடை முறையிலாக்கிய இலக்கண நூல்கள் எளிமையுடையனவாயும் தெளிவுடையனவாயும் செறிவுடையனவாயும் அமைந்து, தமிழ் இலக்கணப் போக்கில் ஒரு புதுமையைக் காட்டி நிற்கின்றன.

பொருளதிகாரத்தில் புறத்திணையை ஆங்கிலத்தில் வெளி நாட்டாருக்குத் தெரிவித்த சிறப்பு டாக்டர். போப் அவர்களையே சாரும்.

### அகராதி :

அகராதிக்குரிய மூலம் தொல்காப்பியத்திலேயே காணப்படுவதாக நாம் மகிழினும், பல பாக்களில் அழகான நிகண்டுகளாக அவை காணப்படுகின்றன எனப் பெருமை கூறினும், இன்றைய அகராதி வளர்ச்சிக்கு வெளிநாட்டறிஞர்களே காரணம் என்பதனை அறிஞர் மறுக்க மாட்டார்கள். தமிழ்ச் சொற்களுக்குத் தமிழிலேயே பொருள் தரல், தமிழ்ச் சொற்களுக்குத் தமிழிலும் பிற மொழிகளிலும் பொருள்தரல் என இரு வகையாக அவர்கள் அளித்த அகராதிகளைப் பகுக்கலாம். அகராதிகளில் கூறப்பட்டுள்ள தொகுப்பாளர் முன்னுரையை நுணுகிப் பார்த்தால் ஒவ்வோர் அகராதியும் தனிப்பட்ட ஒருவரின் சாதனையாய் அல்லாமல் பலரின் கூட்டு முயற்சியேயாம் என்பது தெளிவாகும். அகராதிகளைத் தயாரிக்க அவரவர்கள் மேற்கொண்ட முறையைக் குறித்தமை பிறர்க்கு வழி காட்டியாம். பல தமிழ் நாட்டுத் தமிழறிஞர்கள் அகராதித் தொகுப்பு வேலையில் முன்னின்று துணை செய்திருக்கின்றார்கள் என்பது முன்னுரையிலிருந்து வெளிப்படுகின்றது.

வீரமாமுனிவர் சதுரகராதி என ஒன்றினைத் தமிழர்கட்குச் செய்ததோடன்றி மேலை நாட்டார்க்காக தமிழ்ச் சொற்களுக்கு இலத்தீன், பிரெஞ்சு, போர்ச்சுக்கீசிய மொழிகளில் விளக்கந் தந்து அகராதிகள் ஆக்கியுள்ளார் எனத் தெரிகின்றது. போர்ச்சுக்கீசிய இலத்தீன் தமிழகராதி, தமிழ் இலத்தீன் அகராதி, இலத்தீன் தமிழகராதி,

தமிழ் பிரெஞ்சு அகராதி, தமிழ் ஆங்கில அகராதி ஆகியவை இயற்றப்பட்டுள்ளன.

வீரமாமுனிவர் குறிப்புக்களிலிருந்து அவருக்கு முன்பே அகராதிகள் தொகுக்கப் பெற்றிருந்தன என அறிகிறோம். பாதர் அலோய்சியஸ் டி பார்கஸ் (Father Aloysius-de-bourgus) என்பார் செய்த அகராதி வீரமாமுனிவருக்குத் துணை செய்தது. சீகன்பால்கு என்பாரும் அகராதி தொகுத்தார் எனவும், பெஸ்ஷிக்கும் அவர் அகராதிக்கும் தொடர்புண்டு எனவும் சில குறிப்புக்களால் அறிகிறோம்.

இலத்தீன் தமிழகராதி பாதர் போர்டு (Father Ford) என்பார்க்குத் தமிழ் பிரெஞ்சு அகராதி ஆக்க உதவியது.

ஜான் பிலிப் பேப்ரிசியஸ் (John Philip Fabricius)உம் ஜான் கிரிஸ்டியன் பிரிதாப்ட் (John Christian Prieithaupt)உம் சேர்ந்து (A Malabar and English Dictionary) "தமிழும் இங்கிலேசுமாகிய அகராதி" என ஒன்றினை அச்சேற்றித் தந்துள்ளனர். அந்த அகராதி வழியாக அக் காலத்தில் அச்சிலிருந்த எழுத்து வடிவங்கள் நமக்குத் தெரிகின்றன.

1786இல் முதன்முதலாக அச்சேற்றப்பட்ட 'Dictionary of the English and Malabar' என்னும் அகராதி பெப்ரிசியசால் வெளியிடப்பட்டது. பாதர் நைட் (Father Knight) கேப்ரியல் (Mr. Gabriel), ஸ்பால்டிங் (Mr. Spaulding), ஹல்ட்ச்சிங் (Mr. Hultching) ஆகியவர்களுடைய கூட்டு முயற்சியால் சில அகராதிகள் வெளியாயின. டாக்டர். ஜே. பி. ராட்லெர் (Dr. J. P. Rottler) அகராதி ஒன்று தொகுத்தார். டாக்டர். கிரே (Dr. Grey) தமிழ் இலத்தீன் என்னும் அகராதி செய்தார். மௌசை, டூப்ரியஸ் (Mr. M. M. Mouzet and Mr. Dubrious) ஆகிய இருவரும் தமிழ் பிரெஞ்சு அகராதி தொகுத்தனர்.

பீட்டர் பெர்சீவில் (Mr. Peter Percevil) என்பார் தமிழ் ஆங்கில நடைமுறை அகராதி (Tamil English Practical Dictionary), ஆங்கில–தமிழ் அகராதி (Anglo–Tamil Dictionary) என இரண்டினைத் தொகுத்தார். இவற்றிற்கெல்லாம் விளக்கமாக டாக்டர் வின்ஸ்லோ (Dr. Winslow) அவர்களால் பெரு முயற்சி எடுக்கப்பட்டு ஒரு சிறந்த அகராதி தொகுக்கப்பட்டது. சாண்ட்லிர், (Rev. J. S. Chandlir), டாக்டர். போப் (Dr. Pope) ஆகியவர்கள் தொகுப்பும் அறிவுரையும் கூடிய அகராதி முயற்சியே இன்று வெளியாகியுள்ள சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் லெக்சிகன் ஆகும்.

**உரை நடை :**

செய்யுட்களுக்கு விளக்கம் எழுதும் அளவிலேயே உரைநடை தமிழ் நாட்டில் பெரும்பாலும் இருந்து வந்தது. வெளி நாட்டறிஞர்கள் மதத்தைப் பரப்புவதற்கு உரைநடையை முதலில் பயன்படுத்தினர். பேச்சுத் தமிழ், இலக்கியத் தமிழ், வடமொழி ஆகியவை கலந்த உரை நடையில் ராபர்ட் டி நொபிலி பல உரைநடை நூல்கள் தந்துள்ளதாகத் தெரிய வருகிறது. ஞானோபதேசம், ஆத்ம நிர்ணயம், அஞ்ஞான நிவாரணம், திவ்விய மாந்திரிகை ஆகிய நூல்கள் அச்சேற்றப்பட்டு வெளிவந்துள்ளவை. தற்பொழுது Father. S. இராசமாணிக்கம் என்பார் ராபர்ட் டி நொபிலி நாற்பது உரைநடை நூல்களும், மூன்று செய்யுள் நூல்களும் எழுதியிருப்பதாக யூகிக்கிருர். பதினைந்து நூல்கள் உண்மையில் அவரால் எழுதப்பட்டவை என உறுதி கூறுகிருர். அவரால் வெளியிடப்பட்ட நூல்களும், முன் வெளியிடப்பட்ட நூல்களும் ராபர்ட் டி நொபிலியின் நடையைக் காட்டுவன எனக் கூறவியலாது. ஏனெனில், ஒவ்வொரு நூலிலும் சொற்களையும், வாக்கியங்களையும் மாற்றி வெளியிட்டுள்ளனர். இவர் நூல்களெல்லாம் கிறித்துவ மதத்தைப் பரப்பவும், வைதிக சமயங்களைக் கிண்டல் செய்யவும் எழுதப்பட்டவை. இவர் எழுத்து, அக்காலத் தமிழ் நடையின் போக்கை ஒட்டியது எனச் சொல்ல இயலாது. அக்காலக் கிறித்துவப் பாதிரியாரின் பேச்சு நடை என்று வேண்டுமானுல் கூறலாம்.

நல்ல நடையில் உரைநடைகளைத் தொடங்கிய பெருமை வீரமாமுனிவரையே சாரும். அவரால் எழுதப்பட்ட ஒன்பது உரைநடை நூல்களுள் இதுவரை ஏழு அச்சாகி வெளிப்படுத்தப்பட்டுள்ளன. இரண்டு இன்னும் கையெழுத்து வடிவில் உள்ளன. லூதர் மிஷனை எதிர்த்து வேத விளக்கம் என்னும் நூல் மேலைநாட்டு உரை நடைப் போக்கையொட்டி விரிந்த முறையில் எழுதப்பட்டு பல பதிப்புக்கள் வெளியாகியுள்ளன. இந் நூலில் கடுந்தாக்குக் காணப்படுகிறது. வேதியர் ஒழுக்கம், லூதரின் நாட்டியல்பு, பேதகமறுத்தல் ஆகியவை கிறித்துவ மத விளக்கந் தருகின்றவை. The Epistles, திருச்சபைக்குப் பொது நிருபம், திருச்சபைக் கணிதம் ஆகியவை இன்னும் கையெழுத்து வடிவிலிருப்பவை. வாமன் சரித்திரம் என ஒன்று ஆறு பக்க அளவில் வெளியாகியுள்ளது.

பரமார்த்த குரு கதை என்னும் சிறுகதை நகைச்சுவைபட அழகிய முறையில் இவரால் ஆக்கப்பெற்றுள்ளது. தமிழ் நாட்டில் வழங்கிய

கதையினையே இவர் சிறிது கூட்டியுங் குறைத்தும் எழுதியுள்ளார். இன்று வெளியாகியுள்ள பல்வேறு பதிப்புக்களையும் பார்த்தால் பலவகையான நடைகள் காணப்படுகின்றன. எனவே, இந்நூலைக் கொண்டு வீரமாமுனிவரின் நடையை ஆராயக்கூடாது. மற்ற நூல்களில் 'அது' என்பதின் பன்மை "அதுகள்" என எழுதப்பட்டுள்ளது. அதுபோல மொழியிலக்கணம் ஏற்றுக் கொள்ளாத அமைப்புக்கள் சில காணப்படுகின்றன. பரமார்த்த குரு கதை இலத்தீனில் இவரால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

கிறித்துவ வேதத்தை சீகன் பால்கு 1708இல் மொழிபெயர்க்கத் தொடங்கினர். 1715இல் முதல் அச்சுப் பதிப்பு வெளியாயிற்று. பின் ஸ்கல்ட்ஸ் (Rev. B Schultze), ஜான் பிலிப் பெப்ரீஸியஸ் (John Philip Fabricius), டாக்டர் ஜான் (Dr. John) C.T.E. இரேனியஸ் ஆகியவர்கள் முயற்சிகளினுல் அவ்வப்போது சில நூல்கள் வெளிவந்தன. மொழிபெயர்ப்புக்களைச் செம்மை செய்யப் பிற்காலத்தில் பவர் (Rev. H. Bower Eurasian) என்பாரை நடுவராகக் கொண்டு டாக்டர் கால்டுவேல் (Dr. Caldwell), டாக்டர் போப் (Dr. Pope) போன்ற பல அறிஞர்கள் கூட்டுச் சேர்ந்து தக்க மொழிபெயர்ப்புப் பதிப்பு ஒன்று வெளியிட்டனர். பிங்கெர் (Mr. Finger), டாக்டர் ஹூல் (Dr. Hoole), பெர்சீவல் (Rev. Percevil), Dr. கால்டுவெல், ஸ்பால்டிங், டாக்டர் போப், டெய்லர் (Taylor) போன்ற பல அறிஞர்கள் கிறித்துவ மதத்தை யொட்டிய உரைநடை நூல்களை எழுதி வெளிப்படுத்தினர். ஜான் மர்டாக் என்பார் வெளிப்படுத்தியுள்ள 'அச்சேற்றப்பட்ட நூல்களின் பட்டியல்' என்னும் நூலில் கிறித்துவ மதத்தையொட்டிய நூல்களின் தொகுப்பு விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது. நல்ல மொழிபெயர்ப்புகட்குப் பரிசு கொடுப்பதாகப் போட்டி வைத்துக் கிறித்துவ மத நூல்கள் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன.

வரலாறு என்பது தமிழில் இல்லாத ஒன்று. உலக வரலாறு டாக்டர் ஸ்கிமிட் (Dr. Schmidt) என்பவராலும், இங்கிலாந்தின் வரலாறு என்பது டாக்டர் போப் (Dr. Pope) ஆலும் எழுதப்பட்டன. ஹென்ரி மோரிஸ் ((Henry Morris) என்னும் மாவட்டத் தலைமை நிர்வாக அதிகாரி, மாணவர்களுக்காக 'இந்திய வரலாறு' என்னும் ஒரு நூல் எழுதியுள்ளார். 'பாரத கண்டப் புராதனம்' என ஒரு நூல் டாக்டர் கால்டுவெல் (Dr. Caldwell)ஆல் எழுதி வெளியிடப்பட்டுள்ளது. கிறித்துவ மத சபைகள் தமிழ்நாட்டில் அங்கங்கே தோன்றிய வரலாறுகளை டாக்டர் கால்டுவெல்(Dr. Caldwell) முதலிய அறிஞர்கள் எழுதியுள்ளார்கள். பாண்டியர் வரலாறு என ஒரு நூல் H. V. வில்சன் என்பவரால் எழுதப்பட்டுள்ளது.

நிலநூல் தமிழில் தனிநிலையில் முதன்முதலாக வெளிநாட்டறிஞர்களால் தான் நுழைக்கப்பட்டது. ஊர், நாடு முதலிய வரைபடங்களோடு பூமிநூல்கள் கவர்ச்சியோடு வெளிப்படுத்தப்பட்டன. வரைபட முறையினையும் தமிழுக்குப் புதிதாகத் தந்த பெருமை அவர்களையே சாரும்.

விலங்கியல், தாவரவியல், பௌதிகவியல், வேதியியல், மருத்துவ இயல், உழவியல் பற்றித் தனித்தனியாக நுண்மையான முறையில் உரைநடையில் நூல்களை ஆக்கிய சிறப்பு வெளிநாட்டறிஞர்களையே சேரும். இரேனியஸ், ஹொய்சிங்டன் (Hoisington), Dr. கிரால், டாக்டர் வெப் (Dr. Web), ராபர்ட்ஸன் (Robertson) போன்றவர்களால் பல நூல்கள் எழுதி வெளிப்படுத்தப்பட்டன. மருத்துவத் துறையில் வெளியான நூல்கள் டாக்டர் கிரீன் என்பவரின் தமிழ்ப் பற்றினையும், செயலாற்றும் திறனையும் நமக்குக் காட்டும். மனுஷ அங்காதி பாதம் (Human Anatomy), வைத்தியாகரம் (Principle and practice of physic), இரண வைத்தியம் (The science and art of surgery), வைத்தியம் (Practice of medicine), அங்காதி பாத சுகரண வாத உற்பாலன நூல் (Anatomy physiology, and Hygiene), பெண்நோய்களை விவரிக்கும் மருத்துவ வைத்தியம் (Midwifery) கெமிஸ்தம் (Chemistry) ஆகிய நூல்கள் மேலைநாட்டு மருத்துவ முறையைத் தமிழில் எழுதக்கூடும் என்பதனைப் பறைசாற்றி நிற்கின்றன. கண், காது, தோல், காலரா, தாயும் சேயும் ஆகிய துறைகளிலும் நல்ல பட விளக்கங்களுடன் சிறு கைப்புத்தகங்களும் அவரால் அச்சிடப்பட்டு மக்களுக்கு நல்கப்பட்டன. பிற மொழிக் கலைச் சொற்களை எவ்வாறு மொழிபெயர்க்க வேண்டும் என்ற குறிப்பு இவரால் ஆராய்ந்து கொடுக்கப்பட்டுள்ளது. இக்குறிப்பு மொழிபெயர்ப்பாளர்க்குப் பெருந்துணை செய்யும்.

நாள், வார, மாதப் பத்திரிகைகள் வெளிநாட்டாரால் நமக்கு அறிமுகப்படுத்தப்பட்டன. தமிழ்மொழி வளர்ச்சிக்கு இது ஒரு புதிய வழியாவதுடன், பொதுமக்களுக்கு எளிதில் கல்வி கற்கத் தூண்டுகோலாக இம்முறை அமைந்தது. 'தினவர்த்தமானி' என ஒன்றினைப் பெர்சீவல் முதல் முதலாக நாள்–செய்தித்தாளாகத் தொடங்கினர். இதனுல் உரைநடை வளர்ந்தது.

## செய்யுள் :

பிற மொழி அறிஞர்கள் தமிழைக் கற்றுப் பாக்கள் எழுதி வெளியிட்டமை ஒரு பெருந் தொண்டாகும். ராபர்ட் டி நொபிலி எழுதிய தாகச் சொல்லப்படும் செய்யுள் நூல்கள் இன்னும் கிடைக்கப் பெறவில்லை. சீகன்பால்கு சில ஜெர்மன் பாடல்களை மொழிபெயர்த்து 1713இல் அச்சேற்றினர். எல்லிஸ் என்னும் நிர்வாக அதிகாரி கொச்சகக் கலிப்பாவில் ஒரு பாடல் இயற்றியுள்ளார்.

தமிழ்ப் புலவர்களும் அதிர்ச்சியடையுமாறு வியக்கத்தக்க முறையில் ஒரு பெருங்காப்பியம் செய்த பெருமை வீரமாமுனிவரையே சாரும். கிறித்துவ அன்னையைப் பலவகைப் பாடல் களிலும் போற்றிச் சிறுபிரபந்தங்கள் செய்துள் ளார். தேம்பாவணி, அன்னை அழுங்கல் அந்தாதி அடைக்கலமாலை, திருக்காவலூர்க் கலம்பகம், கித்தேரி அம்மாள் அம்மானை போன்றவை அவர் புகழைச் சாற்றி நிற்கும்.

## மொழிபெயர்ப்புகள்-கட்டுரைகள்-விளக்க உரைகள் :

நீதி நூல்கள் வரிசையில் திருக்குறள் முதன் மையமானது. இந்நூல் எல்லா மேனுட்டறிஞர் களையும் ஈர்த்து ஈடுபடச் செய்துள்ளது. வீரமா முனிவர் இதனை இலத்தீனில் மொழி பெயர்த்தார். இவர் மதத்திற்கு ஏற்றவாறு ஊழ், மறுபிறவி ஆகியவை பற்றிப் புது விளக்கந் தந்துள்ளார்.

எல்லிஸ் (Ellis) என்னும் அதிகாரி சில அதிகாரங்களிலிருந்து சில குறள்களை எடுத்துக் கொண்டு விரிந்த விளக்கத்தோடு ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். தெலுங்கு, சமஸ்கிருதம், ஆங்கிலம், சங்க இலக்கியங்கள் ஆகியவற்றி லிருந்து ஒப்புக்கள் காட்டியுள்ளார். ஏரியல் (Ariel) என்பார் பிரெஞ்சு மொழியிலும், டாக்டர் கிரால் ஜெர்மன், இலத்தீன் மொழியிலும் மொழிபெயர்த்துள்ளனர். இப்பெரியார்களின் துணைகொண்டு டாக்டர் போப் மிகச் சிறந்த முறையில் மொழிபெயர்ப்புச் செய்துள்ளார். இவர்கள் கிறித்துவ மதக் கருத்தோடு குறள் ஒன்றி வருவதைக் கண்டு கிறித்துவத் தொடர்பு வள்ளுவர்க்கு உண்டு எனக் கூசாமல் கூறவும் செய்கின்றனர்.

நாலடியார்க்கு மொழி பெயர்ப்புச் செய்ததோடு ஐரோப்பிய முறையில் செய்யுட்களை விளக்கிப் பிற மொழியாளர்களுக்குப் பழைய இலக்கியங் களை அறிமுகஞ் செய்கிருர். அங்கங்கு தமிழின் சொல்வளம் சுட்டப்படுகின்றது. மூதுரை, நன்னெறி, நீதிநெறி, விளக்கம் ஆகியவைபற்றி டாக்டர் போப் கட்டுரை எழுதியுள்ளார். வெற்றி வேற்கை வில்லியம் டெய்லர் என்பவரால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. ஸ்டோக்ஸ் (H. Stokes) என்பார் நீதிநெறி விளக்கத்திற்கும், ஏரியல் என்பார் ஔவையார் செய்யுட்களுக்கும், டாக்டர் ஜான் என்பார் ஆத்திசூடி, கொன்றை வேந்தன் ஆகிய குழந்தை நூல்களுக்கும், சீகன் பால்கு ஐயர் 'நீதிவெண்பா, கொன்றைவேந்தன் ஆகியவற்றிற்கும் மொழி பெயர்ப்புச் செய்துள் ளார்கள்.

பல கடவுளர்பற்றிச் சீகன்பால்கு கட்டுரைகள் எழுதியுள்ளார். தத்துவக் கட்டளை, சிவஞான போதம், சிவப்பிரகாசம் ஆகியவற்றை ஹொய் சிங்டன் (H. R. Hoisington) உம், கைவல்லிய நவநீதம், சிவஞான சித்தியார், ஆத்ம போத பிரகாசிகை ஆகியவற்றை கிரால் (K. Graul) உம், சிவப்பிரகாச கட்டளை, சசிவர்ண பாடம், சைவ சமய விளக்க வினுவிடை ஆகியவற்றை போக்ஸ் (Foulkes) உம், கபிலதேவர் அகவல், ஔவை ஆத்தி சூடி ஆகியவற்றை பெர்சீவலும் மொழி பெயர்த்துள்ளனர். திருஞான சம்பந்தர், மாணிக்கவாசகர், சேக்கிழார், பெரிய புராணம் ஆகிய தலைப்புக்களில் டாக்டர் போப் கட்டுரை கள் எழுதியுள்ளார்.

சைவ சமயத் தத்துவ நூல்கள் எல்லாவற்றை யும் நன்கு கற்றுத் திருவாசகத்தை ஆராய்ந்து மொழி பெயர்ப்பும் ஆராய்ச்சிக் கட்டுரைகளும் துணிவுடன் எழுதி வெளியிட்ட பெரியவர் டார்டர் போப் ஆவார். ஆங்காங்கு கிறித்துவ மதத்தோடு இணைத்துக் காட்டியிருக்கின்ற ஒப்பு நோக்கு ஆராய்ச்சி பலரையும் வியப்பில் ஆழ்த்தும்.

சிலப்பதிகாரம், சூளாமணி, குறிஞ்சிப்பாட்டு, மணிமேகலை, புறநானூறு, புறப்பொருள் வெண்பா மாலை ஆகியவற்றுள் சிலவற்றிற்கு மொழி பெயர்ப்பும், சிலவற்றிற்குச் சிறு விளக்கக் கட்டுரைகளும் டாக்டர் போப் தந்துள்ளார். இவ்வளவு பெரிய அறிஞர் சிலம்பு நாட்டியமாடும் பெண்களாலேயே அணியப்படுவது என்று குறித்திருப்பது தமிழறிஞர்க்கு அதிர்ச்சி தரும்.

## தொகுப்பும் பொறுக்குதலும் :

தமிழ்மொழியிலுள்ள நூல்களின் பட்டியலை முதன் முதலில் தொகுக்க முனைந்த வீரன் ஜான் மர்டாக் என்பவர் ஆம். சுவையற்ற பரந்த துன்பமான வேலையை ஓயாது உழைத்துச் செய்துள்ளார். இந்நூல் வாயிலாக அக்காலத் தில் வழங்கிய நூல்கள் இவையென அறியவும் தமிழ்மொழி இன்னின்ன துறைகளில் குறை

பாடுடையது என்பதை அறியவும் முடிகிறது. தமிழைத் துலாக்கோலில் வைத்துப் பார்க்க இது ஒரு நல்ல வழி.

தமிழன் கல்லில் செதுக்கி வைத்தவற்றை ஏட்டில் கொண்டு வந்த சிறப்பு வில்லியம் டெய்லர், பர்னல் போன்றவர்களைச் சாரும்.

ஏட்டுப் பிரதிகளாகக் கிடந்த தமிழ் நூல்களை அக்காலக் கலெக்டர் பெருமகன் எல்லிஸும், ஏரியலும் தேடித் தொகுத்தார்களெனின் அவர் களின் தமிழ் ஆசையை என்னென்று கூற வியலும் ?

எழுதப்படாமல் மிதவை இலக்கியங்களாக வாய்வழி வழங்கிவரும் நாடோடிப் பாடல்களைச் சார்லஸ் ஈகோவர் தொகுக்க முயன்றார். திருக் குறளும் இவர் நாடோடிப் பாடல் தொகுப்பில் அடங்கியுள்ளதைப் பார்த்தால் திறக்குறள் மக்கள் வாயில் எந்த அளவு பயிலப்பட்டு வந்தது என்பது புலனாகும். திருவள்ளுவர் யார் ? என ஆராய்ந்து எழுதியிருக்கும் கட்டுரை எந்தத் தமிழ் மகனையும் தட்டியெழுப்பும்.

பலராலும் பாராட்டப்பெற்று மரபுத் தொடர் களாக வழங்கிவரும் பழமொழிகளை பிரேயர் (Frayer), பெர்சீவல் ஆகியோர் தொகுத்து மொழி பெயர்ப்பும் விளக்கஞ் செய்து அச்சேற்றி வெளியிட்டனர். கிட்டத்தட்ட 6000 பழமொழிகள் சேகரிக்கப்பெற்று மொழிபெயர்க்கப் பெற்றிருக் கின்றன.

தமிழ்ப் பாடல்களைச் சுவைத்துத் தாம் இனிமை எனக் கண்ட பாடல்களை யெடுத்துப் பொருளும் நயமுங் காட்டி டாக்டர் போப் ஒரு தொகை நூல் வெளியிட்டார். மேனாட்டு முறையை யொட்டிச் சுவையும் பதிப்பும் நல்கப் பட்டுள்ளன. நூல் வெளியீட்டாளர்க்கு இது வழிகாட்டியாய் அமைந்தது.

முடிவுரை :

தமிழ்மொழி அமைப்பில் இல்லாத பல புதுமை களைச் செய்து காட்டிய வெளிநாட்டறிஞர்களைப் போற்றுதார் அறியாதாரே ! நிறுத்தற் குறி களிடுதல், சொல்லுக்குச் சொல் இடமிடுதல், பாட்டு முதற்குறிப்பு அகராதி தருதல், மேற் கோள் நூல்களின் பட்டியல் தருதல், அடிக் குறிப்பு வரைதல், பத்தி பிரித்தல், எதனையும் அகர வரிசையில் கொடுத்தல், இன்ன பிற சிறு உயிர்ப் பிரிவுகளை ஊட்டிய அவர்களைத் தமிழன்னை என்றும் நினைப்பாள். இவை சிறு செயல்களானாலும் பெருந்தெளிவையும், கால அருமையையும் நமக்கு ஈகின்றன.

இலக்கணம், அகராதி, உரைநடை, மொழி பெயர்ப்பு, தொகுப்பு, சேகரிப்பு, கட்டுரை போன்றவற்றைத் தாங்களே விரித்துக் காட்டி விளக்கியதோடன்றித் தமிழ் மறுமலர்ச்சியுற்று விரிய வழிகாட்டிய சான்றோர்களை நம் இனமாக மதித்து மகிழ்வோமாக !



# PREHISTORIC TAMIL NAD

Dr. B. K. GURURAJA RAO

Prehistory and interest in Prehistoric investigations came to Tamilaham rather early. But much has not been made in the studies of this branch of human history so far. The first and the historic discovery of a Prehistoric, a Palaeolithic handaxe was made at Pallavaram, in the neighbourhood of Madras by the 'Father of Indian Prehistory' Robert Bruce Foote in 1863. Foote and his Colleague, William King, of the Geological Survey of India continued this work for nearly four decades, culminating in Foote's collection being arranged as the nucleus of the Govt. Museum, Madras. But the Prehistoric studies fell on bad days as it were till a fresh impetus was provided by Burkitt's interpretation of the collections made by Cammiade and Richards. Further, the Yale-Cambridge University expedition Under the leadership of Helmutt De Terra and Patterson aroused much interest in Prehistory. Patterson visited the Kortallaiyar valley for a couple of days and then his work gave further encouragement to scholars like V. D. Krishnaswamy and others of the Archaeological Survey of India and some foreign scholars. Among the studies of many such scholars, the work of Zeuner, the Geo-chronologist stands out prominently, though only part of his work has been published.

Tamilaham was among the richest havens of Early Man. A prolific and vivid industry flourished in and around the Kortallaiyar and Arani rivers during the Early Stone Age times. The Early Stone Age man chipped his tools from quartz and quartzite found abundantly in the above valleys derived from the neighbouring Satyavedu ridges on the borders of Tamilaham and the neighbouring Andhra Pradesh. The earliest stage of these stone tools are found in the boulder conglomerate beds near Vadamadurai on the Arani representing an early stage of the handaxe industry in India. The tools are much patinated or stained red due to prolonged contact with the overlying laterite deposits. On the basis of the shapes and the techniques of production these tools are divisible into three groups, each marking a stage of evolution over the preceding one. The handaxe industries of Vadamadurai are comparable with the Abbevillean industries of Europe and Africa. The last group of this industry contained a new type of tool, a cleaver, marking an advancement of tool technology and takes the industry on to the next stage of evolution camparable to the Acheulian of Europe and Africa.

The next stage of Early man's progress is well represented in and around Attirambakkam on the neighbouring Kortallaiyar. The tributary streams of this river have thrown out fine sections of the river which yield the tools. The terraces of this river are well developed in this region as also lower down the river. The handaxes, cleavers and other associated tool-types found from these sections of different terraces

provide a simple lesson in evolution of the industries comparable seriatum from the mid-Acheulian to the late-Acheulian and further on to the final stage of the handaxe industry, the Micoquian. During these stages, the evidence of a new technological devolopment in the method of chipping is observed, an early form of the prepared platform technique to remove flakes.

The industrial stages described so far fall under what the geo-chronologists would call 'mid-pleistocene' times and gradually pass off into the succeeding 'upper pleistocene times. But about this time occurred an important change in tool technology. Due to a well-defined change in the climatic and environmental conditions an important typo-technological change in the tool complex also came about and this stage of Man's activity is called the Middle Stone Age culture. During this period, man produced smaller tools,-scrapers, points, awls etc. on selected finer-grained raw materials by more evolved techniques and minuter work. This change in tool types probably indicates that the larger animals of the earlier times were disappearing and man preferred smaller, less ferocious and easily accessible animals for his food. He also learnt to use these small tools as composite weapons rather than individually. Though much information about this Middle Stone Age has been gathered from Maharashtra, Mysore, Andhra, Orissa, Rajasthan etc., very little is known so far from Tamilaham. Some tools of this industry have been collected from Attirambakkam region, but they are yet to be studied properly. But as fine grained rocks like chert, jasper and carnelian on which these smaller implements are made in other regions are not available in this region, the tools are produced on quartzite which is coarser and harder. Hence the tools themselves are crude and appear to be technologically primitive, while in truth they are not so. The excavations by K D. Banerjee of the Archaeological Survey of India recently in this region at Gudium and Attirambakkam have established that this industry is posterior and stratigraphically successor to the late-Acheulian culture and occurred either towards the end of the pleistocene or early in the succeeding holocene times gradually devoloping into a microlithic culture of the Late Stone Age.

This Late Stone Age microlithic industry noticed to evolve from the preceding industry in the Kortallaiyar Valley, is well devoloped and occurred in the coastal tracts of Tamilaham. The most important group of these microlithic sites is situated on the 'teris' or fossil sand dunes near Tirunelveli, studied by Zeuner and Bridget Allchin. This industry is characteristic of hunting-cum gathering economy as in the earlier Stone ages but under vastly changed conditions. The big-game hunting seems to have entirely given place to that of smaller and less ferocious animals and catching of fish. The large sized tools of the earlier times had given place completely to these tiny stone implements which could not be singly used but only as composite tools-as arrow-, spear-, or javelin tips or bone or wooden knives or cutting instruments with stone teeth. These microliths on the 'teris' were found embedded on lying on the surface of ancient sand dunes, which Zeuner thinks, must be assigned a date between 6000 and 4000 B. C. Similar microliths have been recently reported from sand dunes or 'teris' near Pondicherry and around Red Hills near Madras, but more information about them is yet to be known.

Apart from the microlithic industries of great antiquity, of a truly Late Stone Age date, microliths of a dubious

antiquity or of a more recent date have been frequently encountered from different parts of Tamilaham. Some such microliths have been collected from the surface of the megalithic or urn burial sites in Madurai but their chronological or cultural significance cannot be discussed till further investigations are made about them.

The next phase of prehistoric culture in Tamilaham is represented by the neolithic or New Stone Age. Foote again was the first to collect these neolithic implements in this region. They occurred sporadically from all over the state, but in a rich concentration in and around the Shevroy hills in the Salem district. Finely worked neolithic polished celts and chiseled and rarely some hammer stones were reported by him from the Shevroy hills. The neolithic implements have in recent years been found as stray finds from various districts like Madurai, Coimbatore, South Arcot and Chingleput and many of them coming from megalithic burials or being closely associated with them, have very little claim to represent Pre-Iron Age Man's tool equipment. They are probably survivals among a later folk as reminiscences of an earlier cultural tradition.

But we are on surer grounds with regard to the neolithic remains dug out by S. R. Rao of the Archaeological Survey of India at Paiyanampalli in North Arcot district recently. Here were encountered the occupational debris of two successive cultures—the earlier neolithic culture characterised by the use of the polished stone tools and a burnished grey pottery and the succeeding iron and black-and-red ware using megalithic culture which heralded the dawn of historical times. The excavations have demonstrated that the neolithic culture in this part of the country was mainly a pastoralist culture, but the beginnings of an incipient stage of agriculture are demonstrated. The occurrence of a stone hoe, presumably used for ploughing the land is of significance in this connection. The neolithic levels were completely free from any metal, iron coming into use only in the succeeding period.

Before closing this brief account, it is worth while to take note of the problem of a chalcolithic phase in Tamilaham. As the evidence at hand shows, a chalcolithic phase did not intervene between the neolithic and the later Iron Age culture in Tamilaham. Not only do we not come across the existence of any chalcolithic phase here, but there is clear overlapping of the neolithic and the Iron Age megalithic culture at Paiyanampalli. The bronze objects found at Adichanallur and the Nilgiris come from decidedly Iron Age burials and hence, are not chalcolithic.

succession in Madura. Chola and Sinhalese think to take advantage of it, but they reckon without great warriors like Maravarman and Jatavarman Sundara Pandyas. Chola power falls so low that a rebel, Kopperunjinga, could capture the emperor, whom the Hoysala had to release. At Ponamaravathi, the Pandya gives back his kingdom to the heir of Rajaraja I and Rajendra I as an act of grace. Finally, the stupidity of Rajaraja III extinguises the Cholas.

We may well imagine what sad thoughts must have coursed through the mind of Rajendra III, of whom the last date available is 1279, as he sat in his palace at Gangaikondacholapuram. He must often have thought of his great ancestors, Vijayalaya, the mighty father and son who built those lasting memorials of Chola power at Tanjore and Gangaikondacholapuram, the war-like Rajadhiraja and Rajendra II, who could destroy the Kannada armies like chaff in the wind, the first Kulothunga, who for a time ruled over practically the whole of South India. We may pity the poor man alone with his memories.

The emperors are all gone, their capital is today a hamlet, the majestic "vimana" of the second Brihadeesvara temple towers over mean huts, the tank in which countless feudatory kings poured their waters of submission has become a wilderness. Even so, the Chola memory can never fade away. The Pallavas were synonymous with exquisiteness in art. The Cholas touched nothing which they did not make grand and magnificient. They were great men. their empire was great, their religious art was great. The four principle temples of theirs (for all that today Darasuram has been inexcusably neglected) announce to the world that, though the kings have gone the way of all mankind, their art survives as a lasting memorial. The Cholas have lasted in memory because they were inspired by religion in art.

What the mighty Pulakesin II or Vikramaditya VI could not achieve, the Hoysala successors of Vishnuvardhana, who had deprived Kulothunga I of his Talkad province. did. They established themselves in the Tamil land just as their successors, the Vijayanagar emperors, did. Their chief city was Kannanur Koppam, somewhere near modern Samayapuram, in Tiruchi district. They played off the Cholas against the rising power of the Pandyas and might have entrenched themselves but that they came up against Jatavarman Sundara Pandya, "one of the most famous warriors and conquerors of South India". Moreover, Mr Derrett thinks that, because they paid too much attention to their Tamil provinces, their interests in their home provinces suffered.

Somesvara partitioned the kingdom, and Ramanatha ruled the Tamil provinces. Ballala III, however, reunited the provinces. Then came the catastrophe of the Muslim invasion. Hoysala rule in the Tamil country has left comparatively few relics, perhaps a few sculptures at the Srirangam temple, to which, like every other dynasty of the day, they were attached, and also a few other temples in the neighbourhood of Kannanur and Tiruvannamalai.

The Pandyas of Madurai waxed strong in the thirteenth century, and theirs was the hegemony over southern India in that period. Apart from Jatavarman Sundara Pandya, there were Maravarman Kulasekhara I and Jatavarman Vira Pandya, both able warriors. But a new element was introduced in south Indian history by Malik Kafur, and he was invited to interfere by a Pandya prince.

This is a somewhat disconnected account of the political relations between the Tamil and Kannadiga rulers over about six centuries. Political history

has seldom been a satisfactory history. The real history is the life of the people, their achievements in everything that sweetens life. It cannot be said that there has been much Kannda influence on Tamil social customs, political institutions and the like Except in rare instances as when Greece, though politically conquered, conquered Rome culturally, the arts of civilisation have flowed from the stronger country to the weaker. It is in religious art that the interaction has been most obvious in the relations between Tamil and Kannadiga. Vijayanagar was to bring the pillared "mandapas" and the great towers. But prior to this the Virupaksha temple at Pattadakkal may be said to be the best fruit of these relations. Political enmity was no bar to artistic emulation. The Pandyas too, though not friendly to the Pallavas, paid them a great compliment at Kazhugumalai.

The Pallavas just held their own against the Badami Chalukyas and the Rashtrakutas militarily, but conquered them artistically or rather charmed them artistically. The Rashtrakutas did much political harm to the incipient Choḷa power, but the Tamil country is the richer today for their distinctive sculptures in some temples in North Arcot. Overwhelmingly stronger as a military and cultural power, the Cholas had little to learn from the Kalyani Chalukyas. This is a barren time for the art historian. But the Kalyani Chalukyas exerted some influence on the Tamils through the Hoysalas. This influence has not been as considerable as it could perhaps have been expected in view of the exuberance of Hoysala art in the Mysore country, but it cannot be ignored. The Pandyas, geographically rather remote from this centre of political conflict, appear to have received and given little to the Kannadigas if Kazhugumalai be excepted.

The subject provides ample scope for the art historian to study. He may also enquire what contributions the two peoples have made to the general Indian culture. One fact is striking; the net result of all the wars, the campaigns, the battles, the challenges and the like of the conflict between Tamil and Kannadiga is a lovely temple on the banks of a river in northern Karnataka. This fact is surely significant of the reconciliation that prevails today.



# கொங்குச் சோழர்

டாக்டர் மு. ஆரோக்கியசாமி

கொங்கு நாடு என்பது தற்போதைய கோவை சேலம் மாவட்டப் பகுதிகளைத் தன்னுள் அடக்கியது. அது சில காலம் சேரர்கள் ஆட்சியிலும் சில காலம் சோழர்கள் ஆட்சியிலும் இருந்து வந்தது. சோழர்கள் ஆட்சி விரிவடைந்த காலத்தில் சோழர் ராஜ்யம் பல பாகங்களாகப் பிரிக்கப்பட்டு ராஜப் பிரதிநிதிகளின் அடியில் வைக்கப்பட்டது. அப்படி வைக்கப்பட்ட பகுதிகளில் கொங்கு நாடும் ஒன்றாக இருந்தது. இப்பகுதி கி. பி. 1004ஆம் ஆண்டிலிருந்து கி. பி. 1275ஆம் ஆண்டு வரை சோழ ராஜப் பிரதிநிதிகளின்கீழ் இருந்தது.

அக்காலத்தில் தலைமை வகித்த ராஜப் பிரதிநிதிகள் பதினைந்து பேர். அவர்களில் முதலவரின் பெயர் முதலாம் விக்கிரம சோழன்; கடைசியில் இருந்தவர் மூன்றாம் விக்கிரம சோழர். இவ்விதமாக, பதினைந்து இராஜப் பிரதிநிதிகள் ஏறக்குறைய 270 ஆண்டு காலம் அதாவது ஆங்கிலேயர் இந்தியாவில் ஆண்ட காலத்துக்கும் சற்று அதிகமாகவே ஆட்சி செலுத்தினார்கள். இவர்களுக்குத்தான் கொங்கு சோழர் என்று பெயர்.

இவர்களில் இரண்டாம் வீரச்சோழர் என்பவர் இரு பகுதிகளாகப் பிரிந்திருந்த கொங்கு நாட்டை ஒன்றுபடுத்தினார். அதற்குமுன் வட கொங்கு, தென் கொங்கு என்று இருந்ததை கல்வெட்டுகளின் வாயிலாக அறிகிறோம். வீர சோழன் காலத்திற்குப் பிறகு இவைகள் மறுபடியும் இரு பகுதிகளாகப் பிரிந்தன போலும். இதுபற்றித்தான், இரண்டாம் வீர சோழனும் வீர ராஜேந்திரனும் "இரு கொங்கும் ஆண்டவன்" என்று அவர்கள் கல்வெட்டில் கூறுகிறார்கள்.

கொங்கு சோழர்கள் எல்லோருமே சோழ வம்சத்தை சேர்ந்தவர்கள் என்று பலர் நினைக்கக்கூடும். ஆனால், உண்மையில் அவர்களில் சிலர் பாண்டிய வமிசத்தைச் சேர்ந்தவர்களாகவும் இருந்தார்கள். கரூர் தாலுக்கா நெரூர் என்ற ஊரில் உள்ள அக்கினீச்வரன் கோவிலில் காணும் கல்வெட்டு இதை எண்பிக்கிறது. இதில் கி. பி. 1213ஆம் ஆண்டில் குலோத்துங்க சோழன் என்ற கொங்கு சோழன் தன் மருமகனுக்கு உதவி செய்யும்படி மதுரைக்குப் புறப்பட்டதாகக் கூறப்படுகிறது. இந்த உதவியை மாபெரும் உதவியாகக் குலோத்துங்கன் கருதினான் என்பது மேற்சொன்ன கல்வெட்டில் மதுரைக்குப் புறப்படுமுன் தான் செல்லும் காரியம் அனுகூலமாவதற்கு ஒரு கிராமத்தையே யாத்திரா தானமாகக் கொடுத்த செய்தி கூறப்படுவதால் தெரிகிறது. இந்தக் கல்வெட்டின் காலத்தைக் கொண்டு குலோத்துங்கன் உதவினது பாண்டிய மன்னன் ஜடாவர்மன் குலசேகரனுக்கு என்றும் அவனோடு சண்டை செய்தவன் சோழ மன்னன் மூன்றாம் குலோத்துங்கன் என்றும் தெரிகின்றது. இதிலிருந்து சோழர்கள் காலம் மங்கிவிட்டது என்றும் பாண்டியர் கை ஓங்கி வந்ததென்றும் புலப்படுகிறது. கொங்குச் சோழ மன்னர்கள் வீர சோழனும் வீர ராஜேந்திரனும் இரு கொங்கும் ஆண்டனர் என்பதும் இதையே காட்டுகிறது.

கொங்கு சோழர் கல்வெட்டுகள் அவர்கள் தலைநகரைப் பற்றி ஒன்றும் குறிப்பதில்லை. அவர்களுடைய கல்வெட்டுகள் தாராபுரத்திற்கு அருகிலும் உடுமலைப்பேட்டை தாலுக்கா குமாரலிங்கம் பகுதியிலும் அதிகமாகக் காணப்படுவதால், அவைகளில் ஒன்று கொங்குச் சோழர் தலைநகராக இருந்திருக்கவேண்டும். அது எங்ஙனமாயினும் கொங்குச்சோழர் ஆட்சி தற்காலத்திய கோயமுத்தூர் வட்டாரத்தில்தான் அதிகமாக இருந்திருக்கவேண்டும் என்பது அங்கு காணக் கிடக்கும் கல்வெட்டுக்களிலிருந்து தெரிகின்றது. அவிநாசி, தாராபுரம், விஜயமங்கலப் பகுதிகளிலும் சிறப்பாக திருமுருகன் பூண்டி பகுதியிலும் ஏறக்குறைய 60 கல்வெட்டுகள் காணக் கிடக்கின்றன. மேற்குறித்த கல்வெட்டுகளில் முதலாம் கொங்குச் சோழன் "கோநாட்டான்" என்று குறிக்கப்படுகிறான். இதிலிருந்து கொங்குச் சோழர்கள் புதுக்கோட்டை பகுதிகளி

லிருந்து வந்தவர்கள் என்று தெரிய வருகிறது. புதுக்கோட்டை பகுதியிலுள்ள கொடும்பாளூர் இவர்கள் தோன்றிய இடமாக இருக்கலாமென்று நாம் கருத இடமுண்டு. இந்த ஊரில்தான் இருக்கு வேளிர் என்ற வேளிர் மன்னர் பல்லவர்கள் காலத்திலேயே தங்கள் ஆட்சியை ஸ்தாபித்தார்கள். நம்பியாண்டார் நம்பி எழுதிய திருத்தொண்டர்தொகை அந்தாதி என்ற நூலில் முதலாம் ஆதித்திய சோழனை "எங்கள் இறைவன் இருக்குவேளூர் மன்னனிடம்" என்று கூறுகிறார். இவருக்கு இருநூறு ஆண்டுகளுக்குப் பிறகு வந்த சேக்கிழார் இடங்கழிநாயனர் புராணத்தில் "குருகறுங்கும் கோனாட்டு கொடி நகரக் கொடும்பாளூர் பொன்னெடுந்தோள் ஆதித்தன்" என்று இதையே விளக்கமாகக் கூறுகிறார்.

இதுவரை கொங்குச் சோழர் கல்வெட்டுகள் ஏறக்குறைய முன்னூறு கிடைத்து இருக்கின்றன. இதிலிருந்து கொங்குச் சோழர் ஆட்சி முறையைப்பற்றி ஒரு சிறிது நாம் கூறலாம். கொங்கு நாடு அக்காலத்தில் இருபத்திநான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றிற்குவட பாரிசாரநாடு, கரவெளிநாடு என்று பல பெயர்கள் இருந்தன. அந்த ஒவ்வொரு பகுதியிலும் பல கிராமங்கள் இருந்தன என்பது வட பாரிசாரநாடு 14 கரவெளிநாடு 13 என்று கூறுவதால் தெரிகிறது. கொங்குச் சோழர்கள் அமைச்சர்கள் வைத்திருந்தார்களா இல்லையா என்பதை கல்வெட்டுகள் விளக்கமாக உரைக்காவிட்டாலும் அவர்களுக்கு ஆலோசனை கூற அமைச்சர்கள் இருந்திருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில், அவர்களில் பலர் சோழ மரபில் வந்த வர்கள். முதலாம் கொங்குச் சோழன் கல்வெட்டு ஒன்று அவனை "வெண்குடைக்கீழ் அமர்ந்த மன்னனென்றும் நிலத்தினின்று வந்த வருவாயில் ஆறில் ஒரு பங்கு மட்டும் எடுத்துக்கொண்டு மிகுதியை மக்களுக்கு அளித்தான்" (183/1920) என்றும் கூறுவதால், கொங்குச் சோழர் ஆட்சிமுறை ஒருவிதத்தில் தெரியக் கிடக்கின்றது. ஒவ்வொரு கிராமத்திலும் கோவில் இருந்தது. அதை நடத்தி வந்தவர்கள் அந்தந்தக் கிராமத்தின் ஆட்சி முறைகளை கவனித்து வந்தார்கள். கோவிலின் வருமானமாக, பல வரிகளை அவர்கள் வசூலித்து வந்தார்கள். கோவில் அதிகாரிகள் கொடுக்கவேண்டிய பல வரிகளை அவர்கள் செலுத்துவதனின்றும் விலக்கு அளிக்கப்பட்டன. கொங்குச் சோழன் வீர ராஜேந்திரன் காலத்தில் ஏற்பட்ட படையெழுச்சியின் காரணமாக, கரவெளிநாட்டின் பகுதியில் சில கோவில்கள் பாதிக்கப்பட்டன. இதற்குப் பிராயச்சித்தமாக வைகாளிநாட்டு இரட்டையம்பாடி என்ற கிராமம் அக்கோவில்களுக்குத் தானமாக வழங்கப்பட்டது. விஜயமங்கலம் என்ற ஊரிலுள்ள ஒரு கல்வெட்டில் (585/1905) அந்தப் பகுதியிலுள்ள கோவில்களின் வரும்படியைச் சமமாகப் பிரித்ததாகக் கூறப்படுகின்றது. அவிநாசிக் கோவிலிலுள்ள மற்றொரு சாசனம் வெள்ளனூர் கிராமத்து மக்கள் "குடிகனம்" என்ற வரியை அக்கோயிலுக்குக் கொடுத்ததாகக் கூறுகிறது.

கொங்குச் சோழ மன்னர்கள் வராகன், அச்சு, கழஞ்சு என்ற நாணயங்களை அவர்களே அடித்து வெளியிட்டார்கள். இவற்றுள் கழஞ்சு என்பது தங்கநாணயம், அச்சு என்பது பெரியளவில் தங்கமேயானாலும் மதிப்பில் தாழ்ந்த நாணயம். இந்த நாணயம் யானை அச்சு, உண்டியச்சு, அமுதனச்சு என்று பலவகையாக இருந்தது. இம்மன்னர்களிடம் சிறந்த படை வீரர்கள் இருந்தனர். கோவிலுக்குச் செய்யப்பட்ட தர்மங்களைக்குறிக்கும் கல்வெட்டுகள் பலவற்றில் படைத்தலைவர்கள் பெயர்களும் காணப்படுகின்றன. கொங்குச் சோழ வீர ராஜேந்திரன் காலத்தில் அன்னூரில் பொறிக்கப்பட்ட ஒரு சாசனம் "ஆ (மட்டம்) கண்டன் எறிந்த—கைக்கோளர்" (614/1922) என்று சில வீரர்களைப் பற்றிக் கூறுகிறது.

# ‘கொங்கு நாடு’

வித்துவான் செ. இராசு.

### எல்லை :

கோவை, நீலகிரி, சேலம், தருமபுரி மாவட்டங்கள், மதுரை மாவட்டத்தில் திண்டுக்கல், பழனிப் பகுதி, திருச்சி மாவட்டத்தில் கரூர், குளித்தலைப் பகுதியே பழங்காலக் கொங்கு நாடு. இதனை,

‘வடக்குத் தலைமலையாம் வைகாவூர் தெற்குக்
குடக்குப் பொருப்புவெள்ளிக் குன்று—கிடக்கும்
களித்தண் டலைமேவும் காவிரிசூழ் நாடு
குழித்தண் டலையளவு கொங்கு’

என்ற பழம் பாடலால் அறியலாம்.

### பெயர்க் காரணம் :

கொங்கு என்ற சொல்லுக்குப் பூ, மணம், பொன் முதலிய பொருள்கள் உண்டு. பூவும் மணமும் பொன்னும் மிகுதியாக உள்ள நாட்டிற்குக் ‘கொங்கு நாடு’ என்று பெயர் ஏற்பட்டது என்பர். ஆனால் ‘கொங்கு’ என்ற பழமையான ஊரினாலேயே இந்நாட்டிற்கு இப்பெயர் ஏற்பட்டது என்பது தாராபுரம் அருகேயுள்ள கொங்கூர்ச் சோழீச்சுரக் கல்வெட்டால் அறியும் செய்தியாகும்.

### நாட்டுப் பிரிவுகள் :

கொங்கு நாட்டை மேல் கொங்கு, தென் கொங்கு, வட கொங்கு என்றும், காவிரிக்குக் கிழக்கேயுள்ள பகுதியைக் கீழ்கொங்கு என்று கூறுமல் மழக்கொங்கு என்றும் கூறினர். இது வேள்விக்குடிச் செப்பேட்டாலும் உறுதிப் படுகின்றது. நிருவாக வசதிக்காகக் கொங்கு நாடு 24 உள் நாடுகளாகப் பிரிக்கப்பட்டது. பூந்துறை நாடு, காங்கேய நாடு, காஞ்சிக் கோயில் நாடு, அரைய நாடு முதலிய அவை. இந்த நாடுகட்கெல்லாம் எல்லை கூறும் பாடல்களும், ஊர்களின் தொகையைக் குறிக்கும் பாடல்களும் உள்ளன. ‘காணி’ என்று கூறக்கூடிய ஊராட்சி முறை முற்காலத்தில் கொங்கு நாட்டில் சிறந்து விளங்கியது. இம்முறை சோழநாட்டு வாரியங்களுக்கும் மிக முற்பட்டதாகும்.

### சங்க காலத்தில் :

சங்கப் பாடல்கள் பலவற்றில் கொங்கு நாடு மிகச் சிறப்பாகக் குறிக்கப் பெற்றுள்ளது. கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த ஏழு வள்ளல்கள் என்று குறிக்கப் பெறுபவர்களில் ஐவர் வாழ்ந்தது கொங்கு நாட்டில். பேகனும், அதிகமானும், ஓரியும், ஆயும், காரியும் கொங்கு நாட்டைச் சேர்ந்தவர்கள். பொதினி (பழனி), தகடூர் (தருமபுரி), கொல்லி, ஆய்க்குடி, காரியூர் (பழைய கோட்டை) முதலிய ஊர்களில் அவர்கள் விளங்கினூர்கள். குமணன் வாழ்ந்த முதிரை மலையும் கொங்கு நாட்டைச் சேர்ந்ததே.

இவர்களன்றிக் கோசர், அறுகை, புன்றுறை, இருங்கோவேள் முதலிய குறுநில அரச மரபினரும், அரசர்களும் சங்க காலத்தில் கொங்கு நாட்டில் வாழ்ந்தனர். கருவூர், செங்குன்றூர், கூடலூர், பெருந்துறை, பொன்முடி, சிற்றரையம், பேரரையம், பெருந்தலையூர் முதலிய ஊர்கள் சங்க இலக்கியங்களில் குறிக்கப் படும் கொங்கு நாட்டு ஊர்களாகும்.

### தனி நாடு :

சேர, சோழ, பாண்டிய நாடுகளுடன் தொண்டை நாடு, கொங்கு நாடு இரண்டினையும் சேர்த்து, ‘தமிழ் நாடு ஐந்து’ என்று கூறும் வழக்கம் இடைக்காலத்தில் எழுந்தது. தண்டியலங்கார மேற்கோள் பாடல் இதனை விளக்கும்.

‘நறவேந்து நங்கை நலங்கவர்ந்து நல்கா
மறவேந்தன் வஞ்சியான் அல்லன்—துறையின்
விலங்காமை நின்ற வியன்தமிழ்நாடு ஐந்தின்
குலங்காவல் கொண்டொழுகும் கோ’

என்பதே அப்பாடலாகும். இப்பொழுது சேர நாட்டுடன் சேர்த்தே கொங்கு நாட்டைக் குறிப்பர். சேரனே கொங்கு நாட்டை வென்றதாகப் பதிற்றுப்பத்தில் குறிக்கப் படுவதால், கொங்கு தனி நாடு என்பதை அறியலாம்.

### வரலாற்றுப் பெருமை :

கொங்கு நாட்டில் புகழூரை அடுத்த ஆறு நாட்டார் மலை, ஈரோட்டை அடுத்த அறச்சலூர் என்ற இரண்டு இடங்களில் பழமையான தாமிழில் கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. பொள்ளாச்சி, கலயமுத்தூர், கரூர், வெள்ளலூர் போன்ற ஊர்களில் கி. மு. முதல் நூற்றாண்டின் ரோமாபுரிப் பேரரசர்கள் நாணயங்கள் பல கிடைத்திருக்கின்றன.

காங்கயத்தை அடுத்துள்ள படியூரில் மிக மதிப்புடைய இரத்தினக் கற்கள் பழங்காலத்தில் கிடைத்தன. அலெக்ஸாண்டருக்குப் பரிசாகக் கிடைத்த இரும்பு சேலத்து இரும்பு என்று கூறுவர். பெருந்துறையை அடுத்த நல்லாம் பட்டியில் அரிய வேலைப் பாடுடைய முதுமக்கள் தாழிகள் கிடைத்துள்ளன. தருமபுரி, கொங் கூர், அஞ்சூர், பிடாரியூர், வள்ளியறச்சல், பழ மங்கலம் முதலிய ஊர்களில் உள்ள மேடுகள் அகழ்வாராய்ச்சி செய்யத்தக்கன. நூற்றுக் கணக்கான நடுகற்களும், எழுத்துப் பாறை களும், எழுத்துடைய தூண்களும், சிலைகளும் கொங்கு நாடெங்கும் சிதறிக் கிடக்கின்றன.

### அரச மரபுகள் :

சேரர், சோழர், பாண்டியர் என்ற பெயர்கள் அந்நாட்டு அரச மரபைக் குறிக்கும். ஆனால் 'கொங்கர்' என்ற பெயரோ தனி அரசமரபைக் குறிக்காமல் கொங்கு நாட்டு மக்களைக் குறிக்கும்.

சங்க காலத்திற்குப் பின் இரட்டர், கங்கர், இராட்டிர கூடர், (முற்காலச்) சேரர், கொங்குச் சோழர், கொங்குப் பாண்டியர், (பிற்காலச்) சேரர், ஒய்சளர், விஜய நகரத்தார், மதுரை நாயக்கர், மைசூர் உடையார் மரபினர், ஐதர்–திப்பு முதலியோர் 18ஆம் நூற்றாண்டின் இறுதி வரை அரசாண்டனர். கி.பி. 1799இல் கொங்கு நாடு ஆங்கிலக் கம்பெனி வசமாகியது.

### சமணர்கள் :

கொங்கு நாட்டை ஆட்சி புரிந்த இரட்டர்களும், கங்கர்களும் பெரும்பாலும் சமணர்களே. திரு நாவுக்கரசரால் பல்லவ நாட்டிலிருந்தும், திரு ஞான சம்பந்தரால் பாண்டிய நாட்டிலிருந்தும் வெளியேறிய சமணர்கள் கொங்கு நாட்டில்தான் அடைக்கலம் புகுந்தனர். அப்போது கொங்கு நாட்டை ஆட்சி புரிந்தவன் துர்விநீத கங்கன். அவன் சமண சமயத்தவன். சமணர்கள் திரு மூர்த்திமலை, அறச்சலூர், திருச்செங்கோடு, விஜயமங்கலம், வெள்ளோடு, சீனுபுரம், திங்க ளூர், பூந்துறை, பருத்திப் பள்ளி முதலிய ஊர் களில் தங்கினர். இங்கெல்லாம் மிகப் பழைமை யான சமணப் பள்ளிகள் உண்டு.

### இலக்கியங்கள் :

சங்க இலக்கியங்களில் சுமார் 30 கொங்கு நாட் டுப் புலவர்கள் குறிக்கப் பெறுகின்றனர். பிற புலவர்களும் கொங்கு நாடு வந்து பாடினர். விஜய மங்கலத்தில் கி.பி. 7ஆம் நூற்றாண்டு முதல் சுமார் கி.பி. 15ஆம் நூற்றாண்டு வரையில் தமிழ்ச்சங்கம் ஒன்று இருந்தது. பெருங்கதை எழுதிய கொங்கு வேளிரும், நன்னூல் இயற்றிய பவணந்தி முனிவரும், சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லாரும், வச்சணந்தி மாலை இயற்றிய குணவீர பண்டி தரும் கொங்கு நாட்டவர்களே. அவர்கள் முறையே கொங்கு நாட்டு விஜய மங்கலம், சீனு புரம், நிரம்பை, களந்தை என்னும் ஊர்களைச் சார்ந்தவர்கள். உரிச்சொல், நிகண்டு, தக்கை இராமாயணம் என்ற நூல்களைச் செய்வித்த காங் கேயர்கள் கொங்கு நாட்டவர்களே. இன்னும் ஆயிரக்கணக்கான சிறு பிரபந்தங்கள் இங்கு தோன்றியுள்ளன.

### செய்ய வேண்டுவன :

கொங்கு நாட்டில் இன்னும் ஆயிரக்கணக் கான கல்வெட்டுக்கள் படி எடுக்கப்படவில்லை. தென்னிந்திய அரசர்கள் பலர் கொங்கு நாட்டை வென்று ஆட்சி புரிவதில் பேரார்வம் கொண் டிருந்தனர். எனவே, கொங்கு நாட்டு வரலாற் றைத் தெளிவாக ஆராய்ந்தால் தென்னிந்திய வரலாற்றுக் குறிப்புக்கள் பல விளக்கம் பெறும்.

சென்னை அரசினர் பழஞ்சுவடிச் சாலையில் உள்ள கொங்கு நாட்டுப் பாளையக்காரர்களும், பட்டக்காரர்களும் மெக்கென்சிக்கு எழுதிக் கொடுத்த வமிசாவளி, கைபீது இவைகளை எவரும் இன்னும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ள வில்லை. இவைகளின் மூலம் கி.பி. 16, 17, 18ஆம் நூற்றாண்டின் கொங்கு நாட்டு வரலாறு தெளி வாகக் கிடைக்கும்.

# விஜயநகர மன்னர்கள்

## சங்கம குலம்

**முதலாம் ஹரிஹரன் :** 1336–1357.
விஜயநகரப் பேரரசை நிறுவினர்.
விஜயநகரைத் தலைநகராக அமைத்தார்.
தக்காணத்தில் தில்லி சுல்தானிய ஆட்சியை அழித்தார்.
வித்யாரண்யரைக் குருவாகக் கொண்டவர்.

**முதலாம் புக்கன் :** 1344–1377.
பாமினி சுல்தானுடன் இரு முறை போரிட்டவர்.
ஒரிஸ்ஸாவை வென்ருர்.
மகனுகிய குமார கம்பணர் மதுரை சுல்தானியராட்சியை முடிவுறச் செய்தார்.
சீனுவுக்குத் தூதுக்குழு ஒன்று அனுப்பப்பட்டது.
மகனுகிய குமாரகம்பணரின் மனைவியால் மதுராவிசயம் என்ற நூல் எழுதப்பட்டது.
சைவ, வைணவப் பிணக்கைத் தீர்த்து வைத்தார்.
'மகாராசாதிராசன்' 'இராசபரமேச்வரன்' முதலிய பட்டங்களைப் பெற்ருர்.

**இரண்டாம் ஹரிஹரன் :** 1377–1404.
மதுரையில் சுல்தானியராட்சிமீண்டும் நிறுவியது.
சைவம், வைணவம், சமணம் ஆகிய மும்மதங்களுக்கும் உதவினர்.
திருக்காளத்தி, சீசைலம், சிதம்பரம், திருப்பதி, திரு அரங்கம் ஆகிய கோயில்களுக்கு நன்கொடைகள் வழங்கினர்.
அமைச்சர் 'நானர்த்த இரத்தினமாலா' என்னும் நிகண்டு ஒன்றைத் தொகுத்தார்.

**முதலாம் தேவராயர் :** 1406–1422.
1406இல் பிரோவீஸாவுடன் நடத்திய போரில் இவருக்கு வெற்றி கிட்ட வில்லை.
1419இல் நடைபெற்ற இரண்டாவது போரில் வெற்றி பெற்ருர்.
நிகோலோகோந்தி, விஜயநகரத்தைப் பார்வையிட்டு ஆட்சிமுறை, நீதி நிர்வாகம் ஆகியவற்றைக் குறித்துள்ளார்.
முகம்மதியர்களைப் படையில் சேர்த்தார்.

**விசயர் :** 1422–1426.
ஆமது சுல்தானுடன் போரிட்டார்.
குலகுரு கிரியாசக்தி என்பாரைப் போற்றினர்.
சங்கம அரசர்களின் சைவ சமயக் கோட்பாடுகளை இவர்தம் குறிப்புகள் அறிவிக்கின்றன.

**இரண்டாம் தேவராயர் :** 1422–1446.
இரண்டாம் அலாவுதீனின் செருக்கை அடக்கினர். இலங்கைத் தீவிலிருந்து குல்பர்கா வரை ஆட்சி பரவியிருந்தது.

அமைச்சர்கள் லக்கண்ணுவும் அவர் தம்பி மாதண்ணுவும்.
இந்துப் பேரரசின் படை திருத்தி அமைக்கப்பட்டது ; முகம்மதியர் படையில் சேர்க்கப்பட்டனர்.
'குரான்' நூலொன்று அரியணையின் முன்பு வைக்கப் பெற்றது. ஒரு பள்ளிவாசலும் கட்டப்பட்டது.

**மல்லிகார்ச்சுனர் :** 1447–1465.
பாமினி, ஒரிஸ்ஸா மன்னர்களுடன் போர் புரிந்தார்.
இலக்கியம், சோதிடம் முதலியவற்றைக் கற்றறிந்தார்.
'யானை வேட்டையாடுவோர்' 'இம்மடி தேவராயர்' போன்ற பட்டங்களைப் பெற்றிருந்தார்.

**இரண்டாம் விருபாட்சர் :** 1465–1485.
குலமுறை மாற்றம்.
காஞ்சியைத் தாக்கினர்.
பாமினி சுல்தான் படையெடுப்பு.
அராபியர் விஜயநகரத் துறைமுகங்களை விட்டு நீங்கினர்.

## சாளுவ குலம்

**நரசிம்மர் :** 1486–1491.
சாளுவ குலத்தை அரசு கட்டில் ஏற்றினர்.
பேரரசு நிலை நிறுத்தப்பட்டது.
பாண்டிய நாட்டில் விஜயநகரின் ஆட்சி நிலைபெற்றது.

## துளுவ குலம்

**வீர நரசிம்மர் :** 1505–1509.
துளுவ குலத்தை நிலை நிறுத்தினர்.
மைசூர், துளு நாடுகளின் மீது படையெடுத்தார்.

**கிருட்டினதேவராயர் :** 1509–1529.
விஜயநகர மன்னர்களில் மிகச் சிறந்தவர்.
காஞ்சிப் பகுதியில் காடவத் தலைவர்களை வென்றார்.
பீஜப்பூரைக் கைப்பற்றினர்.
'ஆமுக்த மால்யதா' என்ற தெலுங்கு பாடலை எழுதினர்.
பெத்தண்ண, திம்மண்ண, முதலியவர்களை அவைக்களப் புலவர்களாகப் பெற்றிருந்தார்.
தெனலிராமன் இவரது அவையிலிருந்தார்.
சிதம்பரம், காஞ்சி, திருவண்ணமலை முதலிய இடங்களில் கோபுரங்கள் எழுப்பினர்.
ஹம்பியில் கோயில்களைக் கட்டினர்.

**அச்சுதராயர் :** 1529–1542.
போர்ச்சுக்கீசியருடன் நட்புறவு பூண்டிருந்தார்.

**இராமராயர் :** 1542–1565.
திருவிதாங்கூரை வென்றார்.
கன்னியாகுமரியில் வெற்றித்தூண் நிறுவினர்.
இலங்கையை வென்றார்.
போர்த்துக்கீசியருடன் வாணிகத் தொடர்பு கொண்டார்.
கிருஷ்ண தேவராயரின் மகளான திருமலாதேவியை மணம் புரிந்து கொண்டார்.
தலைக்கோட்டை போரில் உயிர் நீத்தார்.

## ஆரவீடு குலம்

**திருமலை :** 1570–1572.

ஆரவீடு குலத்தைத் தாபித்தார்.

தலைநகரைப் பெனுகொண்டாவுக்கு மாற்றினர்.

பேரரசை மூன்ருகப் பிரித்து தனது மூன்று குமாரர்களுக்கும் அளித்தார்.

நூலாசிரியராகவும் கடவுட்பற்று கொண்டவராகவும் இருந்தார்.

**முதலாம் ஸ்ரீரங்கர் :** 1572–1585.

போர் விருப்பம் மிக்கவர்.

இழந்த பகுதிகளை மீட்க முயற்சி செய்தார்.

சிறந்த வைணவர்.

**முதலாம் வேங்கடர் :** 1585–1614.

இழந்த பகுதிகள் பலவற்றை மீட்டுக் கொண்டார். அக்பர் இரண்டு தூதுக் குழுக்களை இவரிடம் அனுப்பினர்.

போர்ச்சுக்கீசியருடன் நட்புறவு கொண்டிருந்தார்.

ஐரோப்பிய நாடுகளுடன் நல்லுறவு கொண்டிருந்தார்.

நன்கொடைக் குறிப்புக்களில் வழக்கமாக இருந்துவந்த "ஸ்ரீவிருபாட்சா" என்ற சொல்லுக்குப் பதிலாக "ஸ்ரீவேங்கடேசர்" என்பதை எழுதச் செய்தார்.



# NAWAB RULE IN THE TAMIL COUNTRY

M. D. SAMPATH

Nawab rule is an interesting phase in the chequered history of Tamilnad. Eighteenth century witnessed the scene of events and actual struggle for the supremacy of power among the Nawabs who ruled from districts of Arcot and heart of the Tamil country. During their regime, the rulers of Nizam intervened in their politics which resulted in the blood-shed of both the parties. The history of the rivalries between Nawab and Nizam is an intriguing feature in the Arcot History.

Sadat Ullah Khan nominated Dost Ali as his successor without the consent of Nizam-ul-Malik, the subedar of Deccan. Dost Ali, who succeeded him in 1733, had two sons Safder Ali and Aasan Ali and several daughters. One of these was married to Chanda Sahib and another to Murtaz Ali, both Kinsmen of Nawab. In 1736, on the death of Raja of Trichy, Chanda Sahib siezed the place from the widowed Rani. Soon after the death of Dost Ali and Hasan Ali, Safdar Ali proclaimed himself as the Nawab, and induced the Marathas to attack Chanda Sahib at Trichy.

The disappearance of Chanda Sahib from the scence in 1741 strengthened the hands of Safdar Ali, but he still felt his position in-secure since Nizam-ul-Mulk refused to appoint him as Nawab. Then he proceeded to Vellore where Murtaz Ali suddenly assassinated him and proclaimed himself as the Nawab. The Army however obliged Murtaz Ali to fly and proclaimed Sahib Jedda, Safdar Ali's son, as the Nawab under the name Muhamad Said.

In 1743, Nizam-ul-mulk in the meantime appointed Kwaja Atdullakhan as the Nawab. But Murtaz Ali lost no time in securing the assassination of the boy, and it was rumoured that Anwar-ud-din himself had connived at it. Anwar-ud-din then continued to rule unchallenged as the Nawab. The Nawabs realised the reverse at St. Thome during 1746. When the French forces laid siege to Madras, Anwar-ud-din, the Nawab of Arcot, received an appeal for help from the English. The Nawab himself felt that the French and the English were disturbing the peace of his kingdom. He peremptorily ordered Dupleix to raise the siege. Dupleix duped him and gradually delayed delivery of the city. Anwar-un-din sent a large army to take Madras from Dupleix.

A French force under D "Autenil" joined the forces of Chanda Sahib and Muzaffar Jang near Arcot and in the Ambur battle in 1749 the confederates defeated and killed Anwar-ud-din.

The victors entered Arcot and Chanda Sahib was installed as Nawab. Mohammed Ali, the son of Anwar-ud-din, escaped to Tiruchirapalli and shut himself up there. In the meanwhile Nazir Jung repudiated Chanda Sahib and proclaimed Muhammed Ali Nawab.

Correspondingly Nayak rule in Madurai was extinguished by Chanda Sahib. He strengthened the fortifications of Trichy and appointed his brothers as the Governors of the strongholds of Dindigul and Madurai. He subjugated the king of Tanjore and compelled him to cede Karaikkal to the French. Nizam-ul-Mulk, who had no love either for Chanda Sahib or for Dost Ali Khan the Nawab of Arcot, also instigated the Maharathas to come down to the south. Then Safdar Ali, after Maharatha conquest, proclaimed himself as the Nawab.

Though their rule extended for a short spell of time, their succession dispute marks a keynote in the history of South India.



# HISTORY OF THE BRITISH PERIOD

M. D. SAMPATH

The period which witnessed the decay of the Hindu powers of Tamilaham and the anarchy arising in the struggle for mastery between the Mohammedans and the Maharattas favoured the growth of European colonies which were anxious to share in the fabulous wealth of the Indies, after the discovery of the Cape of Good Hope by the Portuguese in 1498. During the whole of the 16th Century the Portuguese busied themselves in erecting and consolidating the acquisitions they made on both the coasts. The Portuguese were fortunate in the time of their arrival. The Hindu ruler, Zamorin, owed his prosperity to his ports' position as an entrepot, and he was prepared to welcome the Portuguese. The Portuguese gained most from their participation in the carrying trade of the Indian Ocean, particularly on the Coromandal coast.

The Dutch and the English almost became identical soon after the revolution of 1688 and simultaneously took measures to contest the claim of Portugal, and, in the 17th Century, most of the Indian settlements fell into their hands, and, in the first instance, passed into Dutch possession. They first settled at Pulicat, north of Madras in 1609 which is well marked in the Dutch history of our country and thus carried on trade activities. They also established their settlements at Tuticorin and Nagapattinam apart from the forts erected.

A Danish East India Company was established in 1616 with headquarters at Madras and, four years later (1620), the factory at Tranquabar on the east coast was founded. The French, ten years after the establishment of their organization "La Compagnie des Indos Orientalas", founded their settlement at Pondicherry, which is still a prosperous town. The East India Company established their headquarters at Madras in 1639.

The Dutch power slowly dwindled and waned, paving the way for the rise of the British Dominion in 1740. The formative years of the British Dominion witnessed the fluctuations in its growth and vigour. The years between 1740 and 1757 witnessed the political uncertainty and the Anglo-French struggle for supremacy in the south.

When the news of the out-break of the Angle French War arrived in 1742, Dupleix succeeded Dumas as Governor of Pondicherry. After assuming the Governorship, he strengthened its defences, forbade private trade and the receipt of presents, effected economy in expenditure and toned up the administration. The French and the English began to take an active part in the politics of the South in 1744. South Arcot, containing as it did, both the French and the English settlements, naturally became the theatre of a great deal of fighting. In 1745 an English fleet under Barnett appeared on the Coromandal coast and Dupleix at once sent an appeal to La Bourdannais to come to his rescue. La Bourdonnais equipped a fleet and came to the Coromandal coast in 1746. At this time the English fleet was commanded

by Payton, who was unwilling to enter into any serious conflict with the French. On his return, Payton retired to Hugli, thus leaving the way open for an attack on Madras. The English factors made no resistance and surrendered Fort St. George to the French in 1746.

Then, in 1748, British reinforcements, intended for the recovery of Madras, arrived with a new fleet under Boscawin. Pondicherry in its turn was besieged, but once more French enterprise was aided by British ineptitude in securing a French success. Due to the war between Dupleix and La Bourdannais in 1748, Madras was restored to the English and maintained the *statusquo*. But the restoration revealed a profound change in the politics of South India. Three taluks adjoining Pondicherry viz., Valudavur, Villianur and Bahur were handed over to Dupleix as reward for his kind assistance, during the Ambur battle in 1749. Dupleix's triumph was complete but for the fact that the strong fort of Tiruchirapalli was held by Muhammad Ali, the Nawab of the Carntic. As he felt that he could not hold the fort, the English governor of Madras, Saunders effected diversion to Arcot. But meanwhile, Clive had created a diversion by seizing the capital city of Aroct in August 1751 with 210 men. The famous Siege of Tiruchi for 50 days in September and October divided the French efforts and gave Muhammed Ali time to procure allies. In 1752, a French force sallied forth from it and made a fruitless attempt to prevent the capture of Covelong, and then marched on Chingleput.

Dupleix refused to admit defeat and with infinite resource continued the struggle. He even besieged Trichinopoly a second time in 1753. The triumph of Arcot was followed by more victories at Arni, Kaveripakkam and Valikandapuram over the forces of Chanda Sahib and the French. So the campaigns continued throughout the year 1753. But early in 1754, Dupleix was forced to open negotiations with the British. Meanwhile the French company had decided upon his recall. Due to the hostilities between the English and the French in 1756, neither Madras nor Pondy was properly garrisoned. But D' Auteuil, one of the officers of Dupleix, captured Elavanasur. The French then took Tiruvannamalai and other forts, threatened Thyaga Drug, attacked Fort David, inspite of the fact that their fleet was defeated by the English fleet in an action off Nagapattinam.

In 1760 Sir Eyre Coote won a decisive victory over the French at Wandiwash and followed it up by capturing the outlying French strongholds. He then captured Vallianur, took the fort of Ariankuppam and blockaded and besieged Pondy. In 1761 not only Pondicherry, but also Gingee and Thyaga Durg surrendered to the English. In 1782 the French, after an understanding with Hyder, agreed to take Cuddalore and make it into a French possession. In 1783, Bussy arrived with troops at Cuddalore and shortly afterwards General Stuart marched from Madras, took Perumukkal and besieged Cuddalore. The French power thus came to an end in South India. The sack of Pondicherry was virtually the end of the French power in Tamilnad. It paved the way for a rapid rise the English in the Carnatic. The Nawab of Carnatic was always in financial needs which way exploited by the English to their advantage. The Nawab became a powerless figure-head, the defacto power slowly changing hands to the English. There was no powerful rival to the English for sometime till the arrival of Hyder Ali and his powerful and brave son Tippu. The father and son strongly entrenched

themselves in Mysore and made incessant intrusions into the Carnatic much to the dismay of the English. But the latter, supported by the growing power of Company in Bengal and in the north, could ultimately defeat the sultans and made their power felt not only in the immediate vicinity of Madras but also beyond. Subsequently even the dejure power was acquired by pensioning of the heir of the Nawab of the Carnatic and taking control of his territory. This was in A. D. 1801. The next land-mark was in A. D. 1815. Then the East India Company was taken over by the Government.

The year 1818 marks the beginning of a new phase in the history of British India. The span of thirty to forty years from 1818—1848: or '58 witnessed the political thread from Lord Hastings to Dal-Housie. This was a period of completion and consolidatian in South Indian History. Then the Mutiny appeared in 1857, the nature and causes of which is a matter of dispute. After the Mutiny came reorganisation. The period which followed this viz., the period of the Great Recovery has no parallel in the history of the world. The period between the retirement of Lord Canning and that of Lord Curzon is usually regarded as the high noon of the British Imperial power in our country. It is apt to mention here that this period passed through a phase of paternalism, incipient imperialism and dictatorship and tentative moves towards partnership.



# கோயில்கள்

இரா. நாகசாமி

கடவுள் நம்பிக்கையும் கோயில் வழிபாடும் தமிழகத்திற்கு மிகப் பழமையானவை. சங்க நூல்களில் கடவுள்களின் திருஉருவங்களில் பல கூறப்படுகின்றன. கோயில்கள் பற்றிய குறிப்புக்கள் பண்டைத் தமிழ் நூல் பலவற்றில் காணக் கிடக்கின்றன. பல்வேறு தெய்வங்களுக்கும் கோயிலெடுத்து கடவுண்மங்கலம் செய்து முந்தையோர் வழிபட்டு வந்திருக்கின்றனர்.

"அமரர் தருக்கோட்டம்
வெள்யானைக் கோட்டம்
புகர்வெள்ளை நாகர் தம் கோட்டம்
பகல்வாயில் உச்சிக்கிழான் கோட்டம்
ஊர்க்கோட்டம்
வேற்கோட்டம்
வச்சிரக் கோட்டம்
புறம்பணையான் வாழ் கோட்டம்
நிக்கந்தக் கோட்டம்
நிலாக் கோட்டம்"

என்றெல்லாம் சிலப்பதிகாரம் உணர்த்துவது நோக்கத்தக்கது.

அப்பர் காலத்திற்கு முன் குடை வரைக் கோயில்கள் சிற்சில அமைந்திருப்பினும் மிகப் பெரும்பாலானவை மண், சுடுமண் (செங்கல்), மரம் ஆகியவற்றாலேயே அமைக்கப்பட்டிருந்தன. ஆழ்வார்களும் நாயன்மார்களும் பல கோயில்களைப் பற்றியும் ஆங்குள்ள தெய்வத் திருமேனிகளைப் பற்றியும் மனங் கரைந்து பாடிப் பரவியிருக்கிறார்கள். அங்ஙனம் பாடல் பெற்ற கோயில்களே மிக்க சிறப்புடையனவாக கருதப்பட்டு வருகின்றன.

தமிழகத்தின் தென்பகுதியில் பாண்டியர்களும் வடபகுதியில் பல்லவர்களும் மிகப் பழங் காலத்திலேயே குடை வரைக் கோயில், கற்றளி அம்பலம், ஒற்றைக் கற்றளி போன்றவற்றைச் சமைக்கத் தொடங்கினர். பல்லவர்கள் காஞ்சி, மாமல்லபுரம் போன்ற இடங்களில் பல அரிய கோயிற்பணி ஆற்றியுள்ளனர். அங்ஙனமே பாண்டியர்கள் கழுகுமலை, திருப்பரங்குன்றம், திருமெய்யம், பிள்ளையாட்பட்டி, குன்றக்குடி போன்ற இடங்களில் பல அரிய கோயிற்பணி ஆற்றியுள்ளனர். அதே காலத்தில் அதியமான் நாமக்கல்லில் சிறந்த இரண்டு குடை வரைக் கோயில்களை ஆக்கியுள்ளான். இவை கி. பி. 400 முதல் 850க்குள் இடைப்பட்ட பல்வேறு காலங்களில் அமைந்தவை என்பர்.

அப்பர் பாசுரத்தைக் கொண்டு பெருங்கோயில், கரக்கோயில், ஞாழற்கோயில், கொகுடிக் கோயில், இளங்கோயில், மணிக்கோயில், ஆலக்கோயில் முதலான பலவகைக் கோயில்களைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள முடிகிறது.

கோட்டம், நகரம், கோயில், மன்றம், ஆலயம், நியமம், தளி, பொதியில், அம்பலம், பள்ளி, தானம் முதலிய பல பெயர்களும் தேவாலயத்தின் பெயர்களாகக் குறிப்பிடப்படுகின்றன. இன்று 'கர்ப்பக்கிருகம்' எனப்படுவது முன்னாளில் திருவுண்ணாழி என்றும், சந்நிதி எனப்படுவது 'திருமுற்றம்' என்றும், பிராகாரம் எனப்படுவது 'திருச்சுற்று' என்றும் பெயர் கொண்டிருந்தன. வழிபாட்டிற்குரிய தெய்வத்திரு உருவங்கள் சமைப்பதற்கு பத்து மூலப்பொருள்கள் பயன் படுத்தப்பட்டிருக்கின்றன. அவையாவன,

"கல்லும் உலோகமும் செங்கலும் மரமும்
மண்ணும் சுதையும் தந்தமும் வண்ணமும்
கண்ட சருக்கரையும் மெழுகும் என்றயிவை
பத்தே சிற்பத் தொழிலுக்கு உறுப்பாகும்."
—பிங்கலந்தை, 29.

கோயில்கள் மண்ணாலும் மரத்தாலும் செங்கல்லாலும் கல்லாலும் கட்டப்பட்டிருந்தன. கல் அல்லது மரம் போன்ற ஏதாவது ஒரு பொருளை மட்டுமே கொண்டு கட்டப்படுவது சுத்தக் கோயில் எனப்படும். கல்லும் சுண்ணம்பும் அல்லது மரமும் உலோகமும் போன்ற இரு கூட்டுப் பொருளால் கட்டப்படுவது மிசிரக் கோயில் எனப்படும். பல பொருள்களைக்

கொண்டு சமைக்கப்படும் கோயில் சங்கீர்ணக் கோயில் எனப்படும்.

குகைக் கோயில், குடை வரைக் கோயில், ஒற்றைக்கற்றளி, கற்றளி, அம்பலம் முதலிய பலவகைக் கோயில்கள் இன்னும் தமிழகத்திற்கு பொலிவையும் புகழையும் தந்துகொண் டிருக்கின்றன.

இந்தியாவில் பிற மாநிலங்கள் அனைத்திலுமுள்ள கோயில்களைவிட அதிகமான கோயில்கள் தமிழகத்தில் விளங்குகின்றன.

### விமானம்

திருவுண்ணாழியின் மேல் தளத்தில் அமைவதையே விமானம் என்போம். திருவுண்ணாழியின் கோட்ட வடிவையும் அதற்கேற்ப அமைக்கப்படும் விமானத்தையும் கொண்டு விமானங்களின் பெயர் பல வகையாகும். எண்பட்டையுள்ள சிகரத்தை 'திராவிடம்' என்றும், சதுர சிகரத்தை 'நாகரம்' என்றும், வட்டச் சிகரத்தை 'வேஸரம்' என்றும் குறிப்பர். அங்ஙனமே குதிரை லாடம் போன்ற திருவுண்ணாழியின் அமைப்பை 'தூங்கானை மாடம்' (சஜப்ருஷ்டம்) என்றும் வழங்குவர். சதுரமுகடு, நீண்ட சதுர முகடு ஆகியவற்றை முறையே கூடம், சாலை என்பது மரபு. பெரும்பாலும் அம்பலம் அல்லது சபை எனப்படுவது சாலைமுகடாகவே அமைக்கப்பெறும். பல்வேறு அமைப்புகளில் உள்ள கோயில்கள் மாமல்லபுரத்தில் உள்ளன. அவை இரதங்கள் எனப் பிழைபட பெயர் பெற்றுள்ளன. பல்லவர் காலக் கற்றளிகளின் கோட்டத்தில் தெய்வ மாடங்கள் இல்லை. சுவர்களில் சிற்பங்கள் உள்ளன. ஆனால், குறிப்பிட்ட பகுதியில் குறிப்பிட்ட தெய்வத்திரு உரு அமைக்கப்பட்டதையும் காணலாம். உதாரணமாக, கோட்டத்தின் தென்பால் ஆலமர் செல்வன் (தக்ஷிணாமூர்த்தி) அமைக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

### சிற்றாலயங்கள்

கோயிற் கட்டடக் கலை அறிவு வளர வளர, கருவறையின் புறச்சுவர்களில் ஆகம நெறியில் கோட்ட மூர்த்திகளை அமைத்தனர். அத்துடன் கருவறையைச் சுற்றிலும் சிறு சிறு ஆலயங்களை அமைத்து அவற்றில் பல தெய்வங்களை கடவுண்மங்கலம் செய்திருக்கின்றார்கள். இவற்றை காஞ்சி கைலாயநாதர் ஆலயம், பனமலை, நார்த்தாமலை, உத்திரமேரூர் சுந்தரவரதப் பெருமாள் கோயில் முதலிய ஆலயங்களில் காணலாம். இவை தவிர, திருச்சுற்றுக்களில் குறிப்பிட்ட திக்குகளில் கணபதி, முருகன் சேட்டை, தாய்மார் எழுவர் முதலிய பரிவார தேவதைகளுக்கு சிற்றாலயங்களையும் அமைத்தனர். இவற்றிற்குப் பரிவாராலயம் என்று பெயர்.

### கோபுரங்கள்

திருக்கோயிலின் வாயில்களைப் பொலியச் செய்யும் கோபுரங்கள் பல்லவர் காலம் வரை மிகச் சிறியனவாகவே, இருந்தன. மாமல்லபுரம் கடற்கரைக் கோயில் காஞ்சி கைலாயநாதர் கோயில் முதலியன அந்நிலையை நமக்கு உணர்த்துவன. முற்காலச் சோழர் காலத்தில் கோபுரம் விமானத்தைவிட உயரத்தில் மிகச் சிறியனவாகவே அமைந்துள்ளன. முதலாம் இராஜராஜன் காலத்தில் இரு கோபுர வாயில்கள் கட்டப்பட்டன. அவ்விரண்டில் வெளிக் கோபுரம் உட்கோபுரத்தைவிடச் சிறிது உயரமாக அமைக்கப்பட்டது. அதைப் பின்பற்றியே கங்கைகொண்ட சோழபுரம், இராஜராஜேச்சுரம் (தாராசுரம்), திரிபுவனம் ஆகிய மூன்றிடங்களிலும் கோபுரங்கள் அமைந்தன. அதே காலத்தில் நான்கு திசைகளிலும் கோபுர வாயில் அமைக்கப்பட்டதைத் தில்லையில் காணுகிறோம். பாண்டியர்களும் பல்லவ சிற்றரசனான கோப்பெருஞ்சிங்கனும் அந்நெறியைப் பின்பற்றியுள்ளார்கள். அக்காலத்திய கோபுரங்களை, திருவண்ணாமலை, மதுரை, விருத்தாசலம் முதலான இடங்களில் காணலாம். விஜயநகர மன்னர் கிருஷ்ணதேவராயர் கோபுரங்களை உயரமாக எழுப்புவதில் பேரார்வம் காட்டினார். நாயக்கர் மன்னர் காலத்தில் உயரத்தோடு மட்டுமின்றி சுதை ஓவியங்கள் நிரம்பியனவாயும் அமைக்கப்பட்டன. அவ்வகைக் கோபுரங்களை மதுரை, நெல்லை, வில்லிபுத்தூர், திருவதிகை முதலிய இடங்களில் காணலாம். அளவில் மட்டுமின்றி வடிவிலும் பல வகைகளை நாயக்கர்கள் கையாண்டுள்ளனர். அகலம், உயரம், உட்கூடு, பருமன் ஆகிய அனைத்திலும் திருவண்ணாமலைக் கோபுரம் இணையற்றதாக விளங்குகிறது. இவ்வாறு அமைந்த கோபுரங்களில், தில்லை, குடந்தை, விருத்தாசலம் முதலான ஊர்களின் கோபுரங்களில் நாட்டிய ஓவியங்கள் நூலிலக்கணப்படி அமைக்கப்பட்டுள்ளமை கண்ணுக்கும் கருத்துக்கும் நல் விருந்தாகும்.

### மண்டபங்கள்

கோயில்களில் மண்டபம் கட்டுவது பல்லவர் காலம் முதலே காணப்படுகிறது. திருவுண்ணா

ழிக்கும் அதை யொட்டிய இடைகழிக்கும் முன்பாக, அத்துடன் ஒட்டாமல் தனித்தமைந்த மண்டபம் கைலாயநாதர் கோயிலில் உண்டு. முற்கால சோழர் காலத்தில் அர்த்த மண்டபத்தின் முன்பாக மகா மண்டபம் அமைக்கப்பட்டன. அதன் பின்னர் மண்டபங்கள் அளவாலும் அமைதியாலும் பலவகை ஆயின. அதே காலத்தில் நூற்றுக்கால், ஆயிரக்கால் மண்டபங்களும் தோன்றின. திருவாரூர் தேவாசிரிய மண்டபம் வரலாற்றுச் சிறப்புடையது. தில்லையில் உள்ள நூற்றுக்கால் மண்டபம் விக்கிரம சோழன் காலத்தில் கட்டப்பட்டது. ஆயிரக்கால் மண்டபத்தில் திருத்தொண்டர் புராணத்தை சேக்கிழார் அரங்கேற்றினர் என்பது வரலாறு.

விஜயநகர மன்னர்கள் சிற்பம் செறிந்த கற்றூண்களுடன் மண்டபங்களைத் தோற்றுவித்தனர். அத்தகைய மண்டபங்களில் வேலூர் கல்யாண மண்டபமும், திருவரங்கத்திலுள்ள குதிரை மண்டபமும், காஞ்சியிலுள்ள நூற்றுக்கால் மண்டபமும் கலைக்களஞ்சியங்களாகும். பெரிய திருச்சுற்றுக்களைப் பரவலாக அமைத்தவர்கள் நாயக்க மன்னர்களே. ஆங்கே அழகொழுகும் பெரிய சிலைகளை அமைத்தனர். மதுரை, நெல்லை, கிருஷ்ணபுரம், தென்காசி போன்ற இடங்களில் அவற்றைக் காணலாம். இவற்றிற்குப் பின்னரே உலகப் புகழ் வாய்ந்த இராமேசுரம் திருச்சுற்று கட்டப்பட்டது.

### ஓவியம் பொது வகையில் மூன்றென மொழிவர்

1. பட ஓவியம் (சித்ராபாசம்)–Drawing
2. புடை ஓவியம் (அர்த்த–சித்ரம்)–Bas–Relief
3. முழு ஓவியம் (பூர்ண–சித்ரம்)–Image

தமிழகத்தின் ஓவியக் கலைஞர் தொடக்கத்தில் சமைத்த கல்லோவியங்கள் மேற்கண்ட நெறியிலேயே வளர்ந்து வந்திருப்பதைக் கூர்ந்து நோக்குவோர் நன்கு அறியலாம்.

### சிற்பங்கள்

சிற்பக்கலை தமிழகத்தில் கை வந்த ஒரு கலை. சங்க இலக்கியம் முதலாக தற்கால இலக்கியம் ஈறாக சிற்பக்கலையின் அருமை பாராட்டும் செய்திகள் பலவற்றை நாம் அறிவோம். பத்தினிக் கடவுளாம் கண்ணகிக்கு சிலை சமைக்க இமயத்திலிருந்து கல் கொணர்ந்தான் சேரன் செங்குட்டுவன். அக்கல்லில் ஆக்கிய அச் சிற்பத்தை "கைவினை முற்றிய தெய்வப் படிமம்" என வாய் மணக்கப் பேசும் சிலப்பதிகாரம். சிற்பிகளை 'கற்கவி' என்று பெயர் சூட்டி மகிழ்ந்தனர் முந்தையோர்.

### படிமக் கலை

பலவகை உருவங்களை பண்டை நாளில் மண்ணால் வனைந்தனர். பின்னர் மண்ணால் வனைந்த அப் பாவைகளை நெருப்பில் வேக வைத்து சுடுமண் பாவைகளாக நெடுங்காலம் நிற்க வழி செய்தனர். மரத்தாலும் சுதையாலும் உருவங்களைச் சமைத்து மகிழ்ந்தனர். அதற்குப் பின்னர் கல்லில் பொளிந்து உருவங்களைத் தோற்றுவித்தனர். அத்துடன் செம்பு அல்லது பிற கலப்பு உலோகங்களை உருக்கி வடித்துத் திரு உருவங்களைச் சமைத்தனர். இறையன்பும் கலையறிவும் அழகுணர்வும் வளர வளர ஆயிரமாயிரம் வகைகளில் தெய்வத்திரு மேனிகளையும் பிற படிமங்களையும் படைக்கலாயினர். வேதம், ஆகமம் முதலியவற்றில் குறிக்கப்படும் அளவைகளை மனத்திற் கொண்டு திரு உருவங்கள் ஆக்கப்பட்டிருக்கின்றன. நாயன்மார்கள், ஆழ்வார்கள் காலத்திற்குப் பிறகு அவர்களின் திருப் பாசுரங்களில் காணப்படும் அமைதியை மனத்திற் கொண்டும் பற்பல திருமேனிகள் படைக்கப்பட்டிருக்கின்றன.

# சிற்பக் கைகள்

## வை. கணபதி ஸ்தபதி

நம் நாட்டுச் சிற்பக் கலை மரபின் சிறப்பியல்புகளில் ஒன்று ஆடற்கலையின் இலக்கணங்களை இக்கலையில் புகுத்தியமையாகும். சிற்ப வடிவங்கள் நின்றாலும், அமர்ந்தாலும், கிடந்தாலும் வேறு எந்த அமைதியில் இருப்பினும் அவை ஆடற்கலை இலக்கணத்திற்கு ஏற்றவாறு அமைந்திருப்பதைக் காணலாம்.

ஆனால், சிற்பியானவன் ஆடற் கலை இலக்கணத்தை அப்படியே கையாளவில்லை. அதற்கு மாறாக, ஆடற்கலை இலக்கணத்தை நன்கு உணர்ந்து, மனத்துட்கொண்டு, வேண்டிய அளவிற்கு அதைத் தழுவித் தன்னுடைய அழகுணர்ச்சியையும் புகுத்தி, தான் எப்பொருளில் எவ்விடத்தில் எதற்காக அமைக்கின்றானோ அவற்றிற்கேற்றவாறு, சிற்ப வடிவத்தை ஒடித்து, வளைத்து, நெளித்து, கைகளையும் கால்களையும் பல அமைதிகளில் காட்டி, பார்ப்போர், கலை அழகை மட்டுமின்றி அதன் உட்கிடையையும் உணருமாறு செய்துவிடுகிறான். இத்தகைய செயலில் ஈடுபடும்பொழுது உடற்கூறுகளை இயல்புக்கு மீறி மிகையாக அமைக்க வேண்டிய அவசியம் ஏற்படுகின்றது. இதனால், கை முத்திரைகளிலும் ஆசனங்களிலும் உடல் வளைவுகளிலும் தனித்தன்மை உருவாகிறது. அதனால், சிற்பக் கை அமைதி, உடல் அமைதி பற்றிய வரம்புகளை உணர்த்தும் இலக்கண நூல்கள் தோன்றுவதாயின.

சிற்பக் கைகள் 32 வகைப்படும். அவற்றில் கீழ்க்கண்ட கை முத்திரைகளே கையாளப்படுகின்றன. அவற்றை 'கை அமைதி' என்றும், 'சிற்பக்கை' என்றும், 'முத்திரை' என்றும், 'ஹஸ்த முத்திரை' என்றும் நம் நாட்டுச் சிற்பிகள் கூறுகிறார்கள்.

இந்த முப்பத்திரண்டு ஹஸ்த பேதங்களையும் படமாகப் பின்னே காணலாம்.



1. அபய முத்திரை
(காக்கும் கை)



2. வரத முத்திரை
(வழங்கு கரம்)



3. சிம்ஹ கர்ண முத்திரை
(சிங்கக் காது)



4. அஞ்சலி முத்திரை
(வணங்கும் கை)



5. வியாக்யான முத்திரை
(கற்பித்தல்)



6. பூஸ்பரிச முத்திரை
(நிலத்தைத் தொடும் கை)



7. அலபதும முத்திரை
(மலர்ந்த தாமரை)



8. கெஜ அஸ்தம்
(தும்பிக் கை)



9. டோல கரம்
(தொங்குகரம்)



10. டமருக ஹஸ்தம்
(துடிக் கை)



11. ஆலிங்கன அஸ்தம்
(அணைக்கும் கை)



12. ஊரு ஹஸ்தம்
(தொடைக்.கை)



13. விவர்த்தித கரம்
(சுழற் கை)



14. கடக முத்திரை
(நண்டுப்பிடி)



15. தர்ஜனி முத்திரை
(அச்சுறுத்தும் கை)



16. கர்த்தரீ முகம்
(கத்தரிக்கோல்)



17. விஸ்மய முத்திரை
(வியப்பு)



18. ஞான முத்திரை
(அறிவுக் கை)



19. தியான முத்திரை
(சிந்தனைக் கை)



20. அர்த்த சந்திர முத்திரை
(பிறை)



21. சூசி முத்திரை
(சுட்டும் கை)



22. அர்த்த பதாகம்
(அரைக்கொடி)



23. ஆகூய வரதம்
(அழைத்து வழங்கும் கை)



21. முஷ்டி
(முட்டி)



25. நித்ரா அஸ்தம்
(ஊன்றிய கை)



26. பல்லவ அஸ்தம்
(தளிர்க் கை)



27. தனுர் அஸ்தம்
(விற் பிடி)



28. தாடன அஸ்தம்
(அடிக்கும் கை)



29. நாட்டிய கரம்
(எழிற் கை)



30. தண்ட அஸ்தம்
(நீட்டிய கரம்)



31. கடி அஸ்தம்
(இடைக் கை)



32. தர்ம சக்கர முத்திரை
(அறவாழிக் கை)

# படிமத் திருக்கோலங்கள்

வை. கணபதி, ஸ்தபதி

தெய்வப் படிமங்களின் திருக்கோலங்கள் 'ஆசனங்கள்' எனப்படும். அவற்றை முறைப் படுத்தி ஐவகையாக வகுத்துள்ளன சிற்ப நூல்கள். அவை முறையே ஸ்தானகம், ஆஸனம், சயனம், ஸ்தானுசனம், சயனுசனம் ஆகும். இவற்றை ஐந்தொழில் என்றும், 'பஞ்ச கிருத்யம்' என்றும் விசுவகர்மீயம் என்ற சிற்ப நூல் கூறும்.

நின்ற கோலத்தை ஸ்தானகம் என்றும், அமர்ந்த கோலத்தை ஆஸனம் என்றும், கிடந்த கோலத்தை சயனம் என்றும், நின்ற கோலத்தைச் சார்ந்த பிற சாயல்களை ஸ்தானுசனம் என்றும், கிடந்த கோலத்தைச் சார்ந்த பிற சாயல்களை சயனுசனம் என்றும் ஐந்து பொது வகையாக நாம் கூறுகிறோம்.

ஆஸனம் என்ற சொல் அமர்ந்த நிலையைக் காட்டுவதோடல்லாமல் கோலம் (Posture) என்ற பொருளையும் உணர்த்தும்.

தலையையும் உடலையும் நேராக நிமிர்த்தி ஒரு பாற் கோடாமல், சமநிலையில் கைகளையும் கால் களையும் அமைத்து, நேர் நோக்குடையதாக அமைக்கப்படும் சிற்ப அமைதிக்கு சமபாத ஸ்தானகம் என்று பெயர்.

இந் நிலையிலேயே இரு உட்பிரிவுகளும் உண்டு. ஒன்றை வைதஸ்திக ஸ்தானகம் என்றும் மற்றொன்றை அர்த்த வைதஸ்திக ஸ்தானகம் என்றும் அழைக்கிறோம். சமபாத ஸ்தானக நிலையில் பாதங்களின் இடைவெளி ஒரு விதஸ்தி (சாண்) அளவிருப்பின் இந்நிலை வைதஸ்திக ஸ்தானகம் என்றும், அரைச்சாண் இடை வெளியே இருப்பின் அர்த்த வைதஸ்திக ஸ்தானகம் என்றும் கூறப்படும்.

ஒரு காலை நன்றாக ஊன்றி, மற்றதைச் சிறிது $2\frac{1}{2}$ சாண் இடைவெளியில் காலை எட்டி வைத்து நிமிர்ந்து அழகுற நிற்கும் நிலை வைசாக ஸ்தானகம் என்று கூறப்படும். இவ்வாசனத்தை வில்லேந்திய வேலவன் திருக்கோலத்தில் காண லாம். வளைத்த காலை பக்கவாட்டிலாதல் கோண வாக்கிலாதல் அமைப்பதும் உண்டு. எல்லோ ராச் சிற்பங்களில் இந்நிலையைக் காணலாம். விசாக நட்சத்திரத்தில் தோன்றிய முருகனை வைசாகன் என்று அழைப்பதுண்டு. இது அவரது விசேட நிலையாதலால் இதனை வைசாக ஸ்தானகம் என்று அழைப்பதாயிற்று.

ஸ்தானுசன வகையில் வைஷ்ணவம் என்றொரு கோலமும் உண்டு. இந்நிலை, ஒரு காலை நன்றாக ஊன்றி மற்றொரு காலை சிறிதே மடக்கி உடல் வளைவோடு கூடி அமைக்கப்படும். இதனை ஸ்தித குஞ்சித நிலை என்று சிற்பிகள் கூறுவர். இக்கோலம் சாந்த நிலையைக் காட் டுவதாகும். சிவமூர்த்தங்களிலும் விஷ்ணுமூர்த் தங்களிலும் சக்தி வடிவங்களிலும் சாத்விக பாவத்தை உணர்த்த இது கையாளப்படுகிறது.

ஒரு காலை ஸ்திதமாக ஊன்றி மற்றொரு காலை குறுக்கே வைத்து நிற்கும் நிலை ஸ்வஸ்திகா சனம் என்றழைக்கப்படும். குழலூதும் கண்ண னின் திருக்கோலத்திலும் ரிஷபாந்திக சிவமூர்த் தத்திலும் கொடிப் பெண் வடிவங்களிலும் இந்நிலை காட்டப்படுகின்றது.

அமர்ந்த கோலத்தில் வீற்றிருக்கும் படிமங் களில் சுகாஸனம், பத்மாசனம், அர்த்த பத்மா சனம், வீராசனம், உத்குடிகாசனம், யோகா சனம் ஆகியவை விசேட ஆசனங்களாகும்.

உடலை எப்பக்கத்திலும் சாய்வின்றி நேராக நிமிர்த்திக் கைகளைச் சமச் சீருடையதாக கோலித்து, ஒருகாலை ஆசனத்தின் மீது படுக் கையாகக் கிடத்தி, மற்றொரு காலைச் சுகமாகத் தொங்கவிட்டு அமர்ந்திருக்கும் நிலைக்கு, சுகா ஸனம் என்று பெயர். தனித்த சிவமூர்த்தங் களையும் விஷ்ணுமூர்த்தங்களையும் ஒரு சில சக்தி வடிவங்களையும் கோலத்தை உணர்த்த சுகா ஸனம் என்ற அடை சேர்த்தே வழங்குவதுண்டு. எடுத்துக்காட்டாக, அமர்ந்த கேவல சிவமூர்த் தத்தை, சுகாஸன சிவமூர்த்தம் என்று அழைக் கிறோம்.

அமர்ந்த நிலையில் உடலை நேரியதாக அமைத் துக்கொண்டு இரு பாதங்களை ஒன்றுக்கொன்று குறுக்காகவும், தொடைமீது கிடத்தியும், பாதங்

களின் அடிப்பக்கம் மேல் நோக்கியும் அமையு மாறு செய்த ஆசனத்தை பத்மாசனம் என்றும் பர்யங்காசனம் என்றும் கூறுகிறோம். பர்யங்கம் என்றால் படுக்கை என்பது பொருள். இரு பாதங்களில் ஒன்றினைச் சாதாரணமாக ஆசனத்தில் கிடத்தி மற்றொன்றைத் தொடைமீது கிடத்தி பாதத்தின் அடிப்பகுதி மேல் நோக்கித் தெரியும் வண்ணம் அமைத்துக்கொண்டு அமர்ந்த நிலைக்கு அர்த்த பத்மாசனம் என்றும் அர்த்த பர்யங்காசனம் என்றும் பெயர். முன்னையது தியான நிலையில் அமைக்கப்படும் பிரதிமைகளில் காட்டப்படுகின்றது; பின்னையதைக் கங்கை கொண்ட சோழபுரத்து ஞானசரஸ்வதிப் படிமத்தில் காணலாம்.

அமர்ந்த நிலையில், ஒரு காலை பிகுவாகத் தொங்கவிட்டு ஊன்றி மற்றொரு காலை அதன் மீது படுக்கையாகவும் விரைப்பாகவும் கிடத்தி நீட்டி உடலை சமநிலையிற் கொண்டு விரைப்பாக நிமிர்த்தி ராஜஸ நோக்குடன் அமைந்த கோலத்தை வீராசனம் என்றும் ராஜலிங்காசனம் என்றும் கூறுகிறோம். இதனை வியாக்யான தக்ஷிணாமூர்த்தத்தில் சிறப்பாகக் காணுகிறோம். உலகத்திற்கு நீதி புகட்டும் ஆசிரியரின் கோலமும் இஃதே. இராஜராஜேஸ்வரி போன்ற ஒப்பற்ற சுதந்திர சக்திகளையும் இந்நிலையில் அமர்த்துவதுண்டு.

ஒரு காலைத் தொங்கவிட்டு மற்றொரு காலை மடக்கி ஆசனத்தின் மீது ஊன்றி அமர்ந்த நிலைக்கு உத்குடிகாசனம் என்று பெயர். தியான தக்ஷிணாமூர்த்தியையும், ஐயனாரையும் இவ்வாசனத்தில் அமர்த்துவதுண்டு. இதனை ஒருசிலர் ஊர்த்வஜானு என்றும் கூறுகின்றனர். இந்நிலையில் தாண்டவகரணம் ஒன்றிருப்பினும் இந்நிலையில் திரிபுர சம்மார மூர்த்தி அம்பு எய்யும் கோலத்தில் காட்டப்படுகின்றது. ஒரு காலைக் கீழே ஊன்றி மற்றொரு காலை தேரின் மேல் தட்டில் தூக்கிவைத்து நிற்கும் ஸ்தானக நிலையை இது சாருகின்றது.

உத்குடிகாசனக் கோலத்தில் யோகப்பட்டம் தரித்து, தியான நிலையில் கற்பிக்கப்படும் பிரதிமையை யோகாசனத்தில் இருப்பதாகவும் நடப்பில் சொல்லி வருகிறோம்.

ஆஸனத்தில் அமர்ந்து, இரு கால்களை குறுக்காகப் பின்னிக்கொண்டு இரு கைகளை முழங்கால்கள் மீது நேராக நீட்டி கரதலத்தை இலை போன்று தொங்கவிட்டு யோக பட்டம் தரித்து யோக நிலையில் உள்ள கோலத்தை யோகாசனம் என்று அழைக்கிறோம். கால்கள் இரண்டும் குறுக்காக—ஸ்வஸ்திகமாக–அமைவதால் இதனை ஸ்வஸ்திகாசனம் என்றும் அழைப்பதுண்டு. நீட்டிய கைகள் கஜஹஸ்த பாவனையில் அமைக்கப்படுவதால், இதனை, கஜ ஹஸ்தாசனம் என்றும் கூறுவதுண்டு.

ஆஸன வகையில் ஆலீடம், பிரத்தியாலீடம் என்ற இரு கோலங்களும் இடம் பெற்றிருக்கின்றன. இடது காலை முன்னே எட்டி வைத்து வலது காலை பின்னோக்கி நீட்டி கணை எய்யும் கோலத்தில் ஆலீடம் என்றும், கணை எய்தபின் ஏற்படும் பின்வாங்கிய நிலைக்கு பிரத்தியாலீடம் என்றும் சொல்லுகிறோம்.

சயனம் இருவகைப்படும். கால்களையும் கைகளையும் நீட்டி மல்லாந்து படுத்த நிலைக்கு சாதாரண சயனம் என்றும், ஒரு காலை நீட்டி மற்றொரு காலைக் குஞ்சிதமாக (சிறிது மடக்கி) வைத்துக் கிடந்த நிலைக்கு அர்த்தாங்க சயனம் என்றும் பெயர். சாதாரண சயன நிலையில் ஒரு பக்கத்தில் சற்று சாய்ந்து படுத்த நிலையையும் ஒரு சில ஆசிரியர்கள் அர்த்தாங்க சயனம் என்றழைக்கின்றனர்.

உடலையும் தலையையும் இடது புறமாதல் வலது புறமாதல் வளைத்து பார்ப்போர் உள்ளத்தில் ரசானுபவம் தோன்றுமாறு சிற்ப ஆசனங்களில் பங்க இலக்கணம் இடம் பெறச் செய்யப்படுகின்றது. உடல் ஒடிவை பங்கமென்று நூல்கள் கூறும். பங்கங்கள் மூன்று. அவை முறையே ஆபங்கம், சமபங்கம், அதிபங்கம் ஆகும்.

ஆபங்கம் சாத்விக பாவத்தையும், சமபங்கம் ராஜஸ பாவத்தையும் அதிபங்கம் தாமஸ பாவத்தையும் உணர்த்துவனவாம்.

இம்மூன்று பங்கங்களையும் சேர்த்து திரிபங்கம் என்றும், ஒவ்வொரு பங்கத்திலும் மூன்று ஒடிவுகள் இருப்பதால் ஒவ்வொன்றையும் பொதுப் படையாக திரிபங்கம் என்றும் கூறுகிறோம்.

# கல்வெட்டுகள் தரும் செய்திகள்

சா. கணேசன்

தமிழ்நாட்டில் கோயிலில்லா ஊர் இல்லை. பண்டை நாளில் கோயில்கள் சிறந்து விளங்கின. ஊர் நிர்வாகங்கள் முழுவதும் கோயில்களிலேயே நடந்தன. எனவே, பலவகைச் செய்திகளையும் தருகிற கல்வெட்டுகள் கோயில் சுவர்களிலேயே அமைக்கப்பட்டன. அன்றியும் அவ்வக் கோயில்களுக்கு வழங்கப்பட்ட பலவகை மானியங்களைப் பற்றியும் அவற்றில் காணலாம்.

தமிழகத்தில் கல்வெட்டுகள் தமிழிலும் ஸம்ஸ்கிருதத்திலும் பொறிக்கப்பட்டன. தமிழ் மொழியைத் தமிழ் எழுத்திலும், ஸம்ஸ்கிருதத்தைக் கிரந்த எழுத்திலும் பொறித்தனர்.

கல்வெட்டுகளில் பெரும்பாலும் முதலில் 'ஸ்வஸ்தி' 'ஸ்ரீ' என்ற இரு சொற்கள் காணப்படும். அதற்கு அடுத்து மெய்க்கீர்த்தி ; அதன் பின் மன்னன் பெயரும் அவன் ஆட்சியாண்டும் காணப்படும்....க்கு யாண்டு பத்தாவது என்றால் அம்மன்னன் பட்டத்திற்கு வந்து ஒன்பதாண்டுகள் முடிந்து பத்தாவது ஆண்டு நடக்கிறது என்று பொருள். எனவே, ஒரு மன்னனுடைய முப்பதாவது ஆண்டுக் கல்வெட்டு கிடைத்தால் அம்மன்னன் முப்பது ஆண்டுகளுக்குக் குறையாத காலம் ஆட்சி செய்தான் என்பது புலப்படும். இங்ஙனமே அரசர்கள் ஆண்ட கால அளவை ஓரளவு செம்மையாகக் கணக்கிட முடியும்.

மெய்க்கீர்த்திகளி லிருந்து அம்மன்னனின் அருஞ்செயல்கள், போர் வெற்றிகள், அறக்கொடைகள், விருதுப் பெயர்கள் போன்ற பல வரலாற்றுக் குறிப்புகளை அறிய முடியும்.

கல்வெட்டுகளில் நாட்டுப் பிரிவு மிகத் தெளிவாகக் குறிக்கப்படும். எடுத்துக்காட்டாக, "பாண்டியகுலாசனி வளநாட்டு, தஞ்சாவூர்க் கூற்றத்து, தஞ்சாவூர்" என இராஜராஜனின் தஞ்சாவூர்க் கல்வெட்டில் காணலாம். வளநாடு என்பது தற்காலத்திய மாவட்டம் (District) என்றும், கூற்றம் என்றால் வட்டம் (Taluk) என்றும் கொள்ள வேண்டும். இங்ஙனமே வளநாட்டைக் கோட்டம் என்றும், கூற்றத்தை நாடு என்றும் குறிப்பிடவும் பெறும்.

கல்வெட்டுகளில் பலவகை அறக்கொடைகளும் காணப்படும். அவற்றிற்கு உடலாக (மூலதனமாக) நிலம், ஆடுமாடுகள் அல்லது பொன் (cash) கொடுத்ததும் புலப்படுத்தப்படும். அறக்கொடைகளில் நந்தாவிளக்கு எரிப்பதற்காக என்றும், பூசை படித்தரத்திற்காக என்றும், நாள்தோறும் மலர், மாலை, வழங்குவதற்காக என்றும், திருப்பதியம் (தேவாரம், பிரபந்தம்) ஓதுவதற்காக என்றும், இசைக் கருவிகள் ஒலிப்பதற்காக என்றும், நாட்டியம் ஆடுவதற்காக என்றும், திருவிழா எடுப்பதற்காக என்றும், கோயில்-திருப்பணி செய்வதற்காக என்றும், இன்ன பிற பணிகளுக்காக என்றும் குறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். அன்றியும் திருமேனிகள் எழுந்தருளுவித்த செய்தியும், ஆபரணங்கள் கொடுத்த செய்தியும் கல்வெட்டுகளால் புலப்படுத்தப்படும்.

பல்வேறு பகுதிகளிலும் வழக்கிலிருந்த வேலி, மா, குழி, குறுக்கம், செய், தடி போன்ற பலவகை நில அளவைகளை கல்வெட்டுகளில் காணலாம். பொதி, கலம், மரக்கால், நாழி, குறுணி, உழக்கு போன்ற பெய்தல், முகத்தல் அளவைகளையும், பலம், கழஞ்சு, வராகனெடை, கழஞ்சு, குன்றி போன்ற பொன் நிறுவை அளவைகளையும், பாரம், துலாம், வீசை, பலம் போன்ற பண்ட நிறுவை அளவைகளையும், பாகம், முழம், சாண், விரல் போன்ற நீட்டல் அளவைகளையும் கல்வெட்டுகள் உணர்த்தும்.

முதலீட்டுக்கு பொலிசைப் பலியூட்டு (வட்டி) விவரமும், பல்வேறு துறை மக்களின் ஊதிய விவரமும், பல்வேறு மக்கள் செலுத்தும் பல்வகை வரியும், வரிவிதிப்புக் குரியவை எவை எவை என்பதும், குற்றத்திற்குரிய தண்டனை விவரமும், பல்வேறு பணிக் குரியவர்களுடைய தகுதியும், இன்னும் இவை போன்ற பொருளாதார, சமுதாய, ஒழுங்கு முறை விதிகளும் கல்வெட்டுகளால் அறியக் கிடக்கின்றன.

கல்வி முறை பற்றிய விவரங்களும்கூடக் கல்வெட்டுகளி லிருந்து கிடைக்கின்றன. அடிப்படைக் கல்வியே யன்றி பல்கலை பயிலும் கல்லூரிகளும் இருந்தன. அவை பெருங் கோயில்களிலேயே அமைந்திருந்தன. எனவே, அவற்றைத் "திருச்சுற்றாலைக் கல்லூரி" என, கல்வெட்டுகள் கூறும். அங்கு என்னென்ன கலைகள் கற்பிக்கப்பட்டன ; ஆசிரியன்மார் தகுதி என்ன ; அவருக்கு அளித்த ஊதியம்

அல்லது நிலக்கொடை விவரம்; ஒவ்வொரு துறையிலும் எத்தனை மாணாக்கர்கள் பயின்றனர்; ஊராட்சி முதலியவற்றில் மாணாக்கர்கள் பங்கு பெறலாமா, கூடாதா? என்பன போன்ற செய்திகளும், விளக்கங்களும் கல்வெட்டுகளிலிருந்து கிடைக்கின்றன.

சிறந்த பெருங்கோயில்களில் ஆதுரசாலைகள் (ஆஸ்பத்திரி), ஆதுலர் சாலைகள் (ஆற்றமாட்டார் புகலிடம்) ஆகியவை இருந்தன. ஆதுரசாலைகளில் மருத்துவப் பணி புரிந்தவர்களுக்கு விட்ட மானியம், அதாவது "வைத்தியக்காணி" அல்லது "வைத்திய விருத்தி" நிலம் பற்றிய குறிப்புக்களுடன், எத்தனை பேருக்கு அங்கு வைத்திய வசதி உண்டு; அறுவை வைத்தியம் செய்பவர் தொகை எவ்வளவு; நோயாளருக்குக் கொடுத்த பத்திய உணவு யாவை; என்பனவும், மருந்து வகைகள் சேமித்து வைக்கப்பட்டிருந்த கணக்கு போன்றவையும் கல்வெட்டுகளிலிருந்து காணமுடிகின்றன.

ஒரு நாட்டின் செம்மையான வரலாற்றை அந்நாட்டில் வழங்கிய எழுத்துக்களின் மூலம் எப்பொழுது கணிக்கப்பட முடிகிறதோ அது தொடங்கியே வரலாற்றுக் காலமும் தொடங்குகிறது. சிந்துவெளிப் பண்பாடுதான் இந்தியாவின் கணித்தறியக்கூடிய பண்பாட்டுக் காலம் என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. அக்காலத்தை ஐயாயிரம் ஆண்டுகளுக்கும் முந்தியது என்பர் புலவோர். அகழ்வாராய்ச்சியின் மூலம் அங்குக் கிடைத்தவற்றில் பல முத்திரைகள் காணப்படுகின்றன. அவற்றில் ஓவிய எழுத்துக்கள் (Pictograph) உள்ளன. அவ்வெழுத்துக்கள் உணர்த்தும் பொருள் என்ன என்பது இன்னும் புலப்படுத்தப்படவில்லை. எழுத்துக்கள் காணப்பட்ட போதிலும் பொருள் புலப்படாத நிலையில் அதை வரலாற்றுக்கு முந்திய காலம் என்பர். அதற்குப் பின்னர் அசோகன், பாண்டியர் காலத்துக் கல்வெட்டுகள் பொருள் புலப்படக் கிடைத்துள்ளன. எனவே, அக்காலத்தையே—அதாவது சுமார் 2500 ஆண்டுக் காலத்தை—வரலாற்றுக் காலம் என நம்மைப் பொறுத்த வரையில் கணிக்கலாம்.

அசோகர் காலத்து எழுத்துக்கள் இருவகைப்படும். ஒன்று 'பிராமி'. அது இடமிருந்து வலமாக எழுதப்படுவது. மற்றொன்று 'கரோஷ்டி', இது வலமிருந்து இடமாக (உருது எழுதுவதைப் போல) எழுதப்படுவது. இந்தியாவின் பல பகுதிகளிலும் 'பிராமி' காணப்படுகிறது. கரோஷ்டியோ இந்திய வடமேற்குப் பகுதியில் மட்டும் பொறிக்கப்பட்டது. தமிழகத்திலும் அதை யொட்டிய பகுதிகளிலும் காணப்படும் எழுத்து "தாமிழி" எனப்படும். தாமிழிக்கும் பிராமிக்கும் பொது எழுத்துக்களில் பெருமளவு ஒற்றுமை காணப்படுகிறது. ஆகவே தாமிழியை பிராமி என்று முன்னுளில் மயங்கினர். ஆனல் முதுபெரும் அறிஞர் கே. வி. சுப்பிரமணிய ஐயர் செய்த சிறந்த ஆராய்ச்சியின் மூலம் இவை பிராமி அல்ல என்பதும் தாமிழியே என்பதும் நிலைநாட்டப்பட்டன. அதைத் தொடர்ந்து நடந்து வரும் பல்வேறு அறிஞர்களின் ஆராய்ச்சியும், தமிழ் அல்லது பிற மொழிகளில் உள்ள பழம் நூல்களும், இம்முடிவுக்கு அரணும் வலிவும் ஊட்டுகின்றன.

## செப்பேடுகள்

பண்டைத் தமிழ் மன்னர்களும் பிறரும் கோயில்கள், அறநிலையங்கள் அறவோர், அறிஞர் ஆகியோர்க்கு நிலம் முதலிய கொடை வழங்கியுள்ளனர். அதற்கு பனை ஓலையில் செய்து கொடுத்த பிடிபாடு (Document)களின்படி, கல்லிலும் செம்பிலும் வெட்டப்படும். கல்வெட்டு பொது இடத்திலும் செப்புப் பட்டயம் தானம் பெற்றவரிடத்திலும் இருக்கும். அறம் அழியாதிருக்கவேண்டும். அறக் கொடை பற்றிய பிடிபாடும் அழியாதிருக்கவேண்டும் என்று முன்னோர் கருதினர். அங்ஙனம் ஒன்றுக்கு மேற்பட்ட செப்பேடுகள் செப்பு வளையத்தில் கோக்கப்பட்டு வளையத்தின் இருமுனையும் பொருத்தப்பட்டு பொருத்து வாயில் அக்காலத்து அரச இலச்சினை பதிக்கப்பட்டது.

செப்புப் பட்டயங்கள் பெரும்பாலும் இரு மொழிகளில் எழுதப்பட்டிருக்கும். முதலில் சம்ஸ்கிருதத்தில் அன்ருள் மன்னனின் குலமுறை புலப்படுத்தப்படும். அடுத்து, கொடை பற்றிய செய்தி குறிக்கப்படும். பின்னர் தமிழ்மொழியில் கொடையும் கொடைநிலம் பற்றிய எல்லைகளும் விளக்கமாகக் குறிப்பதுடன் அவ்வறக் கொடையை எவர் காத்து புரந்து, எங்ஙனம் தொடர்ந்து நடத்தி வரவேண்டுமென்பதும் விளக்கப்பட்டிருக்கும். பின்னர் சூரியனும் சந்திரனும் உள்ளவரை இதுநடைபெற வேண்டுமென்னும் விருப்பமும் புலப்படுத்தப்படும். இறுதியில் அறங்காப்போருக்கு வணக்கமும் அறம் அழிப்பார்க்குச் சாபமும் காணப்படும்.

தமிழகத்தில் பல்லவர், பாண்டியர், சோழர், விஜயநகர அரசர், நாயக்கர், முதலியோரின் செப்பேடுகள் கிடைத்துள்ளன. அவை தமிழக வரலாற்றை உணர்த்த பேருதவி புரிபவை.

# தமிழக ஊராட்சி

சா. கணேசன்

பண்டைத் தமிழகத்தில் ஒவ்வோர் ஊரும் தன்னாட்சி உடையனவாய் இருந்தன. "ஊர்" எனப்படும் ஊர்ச்சபையே ஊரை ஆண்டது. ஊர் மூவகையாகும். எல்லா நிலையிலும் உள்ள பல்வகை மக்களும் வாழ்ந்த ஊர் "மூதூர்" அல்லது 'தனியூர்' எனப்படும். அந்தணர்க்கு வழங்கிய நிலங்களோடு கூடிய பகுதி "அகரம்" அல்லது "சதுர்வேதி மங்கலம்" எனப்படும். அது பெரும்பாலும் ஒரு தனியூரின் ஒரு சிறு பகுதியாக இருக்கும். வாணிகம் செய்வோர் வாழ்ந்த இடம் "நகரம்" எனப்படும். அங்கு வணிகர்களின் உறைவிடமும் தொழிலகமும் அமைந்திருக்கும். அந்தணர்க்குரியவற்றை ஆய்ந்து முடிவு செய்யும் சபைக்கு "மஹா சபை" என்று பெயர். அதைப்போலவே வாணிகர்கள் தமக்கென அமைத்துக் கொண்ட சபைக்கு "நகரம்" என்பது பெயர். நகரமும் மஹாசபையும் ஊர்ச்சபைக்கு முரணின்றி இயங்கும். ஊரில் வாழும் அனைவரையும் "ஊரார்" என்றும் சதுர்வேதி மங்கலத்தார் அனைவரையும் "மஹாசபையார்" என்றும் நகரத்தைச் சேர்ந்த எல்லோரையும் "நகரத்தார்" என்றும் கூறுவர்.

இவையெல்லாம் இணைந்த ஒன்றிப்பை "பெருங்குறி" என்பர். பெருங்குறியுள் பல குழுக்கள் உண்டு. அவற்றை வாரியம் என்பர். தோட்டங்களை கண்காணிப்பது "தோட்டவாரியம்" ஆகும். ஏரிகளைப் பாது காத்து நீர் பாய ஒழுங்கு செய்யும் குழு "ஏரி வாரியம்" ஆகும். பொன், நாணயம் ஆகியவற்றை மதிப்பீடு செய்யும் குழு "பொன்வாரியம்" ஆகும். இங்ஙனம் ஊரின் நிலைமைக்கும் தேவைக்கும் ஏற்ப வாரியங்கள் பலவகையாக அமையும்.

ஊர் என்னும் ஊர்ச்சபையில் பதவி கொள்ளும் உறுப்பினர்களை "ஊர்ப் பெருமக்கள்" என்றும் குழுக்களில் பதவி கொள்ளும் உறுப்பினர்களை "வாரியப் பெருமக்கள்" என்றும் வழங்கினர். இவ் வாரியங்களுக்கு ஊரார் தங்களுள் சிலரை பெருமக்களாகத் தேர்ந்தெடுப்பர். அம் முறைக்குக் "குடவோலை முறை" என்று பெயர். பெருமகனாக அதாவது பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட தகுதி யுள்ளார் பெயர்களைத் தனித்தனி ஓலைத் துண்டுகளில் எழுதி அவற்றைக் குடத்துள் போடுவர். விவரம் அறியா சிறுவன் ஒருவனைக் கொண்டு அக் குடத்தில் உள்ள ஓலை ஒன்றை எடுக்கச் செய்வர். எவர் பெயர் எடுபடுகிறதோ அவரே தேர்ந்தெடுக்கப் பெற்றவர். இப்படியே அவ்வக் குழுவுக்கும் உள்ள எண்ணிக்கைப்படி பெருமக்கள் தேர்ந்தெடுக்கப் பெறுவர். இம் முறையால் ஊழல் ஒன்றும் ஏற்படாமல் சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு மேல் தமிழகத்தில் ஊராட்சி நடைபெற்றிருக்கிறது. இத்தகைய முறை உலகில் வேறெந்தப் பகுதியிலும் இருந்ததாக நாம் அறியக் கூடவில்லை. இம்முறை கல்வெட்டுக்களாலும் புலப்படுத்தப்படுகிறது.

இச் சபைகளும், நாடு, கோட்டம் போன்ற பல்வேறு சபைகள் எல்லாமும் கோயில்களிலேயே இருந்து பணியாற்றி உள்ளன. கோயில்கள் வழிபாட்டு இடங்களாக மட்டுமின்றி வழிகாட்டும் இடங்களாகவும் எத்தனையோ நூற்றாண்டுகளாகப் பணியாற்றி வந்துள்ளன. இன்றும் சில இடங்களில் பணியாற்றிக் கொண்டும் உள்ளன. கோயில்கள் பள்ளிகளாகவும் கல்லூரிகளாகவும் ஆய்வுக் கூடங்களாகவும் தொன்றுதொட்டு பணி புரிந்து வந்திருக்கின்றன.

பழைய கோயில்களுக்குச் சென்று பார்த்தால் எத்தனை எத்தனையோ கல்வெட்டுக்களைக் காண முடிகிறது. அக் கல்வெட்டுக்களெல்லாம் என்ன தெரிவிக்கின்றன? நமது முன்னோர்களைப் பற்றியும் அவர்கள் வாழ்ந்த முறைகளைப் பற்றியும், அவர்களின் பழக்க, வழக்க, ஒழுக்க, நாகரிகப் பண்பாடுகளைப் பற்றியும்பல செய்திகளை நமக்குத் தெரிவிக்கின்றன. அவற்றால் ஒவ்வொரு ஊரின், நாட்டின் அல்லது மாநிலத்தின், வரலாற்றை நாம் புரிந்து கொள்ள முடிகிறது. உலகின் வேறு எந்த நாட்டார்க்கும் அல்லது மொழியார்க்கும் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குக்

குறையாத காலத்து வரலாறு இத்தகைய செம்மைச் சான்றுகளுடன் கிடைப்பது அரிது. இது தமிழ்நாட்டுக்கே வாய்த்த தனிப்பெருமை.

தமிழ் நாட்டை அசோகன் ஆளவில்லை. தமிழ் மன்னர்களுடன் நட்புறவு கொண்டிருந்தான். அக்காலத்தே தமிழகத்தில் சமண முனிவர்கள் மலைக் குகைகளில் நோன்பிகளாக வாழ்ந்திருந்தனர். அத்தகைய இடங்கள் பலவற்றில் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. அவற்றை முன்னாளில் "பிராமி" எழுத்து என அறிஞர்கள் கருதினர். அவற்றுள், எ, ஒ, ழ, ள, ற, ன முதலான எழுத்துக்கள் காணப்படுவதைக் கொண்டு அவை பிராமி அல்ல என்றும் தமிழ் எழுத்துக்களே என்றும் உறுதியாயிற்று. அந்த வரிவடிவமே இன்றுள்ள தமிழ் வரிவடிவமாக, படிவளர்ச்சி பெற்று வந்துள்ளது என்பதைத் தொடர்ந்து வரும் கல்வெட்டுக்கள் சான்று பகர்வதைக் கொண்டும் 'சமவாயாங்க சுத்த' 'லலித விஸ்தாரம்' போன்ற நூல்களின் துணை கொண்டும் அவை தமிழெழுத்துக்களே என்ற முடிவு ஏற்படுகிறது. அதை அந் நூல்கள் "தாமிழி" என்னும் பெயரால் வழங்கும்.



# உத்தரமேரூர் ஊராட்சிக் கல்வெட்டு

| | |
|---|---|
| அரசன் | "ஸ்வஸ்தி ஸ்ரீ. மதுரை கொண்ட கோப்பரகேசரி வன்மர்க்கு. |
| காலம் | யாண்டு பதினாலாவது, நாள் பதினாறு. |
| ஊர் | காளியூர்க் கோட்டத்து, தன் கூற்று, உத்திரமேரூர் சதுர்வேதி மங்கலத்து சபையோம். |
| அரசு ஆணை | இவ்வாண்டு முதல் எங்களுக்கு பெருமானடிகள் எம்பெருமான் ஸ்ரீவீர நாராயணன் ஸ்ரீபராந்தக தேவன் ஸ்ரீபரகேசரி மன்னருடைய ஸ்ரீமுகம் வரக்காட்ட ஸ்ரீமுகப்படி ஆக்ஞையினால் |
| அரசு அதிகாரி | சோழநாட்டு புறங்குறும்பை நாட்டு ஸ்ரீவங்கநகர் கரஞ்சை கொண்டய க்ரமவித்தபட்டன் ஆகிய சோமாசிபெருமான் இருந்து. |
| ஊரார் எடுத்த முடிவு | வாரிய மாக ஆட்டொருகாலும் சம்வத்ஸர வாரியமும், தோட்ட வாரியமும், ஏரி வாரியமும் இடுவதற்கு வ்யவஸ்தை செய்த பரிசாவது : |
| குடும்பு | குடும்பு முப்பது. முப்பது குடும்பிலும் அவ்வக் குடும்பிலாரே கூடி......... |

தகுதியுடையோர்

1. கால் நிலத்துக்கு மேல் அரை நிலமுடையான்,
2. தன் மனையிலே அகம் எடுத்துக் கொண்டு இருப்பான்,
3. எழுபது பிராயத்தின் கீழ் முப்பத்தைந்து பிராயத்தின் மேற்பட்டான்,
4. மந்திர பிராம்மணம் வல்லான்,
5. ஓதுவித்தறிவான்,

   அல்லது

6. அரைக்கால் நிலமே உடையான் ஆயினும் ஒரு வேதம் வல்லானாய் நாலு பாஷ்யத்திலும் ஒரு பாஷ்யம் வக்கணித்து அறிவான்,
7. அவர்களிலும் கார்யத்தில் நிபுணன்,
8. ஆசாரம் (ஒழுக்கசீலம்) உடையான்,
9. அர்த்த சௌசமும் (பொருள் சுத்தம்) ஆன்ம சௌசமும் (மனச்சுத்தம்) உடையான்,
10. மூவாட்டின் இப்புறம் வாரியம் செய்திலான், பெயர் தீட்டி குடம் புக இடுவதாகவும்.

தகுதியற்றோர்

1. எப்பேர்ப்பட்ட வாரியங்களும் செய்து கணக்குக் காட்டாது இருந்தான்,
2. இவர்களுக்கு சிற்றவை பேரவை மக்கள்,
3. இவர்களுக்கு அத்தை மாமன் மக்கள்,
4. இவர்களுக்குத் தாயோடு உடன் பிறந்தான்,
5. இவர்கள் தமப்பனோடு உடன் பிறந்தான்,
6. தன்னோடு உடன் பிறந்தான்,
7. இவர்களுக்குப் பிள்ளை கொடுத்த மாமன்,
8. இவர்கள் பிராம்மணியோடு உடன் பிறந்தாளை வேட்டான்,
9. உடன் பிறந்தான் மக்கள்,
10. தன் மகள் வேட்ட மருகன்,
11. தன் தமப்பன்,
12. தன் மகன்,

13. அகம்யாக மனத்திலும் மகாபாதகங்களில் முன்படைந்த நாலு மகாபாதகத்திலும் எழுதப்பட்டான்,
14. சம்ஸர்க்கப்பதிதரை பிராயச்சித்தம் செய்யும் ஆள்,
15. சாஹஸியராய் இருப்பான்,
16. பர திரவ்யம் அபகரித்தான்,
17. எப்பேர்ப்பட்ட கையூட்டும் கொண்டான்,
18. கிருதபிராயச்சித்தம் செய்து சுத்தன் ஆனுன்,
19. பாதகம் செய்து பிராயச்சித்தம் செய்து சுத்தன் ஆனுன்,
20. கிராம கண்டகராய் பிராயச்சித்தம் செய்து சுத்தன் ஆனுன்,
21. அகம்யாகமனம் செய்து பிராயச்சித்தம் செய்து சுத்தம் ஆனுன்.

ஆக இச்சுட்டப்பட்ட இத்தனையவரையும் நீக்கி

**தேர்தல் முறை**

முப்பது குடும்பிலும் குடவோலைக்குப் பெயர் தீட்டி, இப்பன்னிரண்டு சேரியிலும் ஆக இக்குடும்பும் வெவ்வேறேவாய் ஓலை பூட்டி, முப்பது குடும்பும் வெவ்வேறே கட்டி, குடம் புக இடுவதாகவும்.

குடவோலை பறிக்கும்போது, மகாசபைத் திருவடியாரை, ஆபாலவிருத்தம் நிரம்ப உட்புகக் கொண்டு, அன்று உள்ளூரில் இருந்த நம்பிமார் ஒருவரையும் ஒழியாமே, மகாசபையிலே, உள்மண்டகத்திலே இருத்திக்கொண்டு, அந்நம்பிமார் நடுவே அக்குடத்தை, நம்பிமாரில் விருத்தராய் இருப்பர் ஒரு நம்பி, மேல்நோக்கி எல்லா ஜனமும் காணும் ஆற்ருல் எடுத்துக் கொண்டு நிற்க, பகலை அநந்தரம் அறியாதான் ஒரு பாலனைக் கொண்டு, ஒரு குடும்பு வாங்கி மற்றெரு குடத்துக்கே புகவிட்டு, அக்குடத்தில் ஓர் ஓலை வாங்கி மதியஸ்தன் கையிலே கொடுப்பதாகவும்.

அக்குடத்து ஓலை மதியஸ்தன் வாங்கும்போது ஐந்து விரலும் அகல வைத்து, உள்ளங்கையிலே ஏற்றுக் கொள்வானுகவும். வாசித்த அவ்வோலை, அம்மண்டகத்து இருந்த நம்பிமார் எல்லாரும் வாசிப்பாராகவும். வாசித்த அப்பேர் தீட்டுவதாகவும்.

இப்பரிசே முப்பது குடும்பிலும் ஒரே பேர் கொள்வதாகவும்.

**வாரிய அமைப்பு**

இக்கொண்ட முப்பது பேரிலும் தோட்ட வாரியமும், ஏரி வாரியமும் செய்தாரையும், வித்யா விருத்தரையும், வயோவிருத்தர்களையும், சம்வத்ஸர வாரியர்களாகக் கொள்வதாகவும். மிக்கு நின்ருருள் பன்னிருவரை தோட்ட வாரியம் ஆகக் கொள்வதாகவும்.

நின்ற அறுவரையும் ஏரி வாரியம் ஆகக் கொள்வதாகவும்.

இவ்விரண்டு தரத்து வாரியமும் கரை கூட்டி கொள்வதாகவும்.

**காலமும் செயலும்**

இவ்வாரியம் செய்கின்ற மூன்று திறத்து வாரியப் பெருமக்களும் முன்னூற்று அறுபது நாளும் நிரம்ப செய்து ஒழிவதாகவும்.

**குற்றம் புரிந்த வாரியம் செய்வாரை விலக்கல்**

வாரியம் செய்யாநின்ருரை அபராதம் கண்டபோது அவனை ஒழித்துவதாகவும்.

இவர்கள் ஒழிந்த அநந்தரம் இடும் வாரியங்களும் பன்னிரண்டு சேரியிலும் தன்ம கிருத்யம் கடைக்காலும் வாரியரே மதியஸ்தரைக் கொண்டு குறி கூட்டிக் கொடுப்பாராகவும். இவ்யவஸ்தை ஓலைப்படியே.........க்கு குடவோலை பறித்துக் கொண்டே வாரியம் இடுவதாகவும்.

**பஞ்சவார வாரியமும் பொன் வாரியமும்**

பஞ்சவார வாரியத்துக்கும் பொன் வாரியத்துக்கும் முப்பது குடும்பிலும் குடவோலைக்குப் பேர் தீட்டி முப்பதுவாய் ஓலைக்கட்டும் புகவிட்டு முப்பது குடவோலை பறித்து முப்பதிலும் பன்னிரண்டு பேர் பறித்துக் கொள்வதாகவும். பறித்த பன்னிரண்டிலும் அறுவர் பொன் வாரியம், அறுவர் பஞ்சவார வாரியமும் ஆவனவாகவும். பிற ஆண்டும் இவ்வாரியங்கள் குட

வோலை பறிக்கும் போது இவ்வாரியங்களுக்கு முன் நாம் செய்த குடும்பு அன்றிக்கே நின்ற குடும்பிலே கரை பறித்துக் கொள்வதாகவும்.

**கணக்கரின் தகுதிகள்** மத்யஸ்தரும் அர்த்த சௌசம் (நாணயம்) உடையானே கணக்கு எழுதுவான் ஆகவும். கணக்கு எழுதினான் கணக்குக் காட்டி சுத்தம் ஆச்சிதின் பின் அன்றி மற்று கணக்கு புக பெறாதான் ஆகவும். மாற்றுக் கணக்கர் புக்கு ஒதுக்கப் பெறாதார் ஆகவும்.

**அரசு ஆணை** இப்பரிசே இவ்வாண்டு முதல் சந்திராதித்யவித் என்றும் குடவோலை வாரியமே இடுவதாக தேவந்திரன், சக்கரவர்த்தி, பண்டித வத்ஸலன், குஞ்சரமல்லன், சூரசூளாமணி, கல்பகசரிகை, ஸ்ரீபரகேசரிபன்மார்கள், ஸ்ரீமுகம் அருளிச் செய்து வரக் காட்ட.

**அதிகாரி** ஸ்ரீ ஆணையால் சோழநாட்டுப் புறங்கறம்பை நாட்டு ஸ்ரீவங்கநகர் கரஞ்சை கொண்டய கிரமவித்தபட்டன் ஆகிய சோமாசிபெருமான் உடனிருந்து இப்பரிசு செய்விக்க.

**ஊரார்** நம் கிராமத்துக்கு அப்புதமாக துஷ்டர் கெட்டு, விசிஷ்டர் வர்த்திப்பதாக வ்யவஸ்தை செய்தோம், உத்திரமேரூர் சதுர்வேதிமங்கலத்து சபையேயாம்.

**எழுதியோன்** இப்பரிசு குறியில் இருந்து பெருமக்கள் பணிக்க வ்யவஸ்தை எழுதினேன் மத்யஸ்தன் காட்டிப் போத்தன் சிவக்குறி இராஜமல்லமங்கலபிரியனென்.”

[குறிப்பு: மேலே கண்டவற்றில் தலைப்புகளும் 1 முதல் 21 வரையுள்ள எண்களும் மட்டும் படிப்போர்க்குத் தெளிவு ஏற்படும் பொருட்டு அமைக்கப்பட்டவை; மற்றவை கல்வெட்டுப்படியே காணப்படுகிறது.]



# UTTARAMERUR INSCRIPTION*
# RECORDING THE MODE OF ELECTION TO THE VILLAGE ASSEMBLIES

## 10th CENTURY A.D.

**King :** King Parakesarivarman, who conquered Madurai.

**Date :** On the sixteenth day of the fourteenth year.

**Royal order :** Whereas a royal letter of His Majesty, our lord, the glorious Viranarayana, the illustrious Parantakadeva, the prosperous Parkesarivarman, was received and was shown to us,

**The village :** We, the members of the assembly of Uttaramerur-caturvedi-mangalam in its own sub-division of Kaliyurkottam,

**Officer present :** Karanjai Kondaya-Kramavitta bhattan alias Somasiperuman of Srivanganagar in Purangarambainadu, a district of the Cola country,

**Settlement :** sitting with us and convening the committee in accordance with the royal command, made a settlement as follows according to the terms of the royal letter for choosing once every year from this year forward members for the " Annual Commitee ", "Garden Committee", and " Tank Committee ",

**Wards :** There shall be thirty wards,

**Qualifications :** in these thirty wards, those that live in each ward shall assemble and shall choose for " pot-tickets " (Kudav Olai) anyone possessing the following qualifications :

(a) " He must own more than a quarter veli of tax-paying land;

(b) He must live in a house built on his own site;

(c) His age must be below 70 and above 35;

(d) He must know the Mantrabrahmana i.e., he must know it by teaching others;

(e) " Even if one owns only one-eighth veli of land, he should have his name written on the pot-ticket to be put into the pot, in case he has learnt one Veda and one of the four bhasyas by explaining it to others.

---

* NOTE : The portion on the right side is a free translation as given by Sri. Venkayya. The titles are given on the left hand side for easy understanding.

Among those possessing the foregoing qualifications :

(f) Only such as are well conversant with business and are virtuous shall be taken and

(g) One who possesses honest earnings, whose mind is pure and who has not been on any of the committees for the last three years shall also be chosen.

**Disqualifications :** (a) One who has been on any of the committees but has not submitted his accounts, and all his relations, specified below, shall not have their names written on the pot-tickets and put into the pot ;

(b) The sons of the younger and elder sisters of his mother,

(c) The sons of his paternal aunt and maternal uncle,

(d) The uterine brother of his mother,

(e) The uterine brother of his father,

(f) His uterine brother,

(g) His father-in-law,

(h) The uterine brother of his wife,

(i) The husband of his uterine sister,

(j) The sons of his uterine sister,

(k) The son-in-law who has married his daughter,

(l) His father,

(m) His son ;

(n) One against whom incest (agamyagamana) or the first four of the five great sins are recorded,

(o) All his relations above specified shall not have their names written on the pot-tickets and put into the pot ;

(p) One who is fool-hardy ;

(q) One who has stolen the property of another ;

(r) One who has taken forbidden dishes (?) of any kind and who has become pure by performing expiation ;

(s) One who has committed sins and has become pure by performing expiatory ceremonies ;

(t) One who is guilty of incest and has become pure by performing expiatory ceremonies.

(u) All these thus specified shall not to the end of their lives, have their names written on the pot-ticket to be put into the pot for any of the committees.

**Mode of Election :** Excluding all these, thus specified, names shall be written for pot-tickets in the thirty wards and each of the wards in these twelve streets of Uttaramerur shall prepare a separate covering ticket for each of the thirty wards bundled separately. These packets shall be put into a pot. When the pot-tickets have to be drawn, a full meeting of the Great Assembly, including the young and old members, shall be convened. All the temple priests, (Numbimar) who happen to be in the village on that day, shall, without any exception whatever, be caused to be seated in the inner hall, where the great assembly meets.

In the midst of the temple priests, one of them, who happens to be the eldest, shall stand up and lift that pot, looking up-wards so as to be seen by all people. One ward, i. e., the packet representing it, shall be taken out by any young boy standing close, who does not know what is inside, and shall be transferred to another empty pot and shaken. From this pot one ticket shall be drawn by the young boy and made over to the arbitrator (madhyastha). While taking charge of the ticket thus given to him, the arbitrator shall receive it on the palm of his hand with the five fingers open. He shall read out the name in the ticket thus received. The ticket read by him shall also be read out by all the priests present in the inner hall. The name thus read out shall be put down (and accepted). Similarly one man shall be chosen for each of the thirty wards.

**Constitution of the Committee:** Of the thirty men thus chosen, those who had previously been on the Garden committee and on the Tank committee, those who are advanced in learning, and those who are advanced in age shall be chosen for the Annual Committee. Of the rest, twelve shall be taken for the Garden committee and the remaining six shall form the Tank committee. These last two committees shall be chosen by showing the Karai.

**Duration of the Committees:** The great men of these three committees thus chosen for them shall hold office for full three hundred and sixty days and then retire.

**Removal of Persons Found Guilty:** When one who is on the committee is found guilty of any offence, he shall be removed at once: for appointing the committees after these have retired, the members of the Committee "for Supervision of Justice" in the twelve streets of Uttaramerur shall convene an assembly kuri with the help of the Arbitrator. The committees shall be appointed by drawing pot-tickets according to this order of settlement.

**Pancavara and Gold Committees:** For the Pancavara committee and the Gold committee, names shall be written for pot-tickets in the thirty wards. Thirty packets with covering tickets shall be deposited in a pot and thirty pot-tickets shall be drawn as previously described. From these thirty tickets chosen 24 shall be for the Gold committee and the remaining six for the Pancavara committee. When drawing pot-tickets for these two committee next year, the wards which have been already represented during the year in question on these committees shall be excluded and the reduction made from the remaining wards by drawing the Karai.

One who has ridden on an ass and one who has committed forgery shall not have his name written on the pot-ticket to be put into the pot.

**Qualification of the Accountant :** Any Arbitrator who possesses honest earnings shall write the accounts of the village. No accountant shall be appointed to that office again before he submits his accounts for the period during which he was in office to the great men of the big committee and is declared to have been honest. The accounts which one has been writing, he shall submit himself and no other accountant shall be chosen to close his accounts.

**King's order :** Thus, from this year onwards, as long as the moon and the sun endure, committees shall always be appointed by pot-tickets alone. To this effect was the royal letter received and shown to us graciously issued by Lord of Gods, the emperor, one who is fond of learned men, the wrestler with elephants, the crest jewel of heroes, whose acts i.e., gifts, resemble those of the celestial tree, the glorious Parakesarivarman.

**Officer present :** At the royal command, Karanjai Kondaya Kramavittabhattan alias Somasiperuman of Srivanganagar in Purangarambai-nadu, a district of the Chola country, sat, with us and thus caused this settlement to be made.

**Villager's decision :** We, the members of the assembly of Uttaramerur Caturvedimangalam, made this settlement for the prosperity of our village in order that wicked men may perish and the rest may prosper.

**The scribe :** At the order of the great men, sitting in the assembly, I, the Arbitrator Kadadippottan Sivakkuri Rajamallamangalapriyan, thus wrote this settlement.



# கல்வெட்டுகளில் கண்ட நாடு, ஊர் ஆட்சிமுறை

தி. நா. சுப்பிரமணியன்

ஒவ்வொரு கிராமத்தின் நிர்வாகமும் அந்த ஊரில் உள்ளவர்களாலேயே நடைபெற வேண்டும் என்ற அடிப்படையில் இப்போது பல கிராமங்களிலும் பஞ்சாயத்துக்கள் அமைக்கப் பட்டுள்ளன. இன்னும் அந்தந்த ஊருக்கு மட்டு மல்லாமல், அதை ஒட்டிப் பக்கத்திலே உள்ள வேறு பல ஊர்களுக்கும் பொதுவாக உபயோகப் படக்கூடிய விஷயங்களைக் கவனிப்பதற்காக அந்தக் கிராமங்களின் பஞ்சாயத்துக்களை உள்ளடக்கி அவற்றுக்கு மேலாகப் பஞ்சாயத்து யூனியன்களையும் ஆங்காங்கு நிறுவியிருக் கிறார்கள்.

இந்த முறை நம் நாட்டிற்குப் புதிதல்ல; மிகப் பழங்காலத்திலிருந்தே வழக்கில் இருந் திருக்கிறது. கல்வெட்டுக்கள் மூலமாக அறியப் படும் வரலாற்றின் ஆரம்ப நாளிலிருந்தே அத் தகைய குழுக்கள் இயங்கி வந்திருக்கின்றன. அதற்கு முன்னதாகவும் அவை இருந்து வந்தன வென்பதும் பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்து தெரியவருகிறது. கால வேறுபாட்டால் அவற் றின் பெயர்கள் மாறியுள்ளன. அதேபோல, சூழ்நிலையையும் வேறு காரணங்களையும் ஒட்டி அவை ஏற்றுச் செயல் புரியும் பணிகளிலும் சில மாறுதல்கள் இருக்கலாம். எனினும், அந்த முறை பழமையானதுதான்.

சங்க நூல்களில் "மன்றம்", "பொதியில்" ஆகியவைகளைப்பற்றிய குறிப்புகள் காணப்படு கின்றன. மன்றம் என்பது உரையாசிரியர் நச்சினார்க்கினியர் "ஊருக்கு நடுவே எல்லோ ரும் இருக்கும் மரத்தடி" என்று விளக்கியிருக் கிறார். பொதியில் என்பதும் அதையே குறித்து வந்தது. ஆலமரம் போல் நன்றாகப் படர்ந்து வளர்ந்து நிழல் கொடுக்கும் மரத்தடியில் ஊரார் அனைவரும் கூடி, தங்கள் விஷயங்களைப் பேசித் தீர்ப்பதும், பொழுது போக்குவதும் கிராம வாழ்க்கையில் இயற்கையான காட்சியே. அத் தகைய வசதி வாய்ந்த மன்றங்களில் ஊர் மக்கள் கூடிச் செய்த காரியங்களைப் பற்றிய குறிப்பு களும் காணப்படுகின்றன. அவையே பிற் காலத்தில் வழக்கில் இருந்த கிராமச் சபை களுக்கு முன்னோடிகள் என்பர்.

முன்னாளிலே நிர்வாக வசதிக்காக ஒவ்வொரு ராஜ்யமும் இயற்கை அமைப்பை ஒட்டிப் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. கோட்டம் என்றும், வளநாடு என்றும், கூற்றம் என்றும் அவை வழக்கம் பெற்று வந்தன. பல கிராமங் களைத் தன்னுள் அடக்கிய பகுதியாக அது விளங்கியது. இன்றைய வழக்கில் ஏறக்குறைய அதை ஒரு தாலுக்காவுக்கு ஒப்பிடலாம்.

கிராமத்து நிர்வாகத்தைக் கவனிக்க ஒவ் வொரு கிராமத்திலும் ஒரு குழு இயங்கி வந்தது. அதற்கு ஊர் என்ற பெயர் வழங்கியது. அதே போல ஒவ்வொரு நாட்டுக்கும் ஒரு சபை இருந்தது. அதற்கு நாடு என்றே பெயர்.

இவ்விரண்டையும் தவிர நகரம், சபை என்ற பெயர்களில் வழங்கி வந்த குழுக்களைப் பற்றிய விவரங்களும் கிடைக்கின்றன. இவை இரண் டும் ஊரைப் போலவே அந்தந்தக் கிராமங் களுக்கு அமைந்தனவே. பிராம்மணர்கள் நிரம்பிய கிராமங்களில், முக்கியமாகச் சர்வ மானியமாக வரியில்லாமல் அளிக்கப்பெற்ற கிராமங்களில், அமைந்த குழுக்களுக்குச் சபை என்று பெயர் வழங்கப்பட்டது. அதேபோல வாணிபம் செய்பவர்கள் அல்லது நகரத்தார்கள் நிரம்பிய ஊருக்கு அமைந்தது நகரம் ஆகும்.

இவ்விதம் அந்தந்தக் கிராமத்தின் அமைப் புக்கு ஏற்ப நகரம், சபை, ஊர் என்ற தனித் தனி பெயர்களில் குழுக்கள் அமைந்திருந்தாலும் அவற்றின் அடிப்படைத் தத்துவம் ஒன்றுதான். பஞ்சாயத்து, முனிசிபாலிட்டி ஆகியவற்றை அவற்றுக்கு ஓரளவு உதாரணங்களாகக் காட்ட லாம்.

கிராம மக்கள் தங்களுக்காகக் காரியங்களை நிர்வகிக்கத் தேர்ந்தெடுக்கும் சிலரைக் கொண்ட குழுவே சபையாகும். ஊரில் உள்ளவர் அனை வரும் சேர்ந்து காரியங்கள் நடத்துவது எளிதல்ல. 'ஊர் கூடிச் செக்குத் தள்ளுவது' என்பார்களே! அதனால் காரியங்களை நடத்து

வதற்கு எனச் சிலரைத் தேர்ந்தெடுத்து அவர்களிடம் பொறுப்பை ஒப்படைத்து வந்தனர்.

அவ்விதம் தேர்ந்தெடுக்கப்படுவர்களின் எண்ணிக்கை ஒரு குறிப்பிட்ட அளவுதான் என்பது இல்லை. கிராமத்தின் பரிமாணத்துக்கு ஏற்ப அவர்களுடைய தொகையும் அமைந்திருக்கும். சில சமயங்களில் கிராமத்தைப் பல பகுதிகளாகப் பிரித்து, பகுதிக்கு ஒருவர் என்னும் தேர்ந்தெடுப்பதுண்டு. இன்று வார்டு எனப் பிரிக்கப்பட்டிருப்பதை உதாரணமாகச் சொல்லலாம்.

அத்தகைய குழுக்கள் எந்த முறையில் அமைக்கப்பட்டு, எவ்விதம் செயல் பட்டன என்பதையும் நம் நாட்டிலே பல இடங்களில் காணும் கல்வெட்டுக்கள் எடுத்துக் கூறுகின்றன. உதாரணமாக உத்திரமேரூர், தென்னேரி, மானூர், சித்தமல்லி, தலைஞாயிறு, செம்பியன் மாதேவி, பிரம்மதேசம், காமரசவல்லி, திரிபுவனி, ஜம்பை, பொன்னமராவதி, விரிஞ்சிபுரம், திருமுக்கூடல், அரகண்டநல்லூர் முதலிய இடங்களில் காணும் கல்வெட்டுக்களைக் கூறலாம்.

ஊரார் அனைவரும் கூடியே சபைக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பர். அந்தக் கூட்டம் ஊருக்குப் பொதுவான கோயில், மண்டபம் போன்ற இடங்களிலே நடக்கும். அதை மஹா சபை, ஊர்க்கூட்டம், பெருங்குறி என்ற பெயர்களால் வழங்குவர். அந்தக் கூட்டத்தைக் கூட்டும் பொறுப்பு ஊரிலே தர்ம காரியங்களை நிர்வகிப்போரின் பொறுப்பு. மத்தியஸ்தன் என்று அழைக்கப்படும் கிராம அதிகாரியின் மூலம் அவர்கள் அதைக் கூட்டுவர். கூட்டம் கூடுவது பற்றிக் கிராமத்திலே காளம் ஊதியும் பெருங்குறி கொட்டியும் அறிவிப்பு செய்யப்படும். ஊரின் குழந்தை முதல் பெரியவர்வரை அனைவரும் (ஆபாலவிருத்தர்) வரவேண்டும். அதை மெய்க்காட்டுதல் என்பர். அனைவரும் வந்து விட்டனரா என்று பார்ப்பதைப் 'புள்ளி பார்த்தல்' என்பர்.

கிராமச் சபைகளுக்குத் தெர்ந்தெடுக்கப்படுபவர்கள் தாங்கள் ஏற்று நடத்தும் காரியங்களைச் செவ்வனே முடிக்கக் கூடியவர்களாக இருக்க வேண்டும். அதற்காக அவர்கள் சில தகுதிகளைப் பெற்றிருக்கவேண்டும் என நிர்ணயித்திருந்தனர். சொத்துரிமை, கல்வி, வயது, ஒழுக்கம் ஆகிய நான்கு வகையிலும் அவர்கள் தகுதி பெற்றிருத்தல் வேண்டும்.

கிராமத்திலே சொத்துரிமை உடையவர்களே அங்கத்தினராக தேர்ந்தெடுக்கப் படுவர். அந்தக் கிராமத்திலே விளைநிலமும் வீடும் கொண்டு அவர்கள் நிரந்தரமாக உள்ளூரிலேயே வசிப்பவர்களாக இருத்தல் வேண்டும். குறைந்த பட்சம் ஒரு பங்கு நிலம் உடையவராய் இருத்தல் வேண்டும். புதிதாகக் குடி வருபவர்களுக்குப் பல சமயங்களில் தடை காணப்படுவதும் உண்டு.

சில சமயங்களில் இந்த விதி சிறிது தளர்த்தப் பட்டதாகத் தெரிகிறது. சொத்துரிமை குறைவாக இருந்து கல்வி அதிகமாக இருந்தால் அதைக் கொண்டு ஈடு கட்டலாம் என்று கொண்டிருந்தரர்கள்.

கல்வி விஷயத்தில் தேர்ந்தெடுக்கப்படும் அங்கத்தினர் வேதம் அறிந்தவராகவும் வியாக்கியானம் செய்து உரை நிகழ்த்தும் ஆற்றல் உடையவராகவும் இருக்கவேண்டும். முக்கியமாகச் சபையின் தீர்மானங்களை எழுத்து வடிவில் கொள்வதற்கான வாசகத்தைச் சொல்ல நியமிக்கப்படுவோர் மந்திர பிரமாணத்தில் வல்லவராக இருக்கவேண்டும். இந்த விதியும் பிற்காலத்தில் 'பாரபட்சமற்ற நோக்கு உள்ளவர் ஆக இருந்தால் போதும்' என்று தளர்த்தப் பட்டுள்ளதாகத் தெரிகிறது.

பழுத்த கிழவர்களையோ வயது முதிரா இளைஞர்களையோ தேர்ந்தெடுத்தால் காரியங்கள் செவ்வனே நடைபெருதென்று வயது விஷயத்தில் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குட்பட்டவராக இருக்கவேண்டும் எனக் கொண்டிருந்தனர். அறுபது பிராயத்துக்கு உட்பட்டவராகவும் முப்பது பிராயத்துக்கு மேற்பட்டவராகவும் இருக்கவேண்டும் என்று விதிக்கப்பட்டிருந்தது. இது எக்காலத்திலும் ஒரே சீராக இருக்கவில்லை. எழுபது பிராயத்துக்குக் கீழ் முப்பத்தைந்து பிராயத்துக்கு மேற்பட்டு இருக்கவேண்டும் என்று மாற்றப்பட்டு உள்ளது. இன்னும் பிற்காலத்தில் கீழ் எல்லை நாற்பதுக்கும் உயர்த்தப்பட்டுள்ளது.

கடைசியாகச் சொல்லப்பட்ட ஒழுக்கம் மிகச் சிறந்த தகுதியாகக்கொள்ளப்பட்டிருந்தது. இன்னின்ன காரியங்களைச் செய்தவர்கள் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்படக் கூடாதென்று தெளிவாக வரையறுத்திருந்தார்கள்.

சேரத்தகாத பெண்டிருடன் கூடியவர்கள், மஹாபாதகங்களான கொலை, களவு, பொய், கள்ளுண்ணல் போன்றவற்றைச் செய்தவர்கள் செய்த ஏதோ குற்றத்துக்காகத் தண்டனை பெற்றவர்கள், லஞ்சம் வாங்கியவர்கள் போன்ரோர் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்க அருகதையற்றவர்கள். அவர்களுடைய நெருங்கிய உறவினர்களும், பாவம் செய்தவரோடு கூட்டுறவு

கொண்டவர்களும் கூட விலக்கப்பட வேண்டியவர்களே. ஓர் ஆண்டு பதவி வகித்து முடிவில் கணக்குகளை ஒப்புவித்து விடுதலை பெருதவர்களும் தேர்ந்தெடுக்கப்படும் உரிமையை இழந்துவிட்டவர்களாக ஆவார்கள்.

சிறிய கிராமமாக இருந்தால் ஐந்து அல்லது ஏழு பேர்களைக் கொண்ட ஒரு சிறு சபையைக் கொண்டே எல்லாக் காரியங்களையும் நடத்திச் செல்லலாம். ஆனல் பெரிய கிராமங்களில் அவ்விதம் முடியாது. ஒவ்வொரு விஷயத்துக்கும் தனித் தனியே பொறுப்பு வாய்ந்தவர்களை நியமிக்க வேண்டும். அவ்வாறு தனித் தனியே உள்ள ஒவ்வொன்றுக்கும் வாரியம் என்று பெயர். தோட்டம், ஏரி, கழனி, கணக்கு, கலிங்கு, பொன் போன்ற ஒவ்வொன்றுக்கும் தனித்தனி வாரியங்கள் இருந்து வந்திருக்கின்றன. அவை அனைத்தும் ஸம்வத்ஸர வாரியம் என்பதன் மேற்பார்வைக்கு உட்பட்டனவே. அதை ஆட்டைவாரியம் என்றும் கூறுவர்.

இந்தக் குழுக்களுக்கு நியமிக்கப்படுவோர் குடவோலை வாங்கியே தேர்ந்தெடுக்கப்பட்டனர். தகுதி பெற்றவர் அனைவர் பெயரையும் எழுதி, திருவுளச்சீட்டுப் போட்டு நியமனம் செய்யும் முறையே அந்நாளில் வழக்கில் இருந்து வந்தது. அவ்விதம் தேர்ந்தெடுக்கப்படுவதை வணனம் இடுதல் என்ற பெயரில் வழங்கி வந்தனர். அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டவரின் முதியவரையே ஸம்வத்ஸர வாரியத்துக்கு நியமிப்பார்கள்.

குடவோலை பறிக்கும் முறை பின் வருமாறு: ஒவ்வொரு தொகுதியிலிருந்தும் தகுதிவாய்ந்தவர்களில் விலக்கப்படவேண்டியவர்களை நீக்கி, எஞ்சியுள்ளவர் பெயர்களை நறுக்குக்கு ஒரு பெயராக எழுதி, அந்த நறுக்குகளைத் திரட்டி, கட்டி, அதனுள் வேறு நறுக்குகளை நுழைக்க முடியாதவாறு அதற்கு வாயோலை பூட்டி வைக்க வேண்டும். அவ்விதம் ஒவ்வொரு தொகுதிக்கும் தனித்தனியே கட்டுகள் தயாரித்து அவற்றை ஒரு குடத்திலிட்டு வைத்துக் கொள்ளவேண்டும்.

மஹாசபை கூட்டியே குடவோலை பறிக்க வேண்டும். ஊரார் அனைவரும் கூடியதும் முதிய வாரியர் ஒருவர் எழுந்து எல்லோரும் காணும்படி குடத்தின் வாய் மேல்நோக்கியிருக்க அதைத் தூக்கிக் கொண்டு நிற்க வேண்டும். பின்னர் விவரம் அறியாத சிறுவன் ஒருவனை அழைத்து குடத்திலிருந்து ஒரு கட்டை எடுக்கச் செய்து மற்றெரு குடத்திலே குலைக்கச் செய்யவேண்டும். அந்த ஓலை நறுக்குகளிலிருந்து ஒன்றை அந்தச் சிறுவனே எடுத்து மத்யஸ்தனிடம் கொடுக்க வேண்டும். மத்யஸ்தன் அதைப் பெறும்போது ஐந்து விரல்களையும் அகல விரித்து உள்ளங்கையில் பெற்றுக் கொள்ளவேண்டும். இரகசியமாக வேறு ஓலையைப் புகுத்தாமல் இருக்கவே இந்த ஏற்பாடு.

ஓலையில் எழுதப்பட்ட பெயரை மத்யஸ்தன் அனைவரும் அறிய உரக்கப் படிப்பான். பின்னர் அங்கே வந்திருக்கும் வாரியர் அனைவரும் ஒவ்வொருவராக அந்த ஓலையை வாங்கிப் பெயரைப் படிப்பர். வேறு பெயரை வாசிக்காமல் ஓலையில் கண்ட பெயரையே அனைவரும் வாசித்தது இதனல் உறுதிப்படும். இவ்விதம் ஒவ்வொரு தொகுதிக்கும் வாரியரைத் தேர்ந்தெடுப்பர். சபைகளுக்கு ஆண்மக்களே தேர்ந்தெடுக்கப்பட்டு வந்தனர். எனினும் ஒரு சமயம் பெண்டிரும் நியமிக்கப்பட்டிருந்தனர் என்ற விவரமும் தெரிகிறது.

சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் பதவிக்காலம் ஓர் ஆண்டுதான். அதன் முடிவில் அவர் தம்முடைய கணக்குகளை ஒப்புவித்துப் பொறுப்பிலிருந்து விடுதலை பெறவேண்டும். அவர் திரும்பவும் சிறிது காலத்துக்கு அங்கத்தினராகப் பதவி வகிக்க முடியாது. இவ்விதம் பதவிக் காலத்தைக் கட்டுப்படுத்துவதன் மூலம், ஊரில் உள்ள தகுதி பெற்றவர் அனைவரும் ஒரு முறையாவது பதவி வகிக்கும் 'வாய்ப்பு ஏற்படுகின்றது. அன்றி, ஒரு சிலரே அந்தப் பதவிகளில் நிலைத்து அதனல் செல்வாக்கு பெருகி எதேச்சாதிகாரம் ஏற்படுவதையும் தடுக்க முடிகிறது.

சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் சபையார் செய்த முடிவுகள் சரிவர நிறைவேற்றப்படுவதையும் கண்காணிக்க வேண்டும். அவர்களுக்கு உதவியாகச் சில அதிகாரிகளும் ஊழியர்களும் நியமிக்கப்பட்டார்கள். மத்யஸ்தர், கணக்கர், கரணத்தார் என்று வழங்கப்பட்ட அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். மத்யஸ்தர் என்பவர் சபையின் பிரதான நிர்வாக அதிகாரி ஆவர்.

உழவுத் தொழிலை அடிப்படையாகக் கொண்ட நம் கிராம வாழ்க்கைக்கு அத்தியாவசியமான ஆறு, வாய்க்கால், குளம், ஏரி, ஆகியவற்றைச் சபையாரே நல்ல நிலைமையில் பரிபாலித்து வர வேண்டும். வரி வசூலையும் சபையாரே நடத்தி வந்தார்கள். முன்னளிலே வரிகள் மூன்று வகையாக இருந்தன. அரசனுக்குச் செலுத்த வேண்டிய வரி இறை, புரவு என்று குறிக்கப்பட்டு வந்தது. சமுதாய வாழ்க்கையின் நலத்துக்காக அளிக்க பெற்றவை அந்தராயம், குடிமை, சில்

லறை என்ற பெயரில் வழங்கின. மூன்ருவதாக விநியோகம் என்ற பெயரில் சபைகளின் நிர்வாகச் செலவுக்கும் வேறு சில காரியங்களுக்கும் வரி விதிக்கப்பட்டு வந்தது.

வரியை வசூலிக்கும்போது முறையாகச் சேர வேண்டியது மட்டுமே வசூலிக்கவேண்டும். அதிகம் வசூலிக்கக்கூடாது. வரிகளைக் கிரம மாகச் செலுத்தாமல் பாக்கி வைத்திருப்போரிட மிருந்து இரட்டிப்புத் தொகையைத் தண்டமாக வசூலித்தனர்.

கிராமத்தின் பொது நிலம் அனைத்தும் சபை யாருக்கே சொந்தம். தேவை ஏற்படும்போது அவர்கள் அவற்றை விற்றுப் பணம் திரட்டி யிருக்கிருர்கள். இயற்கை மாறுபட்டு ஊரிலே விளைச்சல் பாதிக்கப்பட்டாலும் வேறு உபாதை கள் விளைந்தாலும் வரிபஜா செய்வதையும் சபை யோரே கண்காணித்து வந்தனர்.

மேலும் ஊரிலே வழங்கிவரும் அளவுகோல், ஆழாக்கு ஆகியவற்றின் சரியான அளவைகளை யும் அவர்கள் பராமரித்து வந்தனர்.

மக்களுக்கு இடையே ஏற்படும் வழக்குகளைச் சபையோரே விசாரித்து, நீதி வழங்கி வந்துள் ளார்கள். சமூக வாழ்க்கை பற்றிய குற்றங்களைப் பெரிதாக மதித்து அவற்றைச் செய்தவர் சொத் துக்களைப் பறிமுதல் செய்தும் அவர்களை பிரஷ்டம் செய்தும் வந்திருக்கிருர்கள்.

இவ்வளவும் தவிர சில சமயங்களில் சபை யோரே கோயில் நிர்வாகத்தையும் வேறு பல வேலைகளையும் கவனித்து வந்திருக்கின்றனர். ஊரார் அனைவருக்கும் பொதுவான கோயிலிலே தெய்வ வழிபாட்டுக்கும் அங்கே நடக்க வேண்டிய உற்சவங்களுக்கும் பொன்னுகவும் பொருளாகவும் பூமியாகவும் பலர் அளித்திருக்கிருர்கள். அவற் றுள் பலவற்றைச் சபையோரே ஏற்று நிர்வகித்து வந்துள்ளனர். கோயில் நிர்வாகம் பற்றியது 'ஸ்ரீகோவில் வாரியம்' என்ற பெயரில் வழங்கியது. ஆதுலர் சாலை (மருத்துவ நிலையம்) யும், கல்விச் சாலைகளும் சபையோரால் நிர்வகிக்கப்பட்டு வந்தது பற்றிய குறிப்புகள் கல்வெட்டுக்களில் காணக்கிடைக்கின்றன. இவை தவிர அரச ராலும் உயர்தர அதிகாரிகளாலும் அவ்வப்போது ஒப்பிவிக்கப்பெற்ற காரியங்களையும் சபையோர் நிறைவேற்றித் தந்துள்ளனர்.

நாடு என்ற பகுதிக்கு உண்டான பேரவை யான நாடு என்பதன் உறுப்பினர்கள் நாட்டார் என்றும் நாட்டவர் என்றும் அழைக்கப்பட்டு வந்தனர். அந்தப் பிரதேசத்தில் அடங்கிய ஒவ் வொரு கிராமத்திலிருந்தும் அதன் பரிமாணத்துக் கேற்ற எண்ணில் பிரதிநிதிகளை அது கொண் டிருந்தது. தேவதானம், பள்ளிச் சந்தம் போன்ற கிராமங்களை இறையிலியாக அரசன் அளித்த உத்தரவுகளை நாட்டாரே முன்னின்று நிறைவேற்றி வைத்தனர். அந்தப் பிரதேசத்து நிலங்களின் வரித் தொகையின் பொறுப்பு அவர்களுடையது. அதே போல நீதி வழங்கு வதில் சில துறைகளில் அவர்கள் ஈடுபட்டு வந்தனர். முக்கியமாக, கிராமச் சபையின் நிர்வாகத்தை மேற்பார்வையிட்டு அரசாங்கத் துக்கும் கிராமச் சபைக்கும் இடையே இணைப்பு ஸ்தாபனமாக விளங்கிற்று அது.

இந்த ஆட்சி முறை விஜயநகர மன்னர் காலத் திலும் வழக்கில் இருந்தது. அவர்களுடைய ஆட்சியின் பிற்பகுதியில் மத்திய அரசு வலி குன்றிவிடவே, நாட்டில் அமைதி குலைந்தது. அதன் பயனுகப் பலரும் தங்கள் செல்வாக்கைப் பெருக்கி ஊன்றிக் கொள்ள முயன்ற போது, கிராமச் சபைகள் கலகலக்க ஆரம்பித்தன. அவர் களுக்குப்பின் வந்த முஸ்லீம் ஆட்சியிலும் நிலைமை சீரடையவில்லை. எனினும் கிராம மக்கள் முற்றிலும் நம்பிக்கையை இழந்து விடாமல் அங்கங்கே சபைகளைத் தொடர்ந்து நடத்தி வந்திருக்கிருர்கள். அத்தகைய கிராமச் சபைகளைக் கண்ட ஆங்கிலேயர் வியந்திருக் கிருர்கள். அதன் காரணமாகவே இன்றைக்கு நம் நாட்டில் பஞ்சாயத்து ஆட்சிமுறை நன்கு வேரூன்றி நிலைத்துள்ளது.

# பிற நாடுகளில் காணும் தமிழ்க் கல்வெட்டுகள்

தி. நா. சுப்பிரமணியன்

தமிழ் நாட்டுக்கு வெளியே காணும் தமிழ்க் கல்வெட்டுகளுக்குத் தனியான முக்கியத்துவமும், சிறப்பும் உண்டு. காஞ்சீபுரத்துப் பல்லவர்கள், தஞ்சாவூர்ச் சோழர்கள், மதுரைப் பாண்டியர்கள் ஆகியோர் அரசு புரிந்த நாளிலே தமிழ் மொழியே அரசவை நடவடிக்கைகளுக்கும் அரசியல் காரியங்களுக்கும் ஆளப்பட்டு வந்ததென்பதை நாம் அறிவோம். அந்த அரசுகள் மகோன்னத நிலையில் விளங்கிய காலங்களில் அவர்களுடைய ஆதிக்கம் தமிழ் நாட்டின் எல்லையைத் தாண்டி வடக்கே ஆந்திரப் பிரதேச, கர்நாடகப் பகுதிகளிலும், தெற்கே இலங்கைத் தீவிலும், இன்னும் கடல் கடந்து தென்கிழக்கு ஆசியப் பிரதேசங்களிலும் பரவி இருந்ததென்பதையும் நாம் அறிவோம். அதனால், தமிழ் நாட்டை ஒட்டி வெளியே உள்ள பிரதேசங்களில் தமிழ்க் கல்வெட்டுகளைக் காண்பது இயற்கையே. தமிழ் நாட்டை ஒட்டி, வடக்கே நெல்லூர், சித்தூர், கடப்பை, அனந்தப்பூர் போன்ற ஆந்திரப் பிரதேசத்து மாவட்டங்களிலும், மேற்கே கோலார், மங்களூர், மைசூர் போன்ற மைசூர் இராஜ்யத்து மாவட்டங்களிலும், கேரள நாட்டுப் பகுதிகளிலும் இன்னும் இலங்கைத் தீவிலும் பல தமிழ்க் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன என்பதை அனைவரும் அறிவர்.

இந்தப் பிரதேசங்களுக்கு அப்பாலுள்ள இடங்களிலும் தமிழ்ச் சாசனங்கள் கிடைத்துள்ளன. ஆந்திரப் பிரதேசத்து விசாகப்பட்டினம் மாவட்டத்துத் தலைநகரான விசாகப்பட்டினத்திலேயே தமிழ்க் கல்வெட்டுகள் உள்ளன. அவற்றுள் முக்கியமானதாக ஒன்றை எடுத்துக் காட்டலாம். அது, கி. பி. 1250ஆம் ஆண்டில் கலிங்க நாட்டரசனான வீரநரசிங்க தேவனுடைய ஆட்சிக் காலத்தில் பொறிக்கப்பட்டது. அப்போது தமிழ் நாட்டிலே அரசு புரிந்த தஞ்சாவூர்ச் சோழர்களின் வலி குன்றிவிட்டது. மதுரைப் பாண்டியர்கள் தலை கிளம்பி வந்தனர். ஆந்திரப் பிரதேசத்தில் தமிழர் கொண்டிருந்த ஆதிக்கம் மறைந்துவிட்டது என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். அந்நாளிலே விசாகப்பட்டினத்துக்குக் குலோத்துங்க சோழபட்டணம் என்று பெயர் வழங்கி வந்தது. அவ்வூரில் அமைந்துள்ள கரியமாணிக்க ஆழ்வார் என்னும் விஷ்ணுவின் கோயிலுக்கு வழங்கப்பெற்ற ஒரு தானத்தை அறிவிப்பதே அந்தக் கல்வெட்டு. அதை வழங்கியவன் இப்போது கேரள இராஜ்யத்தைச் சேர்ந்த பந்தலாயினி, கொல்லம் என்ற ஊரில் வசித்து வந்த ஒருவன் ஆவன். அந்தச் சாசனம் தமிழில் எழுதப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது (சாசன இலாகாவின் ஆண்டறிக்கை, 1909ஆம் ஆண்டின் 98 எண் கொண்ட சாசனம்.)

விசாகப் பட்டினத்துக்குப் பக்கத்திலேயே உள்ள சிம்மாசலத்திலிருந்தும் ஒரு தமிழ்க் கல்வெட்டு கிடைத்துள்ளது (தென் இந்திய கல்வெட்டு சாசனங்கள், தொகுதி 6 எண். 1144) முதற் குலோத்துங்க சோழனுடைய ஆட்சிக் காலத்தைச் சேர்ந்த அந்தக் கல்வெட்டு 'புகழ் சூழ்ந்த புணரி' என்று தொடங்கும் அவனுடைய மெய்க் கீர்த்தியை முதலில் கொண்டே ஆரம்பிக்கிறது.

இலங்கையில் பொலந்நறுவை யிலிருந்து கிடைக்கும் தமிழ்க் கல்வெட்டு ஒன்றையும் இங்கே குறிப்பிடலாம். ஐம்பைத்தைந்து ஆண்டுகள் அரசு புரிந்து கி. பி. 1110–11ஆம் ஆண்டில் காலமான இலங்கை மன்னன் விஜய பாஹுவின் ஆட்சிக் காலத்துக் கடைசியிலோ அல்லது அவன் இறந்துபோன சிறிது காலத்திற் குள்ளாகவோ பொறிக்கப்பட்டதாகும். புத்த பகவானுடைய புனிதச் சின்னமான பல்லை வைத்து அதன்மீது அம்மன்னன் எழுப்பிய பள்ளிக்கு மூன்று கைத் திருவேளைக்காரன் தலதாயப் பெரும் பள்ளி'' என்று பெயரிட்டு வேளைக்காரர் பாதுகாப்பிலே அதை விட்ட செய்தியைத் தெரிவிக்கிறது. அந்தக் கல்வெட்டு (எ. பி. இந்தியா—பதினெட்டாம் தொகுதி, 338 பக்கம்) வேளைக்காரர் என்பார் தமிழ் நாட்டைச் சேர்ந்த போர்ப் படையினர் என்பதைக் கூறத் தேவையில்லை.

இவ்விதம் தமிழ் நாட்டிலிருந்து வெகு தூரத்துக்கு அப்பால் வேற்று மொழி பேசப் பெறும் இடங்களில் கிடைக்கும் தமிழ்க் கல்வெட்டுக்குப் பல சமயங்களில் அந்தப் பிரதேச மொழியின் பாடமும் சேர்த்துக் கொடுக்கப்பட்டிருக்கும். உதாரணமாக, ஒரே செய்தியைத் தமிழ், ஒரியா ஆகிய இரு மொழிகளிலும் கூறும் கல்வெட்டு ஒன்று ஒரிஸா மாநிலத்தின் தலைநகரான புவனேச்வரத்தில் அரை நூற்றண்டுக்கு முன் (1916இல்) பூமிக்கடியிலிருந்து கிடைத்தது. அது 1924ஆம் ஆண்டில் வங்காளத்து "ஏஷ்யாடிக் ஸொஸைட்டி"யின் பத்திரிகையில் புகைப் படத்தோடு வெளியிடப்பட்டது. அதிலே தமிழ்ப் பகுதி சரியாக வாசிக்கப்படவில்லை. எனவே, நான் அந்தத் தமிழ்ப் பகுதியை மட்டும் 15 ஆண்டுகளுக்கு முன் "அமுத சுரபி" தமிழ்ப் பத்திரிகையில் திருத்தமாக வெளியிட்டிருக்கிறேன். பின்னுல் எபிகிராபியா இந்திகா 32ஆம் தொகுதி 224–33ஆம் பக்கங்களில் சாசன இலாகா அதிகாரிகளால் இரு பகுதிகளிலும் வெளியிடப்பட்டுள்ளன.

அந்தச் சாசனம் பொறிக்கப்பட்டுள்ள கற்பலகை இப்போது கல்கத்தாவிலே கல்கத்தா பல்கலைக்கழகத்தின் ஆதரவில் நிறுவப்பட்டுள்ள இந்தியக் கலைப் பொருள்களுக்கான ஆசுடோஷ் பொருட்காட்சிச்சாலையில் வைக்கப் பட்டுள்ளது. கி. பி. 14ஆம் நூற்றுண்டில் அரசு புரிந்த கலிங்க நாட்டுக் கஜபதி மன்னனுன நான்காம் நரசிம்மனுடைய ஆட்சிக் காலத்தில் (கி. பி. 1396இல்) வழங்கப்பட்ட ஒரு தானத்தைத் தெரிவிக்கிறது. அந்தக் கல்லின் தலைப்பிலே ஒரு புரையில் சாண் உயரமுள்ள கணபதியின் திருவுருவம் காணப்படுகிறது. முதலில் அதாவது கல்லின் இடது பக்கத்தில் தமிழ்ப் பகுதியும், அடுத்தாற்போல் வலதுபுறம் ஒரியா பாடமும் பொறிக்கப்பட்டுள்ளன. சித்தேச்வர மடத்தின் தலைவரான தபராஜமுனிவர் வாங்கியிருந்த கடனைத் தள்ளிக் கொடுக்கப்பட்டது பற்றியே விவரங்களை அது கொடுக்கிறது. அவருக்குத் தவச்சக்கரவர்த்திகள் என்ற பெயரும் காணப்படுகிறது. ஒரியாப் பகுதியைக் காட்டிலும் தமிழ்ப் பகுதியிலே அதிக விவரங்கள் கிடைக்கின்றன.

ஆந்திரப் பிரதேசத்திலே குண்டூர் மாவட்டத்தின் கடற்கரையிலே உள்ள மோட்டுப்பள்ளி என்னும் ஊர் முன்னுளிலே ஒரு துறைமுகப் பட்டினமாக விளங்கியது. அங்கே உள்ள வீரபத்திரேச்வர ஸ்வாமி ஆலயத்தில் தமிழ், தெலுங்கு ஆகிய இரு மொழிகளிலும் பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்று இருக்கிறது. ரெட்டி வம்சத்து அரசனுன அநவோடன் ஆட்சிக் காலத்தில், கி. பி. 1358ஆம் ஆண்டில் வழங்கப்பெற்ற அதன் இரு பகுதிகளும் ஒரே செய்தியைத் தெரிவிக்கின்றன. அந்தத் துறைமுகத்துக்கு வரும் வெளிநாட்டுக் கப்பல்களுக்கும் வணிகர்களுக்கும் கிடைக்கும் வசதிகள் முதலியவற்றை விவரித்துக் கூறுகிறது. எனினும் அதன் தமிழ்ப் பகுதியிலேதான் அதிகமான விவரங்கள் காணப்படுகின்றன. (சாசன இலாகாவில் ஆண்டறிக்கை 1909ஆம் ஆண்டு 601, 603 எண்கள்) அந்தச் சாசனத்தின் தெலுங்குப் பகுதி தென் இந்திய சாசனங்கள், பத்தாம் தொகுதியில் 556 ஒன்றை வெளியிடப்பட்டுள்ளது. தமிழில் பகுதி இன்னும் வெளியிடப் பெறவில்லை.

இத்தகைய சாசனங்கள் தமிழ் நாட்டிலிருந்து எவ்வளக் கெவ்வளவு தூரத்தில் கிடைக்கின்றனவோ, அவ்வளவுக்கு அவ்வளவு அவற்றின் மதிப்பும் அதிகம் ஆகும்.

கடல்கடந்த தீபர்தரம் பிரதேசங்களான தென் கிழக்கு ஆசியப் பகுதிகளிலும் தமிழ்க் கல் வெட்டுகள் சில கிடைத்துள்ளன. இப்போது தாய்லாந்து, என வழங்கப்படும் சயாம் நாட்டில் (மலாயா பூசந்தியில்) தகுவா–பா (Takua-Pa) என்னும் இடத்திலிருந்து கி. பி. 9, 10ஆம் நூற்றுண்டுகளில் வழங்கிய தமிழ் எழுத்துகளால் பொறிக்கப்பட்ட தமிழ்ச் சாசனம் ஒன்று, நங்கர் உடையான் என்ற ஒருவன் அங்கே அவனி நாரணம் என்ற பெயரில் ஒரு குளத்தை எடுத்து அதனை மணிக் கிராமத்தார் என்னும் வணிக குழு, சேனுமுகத்தார், பெயர் தெளிவாக இல்லாத மற்ருெரு குழு ஆகிய மூன்று குழுவினரின் பாதுகாப்பில் விட்ட செய்தியைத் தெரிவிக்கிறது. (தென் கிழக்கு ஆசியாவில் காஞ்சிப் பல்லவர் (Kanchi in South East Asia) என்ற என்னுடைய ஆங்கில நூலில் பக்கங்கள் 115–120 பார்க்கவும்).

சுமத்திராத் தீவிலே பரோஸ் (Baros) பிரதேசத்தில் லோபுதுவா (Lobol Tolwa) என்னுமிடத்திலிருந்து உடைந்து சிதைந்த தமிழ்க் கல்வெட்டு ஒன்று கிடைத்திருக்கிறது. அது ஜாவாவிலே கலை, விஞ்ஞானம் ஆகியவற்றுக்கான படேவியக் கழகத்தின் ஆதரவில் நிறுவப் பெற்றுள்ள புதை பொருள்களின் காட்சிச்சாலையிலே பாதுகாக்கப்பட்டிருந்தது. சக வருஷம் 1010 (கி. பி. 1088) ஆண்டில் திசையாயிரத்து ஐந்நூற்றுவர் என்னும் வணிகக் குழுவினர் அளித்த ஒரு தானத்தை அது தெரிவிப்பதாகும். (சாசன இலாக்காவின் ஆண்டறிக்கை, 1892,

பக்கம் 92; இன்னும் படேவியா ஆராய்ச்சிப் பத்திரிகை என்ற டச்சு மொழிப் பத்திரிகையில் 1922ஆம் ஆண்டில் 'சுமத்திராத் தீவில் வணிகர் குழு' என்ற தலைப்பில் திரு. க. அ. நீலகண்ட சாஸ்திரி எழுதிய ஆங்கில கட்டுரை, பக்கம் 314 முதல்.)

பர்மாவிலே பாகாங் என்னுமிடத்திலிருந்து மற்றொரு தமிழ்க் கல்வெட்டு கிட்டி இருக்கிறது. கி. பி. 13–14ஆம் நூற்றாண்டுகளில் வழங்கிய தமிழ் எழுத்துக்களில் பொறிக்கப்பட்ட அந்தச் சாசனம் புக்கம் ஆகிய அரிமர்த்தனபுரம் என்னும் அந்த ஊரில் நானாதேசி விண்ணகர் ஆழ்வார் என்று வழங்கப்பெற்ற விஷ்ணுவின் ஆலயத்தில் மலைமண்டலத்தைச் சேர்ந்த வியாபாரி ஒருவன் செய்த பணிகளை எடுத்துரைப்பதாகும். (எபிக்ராபிகா இந்திகா தொகுதி ஏழு) சேர மன்னரும், விஷ்ணு பக்தருமான குலசேகர ஆழ்வார் பாடிய முகுந்தமாலை என்னும் சம்ஸ்கிருத நூலின் ஆறும் சுலோகத்துடன் அந்தச் சாசனம் துவங்குவது கவனிக்கத் தக்கது.

சீனத்தி லிருந்தும் ஒரு தமிழ்க் கல்வெட்டு கிடைத்திருக்கிறது. ஹாங்காங்கு நகருக்கு வடக்கே பார்மோஸாத் தீவுக்கு எதிராக, பூ-சியான் மாகாணத்தில் உள்ள துறைமுகப் பட்டினமான சுவான்-சூ என்னும் இடத்தி லிருந்து 1956ஆம் ஆண்டில் பூமிக்கடியில் இரண்டு துண்டுகளாகக் கிடைத்த ஒரு கல்லில் அது பொறிக்கப்பட்டுள்ளது. ஆறு வரிகளே கொண்ட அதில் முதல் ஐந்து வரிகள் தமிழிலும் கடைசி வரி சீனத்திலும் எழுதப்பட்டிருக்கிறது. சகாப்தம் 1203 (கி. பி. 1281) சித்திரா பவுர்ணமி நாளில் தவச் சக்கரவர்த்திகள் சம்பந்தப் பெருமாள் என்னும் பெரியரர் செகசைகான் திருமேனிக்கு நன்றாக, அவனுடைய 'பர்மான்' படி சிவபெருமானைப் பிரதிஷ்டை செய்த விவரத்தை அது அறிவிக்கிறது. எம்பெருமான் பெயரைத் திருக்கதளீச்சுரம் உடைய நாயனார் என்பது அப்போது சீனச் சக்கரவர்த்தி இருந்த குப்லேகானுடைய மூத்த மகனான இளவரசனே செகசைகான் ஆவன். தமிழ் நாட்டுச் சிற்ப முறையில் சைவ, வைஷ்ணவப் புராணம் சம்பவங்களைச் சித்தரித்துக் காட்டும் சிற்பங்களும் அங்கே கிடைத்துள்ளன. தமிழ் நாட்டு வரலாற்றுக்கும் அந்தச் சாசனம் முக்கிய மானது. அதற்கு முந்தைய ஆண்டில் தமிழ் நாட்டில் மறைந்துபோன சோழர் பேரரசுக்குப் புத்துயிர் ஊட்டி அதனை மீண்டும் நிலைநிறுத்துவதற்குச் செய்த முயற்சிகளையும் அதன் மூலம் நாம் அறிய முடிகிறது. 'சீனத்திலே தமிழர் எழுப்பிய சிவன் கோயில்' தலைப்பில் தமிழிலும், 'மத்திய காலத்துச் சீனத்திலே தமிழர் குடியேற்றம்' (A Tamil Colony in Mediaeval China) என்ற பெயரில் ஆங்கிலத்திலும் நான் எழுதியுள்ள சிறு நூலில் இதனை விரிவாக ஆராய்ந்திருக்கிறேன்.

ஜப்பானிய மொழிக்கு வழக்கு வழங்கிவரும் எழுத்து முறைகளுள் ஒன்றான 'கதகந' என்பது தமிழ்மொழி நெடுங்கணக்கையும், தமிழ் எழுத்துகளுக்கு அந்நாளில் வழங்கிய வரிவடிவத்தையும் கொண்டே அமைந்ததென்பதும் இவ்விடம் குறிப்பிடத்தக்கது. இலங்கையில் கிடைத்த மற்றொரு தமிழ்க் கல்வெட்டையும் இங்கே குறிப்பிடலாம். அத்தீவின் தென்கரையில் உள்ள காலி (Galle) என்னும் நகரிலிருந்து கிடைத்த மும்மொழிக் கல்வெட்டே அது. தமிழ், பாரசீகம், சீனம் ஆகிய மூன்று மொழிகளிலும் பொறிக்கப் பெற்றுள்ள அந்தச் சாசனம், சீனத்தில் அரசு புரிந்த மிங் வம்சத்து மன்னன் யுங் லோ தன்னுடைய ஆட்சியில் 7ஆம் ஆண்டு (கி. பி. 1409) தன்னுடைய தளபதியான செங்-ஹோ மூலமாக அளித்த தானங்களைத் தெரிவிப்பதாகும். ஸ்போலியா ஜெய்லானிகா (Spolia Zeylanica தொகுதி 8, பக்கங்கள் 122–132; தமிழ்ப் பகுதியின் வாசகத்திற்கு எபிகிராபிகா ஜெய்லானிகா மூன்றும் தொகுதி, 303ஆம் பக்கம் முதல் பார்க்க). அந்த மூன்று வாசகங்களிலும் முன்னுரைப் பகுதியும் காணிக்கைப் பொருள்களின் பட்டியலும் ஒன்றாகவே உள்ளன. அந்தக் காணிக்கை யாருக்குச் செதுக்கப்பட்டது என்பதைத் தெரிவிக்கும் இடத்திலேதான் மூன்று மொழி வாசகங்களிலும் வெவ்வேறு பேயர்கள் காணப்படுகின்றன. அதனால் சீனச் சக்கரவர்த்தி மூன்று வேறு தெய்வங்களுக்கு ஒரே சமயத்தில் அளித்த காணிக்கைகளையும் அது தெரிவிப்பதாகும் என்று பழைய ஆசிரியர்கள் கருதி வந்திருக்கிறார்கள். ஒவ்வொரு மொழி வாசகத்திலும் ஒவ்வொரு விதமாகப் பெயர் குறிக்கப்பட்டிருந்தாலும், மூன்று பெயர்களும் ஒரே தெய்வத்தைக் குறிப்பனவாகக் கொள்ளலாம். (இதனை நான் "அளகேச்வரன்" என்னும் நூலிலே விளக்கிக் காட்டியிருக்கிறேன். இந்தச் சாசனத்தின் தமிழ்ப் பாகத்தையும் அதிலே திருத்தமாகக் கொடுத்திருக்கிறேன்.) இன்னும் உலக அரங்கில் இன்றைக்கு ஆங்கிலத்துக்கு இருக்கும் செல்வாக்கையும் மதிப்பையும் போலவே, அந்நாளில் ஆசியா முழுவதிலும் தமிழ் சிறந்த நிலையிலே

விளங்கியது என்பதும் இதனுல் தெரியவருகிறது.

பிற நாடுகளிலே தமிழ்க் கல்வெட்டுக்களைப் பொறிக்கும்போது சில சமயங்களில் அந்தப் பிரதேசத்து எழுத்துக்களாலேயே பொறித்து விடுகிருர்கள். அனந்தப்பூர் மாவட்டத்தில் கொத்தசிவரம் என்னும் ஊரில் அரையன் இராஜ ராஜன் ஆயின விக்கிரம சோழச் சோழிய வரையனுடைய தமிழ்க் கல்வெட்டுக்கள் உள்ளன. (தென் இந்திய சாசனங்கள், தொகுதி பத்து, எண். 300). ஆனுல் அவை தெலுங்கு எழுத்திலே வெட்டப்பட்டுள்ளன. அவன் முதலாம் இராஜேந்திர சோழனுடைய ஆட்சிக் காலத்திலே அந்த இடத்தில் சோழ சாம்ராஜ்யத்துக்காகப் பெரும் பணி ஆற்றியவன். கோயில் எழுப்புவது போன்ற திருப்பணிகளையும் செய்தவன். அந்தக் கல்வெட்டுகள் ஒன்று செய்யுள் வடிவிலும் அமைந்தது. தெலுங்கு எழுத்தில் இருந்தாலும் தமிழ் மொழியில் இருப்பதால், தெலுங்கு ஆராய்ச்சியாளர்கள் அதனை ஒதுக்கிடக்கூடும். அதே போல அது தெலுங்கு எழுத்தில் காணப்படுவதால் தமிழ் ஆராய்ச்சியாளர்களும் அதனை அறியமாட்டாமல் ஒதுக்கிடக்கூடும். இவ்விதம் இரு சாராராலும் அத்தகைய கல்வெட்டுகள் ஒதுக்கப்படுவது இயற்கையே. எனவே, இத்தகைய கல்வெட்டுகளைப் பற்றி அதிகக் கவனம் தேவை.

இவ்விதம் தமிழ்நாட்டுக்குள்ளேயே கிடைக்கும் தமிழ்க் கல்வெட்டுகள் ஏராளமாக உள்ளன. அவற்றின் தொகை ஆயிரக்கணக்கிலே ஓடும் என்று தெரிகிறது. அவை அனைத்தும் வெளியிடப்படுவதற்குக் காலம் பிறக்கலாம். எனவே, அதற்கிடையில் அத்தகைய சாசனங்களைத் தொகுத்து அவை கூறும் விவரங்களையும் சேகரித்து ஒரு பட்டியல் தயாரித்து வெளியிட வேண்டுவது மிகவும் அவசியமாகும்.



# தமிழ் நாட்டில் காணும் பிற மொழிக் கல்வெட்டுகள்

தி. நா. சுப்பிரமணியன்

தமிழ் நாட்டுக்கு வெளியே தமிழ் மொழிக் கல்வெட்டுகள் கிடைப்பது போலவே தமிழ் நாட்டிலும் பிற மொழிகளில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகள் கிடைக்கின்றன. அவற்றுள் மிகவும் அதிகமாக உள்ளவை சம்ஸ்கிருத மொழியில் உள்ளனவே. சொல்லப்போனல், அவற்றை வேற்று மொழிக் கல்வெட்டுகளாகப் பிரிக்கக் கூடாது. அநேகமாக, தமிழ்க் கல்வெட்டுகள் அனைத்திலும் கிரந்த லிபியில் எழுதப் பெற்ற சம்ஸ்கிருதச் சொற்கள் இல்லாமல் இருக்காது. செப்பேடுகள் போன்றவற்றில் சாசனம், தமிழ், சம்ஸ்கிருதம் ஆகிய இரு மொழிகளிலும் எல்லா விவரங்களும் உள்படத் தனித் தனியே கொடுக்கப்பட்டிருக்கும். சில சமயங்களில் ஒன்றில் காணுத விவரங்கள் மற்றென்றில் காணப்படும். அந்த இரண்டு பகுதிகளையும் சேர்த்துப் பார்த்தாலேதான் சாசனம் பூர்த்தியானதாக இருக்கும். விஜயநகர சாம்ராஜ்யத்தின் ஆட்சிக் காலத்திலே எழுந்த செப்பேட்டுச் சாசனங்கள் பெரும்பாலும் தமிழ்ப் பகுதி இல்லாமல் முற்றிலுமே சம்ஸ்கிருதத்தில் காணப்படும். இவைகளைக் கவனித்தால் கிரந்த லிபியில் எழுதப்பட்டுள்ள சாசனங்களைத் தமிழ் நாட்டுக்கே உரியனவாகக் கொள்ளுதல் வேண்டும்.

வேறு சிலவகைப் பிறமொழிக் கல்வெட்டுகளும் இந்தத் தொகுப்பிலே சேர்க்காமல் ஒதுக்கப்பட வேண்டுவன. ஆங்கிலம், பிரெஞ்சு, போர்ச்சுகீசிய, லத்தீன் மொழிகளில் பொறிக்கப்பட்டுக் கிறிஸ்துவக் கல்லறைகளில் காணும் மரண அறிவிப்புகளும், அதேபோலப் பாரசீகம், அரபு, உருது போன்ற மொழிகளில் பொறிக்கப்பட்டு முஸ்லீம் கல்லறைகளில் காணப்படும் மரண அறிவிப்புகளும் இவ்விதம் ஆகும். இத்தகைய சாசனங்களுக்குத் தனியே வெவ்வேறு பட்டியல்கள் உள்ளன.

தீர்த்த யாத்திரை செல்வோர் தாங்கள்' தரு சித்த புண்ணிய ஸ்தலங்களிலே தங்கள் ஞாபகார்த்தமாக ஏதாவது ஒன்றை நிலைபெறச் செய்வது வழக்கம். பெரும்பாலான இடங்களில் அவர்கள் தங்கள் பெயர்களைச் 'சதா சேவை' என்ற தொடருடன் சேர்த்துக் கல்லிலே வெட்டியிருப்பதைக் காணலாம். சில சமயங்களில் கைகூப்பித் தொழுவது போன்ற தங்கள் உருவங்களையும் ரேகையாகவோ புடைப்புச் சித்திரமாகவோ செதுக்கியிருப்பதையும் பார்க்கலாம். அம் மாதிரியே வேடிக்கை பார்க்கச் சென்றவர்களும் தங்கள் பெயர்களை அந்தந்த இடங்களில் எழுதிவிட்டு வருவது உண்டு. பல சமயங்களில் அவர்கள் வந்துவிட்டுப் போன தேதிகளையும் காணலாம். திருக்கழுக்குன்றம், திருச்சிராப்பள்ளி, மலைக்கோட்டை, திருப்பரங்குன்றம் போன்ற இடங்களில் அவற்றைக் காணலாம். அவை பல மொழிகளில் காணப்படும். பதினேழாம் நூற்ருண்டில் திருக்கழுக்குன்றத்துக்குச் சதுரங்கப்பட்டணம் போன்ற இடங்களிலிருந்து வந்து போன டச்சு அதிகாரிகள் முதலியோர் விட்டுச் சென்ற விவரங்கள் சாசன இலாகாவின் 1908-ம் ஆண்டு அறிக்கையில் 79-வது பாராவில் கொடுக்கப்பட்டுள்ளன.

சோழர்களுடைய ஆதிக்கம் தெலுங்கு கன்னட நாடுகளில் பரவியிருந்த காலத்திலே, அந்நாட்டு மக்களுக்கும் தமிழ் நாட்டுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்து வந்திருக்கிறது. அதனல், சில சமயங்களில் அந்நாட்டவர் இங்கே வந்து அளித்த தானங்களை அறிவிக்கும் கல்வெட்டுகளைத் தங்களுடைய சொந்த மொழியிலேயே பொறித்திருக்கிருர்கள். உதாரணமாக, ஸ்ரீரங்கத்திலே அரங்கநாதர் ஆலயத்தில் முதற் குலோத்துங்க சோழனுடைய ஆட்சியின் இருபத்தொன்பதாம் ஆண்டில் பொறிக்கப்பட்ட கன்னடக் கல்வெட்டு ஒன்று உள்ளது. மேலைச் சாளுக்கிய ராஜ்யத்தின் சந்தி விக்கிரகியும் தண்ட நாயகனுமான ஓர் அதிகாரி அதை வழங்கியிருக்கிருன். அந்த ஆலயத்தில் உள்ள விஷ்வக்சேனர் கோயிலை அவன் புதிதாகவோ அல்லது புதிப்பித்தோ நிர்மாணித்தான் என்ற செய்தியை அது தெரிவிக்கிறது. (சாசன இலாகாவின் ஆண்டு அறிக்கை 1942 எண். 204)

விஜயநகர சாம்ராஜ்யத்தின் ஆட்சி தமிழ் நாட்டிலே பரவிய பிறகு தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளில் சாசனங்கள் அதிகமாக வழங்கப்பட்டன. அவை பெரும்பாலும் அந்த மொழிகளின் எழுத்துக்களாலேயே பொறிக்கப்பட்டும் வந்தன. எனினும், சில சமயங்களில் வேறு மொழியில் இருந்தாலும், அவற்றைத் தமிழ் மொழியிலேயே பொறித்து விடுவதும் உண்டு. உதாரணமாக, விஜயநகர மன்னரான கிருஷ்ண தேவராயர் ஆட்சிக் காலத்துக் கன்னட மொழிக் கல்வெட்டு ஒன்று காஞ்சிபுரத்துக்குப் பக்கத்தில் உள்ள திருப்பருத்திக் குன்றத்து ஜைன ஆலயத்தில் தமிழ் எழுத்திலேயே பொறிக்கப்பட்டுள்ளது. (தென் இந்தியக் கோயிற் சாசனங்கள் முதல் தொகுதி, எண். 458)

மதுரையில் அரசு புரிந்த திருமலை நாயக்கர் பெயரனும் முத்து வீரப்ப நாயக்கர் மகனுமான சொக்கநாத நாயக்கர் சகாப்தம் 1589 (கி. பி. 1667) பிலவங்க வருஷம் தத்தாத்ரேயானந்த சரஸ்வதி ஸ்வாமிகளுக்கு அளித்த பூதானத்தை அவர் தம்முடைய சிஷ்யனுக்குத் திரும்ப அளித்ததைத் தெரிவிக்கும் தெலுங்கு மொழிச் செப்பேட்டுச் சாசனம் கிரந்த லிபியில் பொறிக்கப்பட்டிருந்ததாக மக்கென்ஸியின் உதவியாளர்கள் சென்ற நூற்றுண்டின் ஆரம்ப காலத்தில் கண்டு அதைத் தமிழிலே பிரதி செய்திருக்கின்ருர்கள். (தென் இந்திய கோயிற் சாசனங்கள், மூன்றும் தொகுதி, முதல் பாகம், எண். 1251.)

விஜயநகர மன்னர்கள் ஆட்சிக் காலத்திலே அவர்கள் வழங்கிய சம்ஸ்கிருத மொழிச் செப்பேட்டுச் சாசனங்கள் கிரந்த எழுத்தில் இல்லாமல் நந்தி நாகரி என்னும் வகை எழுத்திலே பொறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். நாகரி எழுத்து தமிழ் நாட்டுக்குப் புதியதல்ல. பல்லவர்களுடைய ஆட்சிக் காலத்திலேயே அது வழக்கில் இருந்திருக்கிறது. பல்லவ அரசனை ராஜ சிம்மன் என்னும் இரண்டாம் நரசிம்ம வர்மனுடைய விருதுகளின் தொடர் கிரந்தம், நாகரம், சித்திர எழுத்துக்கள் போன்ற நான்கு வகை எழுத்துக்களில் ஒவ்வொரு வகை எழுத்தும் ஒரு வரிசையாக மொத்தம் நான்கு வரிசையில் காஞ்சிபுரம் கைலாசநாதர் ஆலயத்தின் கருப்பக் கிரஹச் சுவரில் பொறிக்கப்பட்டுள்ளது. (தென் இந்திய சாசனங்கள் வால்யூம். (1) மாமல்ல புரத்துக்குப் பக்கத்தில் சாளுவங் குப்பத்தில் உள்ள அதிரண சண்டேசுவர கிருஹம் என்னும் குடைவரைக் கோயிலில் அவனுடைய கல்வெட்டு கிரந்தம், நாகரி ஆகிய இரண்டு எழுத்துக்களில் தனித்தனியே இருமுறை பொறிக்கப்பட்டுள்ளது. (எபிகிராபிகா இந்திகா, தொகுதி 10 அந்த மன்னன் முதலாம் பரமேசுவர வர்மன் என்று கருதப்படுவதும் உண்டு.) ஆனல், நாகரியில் அமைந்தவை கிரந்த லிபியில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளின் வேறு பிரதிகளே. அவற்றைக் கவனித்தால் தமிழ் நாட்டுக்கு அப்பால் நாகர லிபி வழங்கப்பெறும் இடங்களிலும் தன்னுடைய ஆதிக்கம் பரவியிருந்ததென்பதைக் காட்டவே அவன் அவ்விதம் செய்தானே என்று எண்ணத் தோன்றுகிறது.

வங்காள மொழி எழுத்து நாகர லிபியை ஒட்டியே அமைந்ததாயினும், எகர, ஒகர உயிர் மெய்க் குறிகள் தமிழ், கிரந்த எழுத்துக்களில் காணும் முறையைப் பின்பற்றி அமைந்தவை என்பதும் இந்த இடத்திலே குறிப்பிடத்தக்கது.

மேலைக் கடற்கரையின் தென் கோடியில் விழிஞத்தை முக்கிய நகரமாகக் கொண்டு அரசு புரிந்த மேனுட்டு ஆய்குல மன்னர்களின் சாசனங்களுள் கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டைச் சேர்ந்த ஒரு செப்பேட்டுச் சாசனத்தின் சம்ஸ்கிருதப் பகுதி கிரந்த எழுத்தில் இல்லாமல் நாகர எழுத்தில் காணப்படுவதும் (திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் ஸீரீஸ், முதல் தொகுதி) குறிப்பிடத்தக்கது. முன்னுளிலே அந்தப் பிரதேசம் தமிழ் நாட்டைச் சேர்ந்ததாக இருந்தாலும், இப்போது அது கேரளத்தைச் சேர்ந்ததே. எனவே, முறைப்படி அதனைத் தமிழ் நாட்டுக்கு உரியதாகச் சொல்ல முடியாது.

அதே போன்ற மற்ருெரு சாசனத்தையும் இவ்விடம் குறிப்பிட விரும்புகிறேன். மேற்கு ஆசியப் பகுதியிலிருந்து மேலைக்கடற்கரைக்கு வந்து அங்கேயே தங்கிய வணிகர்கள் சிலருக்குச் சேர மன்னன் ஒருவன் இருப்பிடத்தையும் சில சலுகைகளையும் வழங்கியிருக்கிருன். அவற்றைத் தெரிவிக்கும் செப்பேட்டுச் சாசனம் தமிழ் மொழியில் மட்டும் அல்லாமல் வந்தவர்களுக்கு உரிய ஹீப்ரு மொழியிலும் காணப்படுகிறது. (திருவாங்கூர் ஆர்க்கியலாஜிகல் ஸீரீஸ், இரண்டாம் தொகுதி) அதுவும் இப்போது கேரள ராஜ்யத்தைச் சேர்ந்ததே.

திருநெல்வேலி மாவட்டத்தில் குற்ருல மலையிலே தோட்டங்களைத் தாண்டி 'பரதேசிப் பொடை' என்ற பெயரில் வழங்கப்பெறும் இடத்தில் பாறையிலே ஒரு சிறு கல்வெட்டு நான்கு வரிகளில் உள்ளது. சதுரமாகவும் முக்கோணமாகவும் வட்டமாகவும் அதன் எழுத்துக்கள் உள்ளன. அதிலே எழுதியிருப்பது என்ன

வென்றே விளங்காமல் நீண்ட காலமாக இருந்து வருகிறது. அது என்ன மொழியில் அமைந்தது என்பதும் தெரியவில்லை. சாசன இலாகாவினர் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் தங்கள் ஆண்டு அறிக்கையில் அதன் படத்தை வெளியிட்டிருக்கிறார்கள்.

புதைபொருள் ஆராய்ச்சித்துறையின் தெற்கு வட்டத்தின் அதிகாரியாக இருக்கும் திருவாளர் கே. ஆர். சீனிவாசன் சில ஆண்டுகளுக்கு முன் கோயில் கட்டிட அமைப்பு ஆராய்ச்சியின் தென் பிராந்திய அதிகாரியாக இருந்த நாளில், அது மேற்கு ஆசியாவில் அரபு நாட்டின் ஏமன் பகுதியில் முன்னாளிலே வழங்கி வந்த சபெயன் (Sabean) என்ற மொழி எழுத்துக்களாக இருக்க வேண்டுமென்பதை உணர்ந்து அதனைச் சாசன இலாகாவிற்கு அறிவித்தார். அந்தக் கல்வெட்டு சபெயன் மொழியிலே உள்ளது என்பதைத் தாங்களும் உணர்வதாகவும் அதனை வாசித்து மொழிப்பெயர்ப்பதற்காக அந்த மொழியில் வல்லுநராக இங்கிலாந்தில் லண்டன் மாநகரத்தில் இருக்கும் ஒருவருக்கு அனுப்பியிருப்பதாகவும் சாசன இலாகாவினர் அவருக்கு அறிவித்திருந்தனர். அது என்ன ஆயிற்று என்பதும் தெரியவில்லை. அது இன்னமும் வெளியிடப் பெறவில்லை என்றே நினைக்கிறேன்.

தஞ்சாவூர் பிரஹதீசுவரர் கோயிலிலே மராட்டிய மொழியில் எழுதப்பெற்ற கல்வெட்டுக்கள் சில உள்ளன. அவற்றுள் ஒன்றிலே (சாசன இலாகாவின் ஆண்டு அறிக்கை, 1924, எண் 424) தஞ்சையில் அரசு புரிந்த மகாராஷ்டிர வம்சத்தின் வரலாறு விரிவாகக் காணப்படுகிறது. மகாராஷ்டிர சாம்ராஜ்யத்தை நிறுவிய சிவாஜியின் தந்தையான ஷாஜியின் காலத்திலிருந்தே அந்த வமிசத்தின் வரலாறு அதிலே கொடுக்கப்பட்டுள்ளது. அந்த வமிசத்தைச் சேர்ந்தவர்களைப் பற்றி வேறு இடங்களிலே நமக்குக் கிடைக்காத பல விவரங்கள் அதிலே காணப்படுகின்றன. கி.பி. 1803ஆம் வருஷம் தஞ்சையின் கடைசி அரசனான சரபோஜியால் அது பொறிக்கப்பட்டது. சுமார் அரை நூற்றாண்டுக்கு முன் அந்தக் கல்வெட்டுக்கள் திரு. டி. சாம்பமூர்த்தி ராவால் தனிப்புத்தகமாக வெளியிடப்பட்டுள்ளன. அதிலே, இந்தச் சாசனம் ராயல் அளவில் நூற்றிருபது பக்கங்கள் கொண்டுள்ளது.

தமிழ் நாட்டிலேயே தமிழ் மொழியில் உள்ள சாசனங்களை வேறு எழுத்துக்களில் பொறித்து விடுவதும் உண்டு. ஸ்ரீரங்கம் அரங்கநாதர் ஆலயத்திலே தமிழ்ச் சாசனம் ஒன்று தேவநாகரி லிபியில் பொறிக்கப்பட்டுக் காண்கிறது. அம்மாதிரியே தமிழ் மொழியில் அமைந்த செப்பேட்டுச் சாசனங்கள் சிலவும் கிரந்த லிபியில் எழுதப்பட்டுள்ளன. அவற்றுள் சில சென்னை அரசினர் பொருட்காட்சிச் சாலையில் உள்ளன. அவற்றுள் ஆறு தென்இந்திய கோயிற் சாசனங்களிலும் வெளியிடப்பட்டுள்ளன. **(தென் இந்திய கோயிற் சாசனங்கள் மூன்றும் தொகுதி இரண்டாம் பாகம் எண். 1274 முதல் 1279 முடிய).**

தமிழ் நாட்டுக்கு வெளியேயும் எல்லைப்பகுதிகளில் தமிழ் மொழிக் கல்வெட்டுகள் காணப்படுவதைப் போலவே தமிழ் நாட்டுக்கு உள்ளும் எல்லை ஓரங்களிலே தெலுங்கு கன்னட மலையாள மொழிக் கல்வெட்டுகள் காணப்படுவது இயற்கையே. மைசூர் ராஜ்யத்தை ஒட்டிய தர்மபுரி மாவட்டம் பகுதியில் கன்னடக் கல்வெட்டுகள் பல கிடைக்கின்றன. அவற்றுள் சில, ஆயிரம் ஆண்டுகளுக்கும் முற்பட்டவை. அம்மாதிரியே திருநெல்வேலி கன்யாகுமரி மாவட்டங்களின் எல்லைப் பகுதிகளில் சில மலையாள மொழி கல்வெட்டுகளும் உள்ளன.

கி.பி. பதினான்காம் நூற்றாண்டிலே ஓர் அரை நூற்றாண்டு காலத்துக்கு மதுரையிலே முஸ்லிம்களின் ஆட்சி இருந்துவந்திருக்கிறது. அந்தக் காலத்திலே வழங்கப் பெற்ற தமிழ்க் கல்வெட்டுகளில் சில ஹஜிரி ஆண்டைக் குறித்துப் பொறிக்கப்பட்டுள்ளன. அதேபோல், அந்தக் காலத்துச் சுல்தான்கள் வழங்கியனவாகப் பாரசிகம் போன்ற மொழிக் கல்வெட்டுக்கள் இருத்தலும் இயற்கையே. அவற்றுள் ஒன்றன் படத்தை நான் சில ஆண்டுகளுக்கு முன் பார்த்திருக்கிறேன். ஆனால், அது சாசன இலாக்காவின் ஆண்டு அறிக்கைகளில் காணப்படுவதாகத் தெரியவில்லை. முஸ்லிம் சாசனங்களை ஆராய்வதற்காகப் புதைபொருள் துறையில் தனிப் பிரிவு ஒன்று உண்டு. அந்தப் பிரிவின் அறிக்கைகளில் அது பற்றிய விவரம் கிடைக்கக் கூடும்.

தமிழ்நாட்டில் உள்ள கல்வெட்டுகளுள் இது வரையில் பிரதி செய்யப்பட்டவை ஏராளமாக உள்ளன. அவற்றுள் ஒரு சிறுபகுதியே வெளியிடப்பட்டுள்ளன. பெரும்பகுதி இன்னும் அச்சு வாகனம் ஏறவில்லை. பிரதி செய்யப்பட வேண்டியனவும் அதிகமாக உள்ளன. இது வரையில் பிரதி செய்யப் பெற்றவைகளையாவது தொகுத்து அவற்றின் முக்கியமான விவரங்களையும் சேர்த்து ஒரு பட்டியல் தயாரித்து வெளியிடப் பெறவேண்டியது மிகவும் அவசியமாகும்.

# EPIGRAPHS AND EPIGRAPHISTS

TRIVIKRAMA NARAYANAN

"Oh, that my words were graven with a pen of iron on the rock for ever!" So exclaimed the patriasch, Job, famous for his patience (Job 19 : 24). Obviously he thought that all the generations to come would read his words. Those who had their words written on stone or metal in the past must have nursed that hope, little realizing the variety of human wishes.

Within 500 years of his passing, the two hundred odd messages of Asoka, recorded on stone became unintelligible to his countrymen. The Chinese traveller Fa-hien saw in Magadha a huge stone pillar 15 feet in girth and 30 feet in height, bearing an inscription of Asoka. He was told by the people that Asoka had in that inscription bestowed the entire inhabited world on the Buddhist priest-hood. (Travels of Fa-Hsian 399–414, by H.A. Giles, Cambridge, 1923 P. 48) Sultan Firoz Tughlak (1351–1388) was so fascinated by the Asoka pillars of Meerut and Topra that he had those veritable leviathans transported to his capital by Herculean efforts by land and water and set up on a specially erected building (still known in Delhi as the Kotila). Neither Firoz Shah nor Akbar was able to find a scholar capable of reading and translating for them what was written in the inscriptions.

There was an amazing event in the story of our epigraphic research. In 1856, when the ruins of the Buddhist stupa at Amaravati (in the Andhra state) began to attract the attention of Government, a Reverend Taylor was commissioned to examine and report on the inscriptions and sculptures discovered there. He was a complete stranger to ancient Indian writing and indeed culture also. Undaunted, he evolved his own script and produced an absolutely imaginative translation of the inscriptions. That the relics belonged to the Vaishnava sect of the 16th century A. D. was his verdict! Many such Taylors attempted to read the Egyptian hieroglyphs long ago and the Indus Valley writing in the recent past.

Two sensational episodes in world's epigraphic studies provide an object lesson in international interdependence. The known script of a people (the Greeks) enabled the reading of the forgotten scripts of two regions of hoary antiquity (Egypt and India). Little did those who incised the Greek version below the writing in the hieroglyphic, Brahmi or Kharoshthi scripts realize that they were furnishing a clue to posterity for the recovery from oblivion a vast corpus of oriental wisdom. It is amazing to think how the mere presence of the Greek letters infused life into the dead scripts twenty centuries later and how Egyptology and Indology are for ever indebted to Hellenic Culture.

Ever since the return of one hundred scholars and artists who accompanied Napoleon's Nile expedition brought out 24 volumes of text and 12 of plates on the antiquities of Egypt, scholars were baffled by the picture-writing that

practically every monument and object, temples and burial chambers, coffins and stelae, statues and utensils bore. In one temple alone (that at Edfu) it was estimated that a scribe would take 20 years to copy the inscriptions therein from morning till night. After the unsuccessful attempts of many enthusiasts Jean Francois Champollion was able to solve the mystery from the trilingual inscriptions on a three foot slab from a place called Rosetta. It was the epigraph celebrating the coronation of Ptolemy V Epiphanes of 195 B. C. recorded in three scripts, Hieroglyphic, Demotic and Greek.

One of the far-reaching effects of Alexander's expedition to India led to the decipherment of the forgotten script of Asoka. Some Greek princes who ruled in Afghanistan and the Punjab from C. 2C0 B.C. to 25 B.C. recorded their names and titles in Greek on the obverse of their coins and a translation there of in Indian script and language on the reverse. The thought that these legends gave out the secret long sought after by the enthusiasts did not dawn upon them. Finally the idea struck one of them, mainly because he was a coin specialist.

He was James Princep. An English youth, a short lived and versatile genius, seemed to have been born only to solve the riddle of the Asokan script. Though he was a qualified architect, Princep (1799–1840) came to India in his 20th year to serve in the Mint of his East India Company in Calcutta. He owed his interest in Indology to the renouned Sanskrit scholar, H. H. Wilson, who had also joined the Mint, after spending a brief spell as the surgeon of the Company's army. The absorbing passion of Princep was the decipherment of the Asokan script which had proved a hard nut to scholars like Jones, Wilford, Cope and Stirling. The chance of a German scholar stealing a march over him made Princep frantic. At a meeting of the Asiatic Society of Bengal in March 1834, he outlined the way to tackle the supreme problem thus:

"It would require an accurate acquaintance with many of the learned languages of the East as well as perfect leisure and abstraction from other pursuits to engage upon the recovery of this lost language; but when its simplicity of vocables is compared with the difficulties of the Persepolitan or Cuneiform characters, lately deciphered by Grotesfend and St. Martin or the more abstruse hieroglyphics of Egypt, attempted by Young and Champollion, it seems almost a stigma on the learned of our country that this should have remained so long an enigma to scholars and the object of the present notice is to invite fresh attention to the subject, lest the indefatigable students of Bonn or Berlin should run away with the honour of the first making it known to the learned world". (Journal of Asiatic Society of Bengal Part III 1834 pp. 114 ff). The practical scientist that he was, he did not accept Stirling's suggestion that it might have been derived from the Greek alphabet, in view of the similarity of certain letters. He detected five vowel marks and concluded that feature alone would be sufficient to prove its affinity to Sanskrit, whatever the language might be. In a couple of years he laid before his society his successful solution of the puzzle with the aid of the bilingual coins. Soon after that, he passed away at the age of 41.

Princep's redemption of the two scripts in which Asoka issued his edicts (Brahmi and Kharoshthi) ushered in an era of extraordinarily brisk activity of decipherment, comparison and correlation. All the Indian scripts were found to be descended from Brahmi. About the origin of Brahmi every group of scholars had a different view. A few

like Thomas, Dowson, Cunningham and Lassen considered that Brahmi was a native of India as seen from its simplicity and independence. Kharosthi, written from right to left, was a type of Aramaic script prevalent in western Asia, particularly in Iran till the early centuries of this era.

Asoka's edicts were intended to be read not by scholars but by laymen. So the edicts were written in the Prakrit (natisal\ or vernacular as spoken by the ordinary people instead of the polished literary language (Sanskrit). Even the Kshatrapa ruler, Rudradaman, so fond of high flown Sanskrit in his epigraphs, used only Prakrit in his coins. About the beginning of this era the Brahmi script was so popular and useful for the record of even an alien language that the Jain Missionaries of the Pandyan country inscribed their Tamil messages in Brahmi on the walls of their cave dwellings. The sagacity of a South Indian epigraphist (K. V. Subramanya Ayyar) discovered this fact when other scholars were at a nonplus over the language of the texts.

The reading of ancient Sanskrit inscriptions in Nagari did not present unsurmountable difficulties. The pioneer in the field was Charles Wilkins, who began life as a clerk in the Calcutta factory and who brought out the first translation of the Gita (1785), with the foreword of warren Hastings. Sir William Jones himself owed his Indological interest to Wilkins, rightly called the "morning star of indology". A few early mile-stones in epigraphic research will now be briefly noticed. Wilkins deciphered and published the copper-plate grant of Vigrahapala from Monghyr and Budal (Dinajpur) pillar inscription of Gopala, the Pala minister (1785). His study of the inscriptions of the Maukhari dynasty was helpful for the tabulation of the Nagari alphabet of the Gupta age by other scholars (Troyer and Mill 1838). In the meantime Babington read the Pallava inscriptions of Mahabalipuram, while Walter Eliot studied the old Kannada script.

The importance of inscriptions in historical research was emphasized by Dr. J. F. Fleet of the Bombay Civil Service who set a standard for the edition of epigraphs. He said: "The want of written history is to a large extent compensated by numerous contemporary records in the shape of inscriptions conveying and intended to serve as the title deeds of the grants and endowments, made by kings and Chiefs to temples and religious communities, some on rocks, some on the pillars and walls of temples, others on single blocks of stone set up in public places and others engraved on plates of copper held together by rings to which is attached the seal of the reigning dynasty. In these inscriptions then lies our only hope of filling up the many lacunae in Indian History." Fleet drew attention in this connection, to the following observation of Lassen. "Their high importance as a supplement of the history incompletely transmitted to us and as a means of fixing the eras of the dynasties has become already acknowledged by Colebrooke, who laid the foundations of most branches of the knowledge of Indian antiquities" (Fleet; Pali, Sanskrit and old Canarese Inscriptions 1878. i). Some rulers of the Middle Ages (Tdhar and Ajmer) had small plays inscribed on stone slabs (Indian Antiquary Vol. 35 P. 235 and Epigraphia Indica Vol. VIII pp. 96 ff).

Authentic guides for the easy reading of inscriptions were designed by Burnell, Butler and Ojha. An able and monumental work tracing the development and changes through the ages in different regions of Brahmi appeared sometime ago from the pen of C. Sivaramamurti. (Indian Epigraphy

and South Indian Scripts, 1952). A concise and handy work on Indian Palaeography has recently been written by Ahmed Hasan Dani (Oxford 1963). A Tamil work on Tamil Palaeography by T. N. Subramaniam has also appeared recently.

Since the days of Wilkins and Princep an interminable spate of articles and studies in the field began to flow not only from publications like the Epigraphia Indica, Epigraphia Carnatica and the Indian Antiquary, but also from the journals of research societies, particularly of Calcutta and Bombay. In fact the roll of the epigraph-enthusiasts foreign and Indian is too long to be catalogued in this brief sketch.

Some outstanding features of the epigraphs deserve notice. In the north and south, the literary excellence of many epigraphs, whether in prose or verse, is remarkable. F. Kielhorn observed (Epigraphia Indica VIII p. 36) that the composer of Rudradaman epigraph at Junagarh was a poet of no mean order. Indeed many epigraphs echo classical texts as pointed out by Sivaramamurti. The Aihole inscription (of 634 A. D.) sets the lower limit for the date of Kalidasa and Bharavi by referring to them.

In the early centuries of this era, bands of adventurous Tamils sailed to the countries of the far-east taking with them their ways of life and thought and their love of inscriptions. Three remarkable Tamil inscriptions of such colonists have come down to us from Siam, Sumatra and Burma. The Tamil one of Siam was first examined by Dr. E. Hultzsch 50 years ago (Journal of the Royal Asiatic Society, London 1913 pp. 337 ff). It was later edited by Prof. K. A. N. Sastri (Journal of Oriental Research, 1932 pp. 299 ff). In this inscription of the 9th century A. D., the care of a tank called " Avani-naranam," dug by the Chief of Nangur was entrusted to the local residents, specified there-in the time of Pallava Nandivarman III, the tragic hero of that horror poem, Nandikkalambakam. The inscription at Baros in Sumatra (1088 A.D.) registered a gift to a temple there by a group of Tamil residents. The inscription of Pagan in Burma (13th Century A. D.) began with the sixth verse of the Mukundamala, a hymn of the Vaishnava saint Kulasekhara Azhvar, recorded a gift to a temple by a Tamil devotee. This epigraph recalls a South Indian Inscription in which the same saints' Tamil hymn figures. There is, in the Ranganatha temple at Srirangam, an inscription of Kulottunga I, which cites the lines of Peria-Tirumozhi (2–1) beginning with the words " Thettarumthiral " (South Indian Inscriptions Vol. III pp. 148 ff).

# கோட்டைகள்

இரா. நாகசாமி

சிறு ஊர்களில் வாழ்ந்த பண்டைய மக்கள் தங்கள் ஊரைப் பகைவரிடமிருந்து காக்க அதைச் சுற்றிலும் வேலி எடுத்தனர், சிறிய நுழைவாயிலை வைத்தனர், நாய்களைக் காவலாக வைத்தனர் என்றெல்லாம் ஊகிக்க இடமிருக்கிறது. பத்துப்பாட்டில் எயினச் சாதியினர் அமைத்த அரண்கள் இதைப் படம் பிடித்துக் காட்டும் வகையில் உள்ளது. அவர்களது ஊர்கள் முள்வேலி சூழப்பட்டு விளங்கும். அதைச் சுற்றிலும் காவற்காடுகள் இருக்கும். அரணில் மணிகள் கட்டியதும் பலகைகளிலே பகைவரைக் குத்தியதால் முனை மழுங்கியதுமான வேல்கள் வைக்கப்பட்டிருக்கும். வில்லும் அம்புகளும் வைக்கப்பட்டிருக்கும். வீடுகள் அங்குண்டு. திரண்ட கால்களை உடைய பந்தர்கள் இருக்கும். சங்கிலியால் கட்டப்பட்ட நாய்கள் அங்கு காவலிருக்கும். இவற்றின் வாயில்கள் கொடிய கணைய மரம் ஏறட்ட கதவையுடைத்தாயிருக்கும். நெடிய, கூர்மையான கழுமரங்கள் வாயில்களில் இருக்கும் என்று பெரும்பாணாற்றுப்படையில் கூறப்பட்டுள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

குறுநில மன்னர்களும், பெரும் மன்னர்களும் மலைகளின்மேல் கோட்டைகளை அமைத்தனர். மலைகள் இயற்கை பாதுகாப்பை அளித்தன. அத்துடன், மலையே மதிலாகவும், மலையில்லாத இடத்து மதிலே அரணாகவும் கட்டப்பட்டு விளங்கின என, பதிற்றுப்பத்து கூறுகிறது. இவ்வாறு எழுப்பப்பட்ட மதில்களை 'இஞ்சி' யென்றும், அரண்களை "எயில்" என்றும் நம் பண்டைய இலக்கியங்கள் கூறும். அரண்களைச் சுற்றிலும் அகழிகள் இருக்கும். அவற்றில் பயங்கரமான பற்களையுடைய முதலைகள் இருக்கும். இவற்றின் புறத்தே அடர்ந்த காவற்காடுகள் இருக்கும். மலைகள் மேலன்றி மன்னர் வாழும் நகர்களின் புறங்களையும் அரண்கள் சூழ்ந்திருந்தன என்று மதுரைக்காஞ்சி முதலிய சங்க நூல்கள் குறிக்கின்றன. இவ்வாறு ஏற்பட்ட நகர்களில் அரசரது மாளிகைகளும், அரச மாதேவியரது இருக்கைகளும் ஆலயங்களும் சிறந்திருக்கும். பகைவர் முற்றுகையிட்டு மதில் கதவுகள் அடைக்கப்பட்ட காலத்தே உள்ள இருப்போரின் வாழ்விற்காக வயல்களும், குளங்களும் உள்ளே ஏராளமாக இருந்தன என்றும் சங்கப் பாட்டுக்களால் அறிகிறோம்.

கோட்டை மதிற்சுவர்கள் பல பாகங்களைக் கொண்டதாக அமைக்கப்பட்டன. பிங்கலந்தை போன்ற பண்டைய நிகண்டுகள் அவற்றின் பெயர்களை நமக்குத் தெரிவிக்கின்றன. பகை அரசர்களின் முற்றுகையிலிருந்து காப்பதற்குக் கோட்டை மதில்களில் பலவகைக் கருவிகளும் யந்திரப் பொறிகளும் அமைக்கப்பெற்று விளங்கின. சிலப்பதிகாரம் மதுரைக் காண்டத்தில் மதுரையைச் சுற்றியிருந்த மதிலின் அமைப்பும் அதில் வைக்கப்பட்டிருந்த பொறிகளின் பெயர்களும் சிறப்பாகக் குறிக்கப்பெற்றுள்ளன.

சிலப்பதிகாரத்தில் மதுரைக் கோட்டையின் அமைப்பில் கீழ்க்கண்டவைகள் குறிக்கப்பட்டுள்ளன.

1. காவற்காடு
2. அகழி
3. வளைந்து தானே எய்யும் எந்திர வில்.
4. கரிய விரலையுடைய குரங்கு போலிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் பொறி.
5. கல்லையுமிழும் கவண்.
6. காய்ந்திறைத்தலாற் சேர்ந்தாரை வருத்துவதாய நெய்.
7. செம்புருக்குமிடா, அன்றி அங்ஙனமிறைத்தற்குப் பாகு காயும் குழிசிகள்.
8. உருகக் காய்ச்சியெறிதற்கு எஃகு பட்டிருக்கும் உலைகள்.
9. இடங்கணிப் பொறிக்குக் கல்லிட்டு வைக்குங் கூடை.
10. தூணிடில் வடிவாகப் பண்ணிப் போகட்டு வைத்துக் கிடங்கு நீங்கி மதில் பற்றுவாரைக் கோத்து வலிக்குங் கருவி.

11. கழுக்கோல் போலக் கழுத்திற் பூட்டி முறுக்குச் சங்கிலி ; கயிற்றுத்தொடக்கு.
12. ஆண்டலைப்புள் வடிவாகப் பண்ணிப் பறக்கவிட உச்சியைக் கொத்தி மூளை யைக் கடிக்கும் பொறிநிரை.
13. கிடங்கிலேறின் மறியத் தள்ளும் இருப்புக் கவை.
14. கழுக்கோல்.
15. அம்புக்கட்டு.
16. ஏவறைகள்.
17. மதிற்றலையைப் பற்றுவாரைக் கையைப் பொதுக்கும் ஊசிப்பொறிகள்.
18. மாற்றார்மேற் சென்று கண்ணைக் கொத்தும் சிச்சிலிப்பொறி.
19. மதிற்றலையினேறினர் உடலைக் கோட்டாற் கிழிக்க இரும்பாற் செய்து வைத்த பன்றிப்பொறி.
20. வேய்வடிவாகப்பண்ணி அடித்தற்கமைந்த பொறி.
21. கதவுக்கு வலியாக உள்வாயிற் படியிலே நிலத்திலே வீழ விடுமரங்கள்.
22. கணைய மரம்.
23. விட்டேறு, சிறுவளம், வல்லயம், ஈட்டி, சதக்கினி, தள்ளிவெட்டி, களிற்றுப் பொறி, விழுங்கும் பாம்பு, கழுகுப் பொறி, புலிப்பொறி, குடப்பாம்பு, சகடப்பொறி, தகர்ப்பொறி, அரிநூற் பொறி.
24. குருவித்தலைகள் முதலியன.

கம்பன் தன் பெருங் காப்பியத்தில் இவை பற்றிப் பரக்கவும், சிறக்கவும் பேசுதல் அறிந்து மகிழத்தக்கதாகும்.

இவ்வாறு ஏற்பட்ட கோட்டைகள் பல தமிழ் நாட்டில் இருந்தன. ஆனால் இவையனைத்தும் மறைந்து போயின. மன்னர்கள் பகையரசர்களை வெற்றி கண்டபோது அவர்களது அரண்களை அழித்ததே காரணமாகும். சமீப காலத்தும் பாஞ்சாலக்குறிச்சிக் கோட்டையை ஆங்கிலேயர் தரைமட்டமாக்கி யுள்ளதைக் காணலாம். எனினும், சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்ட பல கோட்டைகள் தமிழகத்தில் காணப்படுகின்றன. செஞ்சி, வேலூர், திண்டுக்கள், ஆத்தூர், சங்ககிரி, திருச்சி, திருமெய்யம், நாமக்கல் முதலிய இடங்களில் இக்கோட்டைகளை காணலாம்.

அரண்களில் உள்ளே அரசரது மாளிகைகளும், திருவோலக்க மாளிகைகளும், நாளிருக்கைகளும், ஆயுதக் கிடங்கும், உணவுக் கிடங்குகளும் காணப்படுகின்றன. செஞ்சியில் இவற்றில் பல இன்னும் விளங்கக் காணலாம். நாயக்கர்களால் கட்டப்பட்ட சிறந்த மாளிகைகளில் தஞ்சை மாளிகையும் மதுரை திருமலைநாயக்கர் மாளிகையும் சிறந்தவையாம். ஆத்தூரில் உள்ள கோட்டை மிக அழகு வாய்ந்ததாகும்.



# பண்டைத் தமிழகத்து நாணயங்கள்

இரா. நாகசாமி

தமிழகத்தில் சங்க காலத்தில் ஏராளமான தங்கக் காசுகளும் ஏனைய காசுகளும் வழக்கி லிருந்தன. மன்னர்கள், புலவர்களையும், பாணர் களையும் மற்றைய கலைஞர்களையும் போற்றி ஏராளமான பொற் காசுகளை அளித்திருக் கின்றனர். பதிற்றுப்பத்து பதிகங்களிலிருந்து இச்செய்திகளை நன்கு அறியலாம். காசு, காணம் என்று குறித்தனர். சங்ககால காசு களில் அரசர்களின் தலைகள் அச்சிடப்படவில்லை. புலி, யானை முதலிய பொறிகளே காணப்படு கின்றன. பெரும்பாலான காசுகளில் எழுத்துக் களும் இல்லை. ஆயினும் அவை சதுரமாகவே காணப்படுகின்றன. அவற்றில் புலி, அமரர் தரு, யானை, திருமறு (ஸ்ரீவத்சம்) முதலிய சின்னங்கள் காணப்படுகின்றன. அத்துடன் தமிழகத்தில் அச்சுக் குத்திய காசுகளும் ஏராள மாகக் கிடைத்துள்ளன. இவற்றை இந்தியா வின் வடபகுதியில் "புராண" என்று குறிப்பர். தமிழகத்தில் காணம் என்று அழைக்கப்பட்டவை இவையோ என்று தோன்றுகிறது. இக்காசுகள் நீண்ட சதுரமான கெட்டித் தகடுகளில், சில முத்திரைகள் அழுத்தப்பட்டு விளங்குகின்றன. தங்கம், வெள்ளி, செம்பு ஆகிய மூன்று உலோ கங்களிலும் இவை உள்ளன.

சமீபத்தில் செங்கம் என்ற இடத்தில் 120 காசுகள் கிடைத்துள்ளன. இக்காசுகளில் ஒரு புறம் 'திண்ணன் எதிரான் சேந்தன் அ' என்று பண்டைய தாமிழி எழுத்துக்கள் உள்ளன. பண்டைய தாமிழி எழுத்துக்களோடு கிடைத் துள்ள பழைய காசுகள் இவையே. இவற்றில் திண்ணன், சேந்தன் என்ற சங்க காலப் பெயர் கள் காணப்படுவது அறிந்தின்புறத் தக்கது. திண்ணனுடன் முரணிய சேந்தன் என்ற மன்னனுடையது இக்காசு என்று பொருள் சிறக் கிறது. எழுத்தின் அமைதியைக் கொண்டு நோக்கினால் இது கி. பி. 2ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததென்ற முடிவுக்கு வரவேண்டியவர்களாக இருக்கிறோம்.

**உரோமானியக் காசுகள் :**

கடைச்சங்க காலத்தை ஒட்டியே தமிழகத்தில் வெளிநாட்டுக் காசுகள் புழக்கத்தில் இருந்து வந்துள்ளன. இவை வெளிநாட்டிலிருந்து தமிழ கத்திற்கு வந்த மாலுமிகள், வாணிகர்கள், போன்றோர்களால் கொண்டு வரப்பட்டன. இவ் வாறு வெளிநாட்டிலிருந்து வந்த காசுகளில் மிகவும் பழமையானது உரோமானியக் காசு களாகும். கி. மு. 3ஆம் நூற்றாண்டிலிருந்து கி. பி. 2ஆம் நூற்றாண்டு வரை அச்சிடப்பட்ட உரோமானியக் காசுகள், கிடைத்துள்ளன. அகஸ்டஸ், டைபீரியல், நீரோ, ட்ராஜான், ஹேட்ரியன் முதலிய புகழ் வாய்ந்த மன்னர் களின் காசுகள் தமிழகத்தில் மிகுதியாகக் கிடைத்துள்ளன. அவை தங்கம், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்களில் அச்சிடப்பட்டவை யாகும். கோவை, நெல்லை, சேலம் மாவட்டங் களில் அக்காசுகள் கிடைத்துள்ளன. அவற் றுடன் பல உரோமானிய அணிகளும் கிடைத் துள்ளன. சென்னைக்கும் திருவொற்றியூருக்கும் இடைப்பட்ட பகுதியில் முதுமக்கட்சாடி ஒன் றுடன் உரோமானியக் காசு ஒன்று கிடைத் துள்ளதாக ஒரு குறிப்பு கூறுகிறது. மாமல்ல புரத்திலும் உரோமானியக் காசு கிடைத் துள்ளது. பாண்டிச்சேரிக்கு அருகில் அரிக்க மேடு என்ற இடத்தில் நடந்த அகழ்வாராய்ச்சி யில் உரோமானியப் பானை ஓடுகளும் காசுகளும் கிடைத்துள்ளன. சமீபத்தில் காவிரிப்பூம் பட்டினத்தில் நடந்த அகழ்வாராய்ச்சியில் ஓர் உரோமானியக் காசு கிடைத்துள்ளது. உறை யூரில் நடந்த அகழ்வாராய்ச்சியில், உரோமா னியப் பானை ஓடுகள் கிடைத்துள்ளன.

சங்க இலக்கியங்களில் யவனர்கள் நம் நாட் டிற்கு வாணிகத்தின் பொருட்டு வந்தமை குறிக்கப்பட்டுள்ளது. சங்க காலத்தில் தமிழகத் திற்கு வந்த வெளிநாட்டு வாணிகர், மாலுமிகள் முதலியோரால் எழுதப்பட்ட நூல்களிலும், தமிழகத்திற்கும் மேலை நாட்டிற்கும் இருந்த வாணிகத் தொடர்பு குறிக்கப்படுகிறது. இவை யனைத்தையும், தமிழகத்தில் கிடைத்துள்ள காசுகள் சான்றாயிருந்து உறுதிப்படுத்துகின் றன. உரோமானியக் காசுகளின் முன்புறம் அக் காலத்து உரோமானிய அரசனின் தலை அச்சிடப் பட்டுள்ளது. தமிழ் நாட்டுக் காசுகளில் அரச னின் தலை அச்சிடும் வழக்கம் கிடையாது.

சங்க காலத்திலேயே உரோமானியக் காசுகள் தமிழகத்துக்கு வந்தபோதிலும் தமிழ் மன்னர்கள் அம்முறையைப் பின் பற்றாதது குறிப்பிடத் தக்கதும் போற்றத் தக்கதுமாகும்.

ஈழ நாட்டுக்கும் தமிழகத்திற்கும் நெருங்கிய தொடர்பு நெடுங்காலமாகவே இருந்து வந்திருக்கிறது என்பது அனைவரும் அறிந்த விஷயம். ஈழக்காசுகள் பல தமிழகத்தில் கிடைக்கின்றன. பல காசுகளில் ஒருபுறம் அமர்ந்த மனித உருவமும் மறுபுறம் நின்ற மனித உருவமும் உள்ளன. இவை மனிதனின் இயற்கை உருவாக இல்லாமல், செயற்கை நிலையில் அமைந்ததாயிருக்கின்றன. இவற்றை "ஈழ மனிதன் காசு" என்று ஆராய்ச்சியாளர் குறிப்பர். தமிழ் நாட்டுக் காசுகளிலும் (சோழர், பாண்டியர், காசுகள் சிலவற்றில்) இவ்வுருவம் பொறிக்கப்பட்டிருக்கிறது. தமிழகத்துக் கல்வெட்டுக்களில் 'ஈழக்காசு' என்ற குறிப்பும் காணப்படுகிறது. ஈழ மனிதனின் உருவம் பொறித்த காசுகளே ஈழக்காசு எனக் குறிக்கப்பட்டன போலும்.

சீன நாட்டிலிருந்து பல பயணிகள் நம் நாட்டிற்கு வந்திருக்கின்றனர். சீன தேசத்து மன்னன் கி. பி. 8ஆம் நூற்றாண்டில் நாகபட்டினத்தில் ஒரு பௌத்தப்பள்ளி எழுப்பினான் என்றும் அதற்கு பல்லவ மன்னன் ராஜசிம்மன் அனுமதியளித்தான் என்றும் அறிகிறோம். அக்காலத்திய சீனக்காசுகள் தமிழகத்தில் கிடைத்துள்ளன. இவை வட்ட வடிவும், நடுவில் சதுரமான துளையும், சுற்றிலும் சீன எழுத்துக்களும் உள்ளவையாகும்.

### பல்லவர் காசுகள் :

பல்லவ மன்னர்கள் தமிழகத்தை, கி.பி. 3ஆம் நூற்றாண்டிலிருந்து 9ஆம் நூற்றாண்டு வரை ஆண்டிருக்கிறார்கள். கலைத்துறையில் ஒப்பற்ற பணியைச் செய்த இம்மன்னர்களுடைய காசுகள் இன்னம் சரிவர ஆராயப்படவில்லை. கிடைத்துள்ள காசுகள், பெரும்பாலும், செப்புக் காசுகளாகவே உள்ளன. மெல்லிய தகடு போல் உள்ளன. அவற்றில் ஒரு புறத்தில் காளை, நின்ற அல்லது கிடந்த நிலையில் அமைந்திருப்பதைக் காணலாம். அதைச் சுற்றிக் கிரந்த எழுத்துகளில் மன்னனுடைய பெயர் காணப்படும். ஸ்ரீநிதி, ஸ்ரீபரன், மானபரன் என்ற மூன்று பெயர்களே குறிக்கப்படுகின்றன. இம்மூன்றிலும் முதல் இரண்டும், கி. பி. 700 முதல் 730 வரை ஆண்ட இராஜசிம்ம பல்லவனுடைய பட்டப் பெயர்களாகும். எனவே, அக் காசுகள் அம்மன்னன் காலத்து வெளியிடப்பட்டவை எனலாம். மானபரன் என்பது, தெள்ளாறெறிந்த நந்திவர்மன் பெயராகும். எழுத்துக்களே இல்லாத பல காசுகளும் உள்ளன. இது போன்று காளையை ஒரு புறத்தே உடைய காசுகளின் பின்புறத்தில் பல சின்னங்கள் காணப்படுகின்றன. அவற்றில் சக்கரம், அசோகமரம், மீன், வில், விளக்கு, சங்கு, கவரி, கொற்றக் குடை முதலிய காணப்படுகின்றன. சில காசுகளின் முன்புறம், சிங்கமும், பின்புறம் சங்கமும் உள்ளன. ஒரு காசில், பின்புறம் கப்பல் காணப்படுகிறது. பல்லவர், கடற்படையில் சிறந்திருந்ததையும் அக்காலத்தில் கடல் வாணிகம் சிறந்திருந்ததையும் இது குறிக்கும்.

### பாண்டியர் காசுகள் :

சங்க காலம் தொட்டே சிறப்போடு ஆண்டவர்கள் பாண்டிய மன்னர்கள். சங்க காலப் பாண்டியர்களின் காசுகள் என்று எதையும் திட்டமாக கூற முடியாது. எனினும், பாண்டியர்களின் பழைய காசுகள் சதுரமாகவே காணப்படுகின்றன. அவற்றில் பெரும்பாலனவற்றில் ஒரு புறம் யானை காணப்படுகின்றது. யானையின் மேல், ஒருவர் முதுகிலும் ஒருவர் கழுத்திலுமாக இருவர் அமர்ந்து பவனி வருவதாக உருவங்கள் உள்ளன. அவற்றின் மேல் ஸ்ரீவத்சம், சந்திரன், சக்கரம் என்ற குறிகள் காணப்படுகின்றன. ஸ்ரீவத்சம் திருவையும், சந்திரன் பாண்டியர்களின் சந்திர குலத்தையும், சக்கரம் அவர்களுடைய ஆணையையும் குறிக்கும் போலும். இது போன்ற காசுகளின் பின்புறத்தில் கோடுகளால் மீன் உருவம் காட்டப்பட்டுள்ளது. ஒரு சில காசுகளில் அரசமரமும் காணப்படுகிறது. ஒரு சில சதுரக்காசுகளில் நிற்கும் குதிரை உருவத்தை காண்கிறோம். ஒரு பாண்டிய மன்னன் அச்வமேத யாகம் செய்திருக்கக்கூடும். அப்போது இக்காசுகள் வெளியிடப்பட்டிருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். சங்க காலப் பாண்டிய மன்னர்களில், யாகம் செய்து புகழ் பெற்றவன் பல்யாகசாலை முதுகுடுமி பெருவழுதி என்பவனும். சங்க இலக்கியங்களும், செப்பேடுகளும் இவனைப் பற்றி குறிக்கின்றன. எனவே, இக்காசுகள் இம்மன்னனுடைத்தாக இருக்கலாம்.

சங்க காலத்திற்குப் பிறகு கி. பி. 7ஆம் நூற்றாண்டிலிருந்து பாண்டியர்களின் ஆட்சி மறுபடியும் சிறந்தது. கடுங்கோன், அரிகேசரி முதலிய பல மன்னர்கள் ஆண்டபோதிலும் அவர்களுடைய காசுகள் இதுவரை கிடைக்கவில்லை. நடுவில், ராஜராஜ சோழன் காலத்தில் பாண்டி

மண்டலம் சோழர் வசமிருந்தது. பின்னர் 13ஆம் நூற்றாண்டில் தோன்றிய ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் சிறப்புற்றிருந்தான். அவன் சோழ மண்டலத்தைக் கைப்பற்றி, காஞ்சியை யும் கைப்பற்றி வடக்கே நெல்லூர் வரை முன் னேறினான். அம்மன்னன் பல சிறப்புப் பட்டங் களைப் பெற்றிருந்தான். அவன் வெளியிட்ட காசுகளும், அவனுக்குப்பின் வந்தவர்களின் காசுகளும் ஏராளமாகத் தமிழகத்தில் கிடைக் கின்றன. அக்காலத்துக் காசுகள் பல வகை களில் காணப்படுகின்றன. சில காசுகளின் முன்புறம் நந்தியும் பின்புறம் மீன்களும் காணப் படுகின்றன. ஈழ மனிதனின் நின்ற உருவம் முன் புறத்தும் அமர்ந்த உருவம் பின்புறத்தும் கொண்டு பல காசுகள் உள்ளன. அமர்ந்த உருவின் இடது கையின் கீழ் ஒரு மீன், அல்லது இரு மீன்கள், அல்லது எழுத்துக்கள் காணப்படு கின்றன. பாண்டியர்களுடைய சின்னமாகிய மீன் பல காசுகளில் உள்ளதைக் காணலாம். இரு விளக்குகளின் மத்தியில் ஒரு மீன், அல்லது இரண்டு மீன்கள் அல்லது இரண்டு மீன்களின் இடையே செண்டு, மீனைச் சுற்றிலும் எழுத்து, இரண்டு மீன்களின் இடையில் எழுத்து, ஒரு புறம் முழுவதும் எழுத்து என பலவகைக் காசு களைக் காண்கிறோம். இவற்றில் சுந்தர பாண்டியன், எல்லாந்தலையானான், சோணாடு கொண்டான், கச்சி வழங்கும் பெருமாள் முதலிய பெயர்கள் உள்ள காசுகள் சுந்தரபாண்டியன் காலத்தவை. குலசேகரன், வீரபாண்டியன் என்ற பெயர் உள்ள காசுகளும் கிடைத்துள்ளன. சமர கோலாகலன், புவனேகவீரன், கோனேரி ராயன் என்ற எழுத்துக்கள் உள்ள காசுகள், 14, 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. இவை திருநெல்வேலியைச் சேர்ந்தவையாயிருக்கலாம்.

### சோழர் காசுகள் :

சமீபத்தில் காவிரிப்பட்டின அகழ்வாராய்ச்சி யில் சங்க காலச் சோழ மன்னர்களின் காசுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவை பெரும்பாலும் சதுரமாக உள்ளன. இவற்றில் ஒருபுறம் ஒரு காலைத் தூக்கி நிற்கும் புலியின் உருவமும், மறு புறம் யானையின் நின்ற உருவமும் காணப்படு கின்றன. சில காசுகளில் புலிக்கு மேற்பகுதியில் சூரியன் காணப்படுகிறது. சோழர்கள் சூரிய குலத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை இது குறிக்கும். இக்காசுகள் கரிகாலன் காலத்தைச் சேர்ந்தவை என்று கணிக்கப்படுகின்றன. இவற் றுடன் அரசமரச் சின்னம் (அமரர் தருச் சின்னம்) உள்ள காசுகளும் கிடைத்துள்ளன.

சங்க காலத்திற்குப் பின்னர் கி. பி. 850இல் விஜயாலயன் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு சோழ அரசை மறுமலர்ச்சி பெறச் செய்தான். அவனுக்குப் பின் ஆதித்தியன், பராந்தகன், கண்டராதித்தன், அரிஞ்சயன், சுந்தரசோழன் முதலிய சோழ மன்னர்கள் ஆண்டிருக்கின்றனர். ஆயினும் அவர்கள் காலத்திய காசுகள் இதுவரை கிடைக்கவில்லை. சோழப் பேரரசர்களில் உத்தம சோழன் காலத் தில் அச்சிடப்பட்ட காசுகள்தான் இதுவரை கிடைத்துள்ளவற்றில் பழைமையானவை. அக் காசுகள் தங்கம், வெள்ளி, செம்பு ஆகிய உலோ கங்களால் ஆனவை. அவற்றில் மூன்று வகைக் காசுகள் உள்ளன. முதல் வகைக் காசின் முன் புறத்தில் புலி, இரு மீன்கள், வில் ஆகிய மூன்று இலச்சினைகளையும் பின்புறத்தில் உத்தம சோழன் என்ற நாகரி எழுத்துக்களையும் காண் கிறோம். இக்காசுகளே பெருவாரியாகக் கிடைத் துள்ளன. இரண்டாம் வகை புலியும், ஒரு மீனும் உள்ள காசு. அதன் ஓரத்தில் 'மதுராந் தகன்' என்ற தமிழ், கிரந்தம் கலந்த எழுத்துக் கள் காணப்படுகின்றன. இக்காசின் இருபுறமும் ஒன்று போலவே காணப்படுகின்றன. மூன்றும் வகைக் காசுகளில் இருபுறமும் புலியும், ஒரு கயலும், சுற்றிலும் உத்தமசோழன் என்ற எழுத்துகளும் காணப்படுகின்றன.

இராஜராஜன் காலத்தில் முன் புறம் புலி, இணைக்கயல், வில் ஆகிய மூன்றும் அதன் கீழ் ஸ்ரீராஜராஜ சோழ என்று நாகரி எழுத்துக்களும் உள்ளன. பின் புறமும் அதே சின்னங்களும் எழுத்துக்களும் காணப்படுகின்றன. அக்காலத் தில் அச்சிடப்பட்ட மற்றொரு வகைக் காசில் ஒரு புறத்தில் ஈழமனிதனுடைய நின்ற உருவ மும், மறுபுறம் ஈழமனிதனின் அமர்ந்த உருவ மும் காணப்படுகின்றன. அமர்ந்த மனிதனின் கையின் கீழ் ஸ்ரீராஜராஜன் என்ற நாகரி எழுத் துக்கள் உள்ளன. ராஜேந்திர சோழன் காலத்திய காசுகளில் புலி, இரு மீன்கள், வில் மூன்றும் முன்னும் பின்னும் உள்ளன. கீழே கங்கை கொண்ட சோழன் என்ற நாகரி எழுத்துக்கள் உள்ளன. சில காசுகளில் ஸ்ரீராஜேந்திர சோழன் என்ற நாகரி எழுத்துக்கள் காணப்படு கின்றன.

ஆந்திர பிரதேசத்தில் தவளேசுவரம் என்ற இடத்தில் பல தங்கக் காசுகள் கிடைத்துள்ளன. அவற்றின் நடுவில் புலி, கயல், வில் சின்னங் களும் சுற்றிலும் கங்கைகொண்ட சோழன் என்ற கிரந்த எழுத்துகளும் உள்ளன. பின்புறம் குழி வாக எவ்வகை பொறியுமின்றி உள்ளது. இதே

போன்று " மலைநாடு கொண்ட சோழன் " என்ற எழுத்துக்கள் கொண்ட ராஜாதிராஜனுடைய காசுகளும் கிடைத்துள்ளன.

மன்னர் குதிரை மீதேறிச் செல்லும் உருவம் பொறித்த காசுகளும் சோழர் காலத்தில் கிடைத்துள்ளன. இவை ராஜாதிராஜன் காலக்காசுகள் எனக் கருதப்படுகின்றன. குழலூதும் பிள்ளையாக, கண்ணனின் உருவம் பொறித்த காசுகளும் அக் காலத்தவையே. தமிழகத்தில் ராஜராஜன் என்றபெயர் பொறித்துள்ள காசுகள் ஏராளமாகக் கிடைத்துள்ளன. சோழர்களின் கல்வெட்டுகளில் மதுராந்தகன் மாடை, ராஜராஜன் மாடை என்று காசுகளின் பெயர்கள் காணப்படுகின்றன. மாடை என்ருல் பொற்காசு என்பது பொருள்.

குலோத்துங்கனுடைய காசுகளில் உள்ள 'சுங்' என்ற சொல் சுங்கம் தவிர்த்த சோழன் என்ற பட்டத்தைக் குறிக்கிறது எனக் கருதலாம்.

### விசயநகர காசுகள் :

விஜயநகர மன்னர்கள் வெளியிட்ட காசுகள் பல சின்னங்களைத் தாங்கி விளங்குகின்றன. அனேகமாக விஜயநகர வழியில் வந்த எல்லா அரசர்களும் காசுகளை வெளியிட்டிருக்கிருர்கள். ஹரிஹரர், தேவராயர், இருவராலும் வெளியிடப்பட்ட தங்கக் காசுகளில் உமா மஹேச்சுவரர் உருவம் காணப்படுகிறது. புக்கர், தேவராயர்களால் அச்சிடப்பட்ட காசுகளில் திருமால் பிராட்டியார்களுடன் காணப்படுவதைக் காணலாம். அச்சுதராயரின் காசுகளில் இரண்டு தலைகளைக்கொண்ட கண்டபேருண்டப் பறவை, தன் அலகுகளால் யானைகளைக் கொத்தி நிற்பதைக் காணலாம். சில காசுகளில் பன்றியையும், சிலவற்றில் கருடன், நடமாடும் கண்ணன் முதலியனவும் காணப்படுகின்றன.

விஜயநகர மன்னர்கள் காலத்தில் 'ராமடங்கா' என்று அழைக்கப்படும் தங்க அச்சுகள் ஏராளமாக வெளியிடப்பட்டன. இவற்றில் ஒரு புறம் ராமரும் சீதையும் அமர்ந்திருப்பதையும் மறுபுறம் அனுமன் நிற்பதையும் நாகரி எழுத்துக்களையும் காணலாம். இவை வழிபாட்டுக்கு ஏற்பட்டவை என்றும் கருதப்படுகின்றன.

முதன் முதலில் விஜயநகரக் காசுகளில் கன்னட எழுத்துகளில் அரசனின் பெயரைக் காண்கிறோம். பின்னர் நாகரி எழுத்துகளிலேயே உள்ளதைக் காணலாம்.

### டச்சு இந்திய காசுகள் :

உலந்தா(டச்சு)க்காரர்கள் கி. பி. 17ஆம் நூற்றுண்டில், கிழக்கு இந்தியக் கரையில் தரங்கம்பாடி, நாகப்பட்டினம், புழற்காடு முதலிய இடங்களில் வாணிக நிலையங்கள் இருந்தன. டச்சுக் கிழக்கிந்திய கம்பெனி என்பது அவர்களுடைய கம்பெனி பெயராய் இருந்தது. ஆங்கிலேயர்களின் வெற்றியால், டச்சுக்காரர்கள் அதிக செல்வாக்கைப் பெறவில்லை. அவர்கள் வெளியிட்டுள்ள பல காசுகள், அவர்களுடைய பகுதியில் செலாவணிக்காக அச்சிடப்பட்டவை. தமிழகத்தில் பல இடங்களில் இவை இன்றும் கிடைப்பதைக் காணலாம். அவற்றின் முன்புறம் பெரும்பாலும் ஆங்கில (V. O. C.) வி. ஓ. சி. என்ற எழுத்துகள் காணப்படும். இது, அவர்களுடைய கம்பெனியைக் குறிக்கும். பின்புறம் டச்சு இலச்சினைகளான இரண்டு சிங்கங்கள் பல நிலைகளில் காணப்படுவதைக் காணலாம். இவற்றை 'நாகூர் சல்லிகள்' என்றும் குறிப்பர். இதுபோன்று அரைச் சல்லிகளையும் இவர்கள் வெளியிட்டுள்ளனர்.

இவற்றில் தரங்கம்பாடியில் அச்சிட்ட காசுகளில் (தெக்னபட்டினம்) ஆங்கில 'டி' (T) என்ற எழுத்தும், புழற்காடு (Pulicut) நிலயம் அச்சிட்ட காசுகளில் 'பி' (P) என்ற எழுத்தும், நாகப்பட்டினத்தில் அச்சிட்ட காசுகளில் 'என்' (N) என்ற எழுத்தும் காணப்படும்.

உலந்தா (டச்சு)க்காரர்கள், தங்கம், வெள்ளி, செம்பு, ஈயம் முதலிய உலோகங்களில் காசுகளை அச்சிட்டனர். விஜயநகர காசுகளைப் பின்பற்றி தங்கக் காசுகளில் திருமாலின் உருவையும் இவர்கள் பொறித்துள்ளது அறிந்து மகிழத்தக்கது.

### பிரஞ்சிந்தியக் காசுகள் :

ஆங்கிலேயர்களைப் போலப் பிரெஞ்சுக்காரர்களும், இந்தியாவில் வாணிக நோக்குடன் கம்பெனிகளை நிறுவினர். அவர்களுடைய முக்கிய தலமாக பாண்டிச்சேரி திகழ்ந்தது. 'வராகன்' என்ற தங்கக் காசு அக்காலத்தில் வழக்கிலிருந்தது. இதில் திருமால், பூமகளுடனும், திருமகளுடனும் நிற்கும் உருவம் இருக்கும். பிரெஞ்சுக்காரர்கள் முதலில் இக்காசுகளை அச்சிட்டனர். கிறிஸ்தவப் பாதிரிமார்கள் அதை விரும்பவில்லை. எனினும், இதனுல் ஏற்படும் லாபத்தைக் கருதிப் பாரிஸ் நகரிலிருந்த கம்பெனியின் தலைமையகம் அதை அனுமதித்தது. அதன்பின்னர், தாங்கள் பிடித்த இடங்களில் செலாவணிக்காக அக் காசுகளை அச்சடித்துப் பரப்பினர். பிரஞ்சுக்காரர்கள் வெளியிட்ட காசுகள் தங்கம், வெள்ளி, செம்பு முதலிய மூன்று

உலோகங்களானவை. தங்க நாணயத்தைப் ,பகோடா' என்றும் வெள்ளி நாணயத்தைப் 'பணம்' என்றும், செம்பு நாணயத்தைக் 'காசு' என்றும் குறிப்பர். தங்கப் பகோடாவில் கடவுளின் உருவம் இருந்தது. வெள்ளிப் பணத்தில் மூவிதழ்கள் ஒரு புறமும், 'பாண்டிச் சேரி 1700' என்ற எழுத்துக்கள் மறுபுறமும் இருந்தன. சிலவற்றில் குறுக்குக் கோடுகளும், நடுவில் மூவிதழ்களும் பொறிக்கப்பட்டன. செப்புக்காசுகள் மூன்று வகையில் அச்சிடப் பட்டன. (1) ஒருபுறம் 'புதுச்சேரி' என்று தமிழ்ப் பெயரும், மறுபுறம் மூவிதழ்களும் இருக்கும். (2) ஒருபுறம் சேவலும் ஆண்டும் (1836) குறிக்கப்பட்டிருக்கும். மறுபுறம் மூவிதழ் கள் இருக்கும். (3) முன்புறம் நாகபட்டினம் என்றும் பின்புறம் புதுச்சேரி என்றும் எழுதப் பட்டிருக்கும். இன்னும் வேறு சிலவகைக் காசு களும் இவர்களால்' அச்சிடப்பட்டன.

கல்வெட்டுகளில் குறிக்கப்படும் காசுகள்: கல்வெட்டுகளில் சில காசுகளின் பெயர்கள் குறிக்கப்படுகின்றன. அவையாவன:

1. இராஜராஜன் மாடை
2. இராஜேந்திரன் மாடை
3. மதுராந்தக தேவன் மாடை
4. உத்தமகண்டன் மாடை
5. சாமார மாடை
6. விருதை மாடை
7. புஜபல மாடை
8. பழம் புள்ளி மாடை
9. கண்ட கோபாலன் மாடை
10. ஜெய மாடை
11. நிறை குறையாத பழங்காசு
12. திரமம் (Drachma), ரோமானியக் காசு
13. ஆணைக் காசு
14. தினாரம் (Dinar)



# FOREIGN COINS IN SOUTH INDIA

BY

P. N. MOHANDAS

That South India in historical times was maintaining commercial and cultural contacts with far-flung regions is increasingly recognised, thanks to the discovery of many and varied numismatic finds in the peninsular area. The glimpses of an active maritime contact with Yavanas and others and the articles of import and export picturesquely described in early Sangam classics can no longer be dismissed as fanciful and poetic exaggeration. The actual discovery of coins of such widely separated regions like Rome and China, in many a place in South India affords ample proof to the flourishing business relations of ancient Tamils. The foreign coins unearthed in South India represent many countries, including ancient Rome, China, Ceylon, Arabia, Venice etc. Even a sporadic notice of some of the few typically representative specimens from each of these countries unearthed in south India is sufficient to underline the depth of the contacts maintained, which should have resulted in the flow of alien coins in South India.

The Roman coins are the earliest of European coins to be found. Gold and silver coins of this class have been unearthed in a number of places among which mention must be made of the Coimbatore, Malabar, Madurai, Krishna, Tirunelveli and Salem districts. The period of these finds ranges from the third century B.C. to that of the Byzantine empire. The coins of almost all the important Roman emperors—Augustus, Tiberius, Cladius, Nero, Trajan, Hadrian, Antoninus, Pius, Marcus Aurelius and Constantine—are represented in these finds. At times along with these coins Roman jewellery beads etc., have also been found. From the discovery of Roman coins and other associated finds at Arikkamedu, near Pondicherry, archaeologists have postulated that the site was in all probability a Roman settlement.

The commercial relations between the Tamil country and China have been brought to light by two hoards of Chinese copper coins discovered in Tanjore district. The earliest of these is assignable to 585 A. D. during the reign of Wu Ch'U. Ten coins have been assigned to the K' aiynan Period (713–742 A. D.). There was an all-sea route connecting South India and China and running along the coasts of Indo-China and the islands of the East Indies. That this route was known even as early as the second half of the first century A. D. is evident from the accounts of the *Periplus of the Erythraean sea.* But no coin datable to the period preceding the sixth century has yet been discovered.

Gold and silver coins of the early Khalifs–Ummayad and Abbasaid–have also been found in the Malabar and Madurai districts and the Kadamath island of the Amindivis group of islands. Their dates range from the seventh to the end of the ninth century

A. D. It is interesting to notice a coin of Harounal-Rashid, the hero of the Arabian Nights, among these finds. The find of these early Caliphate coins is a testimony to the very early contact which the Arab traders had with South India. It also shows that during those centuries the Indian trade with Europe was through Arab merchants.

Though the contacts of the Tamil country with Ceylon were of hoary antiquity, the find of Ceylon coins in South India dates only from about the tenth century. The discovery of Ceylon coins in the southern districts and Chola and Pandya coins in Ceylon bespeak the extent of the close contact which was more than commercial, and at times even political. In inscriptions we hear of such numismatic notices as *Ilakkasu* and *Ilakkarungasu*, which eviently reveal the currency of Ceylon coins in Tamilnad. These coins were used side by side with the regular issues of the Cholas and Pandyas.

The gold coins, Sequins of the Dukes of medieval Venice, are also found in South India. These have been found mostly in Malabar district and sometimes in the neighbouring Coimbatore district. These finds of Venetian coins show the resumption of direct trade between European merchants and South India. During the period between the end of the Roman empire and the fourteenth century the trade with India was in the hands of the Arabs. In Malabar these Venetian sequins are popularly called *Sanarkkasu*.



# ENGLISH COINS IN SOUTH INDIA

BY

P. N. MOHANDAS

The English East India Company was founded by the Royal Charter of Queen Elizabeth I in 1600. This charter gave the company licence to trade with the East. Very soon after the formation of the company, a number of trading stations were erected by the English in India. Madras was one of the earliest factories of the English on the southern coast; Masulipatam had been established earlier and, after the factory at Madras came, the one at Cuddalore, the Fort St. David.

The English factory at Masulipatam was harassed by the Dutch and hence the English thought of establishing another factory at a more favourable site. In 1639, Mr. Day, a member of the Council at Masulipatam, was sent to explore the country in the neighbourhood of the Portuguese station of St. Thome and Mr. Day recommended that a factory could be erected at Madras-Patna. The land was purchased from the Rajah of Chandragiri and a factory was erected there and a fort was also built, which they called Fort.St George. This was the beginning of the Presidency of Madras. The English trade in the South was extended and the company gradually embarked upon territorial acquisition and expansion. A Council was formed for governing their territories in South India with its headquarters in Fort St. George.

The English had their own coinage from the very beginning of the establishment of their factories in India. One of the conditions of the treaty by which the English secured the site of Madras from the Chandragiri ruler was that the Campany would be permitted to mint their own coins, but they were enjoined to portray on these coins figures of Hindu deities found on the locally current coins. This is the reason why we find that the early East India Company coins in Madras were the Varahans or pagodas, adopting the current fashion of the Vijayanagar coinage. The name "Varahan" was a locally known coin denomination. But the word "pagoda" was not known to local currency. The derivation of this word may be traced to Portugese origins.

It is interesting to find in this connection that in Bengal and in Madras the early Esst India Company coins were patterned on the fashion of the locally current coinage. The reason is quite obvious. In those two territories the English had secured trading rights and stations from local rulers, from the Chandragiri ruler in Madras and from the Mughal emperor in Bengal. Hence we find the Hindu denomination of Varahan with Hindu deities in the company coinage in Madras and the name of the Mughal emperor on their coins in Bengal. Where the company secured the trading station indepedently of the local ruler, as in the case of Bombay, they issued coins with the name of their own king. Bombay had

been granted to the company by Charles II of England, who had secured it from Portugal as his marriage dowry. The early coins from Bombay bore the names of the English kings, Charles II, James II, William III and George I.

A number of gold pagodas or Varahans have been issued by the English from Madras for use in their territories in South India. Among them may be mentioned the Chandragiri, the *Portonovo*, the Single Swamy, the Three Swamy and the old star pagodas. Of these the old star pagoda is the most prominent as this gold coin was the standard coin of the company in their territories in South India till it was replaced by the unified Rupee of India. Wages and salaries were paid and accounts were reckoned in this pagoda. It was also called the Company or Puli-varahan. Side by side with these gold pagodas, silver rupees and copper kasus of various denominations were also issued. The Madras Rupee of the company was popularly known as the Arcot Rupee and bore the name of the Mughal emperor. The exchange ratio between the old star pagoda and the silver rupee was fixed at three and half rupees to the pagoda. The Rupee had its divisions, half, quarter and one-eighth. The copper currency was reckoned in kasu and five different denominations were issued, namely, the 40 cash, 20 cash, 10 cash, 5 cash and 2½ cash. The company pagoda and rupee were in great demand locally as they had greater fineness than the local coins.

It may be seen from the records that the following coins were issued from the Madras mint as late as 1811. In gold, the double pagoda and the single pagoda, in silver, the half pagoda, the quarter pagoda, the five panam, double panam, single panam, double rupee, single rupee, half, quarter and one-eighth rupees, four anna and two anna, and in copper, the kasu in different denominations were issued.

There was no unified currency for all the possessions of the company in India. Each presidency had its own currency and its own denominations. The weight standard of these coins also varied from presidency to presidency. Thus Bengal had its Sikka rupee, Madras its Arcot rupee and Bombay the Surat rupee. Besides these were the Benares rupee and the Farrukhabad rupee. In 1815-16 proposals were made for a unified currency for the entire country. The gold currency was abolished and the monometallism of silver standard was adopted. The silver rupee of India with a uniform weight standard—as distinct from the earlier local rupees—was issued for the first time in 1835, unifying all the different rupees into one. Along with the silver rupee were its divisions, the half, the quarter and the one-eighth rupees, and the one anna in silver and the quarter anna, and the one-twelfth anna in copper. The Mint at Madras was abolished and the Indian coins were minted from the Government mints at Bombay and Calcutta.

The history of the coinage of the English in South India is a very fascinating study on account of the variety and number of coins issued by them.

# தமிழ் மாதங்களின் பெயரும் காரணமும்

சா. கணேசன்

ஓர் ஆண்டைப் பன்னிரண்டு மாதங்களாக வகுத்தனர் பண்டையோர். காலக் கணித முறை சந்திரனை அடிப்படையாகக் கொண்டும் சூரியனை அடிப்படையாகக் கொண்டும் இரு வகையாகக் கணிக்கப்படும். சூரியனை அடிப் படையாகக் கொண்டு கணிக்கும் நெறிக்கு "சவுரமானம்" என்பது பெயர்; மேட முதல் மீனம் இறுதியாக உள்ள பன்னிரண்டு இராசி வீடுகளிலும் சூரியன் தங்கியிருப்பதை ஒவ் வொரு மாதமாகக் கணிப்பர். நியாயமாகச் சொல்ல வேண்டுமென்றால், அதை மாதம் எனது ஞாயிறு அல்லது இரவி என்றே சொல்லவேண்டும். இந்த நெறி மலையாளத் தில் மேட ஞாயிறு, சிங்க ஞாயிறு, மீன ஞாயிறு என, செம்மையான முறையில், இன்றும் நடைமுறை வழக்கில் இருப்பதைக் காணலாம். தமிழ் நாட்டில் காணப்படும் பிற்காலக் கல் வெட்டுகளில் இம்முறை காணப்படுகிறது.

சந்திரனை அடிப்படையாகக் கொண்டு கணிக் கப்படும் நெறி "சாந்திரமானம்" எனப்படும். சாந்திரமான நெறியில் மாதத்தை நிர்ணயிக்கும் முறை இருவகைப்படும். ஒன்று நிறைமதி (பௌர்ணமி)யையும், மற்றொன்று உவாமதி (அமாவாசை)யையும் இறுதி நாளாகக் கொண்டு கணிக்கப்பெறும். முன்னதை "பூர்ணிமாந்த முறை" என்றும், பின்னதை "அமாந்தமுறை" என்றும் நூலோர் கூறுவர்.

பண்டைத் தமிழர்கள் சாந்திரமான நெறியில் பூர்ணிமாந்த முறையையே கடைப்பிடித்து மாதங்களை வகுத்தனர். நிறைமதி (பௌர்ணமி) எந்த நட்சத்திரத்துடன் கூடி நின்றதோ அந்த நட்சத்திரத்தின் பெயரையே அந்த மாதத்தின் பெயராக அமைத்தனர். உதாரணமாக, சித்திரை மாதம் என்றால் சித்திரை நட்சத்திரத்திலே திங்கள் (பூர்ணசந்திரன்) கூடியிருப்பது என் பது பொருள்.

முன்னாளில் தமிழாண்டு தை முதல் மார்கழி ஈறாகவும், ஆவணி முதல் ஆடி ஈறாகவும் இருவேறு நிலையில் கணிக்கப்பட்டு, வழக்கில் இருந்து வந்திருக்கிறது. பின்னர் கணிதத் துறையிலே ஏற்படும் சில சங்கடங்களைத் தவிர்ப்பதற்காக, இன்றுள்ள நெறியில் மேடத்துக்குச் சூரியன் வரும் நாள்முதல் மீனத்தைப் பிரியும் நாள்வரை ஓர் ஆண்டாகக் கணிக்கப்பட்டது. இம்முறை தான் இன்றைய வழக்கில் இருந்து வருவதாகும். ஆனாலும் பெயரைமட்டும் மாதம், மதி, திங்கள் என்றே வழங்கி வருகிறோம்.

மேட ஞாயிற்றைச் சித்திரை மாதம் என்றும், இடப ஞாயிற்றை வைகாசி மாதம் என்றும், மிதுன ஞாயிற்றை ஆனி மாத மென்றும், கடக ஞாயிற்றை ஆடி மாத மென்றும், சிங்க ஞாயிற்றை ஆவணி மாத மென்றும், கன்னி ஞாயிற்றைப் புரட்டாசி மாத மென்றும், துலா ஞாயிற்றை ஐப்பசி மாத மென்றும், விருச்சிக ஞாயிற்றைக் கார்த்திகை மாத மென்றும், தனுசு ஞாயிற்றை மார்கழி மாத மென்றும், மகர ஞாயிற்றைத் தை மாத மென்றும், கும்ப ஞாயிற்றை மாசி மாத மென்றும், மீன ஞாயிற்றைப் பங்குனி மாத மென்றும் கூறி வரு கிறோம். இனி இம்மாதங்களின் பெயர்க் காரணத்தைப் பார்க்கலாம்.

சித்திரை நட்சத்திரத்தில் முழு மதி கூடியது வரை உள்ள காலப் பகுதி சித்திரைத் திங்கள் ஆகும். வைகாசி (விசாகம்) நட்சத்திரத்தில் முழு மதி கூடியது வரை உள்ள காலப் பகுதி வைகாசித் திங்கள் ஆகும். ஆனி (மூலம்) நட்சத்திரத்தில் முழு மதி கூடியதுவரை உள்ள காலப் பகுதி ஆனித்திங்கள் ஆகும். ஆடி (உத்திராடம்) நட்சத்திரத்தில் முழு மதி கூடியது வரை உள்ள காலப் பகுதி ஆடித்திங்கள் ஆகும். ஆவணி (அவிட்டம்) நட்சத்திரத்தில் முழு மதி கூடியதுவரை உள்ள பகுதி ஆவணித்திங்கள் ஆகும். புரட்டாசி (பூரட்டாதி) நட்சத்திரத்தில் முழு மதி கூடியதுவரை உள்ள காலப் பகுதி புரட்டாசித் திங்கள் ஆகும். அற்பசி (அசுவதி) நட்சத்திரத்தில் முழு மதி கூடியதுவரை உள்ள

காலப் பகுதி அற்பசித் திங்கள் ஆகும். கார்த்திகை (கிருத்திகை) நட்சத்திரத்தில் முழு மதி கூடியதுவரை உள்ள காலப் பகுதி கார்த்திகைத் திங்கள் ஆகும். மார்கழி (மிருக சீருஷம்) நட்சத்திரத்தில் முழு மதி கூடியதுவரை உள்ள காலப் பகுதி மார்கழித் திங்கள் ஆகும். தை (பூசம்) நட்சத்திரத்தில் முழு மதி கூடியது வரை உள்ள காலப் பகுதி தைத் திங்கள் ஆகும். மாசி (மகம்) நட்சத்திரத்தில் முழு மதி கூடியது வரை உள்ள காலப் பகுதி மாசித் திங்கள் ஆகும். பங்குனி (உத்தரம்) நட்சத்திரத்தில் முழு மதி கூடியதுவரை உள்ள காலப் பகுதி பங்குனித் திங்கள் ஆகும்.

இச் சந்தர்ப்பத்தில் மற்றென்றையும் நாம் தெரிந்துகொள்வது பயனுடையதாகும். உரோமர்கள், கிரேக்கர்கள், வடநூலோர் போன்ரேர் சாந்திரமான நெறியை வகுத்து, பின் அதைக் கைவிட்டு சவுரமான நெறியில் காலத்தைக் கணிக்கத் தொடங்கிய பிறகும் திங்கள் என்ற சொல்லின் அடிப்படையில் பிறந்த மந்தி (Month) மாஸம் என்ற பெயர்களாலேயே மாதத்தைக் குறித்து வருகின்றனர்.

### கிழமை

ஒரு கிழமை அதாவது ஒரு வாரம் ஏழு நாட்கள் கொண்டது. நம்மைப் பொறுத்தவரை ஞாயிறு தோன்றுவது முதல் மறுநாள் ஞாயிறு தோன்றுவது வரை ஒரு நாள் ஆகும். கிறித்துவ முறைப்படி நள்ளிரவு முதல் மறுநாள் நள்ளிரவு வரை ஒரு நாள் என்பர். முகம்மதிய முறைப்படி ஞாயிறு மறைவது முதல் மறுநாள் ஞாயிறு மறைவது வரை ஒரு நாள் என்பர். எல்லோருக்குமே கிழமையும், நாட்பிரிவும், பெயர்க் காரணமும் கிட்டத்தட்ட ஒன்ருகவே அமைந்திருப்பது மகிழ்ச்சியையும் வியப்பையும் தரக் கூடியதாகும். ஏழு நாட்களுக்கும், சாயாக்கிரகங்களான இராகு, கேது ஆன இரண்டும் ஒழிந்த ஏழு கோள்களை (கிரகங்களை) முன்னிட்டே பெயரிடப்பட்டன. எல்லாவற்றையும் ஈர்த்துக் கொண்டு நிற்கும் சூரியனை முன்னிட்டு முதல் நாள் ‘ஞாயிறு’ எனப்பட்டது. சூரியனின் ஒளியைப் பிரதிபலிப்பதும் நமக்கு மிக அண்மையில் இருப்பதுமான சந்திரனை முன்னிட்டு இரண்டாவது நாள் ‘திங்கள்’ எனப்பட்டது. போருக்கு அதிதேவதை யானதும் பூமியின் மைந்தன் எனக் கருதப்படுவதும் ஆன அங்காரகனை முன்னிட்டு மூன்ருவது நாள் ‘செவ்வாய்’ எனப்பட்டது. அறிவு, இன்பம் முதலியவற்றை நல்கும் புதனை முன்னிட்டு நான்காவது நாள் ‘புதன்’ எனப்பட்டது. கலைப்புலமையும், பாப நீக்கமும் அருளும் குருவை முன்னிட்டு ஐந்தாம் நாள் ‘வியாழன்’ எனப்பட்டது. மழை, பொருள் முதலியவற்றை அருளும் சுக்கிரனை முன்னிட்டு ஆறும் நாள் ‘வெள்ளி’ எனப்பட்டது. பலவித இன்னல்களை விளைவிக்கும் சனீச்சுரனை முன்னிட்டு ஏழாம் நாள் ‘சனி’ எனப்பட்டது.

இவ்வேழு நாட்களும் கிழமையின் கூறுகள். ஆனதால் ஞாயிற்றுக்கிழமை, திங்கட்கிழமை, செவ்வாய்க்கிழமை, புதன்கிழமை, வியாழக் கிழமை, வெள்ளிக்கிழமை, சனிக்கிழமை என்பது நமது மரபு. இங்ஙனமே அவற்றை ஆதித்ய வாரம், ஸோம வாரம், மங்கள வாரம், புத வாரம், குரு வாரம், சுக்ர வாரம், சனி வாரம், என முறையே வடநூலோர் கூறுவர். நம்மைப் போலவே அவற்றை Sunday, Monday, Tuesday, Wednesday, Thursday, Friday, Saturday என day என்றே மேலை நாட்டவர் பெயர் குறிப்பது ஈண்டு அறியற்பாலதாம்.

# ஊர்ப் பெயர்கள்

சா. கணேசன்

பண்டைத் தமிழ் மக்கள் தாம் வாழ்ந்த ஊர் கட்குப் பல்வகையாகப் பேரிட்டனர். அக்காலத் தில் ஓர் ஊரின் பேரைக் கேட்டாலே அது எத்தகைய நிலத்தில் உள்ளது என்பதை எளிதில் புரிந்துகொள்ள முடியும். அன்றியும் அது சிற்றூரா, பேரூரா, அன்றித் துறைமுகமா, தலைநகரா, அல்லது வாணிக நகரமா என்பன போன்ற பலவற்றையும் புரிந்து கொள்ளலாம். உதாரணம் சிலவற்றை முதலில் காண்போம்.

'குறிச்சி' என்று முடியும் பெயர் மலையடி வாரத்தில் உள்ள ஓர் ஊரைக் குறிக்கும். 'சீறூர்' 'சிற்றூர்' என்பன மலைசார்ந்த இடத்துள்ள சிறிய ஊர்களைக் குறிக்கும். 'கேடம்' என்பது குன்றுகள் சூழ்ந்த ஊரைக் குறிக்கும். 'குன்றூர்' என்பது மலைமேலுள்ள ஊரைக் குறிக்கும்.

'பாடி', 'பட்டி', 'காடு', 'காட்டூர்', 'வனம்' என்ற சொற்களால் முடியும் பேர்களைக் கொண்ட ஊர்கள் முல்லை நிலத்து ஊர்களை உணர்த்தும்.

'பட்டினம்' என்பது கடல் துறைமுக நகரத் தையும், 'பாக்கம்' என்பது கடல் சார்ந்த இடத்து ஊரையும் 'பத்தனம்' என்பது கடற்றுறைக்கு அணித்தேயுள்ள பெரும் பதியை யும் சுட்டும்.

'நகர்', 'நகரம்', 'பட்டணம்' போன்ற சொற்களால் முடியும் பேர்கொண்ட ஊர்கள் மக்கள் தொகை மிக்க மருத நிலத்து நகரங்களைக் குறிக்கும். 'புரம்' என்ற சொல்லால் முடியும் பெயரைக் கொண்ட ஊர் மண்டலம், கோட்டம், கூற்றம் முதலியவற்றின் தலைநகரங்களாகும். "புரி" என்ற சொல்லை யுடைய பெயரால் விளங்கும் ஊர் கோட்டை முதலிய அரண்களுடன் கூடிய உண்மையைப் புலப்படுத்தும். 'குடி', 'பதி' முதலிய சொற்களையுடைய ஊர் பழமையை உணர்த்தும். 'சேரி' போன்ற சொல்லால் முடியும் பெயரைக் கொண்டு ஒரு பெரு நகரில் குறிப்பிட்ட மக்கள் வாழும் பகுதி அது என்பதை நாம் தெரிந்து கொள்ளலாம். 'பொழில்', 'கா', 'வயல்', 'ஏந்தல்' முதலிய இறுதிச் சொற்களைக் கொண்டு அவை மருத நிலத்து ஊர்கள் என்பதுடன் செழிப்புள்ளவை என்பதையும் நாம் தெரிந்து கொள்ள முடியும். 'நகரி' என்ற சொல் நகர அங்கங்கள் யாவையும் கொண்டதே யாயினும், அளவாலும் மக்கட் தொகையாலும் சிறியது ஆகும் என்பதை நமக்கு உணர்த்திக்கொண் டிருக்கும்.

'குறும்பு' என்பது பாலை நிலச் சார்புள்ள ஊர் என்பதைப் புலப்படுத்தும். பாலையைச் சார்ந்து வசித்தோர் தொகை மிகச் சிறிதே யானதால் பெயரும் ஒன்றிரண்டே இருந்திருக் கலாம். மருத நிலப் பகுதியிலே மக்கட்தொகை அதிகம் ஆனதால், ஊர்ப் பெயர்களும் எண் ணிக்கையால் மிகுந்து காணப்படுகின்றன. நிகண்டு, இலக்கண நூல்கள் வழியே யன்றி இலக்கியங்களி லிருந்தும், பழம் கிராம நகரப் பெயர்களாலும் இத்தகைய சிறப்பியல்புகளைக் கண்டறியலாம்.

இப்படியே ஊர்ப் பெயர்கள் யாவும் ஊர் அமைந்த நிலத்தியல்பையும் பிற உண்மைகளை யும் உணர்த்துவனவா யிருந்தன. பின்னர் நிலத்தியல்புகள் மாற்ற மடைந்தது முண்டு. ஒரு வகை நிலத்தில் வாழ்ந்த மக்கள் வேறு வகை நிலங்களில் குடியேறியது முண்டு. அப்படிக் குடியேறியோர், தாம் முன்னர் வாழ்ந்த ஊர்ப் பெயர்களையே புதிய ஊர்கட்கும் இட்டனர். சிலர் தமக்கு உவப்பான அல்லது மங்கலப் பொருள் தரும் பெயர்களையும் இடலாயினர்.

இவையும், இவை போன்றவையுமான காரணங் களால் இன்றையத் தமிழகத்தின் எல்லா ஊர்ப் பெயர்களும் முன்னை நெறியிலேயே விளங்குவன எனக் கூற முடியாத நிலை ஏற்பட்டுவிட்டது. என்றாலும் இத்தகைய ஒரு வரம்பு பண்டைத் தமிழகத்தில் இருந்து வந்தது என்பதை அறிந்து கொள்வது பயனுடையதாகும்.

இனி, ஊர்ப் பெயர்களை அகர வரிசையில் காண்போம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அகம் | காவூர் | கோயில் | தோட்டம் | பதி | மடப்பம் |
| அகரம் | கிராமம் | சம்வாகம் | நத்தம் | பள்ளி | மலை |
| அகலுள் | கிரி | சரணம் | நகர் | பாக்கம் | மாகாணம் |
| அருப்பம் | குடி | சாகை | நகரம் | பாடி | முட்டம் |
| ஆறு | குடிக்காடு | சாலி | நகரி | பாழி | முடி |
| இருக்கை | குடியிருப்பு | சிலை | நல்லூர் | புத்தூர் | மூலை |
| இருப்பு | குடியேற்றம் | சிற்றூர் | நிகமம் | புரம் | மேடு |
| உறையுள் | குப்பம் | சீறூர் | நிகாயம் | புரி | வதி |
| ஊர் | குப்பை | சும்மை | நியமம் | புலம் | வயல் |
| ஊரணி | குழி | செய் | நிலம் | புற்றூர் | வலசு |
| ஏந்தல் | குளம் | சேர்வு | நிவேசம் | பூக்கம் | வலம் |
| ஏமம் | குறிச்சி | சேரி | நெறி | பூண்டி | வளம் |
| ஏரி | குறும்பு | சேறை | நேமம் | பூரியம் | வளவு |
| கருவடம் | குன்றம் | தங்கல் | நொச்சி | பெருந்தெரு | வனம் |
| கரை | குன்று | தலை | பக்கணம் | பேட்டை | வாசல் |
| களம் | குன்றூர் | தளை | பக்கம் | பேடு | வாயில் |
| கற்பம் | கூடல் | தாங்கல் | பட்டணம் | பேரூர் | வாழ்க்கை |
| கா | கேடம் | தாமம் | பட்டி | பேறு | வாழ்வு |
| காட்டூர் | கோட்டம் | தானம் | பட்டினம் | பொழில் | வேசனம் |
| காடு | கோட்டை | திட்டை | பட்டு | மங்கலம் | வேலி |
| காவு | கோடி | துறை | பத்தனம் | மங்கை | வைப்பு |



# நீர் நிலைப் பெயர்களும் விளக்கமும்

சா. கணேசன்

"இலஞ்சி, பண்ணை, ஏல்வை, குண்டம், அலந்தை, பொய்கை, வலயம், சுனை, சிறை, பட்டம், உடுவை, பயம்பு, படுகர், குட்டம், தாங்கல், கோட்டகம், ஏரி, உவளகம், மடு, ஓடை, படு, தடம், வாவி, தடாகம், ஆவி, குழி, கிடங்கு, சலதரம், கேணி, பணை, கயம், பல்வலம், நளினி, இலந்தை, மூழி, குழி, குளம் நீர்நிலைப் பெயரே"

என, பிங்கலந்தை நீர்நிலைக்கு 38 பெயர் கூறுகிறது. சூடாமணி 29 பெயர்களைக் கூறுகிறது. ஆனால் பிங்கலந்தையில் காணப்படாத வட்டம் (வலயமாக இருக்கலாம்) சூடாமணியில் காணப்படுகின்றது. நாம தீபத்திலோ 35 பெயர்கள் உள்ளன. அவற்றில் புட்கரணி, ஊருணி, பங்கம், அலங்கல், சரசு ஆகிய ஆறு புதுச் சொற்கள் காணப்படுகின்றன. ஆனால் பொய்கையை உணர்த்தும் சரசு, திருக்குளத்தை உணர்த்தும் புட்கரணி போன்ற சம்ஸ்கிருதச் சொற்களைக் கொண்டு நீர்நிலையை வேறுபடுத்திக் கொள்ள முடியாது.

இவற்றை எல்லாம் மனத்துட்கொண்டு இயன்றவரை பல்வேறு சொற்களையும் பொறுக்கி ஊகித்தும், உசாவியும், ஆய்ந்து அடியிற் கண்டவண்ணம் நீர்நிலைப் பெயர்களுக்கு விளக்கம் தரப் பட்டிருக்கின்றன.

| | |
|---|---|
| 1. அகழி (Moat) | கோட்டையின் புறத்தே அகழ்ந்தமைக்கப்பட்ட நீர் அரண். |
| 2. அருவி (Water-fall) | மலை முகட்டுத் தேக்க நீர் குதித்திட்டுக் குதிப்பது. |
| 3. ஆழிக்கிணறு (Well in sea-shore) | கடலருகே தோண்டிக் கட்டிய கிணறு. |
| 4. ஆறு (River) | பெருகி ஓடும் நதி. |
| 5. இலஞ்சி (Reservoir for drinking and other purposes) | பல்வகைக்கும் பயன்படும் நீர்த்தேக்கம். |
| 6. உறை கிணறு (Ring well) | மணற்பாங்கான இடத்தில் தோண்டி சுடுமண், (அல்லது சிமிந்தி) வளையமிட்ட கிணறு. |
| 7. ஊருணி (Drinking water tank) | மக்கள் பருகுநீர் உள்ள நீர்நிலை. |
| 8. ஊற்று (Spring) | அடியிலிருந்து நீர் ஊறுவது. |
| 9. ஏரி (Irrigation tank) | வேளாண்மைப் பாசன நீர்த்தேக்கம். |
| 10. ஓடை (Brook) | அடியிலிருந்து ஊற்றெடுக்கும் நீர் எப்பொழுதும் பொசிந்து வாய்க்கால்வழி ஓடும் ஒரு நீர்நிலை. |
| 11. கட்டுக்கிணறு (Built-in-well) | சரளை நிலத்தில் வெட்டி கல், செங்கல்லால் அகச் சுவர் கட்டிய கிணறு. |
| 12. கடல் (Sea) | சமுத்திரம். |
| 13. கம்வாய் (Irrigation tank) | பாண்டி மண்டலத்தில் ஏரிக்கு வழங்கும் பெயர். (கம் - நீர், வாய் - இடம்) |
| 14. கலிங்கு (Sluice with many ventways) | ஏரி முதலிய பாசன நீர்த்தேக்கம் உடைப் பெடுக்காமல் இருப்பதற்கு, முன் எச்சரிக்கை யாகக் கற்களால் உறுதியாகக் கட்டப்பட்டுப் பலகைகளால் அடைத்துத் திறக்கக்கூடிய தாய் உள்ள நீர் செல்லும் அமைப்பு. |

| | | |
|---|---|---|
| 15. | கால் (Channel) | நீரோடும் வழி. |
| 16. | கால்வாய் (Supply channel to a tank) | ஏரி, குளம், ஊருணிக்கு நீர் ஊட்டும் பாய்கால் வழி. |
| 17. | குட்டம் (Large pond) | பெருங்குட்டை. |
| 18. | குட்டை (Small pond) | சிறிய குட்டம், மாடு முதலியன குளிப்பாட்டும் நீர் நிலை. |
| 19. | குண்டம் (Small pool) | சிறியதாயமைந்த குளிக்கும் நீர் நிலை. |
| 20. | குண்டு (Pool) | குளிப்பதற்கேற்ற ஒரு சிறு குளம். |
| 21. | குமிழி (Rock-cut well) | நிலத்தின் பாறையைக் குடைந்து அடி ஊற்றை மேலெழும்பி வரச் செய்த குடை கிணறு. |
| 22. | குமிழி ஊற்று (Artesian fountain) | அடிநிலத்து நீர் நிலமட்டத்திற்குக் கொப்புளித்து வரும் ஊற்று. |
| 23. | குளம் 1. (Bathing tank) | ஊர் அருகேயுள்ள மக்கள் குளிக்கப் பயன்படும் நீர் நிலை. |
| 24. | குளம் 2. (Irrigation tank) | கொங்கு மண்டலத்தைச் சார்ந்த இடங்களில் ஏரிக்கு வழங்கும் பெயர். |
| 25. | கூவம் (Abnormal well) | ஓர் ஒழுங்கிலமையாத கிணறு. |
| 26. | கூவல் (Hollow) | ஆழமற்ற, கிணறுபோன்ற ஒரு பள்ளம். |
| 27. | கேணி (Large well) | அகலமும் ஆழமும் உள்ள பெருங்கிணறு. |
| 28. | சிறை (Reservoir) | தேக்கப்பட்ட பெரிய நீர் நிலை. |
| 29. | சுனை (Mountain pool) | மலையிடத்து இயல்பாய் அமைந்த நீர் நிலை. |
| 30. | சேங்கை (Tank with duckweed) | பாசிக்கொடி மண்டிய குளம் |
| 31. | தடம் (Beautifully constructed bathing tank) | அழகாக நாற்புறமும் கட்டப்பட்ட குளம். |
| 32. | தளிக்குளம் (Tank surrounding a temple) | கோயிலின் நாற்புறமும் சூழ்ந்தமைந்த அகழி போன்ற நீர் நிலை. |
| 33. | தாங்கல் (Irrigation tank) | இப்பெயர் தொண்டை மண்டலத்தை ஒட்டிய பகுதியில் ஏரியைக் குறிக்கும் |
| 34. | திருக்குளம் (Temple tank) | கோயிலின் அணித்தே அமைந்த நீராடும் குளம். இது புட்கரணி எனவும் பெயர் பெறும். |
| 35. | தெப்பக்குளம் (Temple tank with inside pathway along parapet walls) | ஆளோடியுடன் கூடிய, தெப்பம் சுற்றி வரும் குளம். |
| 36. | தொடுகிணறு (Digwell) | ஆற்றின் அகத்தும், அணித்தும், அவ்வப் பொழுது மணலைத் தோண்டி நீர் கொள்ளும் இடம். |
| 37. | நடைகேணி (Large well with steps on one side) | இறங்கிச் செல்லும் படிக்கட்டமைந்த பெருங் கிணறு. |
| 38. | நீராவி (Bigger tank with centre Mantapam) | மைய மண்டபத்துடன் கூடிய பெருங்குளம். ஆவி என்றும் கூறப்படும். |
| 39. | பிள்ளைக்கிணறு (Well in middle of a tank) | குளம், ஏரியின் நடுவில் அமைந்த கிணறு. |
| 40. | பொங்கு கிணறு (Well with bubbling spring) | ஊற்றுக்கால் கொப்புளித்துக்கொண்டேயிருக்கும் கிணறு. |

| | | |
|---|---|---|
| 41. | பொய்கை (Lake) | தாமரை முதலிய மண்டிக் கிடக்கும் இயற்கையாய் அமைந்த நீண்டதொரு நீர் நிலை. |
| 42. | மடு (Deep place in a river) | ஆற்றிடையுள்ள அபாயமான பள்ளம். |
| 43. | மடை (Small sluice with single ventway) | ஒரு கண்ணேயுள்ள சிறு மதகு. |
| 44. | மதகு (Sluice with many ventways) | பல கண்களையுள்ள ஏரி நீர் வெளிப்படும் பெரிய மடை; அடைப்புத் திறப்புள்ளது. |
| 45. | மறுகால் (Surplus water channel) | அதிக நீர் கழிக்கப்படும் பெரிய வாய்க்கால். |
| 46. | வலயம் (Round tank) | வட்டமாய் அமைந்த குளம். |
| 47. | வாய்க்கால் (Small water course) | ஏரி முதலிய நீர் நிலைகளிலிருந்து பயிருக்கு நீர் பாயும் சிறிய கால். |
| 48. | வாவி (Stream) | ஆற்று நீர் அல்லது தன் ஊற்று நீரால் நிரம்பி மறுகால் வழி மிகை நீர் வெளிச் செல்லுமாறு அமைந்த அல்லது அமைக்கப்பட்ட நீர் நிலை. |
| 49. | புனற்குளம் (Tank of rain water) | நீர் வரத்து மடையின்றி மழைநீரையே கொண்டு விளங்கும் குளிக்கும் நீர் நிலை. |
| 50. | பூட்டைக் கிணறு (Well with water-lift) | கமலை நீர் பாய்ச்சும் அமைப்புள்ள கிணறு. |



# தமிழ் நாட்டு ஆடைகள்

சாத்தன்குளம் அ. இராகவன்

உலகில் மிக நாகரிகமுற்றவர்களாய் இன்று கூறிக் கொள்ளும் ஆங்கிலேயர், ஆடை கட்டத் தெரியாது, அரை நிர்வாணிகளாய—இல்லை—முழு நிர்வாணிகளாய் திரிந்தலைந்த காலத்திலே தமிழர்கள் பருத்தி, பட்டு, கம்பளி ஆடைகளை அணிந்தும் பொற்சரிகைகள் இணைந்த ஆடைகளைப் புனைந்தும் வந்துள்ளனர். நவமணிகள் இழைத்த பொன் அணிகளைப் பூண்டு வந்தனர். சுருங்கக் கூறின், நானிலம் புகழ நனி சிறந்த நாகரிக மக்களாய் சீரும் சிறப்பும் பெற்று விளங்கினர் என்று சொல்லலாம்.

தமிழர்கள், மிகத் தொன்மையான காலத்திலே ஆடைகளை அணிந்து வந்தனர் என்று நமது தமிழ் அறிஞர்கள் கூறுகின்ருர்களே யொழிய, கி. மு. 3000 ஆண்டிற்கு முன்னர் தமிழர்கள் பஞ்சாடைகளையும் பட்டாடைகளையும் அணிந்து வந்தனர் என்று, தக்க சான்று காட்டி எவரும் எழுதியதே இல்லை. காரணம் தொன்று தொட்டுத் தமிழர்கள் தொன்மையான பொருள்களைப் பாதுகாத்து வைக்கத் தவறியுள்ளனர் என்று இங்கு வருத்தத்தோடு கூறிக் கொள்ள வேண்டியதிருக்கிறது.

இந்திய அரசாங்கப் புதை பொருள் ஆராய்ச்சித் துறைத் தலைவராய் இருந்த அறிஞர் சர். சாண் மார்சல், இந்திய வரலாற்றுத்துறை அறிஞர் இராசு அடிகள் போன்றவர்கள் சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே திராவிடப் பெருங்குடி மக்கள் கிரேக்கர், உரோமர் போன்ற நாகரிக மக்களின் பொற்காலங்களையும் தாண்டியவர்களாய், மொகஞ்சதாரோவில் தலைசிறந்த நகரங்களையும் கட்டிடங்களையும் முத்திரைகளையும் ஆயுதங்களையும் அணிகலன்களையும் படை பாதிரங்களையும் ஆடைகளையும் செய்து நனி சிறந்த நாகரிகத்தின் உச்சிக் கொம்பை எட்டிப் பிடித்த மக்களாய் வாழ்ந்தனர் என்று தக்க சான்றுகளுடன் எடுத்துக் காட்டியுள்ளனர்.

இந்திய அரசாங்கத்தின் கைத்தொழில் வணிக அமைச்சரால் நிறுவப் பெற்ற அகில இந்திய கைப்பணிக் கழகம் வெளியிட்ட இந்திய அச்சுப் புடவைகள் என்ற சீரிய நூலில், * "ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே மொகஞ்சதாரோவில் காணப்படும் அழகிய ஆடைகளைக் கொண்டு, நெய்தற் கலை மிகத் தொன்மையான காலத்திலே அரும்பி மிகச் சீரும் சிறப்புமாய் வளர்ந்துள்ளது" என்று திட்டவட்டமாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

பண்டைக் காலத்தில் பாரத நாட்டில் உயிர் ஊட்டும் உழவுத் தொழிலை விட உயர்ந்து நின்ற தொழில் நெசவுத் தொழிலேயாகும். "செய்யுந் தொழிலெல்லாம் சீர்தூக்கிப் பார்க்கின் நெய்யுந் தொழிலுக்கு நிகரில்லை" என்று தமிழகத்தின் அறவோர்கள் இத் தொழிலை உயர்ந்த அறத் தொழிலாக ஏற்றுப் போற்றி வந்தனர். உழவுத் தொழில் உயிர் ஊட்டுந் தொழில். நெசவுத் தொழில் மானங் காக்கும் தொழில்.

ஆடை மக்களின் மானத்தைக் காத்து வந்ததோடு மதிப்பையும் உயர்த்தி வந்தது. தட்ப வெப்ப நிலைகள் உடம்பைத் தாக்காவண்ணம் பாதுகாத்து வந்தது. நமது கலைச் சிறப்பையும் நுண்ணறிவையும் காட்டி வந்தது. "ஆடையுடையான் அவைக் கஞ்சான்" "ஆடையில்லா மனிதன் அரை மனிதன்" என்ற முது மொழிகள்

---

* Indian Printed Textiles

* "The art of using pigments to ornament fabrics has an ancient origin. The discovery of a fragment of a madder-dyed fabric at Mohenjo-Daro sticking to a silver vase, would led us to believe that the mardens process of dyeing cloth was known in India five thousand years ago"—Indian Printed Textiles. Published by All India Handicrafts Board, Ministry of Commerce & Industry, Government of India (Delhi) 1950.

பல தோன்றின. முற்காலத்தில், மக்களின் ஆடை அதை அணியும் முறை இவைகளை வைத்து அவர்களின் அந்தஸ்து நிர்ணயிக்கப் பட்டது.

ஆடைகளில் பல்வேறு வண்ணங்கள் மிகத் தொன்மையான காலத்திலிருந்து இடம் பெற்று வந்தது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழகத்தில் பல்வேறு வண்ண ஆடைகள் இருந்து வந்தன. மகளிர்கள் பட்டிலும் பஞ்சிலும் நெய்த பூந்துகில்கள் பல புனைந்து வந்தனர். இவைகளுக்கு எண்ணற்ற சான்றுகள் நமது சங்க இலக்கியங்களி லிருந்தே காட்ட முடியும். நமது சிற்ப நூல்களை ஆராய்ந்தால் முற்காலத்திய நமது மக்கள் நாற்பதிற்கு மேற்பட்ட வண்ணங்களை அறிந்தனர் என்றும் அவைகளின் பெயரும் அந்த வண்ணம் எந்தப் பூவைப் போல் அல்லது எந்தப் பண்டத்தைப் போல் இருந்தது என்றும் கூறப்பட்டுள்ளது. இந்த வண்ணங்கள் அனைத்தும் நமது நாட்டிலுள்ள மூலிகைகளிலிருந்தும் பிறவற்றிலிருந்தும் செய்யப்பட்டனவாகும். அவைகள் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்கும் நிலைத்து நிற்கும். அதன் வண்ணம் சிறிதும் மங்காது. இன்று நமது சிற்றண்ணல் வாயில், தஞ்சாவூர் பெருவுடையார் கோயிலில் சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன் தீட்டப்பட்ட ஓவியங்கள் பல்வேறு தாக்குதல்களுக்கு உட்பட்டும் அதன் நிறம் மாறுது, பொலிவு குன்ருது, புத்தம் புதிய வண்ணம்போல ஒளிர் விட்டுக் கொண்டிருப்பதே ஏற்ற எடுத்துக் காட்டாகும்.

முற்காலத்தில் நமது நாட்டில் ஆடைகளின் வண்ணங்கள் மட்டுமல்ல; அதன் உடலும், விளிம்பும் முன்ருனையும் பல்வேறு கொடிகளாலும் பூக்களாலும் பிறவற்ருலும் செய்யப்பட்டு அவைகளுக்குப் பல பெயர்கள் வழங்கப்பட்டன. அவைகளில் சிலவற்றின் பெயர்கள் தமிழ் இலக்கியங்களில் தரப்பட்டுள்ளன. அவை அடியில் வருமாறு :

1. கோசிகம், 2. பீதகம், 3. பச்சிலை, 4. அர்த்தம், 5. நுண் துகில், 6. சுண்ணம், 7. வடகம், 8. பஞ்சு, 9. இரட்டு, 10. பாடகம், 11. கோங்கலர், 12. கோபடம், 13. சித்திரக்கம்மி, 14. குருதி, 15. கரியல், 16. பேடகம், 17. புரியட்டக்காசு, 18. வேதங்கம், 19. புங்கர்க்கழகம், 20. சில்லிகை, 21. தூரியம், 22. பங்கம், 23. தந்தியம், 24. வண்டை, 25. கவற்று மடி, 26. நூல் யாப்பு, 27. திருக்கு, 28. தேவாங்கு, 29. பொன்னெழுத்து, 30. குச்சரி, 31. தேவகிரி, 32. காத்தூலம், 33. கிறைஞ்சி, 34. செம்பொத்தி, 35. வெண்பொத்தி, 36. பணிப்பொத்தி.

இஃதன்றி, "ஆடையின் தன்மைக் கேற்ப துகில், பூந்துகில், புட்டகம், உடுக்கை" என்று பல்வேறு பெயர்கள் உள்ள ஆடை வகைகளும் அளவிலாதிருந்தன.

"துகில், வெண்மை நிறம் உடையதாயும் சிவப்பு நிறம் உடையதாயும் இருக்கும். பூந்துகில், தாமரை, மல்லிகை போன்ற மலர்களின் வடிவம் பொலிவதாய் இருக்கும்." *

நமது பழம் பெரும் இலக்கியங்களில் இவ்வாடைகளைப் பற்றிய குறிப்புகள் பல உள்ளன. அவைகளில் சில அடியில் வருமாறு :

1. "துகில்சேர் மலர்போல் மணிநீர் நிறைந்தன்று"
—பரிபாடல்

2. "மீப்பால் வெண்துகில் போர்க்குநர்
பூப்பால் வெண்துகில் துழ்ப்பக குழல்
முறுக்குநர்"
—பரிபாடல்

3. "புட்டகம் பொருந்துவ புனைகுவோரும்"
—பரிபாடல்

4. "நீலக்கச்சைப் பூராடை"
—புறம்

5. "பாம்பு பயந்தன்ன வடிவின்
காம்பின் கழைபடு சொலியின்
இழைமணி வாரா ஒண்பூங் கலிங்கம்"
—புறம்

6. "கோபத்தன்ன தோயாப் பூந்துகில்"
— பெரும்பாண்

7. "நோக்கு நுழை கல்லா நுண்மை யழக்கனிந்து
அரவுரி யன்ன அறுவை"
—பெரும்பாண்

8. "ஆவியன்ன அவிநூற் கலிங்கம்"
—

9. "புகைவிரித்தன்ன பொங்குறுகி துடிஇ"
—புறம்

மேற்கூறிய சங்க நூற் பாடல்களினின்று முற்காலத்தில் தமிழகத்தில் பல்வேறு விளிம்புகளும் முன்ருனைகளும் உடலும் உள்ள அழகிய ஆடைகள் இருந்தன என்பது நன்கு பெறப் படுகின்றன.

விளிம்பிலோ முன்ருனையிலோ உடலிலோ, ஆடைகள் அழகுற்று விளங்க, தாமரை மலர்,

---

* சிலப்பதிகார உரை.

* தமிழர் பண்பாட்டில் தாமரை. அ. இராகவன். தமிழ்ப் புத்தகாலய வெளியீடு (சென்னை 1965)

அல்லி மலர், மல்லிகை மலர், பிச்சிப்பூ, மல்லிகை அரும்பு, மாம்பிஞ்சு போன்ற உருவங்கள் எழில் பெற்றிலங்குமாறு நெய்யப் பெற்றன. இம்மலர் களும் அரும்பும், பிஞ்சும், சிவப்பு, வெள்ளை, நீலம், மஞ்சள், ஊதா, பச்சை போன்ற பல்வேறு நிறங்களில் மட்டுமின்றி வெள்ளிச் சரிகை, பொற் சரிகை போன்றவைகளை இணைத்து தகதக வென்ன ஒளிர்விட்டு மின்ன பட்டு நூலிலும், பஞ்சு நூலிலும் ஆடைகள் நெய்யப் பெற்றன. அவைகள் எழில் மிக்கனவாய் கண்ணைக் கவர் வனவாய் விளங்கின.

பாம்பின் சட்டை போலவும் மூங்கிலில் உரித்த மெல்லிய தோல் போலவும் பால் காய்ச்சும் பொழுது எழும் ஆவி போலவும் பால் நுரை போலவும் தெளிந்து வெண்ணிறமான அருவி நீர் வீழ்ச்சியின் தோற்றம் போலவும் பண்டைய தமிழர்கள் நுண்ணிய எண்ணிலா மெல்லிய ஆடைகளை நெய்தனர்.

மசூலிப்பட்டினத்திலும் கலிங்கத்திலும் மெல் லிய ஆடைகள் நெய்யப் பெற்றன. அதைப் பார்த்ததும் அத்தகைய மெல்லிய ஆடைகள்—இல்லை—அதைவிட மெல்லிய ஆடைகள் மதுரை, காஞ்சி முதலிய இடங்களில் நெய்யப்பெற்று வெளி நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப் பெற்றன.

உரோமர்களும் எகிப்தியர்களும் தமிழக ஆடை களைக் கண்டு வியப்பெய்தினர். அரசர்களும், அரசிகளும் ஆடைகளின் எடைக்குப் பொன் கொடுத்து விலைக்கு வாங்கினர். ஆடைகளின் விளிம்பு பல்வேறு வேலைப்பாடுகள் செய்யப்பட்ட தாய் விளங்கின. விளிம்பில் கொற்கை முத்துகள் இணைக்கப்பட்ட ஆடைகளும், விளிம்பில் தமிழ் நாட்டு பொன் வண்டுகளின் மஞ்சள், நீலம், பச்சை வண்ண இறக்கைகள் இணைக்கப் பெற் றுள்ள ஆடைகளும் வெளி நாட்டார் விரும்பி வாங்கினர். எகிப்திய அரசிகளும், உரோம நாட்டு அரசிகளும், உரோமர் நாட்டு பிரபுக்களின் மனைவிகளும் பொற்காசுகளைக் கொடுத்து வாங்கினர். எகிப்தில் ஆயிரக்கணக்கான ஆண்டு களுக்கு முன்னர் இறந்த அரசர்களின் உடல்கள் பலவிதப் பொருள்களால் பதமிடப்பட்டு அழியாது கல்லறைகளில் வைத்துப் பாதுகாக்கப் பெற் றுள்ளது. அந்தப் பிரேதங்கள் இந்திய மசூலின் துணிகளால் பொதியப் பெற்றுள்ளது என்று இன்று மேனாட்டு அறிஞர்களால் கண்டுபிடிக்கப் பெற்றுள்ளது.

ஜெர்மன் நாட்டைச் சேர்ந்த மெர்லாஞ்ச் என்ற அறிஞர் "இந்தியப் பட்டின் சாயல்" என்னும் பொருள் பற்றி இலண்டனில் உள்ள இந்தியக் கழகத்தில் 1938-ல் ஒரு சொற்பெருக்காற்றினார். அதில், "பண்டு தொட்டு பாரத நாட்டில் பட்டு நெசவு ஒரு தனிச் சிறப்புடையதாய் விளங்கி வந்திருக்கிறது" என்று குறிப்பிட்டுள்ளார்.

ஆர். பில்ட்டர் என்ற பிரஞ்சுப் பேரறிஞர், இந்தியத் துணிகள் என்ற நூலில் இந்திய நெசவுத் தொழிலின் செய்முறைகளையும் வண் ணச் சிறப்பையும் அதில் ஒளிரும் தாமரை, முல்லை அரும்பு, மாம்பிஞ்சு போன்ற உருவங் களையும் வியந்து பாராட்டியுள்ளார்.

முற்காலத்தில் பாண்டிய நாட்டில் நெய்யப் பெற்ற பங்கய மலர்கள் பொறித்த பட்டுத் துணிகள் உரோம், கிரீஸ், எகிப்து, அரேபியா, இலங்கை, கடாரம், சாவகம், சமபாகம், போசகம் முதலிய பல்வேறு நாட்டு மன்னர்களின் அரண் மனைகள் அனைத்தையும் அலங்கரித்து—19ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்து அரண்மனையிலும் இடம் பெற்றுள்ளது. இன்று இங்கிலாந்து இராணி எலிசபெத் அவர்களின் பள்ளியறையில் இந்திய நாட்டுப் பங்கயப் பட்டு இடம் பெற் றுள்ளது.

நமது தமிழகத்தில் ஒவ்வொரு நூற்றாண்டிலும் நமது ஆடைகள் மென்மையிலும் இதர தன்மை யிலும் வண்ணத்திலும் சிறப்புற்று அபிவிருத்தி அடைந்துள்ளன. அச்சிறப்புக்கள் பாண்டிய நாட்டில் ஒரு விதமாகவும் சோழ நாட்டில் மற் றொரு விதமாகவும் தொண்டை நாட்டில் இன் னொரு விதமாகவும் உள்ளன. இவைகள் அனைத்தையும் தேடிக் கண்டுபிடித்து காட்சிக்கு வைப்பது பயனுடைய பணியாகும்.

# தமிழர் அணிகலன்கள்

## (ORNAMENTS OF THE TAMILS)

சா. கணேசன்

தமிழகம் வரலாற்றுக் காலத்திற்கும் முற்பட்ட, வளமான, நாகரிகத்தையுடைய நாடு. பிற பல துறைகளைப் போலவே அணிகலன் படைப்பிலும் சிறந்து விளங்குகிறது. எண்ணிக்கையால் மட்டுமின்றி அமைப்பு முறையாலும், பெருகிய அணிகலன்களை வரலாற்று நெறியோடு கண்டு மகிழலாம்.

எட்டாப் பழங்காலத்தே, இயற்கையோடு இசைந்து எளிய முறையில் வாழ்ந்தபோதும் அழகுணர்ச்சி மிக்கவர்களாய் விளங்கிய பெருமை தமிழர்க் குண்டு. இன்றேல் பண்டைத் தமிழன் தன் கடவுளுக்கு அழகு, இளமை என்றெல்லாம் பொருள் சிறக்கும் 'முருகு' என்ற சொல்லின் அடிப்படையில் முருகன் எனப் பெயர் சூட்டி மகிழ்ந்திருப்பானு, என்ன?

தமிழ்நாட்டு அணிகலன்களை ஆய்வோமானல் அழகு கொழிக்கும் இயற்கைப் படைப்பிலிருந்தே அணிகலன்கள் தோன்றிய அருமைப் பாட்டை நாம் காணலாம். கொடி, தளிர், அரும்பு, மலர், மலர்க்கொத்து போன்றவையே தொடக்க காலத்து அணிகளாய் அமைந்திருக்க வேண்டும். பின்னர் அவை, ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளில், படிப்படியாக வளர்ந்து பொன்னும் நவரத்தினங்களும் பொதிந்த இன்றைய தோற்றத்தை அடைந்திருக்கின்றன. பல்வேறு அணிகலன்களின் பெயர்களே இவ்வுண்மையை நமக்கெல்லாம் இன்றும் புலப்படுத்திக்கொண்டிருக்கின்றன.

அணிந்து கொண்டவை யாவும் 'அணி' என்று பெயர் பெற்றன. அவற்றுள் கோத்து அணிந்துகொண்டதைக் 'கோவை' என்றும், தொடுத்து அணிந்துகொண்டதைத் 'தொடை' என்றும், அசைந்து ஆடத்தக்கவாய் அமைத்து அணிந்துகொண்டதை 'மாலை' என்றும் ஒரு தரமாய் ஒழுங்குபட அமைத்து அணிந்து கொண்டதைச் 'சரம்' என்றும், கொடிகளை முறுக்கி அணிந்துகொண்டதைக் 'கொடி', 'கொடிமுறுக்கு' என்றும், பசிய கொடியை வட்டவடிவ மாக்கி அணிந்து கொண்டதைப் 'பைந்தொடி' என்றும், பூவைப் பறித்துக் காதில் அணிந்துகொண்டதைக் 'கன்னப்பூ' என்றும், பூவரசின் பூத் தோட்டைக் காதில் அணிந்துகொண்டதைத் தோடு என்றும் பனை ஓலையைச் சுருளாக்கிக் காதில் அணிந்து கொண்டதை 'ஓலை', 'குதம்பை' என்றும் இப்படியே பல்வேறு அணிகலன்களையும் பெயரிட்டு வழங்கி வந்தனர். இன்றும் அப்பெயர்களில் சில அப்படியே நிலைத்து நிற்பதை நாமறிவோம்.

தமிழ்நாட்டு அணிகலன்களின் பெயர்கள் பலவும் சங்கப்பாடல்கள், சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்பராமாயணம், திருவிளையாடல், கலம்பகம், உலா, முதலான பல இலக்கியங்களிலும், பிங்கலந்தை முதலிய பல்வேறு அகராதிகளிலும், கல்வெட்டுகளிலும் பரக்கக் காணப்படுகின்றன. அப்பெயர்கள் அனைத்தும் வேறுபட்ட அணிகலன்களையே கூறுவன என்று கொள்ள முடியாது. ஒரு அணிகலனுக்கே உரிய இரண்டு அல்லது மூன்று பெயர்களாகவும் சில அவற்றுள் இருக்கக் காண்கிறோம். உதாரணமாக, சிலம்பு—நூபுரம் என்ற இரு பெயரும் ஒரு பொருளையே உணர்த்துவன. ஓலை—குதம்பை என்பனவும் ஒருவகைக் காதணியையே குறிக்கும். பாதகடகம்—பாடகம்—தண்டை என்பன மூன்றும் குறிப்பது ஒருவகைக் காலணியையே. குறங்குசெறி—கவான்செறி இரண்டும் தொடையணியையே சுட்டும்.

எனவே இவ்வுண்மையையும் மனதில் இருத்திக்கொண்டு தமிழக அணிகலன்களைக் காண்போம் இனி.

### 1. தலையணி வகை (Head Ornaments) :

(1) முடி, சுடிகை, சேகரம், கிரீடம், சூடிகை, மகுடம், மௌலி, மேலே கண்ட முடிவகை ஐந்துறுப்புகளை யுடையவை. அவை முறையே தாமம், முகுடம், பதுமம், கோடகம், கிம்புரி என்பனவாம்.

(2) தொய்யகம், முகசரம், பூரப்பாளை, புல்லகம், தென்பல்லி வடபல்லி, சிலம்பகம், சூடை, தலைச்சுட்டி, சூடாமணி, சூரியப்பிரபை, சந்திரப்பிரபை, சூளாமணி, வலம்புரி, சீதேவி, கோதை.

(3) நெற்றிச்சுட்டி, ஓடை, சுடிகை, சூட்டு, பட்டம்.

(4) சடைநாகம், சடைத்திருகு, குச்சம், குஞ்சம்.

**2. கழுத்தணி வகை (Neck Ornaments) :**

(1) அரும்பொட்டி, மணிவடம், கண்டவலயம், கிரீவம், சரப்பளி, கொத்து, அரும்புச்சரம், மலர்ச்சரம், கண்டசரம், கண்டமாலை, அட்டிகை, ஞாண், சவடி, கோதை, காரை, பொட்டு, சூலம், தாலி, புலிப்பற்றாலி, தும்பு, திரு.

(2) ஆரம், கண்டிகை, தொடையல், வீர சங்கிலி, நேர்ஞ்சங்கிலி, மதாணி, மாலை, வடம், கோவை, மணியாரம், முத்தாரம், முன்றாலி, பின்றாலி, பதக்கம், சன்னவீரம், ஐம்படைத் தாலி, புலிநகத்தாலி, தாழ்வடம், மாங்காய் மாலை, மணிமிடை பவழம், நெல்லிக்காய் மாலை, சந்திர ஆரம்.

**3. காதணி வகை (Ears Ornaments) :**

தோடு, ஓட்டு, ஓலை, சின்னப்பூ, கன்னப்பூ, குழை, கம்பி, வல்லிகை, குணுக்கு, தருப்பு, கடுக்கன், மகரி, வீரசன்னம், திரிசரி, பஞ்சசரி, நவசரி, நவகண்டி, அட்டிகை, கடிப்பிணை, தண்டட்டி, குண்டலம், கொப்பு, புகடி, முருகு, செவிப்பூ, மடல், சன்னவதஞ்சம், பாம்பணி, நாகபடம், பாம்படம், குதம்பை, நீலக்குதம்பை, சந்திரபாணி, குரடு, செவியீடு.

**4. மூக்கணி வகை (Nose Ornaments) :**

மூக்குத்தி, புல்லாக்கு (புலாக்கு), பேசரி, நத்து.

**5. கையணி வகை (Arm Ornaments) :**

(1) வாகுவலயம், கேயூரம், அங்கதம், தோள் வளை, தொடி.

(2) ஆடகம், கைச்சரி, வளை, தொடி, கங்கணம், மகரவாய், புரிவளை, பரியகம், கடகம், கைக்கட்டு, முறுக்கு, காப்பு, வால்வளை, பைந்தொடி கொலுசு, குருகு, சரி, வண்டு, சங்கு, வங்கி, சூடகம், கன்று, பிடிகை, ஆளிக்காப்பு, தோடா, பவளப் பல்வளை, நவமணி வளை, இடைச்சரி, பாசித்தாமணி, நெளிவளை, முடுகு, பாட்டுலா.

**6. கைவிரலணி வகை (Fingers Ornaments) :**

மோதிரம், ஆழி, வீகம், இலச்சினை, அரும்பு, தடை, நெளி, வாளைப்பகுவாய், மரகதச்செறி, மகரவாய், மணியாழி, வட்டப்பூ, மரகத நாயகம்.

**7. இடையணி வகை (Waist Ornaments) :**

மேகலை (7வடம்), காஞ்சி (8 வடம்), கலாபம் (16 வடம்), பருமம் (18 வடம்), விரிசிகை (32 வடம்). தோரை, அத்து, மனு, அரைப்பட்டிகை, அரைஞாண், உதரபந்தம், இரதனம், கடிசூத்திரம், கீர்த்திமுகம், இடைச்செறி, சதங்கை மணிக்கோவை, ஐம்படைக்கோவை, அரைச்சதங்கை, அரைவடம், அரைமூடி, கச்சி, கச்சைப் புறம்.

**8. துடையணி வகை (Thigh Ornaments) :**

குறங்குசெறி, கவான் செறி.

**9. பாதஅணி வகை (Foot Ornaments) :**

பாடகம், பாதரசம், கிண்கிணியாரம், புனையாரம், பாதசாலம், சதங்கை, சிறுமணி, நூபுரம், பரிபுரம், பரியகம், சிலம்பு, அரவம், தண்டை, பாதகடகம், குடச்சூல், ஞெகிழம், புசங்க கடகம், கண்டை, வீரக்கழல், கொடைக்கழல், காற்சரி.

**10. கால் விரலணி வகை (Toes Ornaments) :**

கால்மோதிரம், மிஞ்சி, மெட்டி, பீலி, மகரவாய், நெளி, காலாழி.

# திருவிளக்குகளின் சிறப்பு

சாத்தன்குளம் அ. இராகவன்

உலக மெங்கும் விளக்குகள் உண்டு. அனைத் துலக மக்களும் விளக்கைப் பயன்படுத்தி வரு கிருர்கள். உலகிற் பெரும்பாலான மக்கள் விளக்கு இருளையகற்றி மக்களுக்கு இன்ப மூட்டும் ஒரு சாதாரணக் கருவியாகவே கருது கின்ருர்கள்.

உலகில், தமிழர்கள் மட்டும் இதனின்று மாறு பட்டவர்களாய்க் காணப்படுகின்ருர்கள். அவர் கள் விளக்கைத் திரு விளக்கு என்று கூறுவதே நல்ல சான்ருகும். உலகில் எவரும் தமிழர்களைப் போல் திரு என்னும் அடைமொழி கொடுத்து விளக்கை அழைப்பதே இல்லை.

விளக்கு, திருவிளக்கு என்று அழைக்கப்படு வதன் மூலம் முதன்முதலாக அது சமய சம் பந்தப்பட்டிருக்கிறது என்பது நன்கு புலனுகும். இரண்டாவதாக, அது கலை சம்பந்தப்பட்டிருக் கிறது என்பது நன்கு உணர்த்துவது தெரிய வரும்.

திருவிளக்கைத் தமிழர்கள் தெய்வமாகவே எண்ணுகிருர்கள். அஃதின்றித் திருவிளக்கில் அரும்பெரும் சமய தத்துவங்கள் அடங்கியிருப்ப தாகப் பழம்பெரும் சமயச் சான்ருேர்கள் கண் டார்கள். சென்ற நூற்ருண்டில் தோன்றிய இராமலிங்க அடிகள் போன்ருேர்கள் விளக்கிலே தெய்வத் தன்மையைக் கண்டார்கள்.

" விளக்கினையேற்றி வெளியை அறிமின்
விளக்கின் முன்னே வேதனை மாறும்
விளக்கை விளக்கும் விளக் குடையார்கள்
விளக்கின் விளக்கும் விளக்கவர் தாமே "

என்று சைவ சமய நெறி வளர்த்த சம்பந்தர் பாடியுள்ளார்.

கருமை வாய்ந்த கடலினின்று பொங்கி எழும் பொன்னிறமான ஒளிப்பந்தை யொப்பத் தகதக வெனக் கீழ்திசையில் ஒளி வீசி எழும் கதிரவன், மாபெரும் விளக்கைப் போல் ஒளிவிட்டோங்கித் திகழ்கின்ருன். இது ஒரு தீப உச்சிபோல் திகழ் கிறது. இம்மாபெரும் திரு விளக்கிற்குக் கடல், நெய்போல் விளங்குகிறது. இதைப் பொய்கை யாழ்வார் பார்க்கின்ருர். உடனே அவரது உள்ளத்தில் உணர்ச்சி பொங்கி எழுகிறது. நாவில் கவிதை ஊற்றுப் பொங்கி எழுகிறது. அது அடியில் வருமாருகும் :

" வையம் தகழியாய் வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச்—செய்ய
சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்கவே யென்று."

இதற்கு உரை கண்ட அறிஞர்கள், " நிலம், நெய்க்கும் திரிக்கும் ஆதாரமாக நிற்கும் தகழி யாகவும் (அலகாகவும்) கடல் எண்ணெய் ஆகவும் ஒளிக்கதிர்களையுடைய ஞாயிறை விளக்காகவும் வைத்துத் திருமாலின் பாதாரவிந்தத்தில் எனது பாமாலையைச் சூட்டினேன் " என்று கூறி யுள்ளனர்.

இஃதன்றி கார்த்திகைத் திங்களில் கொண் டாடப்பெறும் தீபத்திருநாளே திருவிளக்கின் சமயத் தொடர்பை விளக்கும். நாடோறும் தமிழ் நாட்டு மகளிர் விளக்கை நன்ருக விளக்கி எண்ணெய் வார்த்து, திரியிட்டு, பூமாலை சூட்டி, ஒளியூட்டி, தேவாரம் அல்லது திருவாய்மொழி கூறி வழிபடுவது திருவிளக்கிற்கு நாம் கண்ட சமயத் தொடர்பு நன்கு தெரியும். தமிழர்கள் வீட்டில் நடைபெறும் எல்லா விழாக்களிலும் இரவு ஆனுலும் பகலானுலும் திருவிளக்கு இடம் பெற்றிருக்கும்.

தமிழ் நாட்டு சைவ வைணவக் கோயில்கள் அனைத்திலும் திருவிளக்குகள் முதல் இடம் பெற்றிருப்பது பண்டு தொட்டு இன்று வரை காணக்கிடக்கும் ஒரு அரிய காட்சியாகும்.

ஆரம்ப காலத்தில் இதர நாடுகளைப் போல் தமிழ் நாட்டிலும் விளக்குகள் கல்லாலும் மண்ணுலும் சங்காலும் செய்யப்பட்டு வந்தன. மக்கள் நாகரிகம் முற்றியதும் திரு விளக்கில் கலை அம்சத்தை புகுத்த முயன்றனர்.

கற்காலத்தில் இரும்பினுல் செய்யப்பெற்ற உளிகளும், சுத்தியல்களும் கிடையாததலால், கலை அம்சத்தைப் புகுத்த முடியவில்லை. சங்கு

விளக்கிலும் கலை அம்சம் காணமுடியாதிருந் தது. ஆனால் மருத நிலத்தில் எழுந்த மண் விளக்கில் கலை அம்சம் நிரம்பப் புகுத்த முடிந்தது. மருத நிலத்தினர் ஆதிகாலத்தில் களிமண்ணால் கைவிளக்கைக் கண்டனர். அப் பால் மண்ணாற் செய்த உருவைச் சுட்டு அதை அழகு படுத்த முயன்று கைவிளக்கைக் கலை விளக்காய்க் கண்டனர். நாளடைவில் கை விளக்கு தூக்கு விளக்காகவும், நிலை விளக்காக வும் பரிணமித்தெழுந்தது. இந்த விளக்கு மர விளக்காக மலர்ந்திருக்கலாம் என்று சிலர் கூறுகின்றார்கள். ஆனால், அதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஆனால், மரத்தை விளக்கின் தண்டாகவும் பாதமாகவும் உபயோகப் படுத்தி இருக்கலாம். அதன் அகல் மண்ணாக இருக்கமுடியுமே யொழிய மரமாக இருக்க முடி யாது.

## உலோக விளக்குகள் :

கற்காலம் முடிந்து உலோக காலம் தோன்றி யதும், பல ஆயுதங்கள் செய்ய முடிந்தது. அதனால் கல்லிலும், மரத்திலும் உலோகத்திலும் பல அரிய வேலைப்பாடுகள் செய்ய முடிந்தது. திருவிளக்குகள் பல வகைகளாகச் செய்யப் பட்டன. பல்வேறு உபயோகத்திற்கும் பல வகையான திருவிளக்குகள் செய்யப்பட்டன. அவைகள் அனைத்திலும் அரும்பெரும் கலை அம்சங்கள் ஒளிருமாறு செய்யப்பட்டன.

திருவிளக்கில் கை விளக்கு, தூக்கு விளக்கு, குத்து விளக்கு, தூண் விளக்கு, கலங்கரை விளக்கு எனப் பலவகை விளக்குகள் தமிழகத் தில் துளிர்த்தன. பிற்காலத்தில் பாவை விளக்கும் தோன்றியது.

## கை விளக்குகள் :

கை விளக்கு பெரும்பாலும் வீடுகளிலே உப யோகிக்கப்படும். இது ஓரிடத்திலிருந்து மற் றோர் இடத்திற்கு எளிதாக எடுத்துச் செல்வதற் கேற்றதாய் செய்யப்பட்ட சிறு விளக்காகும். இது வெண்கலத்தால் செய்யப்பட்டிருக்கும். அதன் அடிப்பகுதி அரசிலைபோல் அமைந் திருக்கும். முன்பக்கம் சிறுத்து முனையாகவும் பின்பக்கம் அகன்றும் சுற்றிலும் எண்ணெய் நிற்பதற்கு ½ அல்லது ¾ அங்குல உயரமுள்ள தடுப்பும் அமைக்கப் பெற்றிருக்கும். பின்புறம் 3, 4 அங்குல உயரத்தில் பிறை வடிவமான அமைப்பு இருக்கும். இது கையினால் விளக்கைத் தூக்கிச் செல்வதற்கும் விளக்கில் சமயச் சின்னங் கள் பொறிப்பதற்கும் உரிய இடமாகச் செய்யப் பட்டுள்ளது. இது கோயிலில் திருஉருவங்களைச் சுற்றி நிற்கும் திருவாசிபோல் திகழும்.

விளக்கின் பின்புறம் காணப்படும் கைப்பிடி யில்—அதாவது திருவாசி போன்ற அமைப்பின் நடுவில் கணபதி, திருமாள், திருமகள், நாகர், சிலுவை, முஸ்லிம்களின் இளம்பிறை உருவங் களும் அமைக்கப்பெற்றுள்ளன. இஃதன்றி இதைச் சுற்றிப் பல கொடி செடி மலர்கள் அழ குற அமைக்கப்பட்டும் இருக்கும். இத்திரு விளக்கில் பலப் பல தெய்வ உருவங்களும் சமயச் சின்னங்களும் தாராளமாகக் காணலாம். இஃதன்றிக் கை விளக்கு பாண்டிய நாட்டில் ஒரு விதமாகவும் சோழ நாட்டில் மற்றொரு விதமாக வும் சேர நாட்டில் பிறிதோர் விதமாகவும் இருக் கும். ஏன்? ஊருக்கு ஊர் மாறுபட்டும் இருக்க லாம் என்பது எனது எண்ணம். ஒன்றிற் கொன்று சிற்சில வேற்றுமைகள் உடையதாக வாவது இருக்கும்.

## குத்து விளக்குகள் :

முற்காலத்தில் நீண்ட விளக்குகள் கல்லிலும் இரும்பிலும், மரத்தண்டின்மீது இரும்பு அகல் பொருத்தியோ செய்யப்பட்டன. அவை களுக்குப் பாதங்கள் இல்லாதிருந்தன. அடிப் பகுதி கூரியதாக இருந்ததால் மண்ணில் குத்தி நாட்டினர். குத்தும் விளக்காதலால் குத்து விளக்கு எனப்பட்டது. திருவிளக்குகளில் மக்களைப் பெரிதும் கவர்ந்துள்ளது இந்தக் குத்துவிளக்கே யாகும். இந்தக் குத்துவிளக்கு பாதம் தண்டு, அகல், உச்சி என நான்கு பகுதி யாகப் பிரிக்கப்பட்டுள்ளது. பல விளக்குகள், இவ்வுறுப்புகள் தனித்தனியாகச் செய்யப்பட்டு இணைக்கப்பட்டவைகளாய் இருக்கின்றன. இது மக்களுக்கு மிக வசதியாக இருக்கிறது. இந்த இணைப்புப் பகுதிகள் இரண்டாகவோ மூன்றா கவோ, நாலாகவோ இருக்கின்றன. விளக்கை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டு போகவும் எளிதாக இவைகளைப் பிரித்துச் சுத்தம் செய்யவும் முடிகிறது.

மின்விளக்குகள் வந்தபின் கைவிளக்கு தூக்கு விளக்குப் போன்றவைகள் முற்றிலும் மறைந்து போய்விட்டன. என்றாலும், குத்துவிளக்குகள் மங்காது தமிழர்களின் ஒவ்வொரு வீட்டிலும் சுடர்விட்டு ஒளிவீசிக் கொண்டிருக்கின்றன. இவ்விளக்கை விளக்கு நாச்சியாராக—தீபலட்சுமி யாக—ஒவ்வொரு பெண் மகளும் போற்றி வருவ தால் இவ்விளக்கு தமிழர்கள் வீட்டில் நிலையான இடத்தைப் பெற்றுக்கொண்டது. குத்துவிளக்கு கள் பல பெயர்களால் உச்சியில் பலவித உரு

வங்கள் வைத்துச் செய்யப்பட்டுள்ளன. அவை களின் பெயர்கள் அடியில் வருமாறு :

1. சந்திரகாந்த விளக்கு
2. அன்னவிளக்கு (ஓதிம விளக்கு)
3. கிள்ளை விளக்கு
4. மயில் விளக்கு
5. குயில் விளக்கு
6. நாகர் விளக்கு
7. கிளை விளக்கு
8. கம்பி விளக்கு
9. காய் விளக்கு
10. தண்டு விளக்கு
11. சிலை விளக்கு
12. குருவி விளக்கு
13. அகல் விளக்கு
14. நிலை விளக்கு
15. புருஷாமிருக விளக்கு
16. ஓதிமக் கிளை விளக்கு
17. முக்கிளை விளக்கு
18. காமாட்சி விளக்கு
19. மணி விளக்கு
20. மாயோன் விளக்கு
21. ஏழுதலை நாக விளக்கு
22. காமதேனு விளக்கு
23. சரோருக விளக்கு
24. மங்கல விளக்கு
25. பத்மாசன முருகன் விளக்கு
26. பதும விளக்கு
27. கஜலட்சுமி விளக்கு
28. சந்நிதி விளக்கு
29. கின்னரி விளக்கு
30. கிண்கிணி விளக்கு
31. கன்னி விளக்கு
32. காமன் விளக்கு
33. முக்கிளை விளக்கு
34. திருமண விளக்கு
35. தாரா விளக்கு
36. ஈழச்சியல் விளக்கு
37. மலையாண்சியல் விளக்கு
38. அரைதலை விளக்கு
39. சோழியச்சியல விளக்கு
40. ஆரக்குட விளக்கு
41. அனந்தலை விளக்கு
42. எரிக்கடை விளக்கு
43. பகாவோர் விளக்கு
44. கைகவினை விளக்கு
45. ஊழ்உறு விளக்கு
46. குடக்கால் விளக்கு
47. கடைக்கெழு விளக்கு
48. மீன்திமில் விளக்கு
49. ஒழியா விளக்கு
50. காவலர் விளக்கு
51. மான விளக்கு

இவ்விளக்குகளிற் சிலவைகள் வீடுகளில் உபயோகிக்கப்படுகின்றன. பெரும்பாலான கோயில்களில் உபயோகிக்கப்படுகின்றன. நமது பழம் பெரும் சாசனங்களி லெல்லாம் இப்பெயர்கள் காணப்படுகின்றன. இந்தக் குத்துவிளக்குகள் கோயில் விளக்கென்றும் இல் விளக்கென்றும் பிரித்துக் கூறப்படும். கோயில் விளக்குகள் பெரும்பாலும் மேலே அன்னம், மயில், கிளி, புருஷா மிருகம் போன்ற உருவங்களையுடைய தாயும் பெரிதாயும் இருக்கின்றன. பாதம், தண்டு, அகல் உச்சி முதலிய பகுதிகள் பல்வேறு சிற்ப வேலைப்பாடுகளை யுடையதாய் விளங்குகின்றன. இவைகளில் அன்ன விளக்கு 2000 ஆண்டுகளுக்கு முன் உரோம் நாட்டிலிருந்து இங்கு கொண்டுவரப்பெற்று அப்பால் அது தமிழ்ப் பண்பாட்டிற்கேற்ப மறுமலர்ச்சி பெற்றுள்ளது என்பதற்கு எண்ணற்ற சங்க இலக்கியச் சான்றுகள் உண்டு என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

குத்து விளக்குகளின் அகல் கீழே இறக்கவும் அவசியமானால் மேலே ஏற்றவும் கூடியதாய் உள்ளன. தமிழகத்தில் 1000 விதமான குத்து விளக்குகள் இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

**கிளை விளக்குகள் :**

குத்து விளக்குகள் பல கிளைகள் உள்ளதாய் அமைக்கப்பட்டுள்ளன. திருமண விளக்கு என்னும் கிளை விளக்கு 5 அடி உயரம் உள்ளது. நடுத்தண்டிலிருந்து கிளை ஒன்றரை அடி நீண்டிருக்கும் கிளைகள் மூன்று 4 அடுக்குகளாக பல அகல்கள் சங்கிலிகளால் தொங்கவிடப்பட்டுள்ளன. இவ்விளக்கிற்கு 300க்கு மேற்பட்ட திரிகள் தேவைப்படுகின்றன. இதில் 70க்கு மேற்பட்ட அகல்கள் உள்ள பல அகல்கள் சங்கிலி கோத்து தொங்கவிடப்பட்டுள்ளன. இதில் உச்சியில் அன்னம், மயில், கிளி, புருஷா மிருகம் போன்ற உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

**பாவை விளக்குகள் :**

நமது நாட்டு விளக்குகளில் பாவை விளக்கு தான் அழகு மிக்கவை. கலைச்சிறப்பு ஒளிர்பவை. இப்பாவை விளக்கைத்தான் தீபலட்சுமி விளக்கு என்றும் திருவிளக்கு நாச்சியார் என்

றும் கூறப்படும். இது பொருத்தமான பெயரே யாகும்.

இந்தப் பாவை விளக்கு கிறிஸ்தவ சகாப்தத் தின் ஆரம்பத்தில் உரோம நாட்டினின்று இங்கு கொண்டுவரப்பட்டது என்று கூறப்படுகிறது. இதற்குச் சங்க இலக்கியச் சான்றுகளும் தரப் பட்டுள்ளன. முற்காலத்தில் உரோம் நாட்டி னின்று கொண்டுவரப்பட்ட பாவை விளக்குகளை முன்வைத்து அப்படியே இங்கு வார்த்துவிடாது, முற்றிலும் மாற்றம் செய்து தமிழர் பண்பாட்டிற் கேற்ப வார்க்கப்பெற்றது.*

பாவை விளக்குகள் யவன நாட்டில் அழகுக் காக வீடுகளில் வைக்கப்படும் விளக்காக இருந் தன. ஆனால், தமிழ் நாட்டில் இவ்விளக்குகள் அழகுக்காகவும், வெளிச்சத்திற்காக, புண்ணியம் பெறுவதற்காகவும் திருக்கோயில்களில் திருவுண் ணாழிகையில் அமர்ந்திருக்கும் இறைவனுடைய அருகில் இடம் பெற்றுள்ளன. இது பாவை விளக்கைச் செய்து வைக்கும் செல்வர்களின் உருவ அமைப்பைப் பெற்றிருக்கும். பண்டைக் காலத்தில் இவைகள் பெண் உருவில் அமைக்க பட்டன. அப்பால் ஆண் உருவிலும் அமைக்கப் பட்டன.

இவைகளில் காணப்படும் அணிகளும், ஆடை களும் ஒவ்வொரு நூற்றாண்டிலும் தமிழ் நாட் டின் நாகரிக வரலாற்றைப் புலப்படுத்துவதாக மிளிர்கின்றன. அதில் ஒளிரும் அமைப்பும் அழகும் பண்பும் பொலிவும் நமது சிற்பக் கலை யின் சிறப்பிற்குச் சீரிய எடுத்துக்காட்டாகும்.

* "யவன ரியற்றிய வினைமாண்பாவை நெய்சொரிந்து
பருஉத் திரிகொள் இய குருஉத்தலை நிமிரெரி"
—நெடுநல்வாடை

"பாவை விளக்கிற் பருஉச் சுடர் அழல"
—முல்லைப்பாட்டு

யவன நாட்டுப் பாவை விளக்கிற்கும் தமிழ் நாட்டுத் தீப லட்சுமி விளக்கிற்கும் எவ்விதத் தொடர்பும் கூறமுடியாது. இரு விளக்குகளை யும் அருகருகே வைத்துப் பார்த்தால்—ஆராய்ந் துணர்ந்தால் எனது முடிவு சரியெனப்புலப்படும் என்று விளக்கு ஆராய்ச்சி அறிஞர் ஓ. சி. கங்குலி கூறியுள்ளார்.*

பாவை விளக்குகளை இந்தியாவில் எங்கும் பார்க்கலாம். ஆனால் அனைத்தையும் விடத் தமிழக விளக்குகள் தனிச்சிறப்புடையவை.

### தூக்கு விளக்குகள் :

தூக்கு விளக்கு, குத்து விளக்கின் மேற்பகுதி போல் காணப்படும்; ஆனால் தூக்கு விளக்கின் உச்சியில் சங்கிலி ஒன்று புதிதாக மாட்டப் பட்டிருக்கும். தூக்கு விளக்கின் இனத்தைச் சேர்ந்ததே தூண்டாமணி விளக்கு, நந்தா விளக்கு (நொந்தா விளக்கு) ஆகியவைகளெல் லாம். சில விளக்குகளின் உச்சியில் அன்னம் வைத்து அன்னத்தின் முதுகில் சங்கிலி பொருத் தப்பட்டிருக்கும். இந்தச் சங்கிலியின் நுனியில் கூரையில் மாட்டுவதற்கு என்று ஒரு கொக்கி மாட்டப்பட்டிருக்கும்.

தூக்கு விளக்குகளை பெரும்பாலும் வீடு களிலும் கடைகளிலும் பயன்படுத்துகிறார்கள். ஒரு சில இடங்களில் கோயில்களிலும் பயன் படுத்துகிறார்கள். நந்தாவிளக்கு — அதாவது சாசனங்களில் காணப்படும் நொந்தாவிளக்கு— கோயில்களிலும்—ஏன்? வீடுகளிலும்—தெய்வ உருவங்களின் அருகில் இரவும் பகலும் எரிந்து கொண்டிருக்கும்.

நந்தா விளக்கிற்கு அடியில் எண்ணெய் நிற்கும் கிண்ணமும் நாக்கும் இருக்கும். மேலே எண்ணெய் இருக்கும் கலயம் (Tank) இருக்கும். இந்தப் பெரும் கலயத்திலுள்ள சிறு துவாரத்தின் வழியாகக் கொஞ்சம் கொஞ்சமாக எண்ணெய் அகலுக்கு வரும். கலயத்திற்கு மேலே சங்கிலி யும் அதன்மீது அன்னம் அல்லது கிளி போன்ற உருவமும் அதன் மீது சங்கிலியும் நுனியில் கொக்கியும் இருக்கும். இஃதன்றி, கலயத்தின் மீது அன்னமும் இடம் பெறச் செய்து, அதன் மேல் சங்கிலி இணைக்கப்பட்டும் இருக்கும். அன்னம் கீழ் கோழி போன்ற உருவங்கள் வைக்கப்படாத நந்தாவிளக்கும் உண்டு. சாவகத் தில் நந்தாவிளக்கில் கின்னரி இடம் பெற் றுள்ளது. உண்ணாழிகையின் வாயிலில் தூக்கு விளக்கு வகையைச் சார்ந்த சரவிளக்கும் உண்டு. தூக்கு விளக்கிலும் நந்தாவிளக்கிலும் பல வகைகள் உள்ளன.

### தூண் விளக்குகள் :

குத்து விளக்கின் வளர்ச்சியே தூண்விளக் காகும். குத்து விளக்குகள் வீடுகளில் சாதாரண மாக மூன்றடி வரை இருக்கும். கோயில்களில் ஐந்தடிக்கும் மேலும் இருப்பதுண்டு. மலைப் பிரதேசங்களில் உள்ள கோயில்களில் 20 அடி உயரம் உள்ளதாய் அடுக்கடுக்காய் பாதத்திற்கு மேலே 12 பெரிய அகல்கள் உள்ள விளக்குகள் உண்டு. எண்ணெய் வார்க்கவும் திரியிடவும் விளக்கேற்றவும் தூண் விளக்கருகே அமைந் திருக்கும் முக்கோண வடிவான சட்டத்தில் ஏணி போன்ற உருவம் ஒன்று இருக்கிறது.

* South Indian lamps (article)—O. C.-Gangoly—1916.

முற்காலக் கலங்கரை விளக்கும் தூண் விளக்கு இனத்தைச் சேர்ந்ததேயாகும். தமிழ் நாட்டுத் திருக்கோயில்களில் ஏழு தட்டுகள் உள்ள சுமார் 8 அடி உயரமான தூண் விளக்குகளும் உள்ளன.

## தீபச் சட்ட விளக்கு :

கேரளாவில் கோயில்களைச் சுற்றி வரிசை வரிசையாக மரச்சட்டம் அடிக்கப்பட்டு இடையே ஒரு அடி இடம் விட்டு, குறுக்காக ஒரு சட்டமும் அடித்து இடையே இரும்பால் செய்த விளக்குகள் மாட்டப்படும். இதில் சுமார் இலட்ச விளக்குகள் இருக்கும். இதனைக் கேரளாவில் பெரிதும் காணலாம். இலட்ச தீபத்தின் போது இந்தத் தீபச்சட்ட விளக்குகள் அனைத்தும் ஏற்றப்படும். இது கண்கொள்ளாக் காட்சியாய்க் கவின் பெற்றிலங்கும். கோயிலில் தூண் விளக்கு ஏற்றப் பட்டதும் அதன் வெளிச்சத்தைச் சுற்றிலும் வாழும் மக்கள் தெரிந்து கோயிலை நோக்கி வர எளிதாக இருக்கிறது. கொடி மரம் போல் நிற்கும் தூண்விளக்கு, கன்னியாகுமரி மாவட்டத்தையன்றி—தமிழகத்தில் எங்கும் காண முடியாது. கலங்கரை விளக்கும் தூண்விளக்கில் ஒருவகையாகக் கருத முடியும்.

## முடிவுரை :

தமிழகத்தில் மின் விளக்குகள் எழுந்தது. திருவிளக்குகள் குறைந்து வருகின்றன. ஆனால் கைவிளக்குத்தான் குறைந்து வருகின்றனவே யொழிய, குத்து விளக்குகளோ, தூக்கு விளக்குகளோ, நந்தா விளக்குகளோ சரவிளக்குகளோ தூண்விளக்குகளோ குறைந்துவிடவும் இல்லை ; மறைந்து விடவும் இல்லை. ஆனால், பெருகி வருகிறது. திருவிளக்குகளின் எண்ணிக்கைகள் நாட்டில் வந்தாலும் அதை உருவாக்கும் தொழிலாளர்களின் தொகை குன்றி வருகிறது. அரசாங்கம் ஆதரவளித்தால், தொழிலாளர்கள் பெருகுவர் ; திருவிளக்கின் எண்ணிக்கைகள் பெருகும். அழகு மிக்க அரிய விளக்குகள் பல தோன்றும்.



# தமிழகமும் பௌத்தமும்

இரா. நாகசாமி

தமிழகத்தில் கடைச் சங்க காலத்தி லிருந்தே பௌத்த மதம் பரவியிருந்ததைச் சங்க நூல்களி லிருந்து அறியலாம். மதுரையில் பௌத்தப் பள்ளி இருந்ததை மதுரைக் காஞ்சி குறிப்பதி லிருந்து இது நன்கு விளங்கும்.

மௌரியப் பேரரசன் அசோகன் பௌத்த மதத்தைப் பரப்பத் தன் மகன் மகிந்தனை தென்னாடுகளுக்கு அனுப்பினான். மகிந்தன் தமிழகத்திலும் ஈழத்திலும், பௌத்த மதம் பரவ வழி வகுத்தான். ஈழ அரச குலத்தைச் சேர்ந்த 'மகா அரிட்டன்' என்பவன் இதற்கு உறுதுணை யாக இருந்தான். மகிந்தன் ஈழத்துக்குச் செல்லும் வழியில் காவிரிப்பட்டினத்தில் ஏழு விஹாரங்களை எழுப்பினான் என்று அறிகிறோம். கி. பி. 7ஆம் நூற்றாண்டில் தமிழகத்திற்கு வந்த சீன யாத்திரிகர் ஹுவான் சீவாங் என்பவர் மதுரைக் கருகில் அசோகரால் கட்டப்பட்ட விஹாரத்தையும், பள்ளியையும் கண்டதாகக் குறித்திருக்கிறார். அசோகன் காஞ்சியில் ஒரு ஸ்தூபம் எழுப்பியதையும் அறிவோம்.

கி. மு. 3ஆம் நூற்றாண்டிலிருந்து கி. பி. 14 ஆம் நூற்றாண்டு வரை, புத்த மதம் தமிழகத்தில் சிறந்திருந்தது என்பதற்குக் கல்வெட்டுக்கள் சான்று கூறுகின்றன. காஞ்சி, காவிரிப் பட்டினம், நாகப்பட்டினம், மதுரை, வஞ்சி முதலிய இடங்களில் பௌத்த சமயம் செழித்து விளங்கியது. சிலப்பதிகாரம், மணிமேகலை வளையாபதி, குண்டலகேசி முதலிய தமிழ் நூல் களிலிருந்து தமிழகத்தில் பௌத்த சமயம் வகித்த நிலையை நன்கு உணரலாம். சிறப்பாக, மணிமேகலை, பௌத்த மதத்தின் சிறப்பை எடுத்துரைக்கும் ஒரு காப்பியமாகும். அந்நூலி லிருந்து அரவண அடிகள் என்ற பெரியார் பூம்புகார் நகரில் பௌத்த சங்கத்தின் தலைவரா யிருந்து, பின்னர் வஞ்சிக்குச் சென்றார் என்றும் பின்னர் காஞ்சியில் நிர்வாணமடைந்தார் என்றும் அறிகிறோம். கோவலன் மகளான மணிமேகலை பௌத்த மதத்திற்குச் செய்த தொண்டு உலகமறியும்.

இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் காலத் தில் கோவலனின் முன்னோர் ஒருவர் காஞ்சியில், ஒரு பௌத்த சேத்தியத்தைக் கட்டினார். காஞ்சியில், இளங்கிள்ளி என்ற சோழமன்னன் ஒரு சேத்தியம் எழுப்பினான். சேத்தியம் என்பது பௌத்த ஸ்தூபத்தைக் குறிக்கும். நாதகுத்தர் என்ற பெரியார் குண்டலகேசி என்ற நூலை இயற்றியுள்ளார். கி. பி. 4ஆம் நூற்றாண்டில் சோழநாடு களவரர் வசமாயிற்று. பூம்புகார்ப் பகுதி அச்சுதவிக்காந்தன் என்ற களவர மன்னனின் ஆளுகையில் இருந்தது. அக்காலத்தில் புத்த தத்தர் என்ற பெரியார் அங்கு கணதாசன் என்பவரால் கட்டப்பட்ட விஹாரத்தில் தங்கி அபிதம்மாவதாரம் என்ற நூலை இயற்றியுள்ளார். நாகப்பட்டினத்துக் கருகில் பூதமங்கலம் என்ற இடத்தும், ஒரு விஹாரம் எழுப்பப்பட்டது. அதிலும், இப்பெரி யார் தங்கி, பல பௌத்த நூல்களை இயற்றி யுள்ளார். நியாயப்பிரவேசம் என்ற நியாய நூலை இயற்றிய 'திண்ணாகர்' என்ற புகழ் பெற்ற பௌத்தப் பெரியார் காஞ்சியில் தோன்றி யவர். இவருடைய பல நூல்கள் சீன மொழியில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

காஞ்சியைச் சேர்ந்த ஓர் உயர் அதிகாரியின் மகனாகப் பிறந்த தம்மபாலர் என்ற பெரியார் பௌத்த மதத்தில் சிறப்புற்ற நாளந்தா பல்கலைக் கழகத்துத் தலைவராகப் பல ஆண்டுகள் பணி புரிந்தார். கி. பி. 6ஆம் நூற்றாண்டின் தொடக் கத்தில் காஞ்சியில் அரச குலத்தைச் சேர்ந்த போதிதம்மர் என்ற பெரியார் 'தியான மார்க்கம்' என்ற பௌத்த வழியைத் தோற்றுவித்தார். அப்பெரியவரே சீன தேசத்திற்குச் சென்று இவ்வழியை அந்நாட்டில் நிலைநிறுத்தினார். அதையே 'சன்மதம்' என்று சீனர்கள் அழைத் தனர். சீன மக்களால் அவர் கடவுளாகவே போற்றப்பட்டார். சீனத்திலிருந்து இம்மதம் ஜப்பான் நாட்டிற்குப் பரவி அங்கு உலகம் புகழும் 'சென்மதம்' எனத் திகழ்ந்தது.

பல்லவ மன்னனான இரண்டாம் ராஜசிம்மன்

காலத்தில், நாகப்பட்டினத்தில் ஒரு சீன மன்னனுல் பௌத்த விஹாரம் ஒன்று கட்டப் பட்டது. ராஜாராஜப்பெருந்தகையின் காலத்தில் நாகப்பட்டினத்தில், கடாரத்து அரசன் ஸ்ரீமாற விஜயோத்துங்கன் என்ற மன்னன், தன் தந்தையின் பெயரால் "சூடாமணி வர்ம விஹாரம்" என்ற பௌத்த விஹாரத்தை எடுப்பித்து அதற்கு ஏராளமாக, பொன் நிவந்த மாக வழங்கினன். பின்னர் அதே மன்னன் இராஜராஜப் பெரும்பள்ளி, இராஜேந்திரப் பெரும்பள்ளி என இரண்டு பெரும் பள்ளிகளை அங்கு எழுப்பியதாக லெய்டன் செப்புப் பட்டயங் களிலிருந்து தெரியவருகிறது. குலோத்துங்கச் சோழன் இப்பள்ளிகளுக்கு நிலம் தானமாக அளித்திருக்கிறன்.

கி. பி. 11ஆம் நூற்ருண்டில் வீரராஜேந்திரன் காலத்தில் புத்தமித்திரன் என்ற பௌத்தப் பெரியார் வீரசோழியம் என்ற இலக்கண நூலை இயற்றியுள்ளார். கி. பி. 14ஆம் நூற்ருண்டில் பர்மா தேசத்துப் பெகு என்ற பகுதியில் கிடைத் துள்ள கல்வெட்டு ஒன்று, தமிழகத்தில் வாழ்ந்த காத்யாயனர் முதலிய சிறந்த பௌத்தப் பெரியார்களைக் குறிக்கிறது. தமிழகத்தில் கிடைத்துள்ள பல கல்வெட்டுகள், பௌத்தப் பள்ளிகளுக்கு அளித்த பலவகை நிவந்தங்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றன.

இதுகாறும் நடந்துள்ள அகழ்வாராய்ச்சிகளி லிருந்து தமிழகத்தில் பௌத்த சமயம் வகித்த சிறந்த நிலை நன்கு புலனுகிறது. பாண்டிச் சேரிக்கு அருகில், அருகன்மேடு (அரிக்கமேடு என்ற இடத்தில் "ஹேதர்மா ஹேது பிரபவ" என்று தொடங்கும் பௌத்த வாக்கியங்களைக் கொண்ட முத்திரை கிடைத்துள்ளது. நாகப் பட்டினத்தில் நூற்றுக்கணக்கான பௌத்தச் செப்புப் படிமங்கள் கிடைத்துள்ளன. மிகவும் குறிப்பிடத்தக்கது பூம்புகாரில் சமீபத்தில் நடந்த அகழ்வாராய்ச்சியாகும். அங்கு ஒரு பெரும் பௌத்தப் பள்ளி, பூமிக்கடியில் புதையுண் டிருந்தது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. செம் பாலான புத்தர் படிமமும், அமராவதி, நாகார்ஜுன கொண்டா முதலிய பகுதிகளில் காணப்படும் ஒருவகைப் பளிங்குக்கல்லால் ஆன புத்த பாதம் (புத்தபீடிகை) ஒன்றும் அங்கிருந்து கிடைத்துள்ளது.

இவை தவிர, தமிழகத்தில் ஆங்காங்கே இன்றும் காணப்படும் ஏராளமாக புத்த சிலைகள், பௌத்த சமயம் தமிழகமெங்கும் பரவி நின்று சிறந்த பணிபுரிந்துள்ளமையையும் புலப்படுத்து கின்றன. தமிழகத்தில் தோன்றிய பல பௌத்தப் பெரியார்கள், தமிழிலக்கண, இலக் கியங்களையும், தமிழ்க் கலைகளையும் வளமாக்கி யுள்ளனர். தமிழ்த்தாயின் மக்களாய்த் தோன் றிய பல பெரியோர்கள் நாளந்தா பல்கலைக் கழகத்தின் தலைவர்களாயிருந்தும், சீனம், சாவகம், கடாரம், ஈழம் முதலிய பல நாடு களுக்கும் சென்று அரும்பணி ஆற்றியும் தமிழ்த் தாய்க்குப் பெரும் புகழ் தேடித் தந் துள்ளனர்.



# தமிழகத்தில் முருகன்

பேராசிரியர் மு. க. தங்கவேலன்

"சேயோன் மேய மைவரை உலகமும்" என்று பண்டைத் தமிழ் இலக்கிய மரபை வகுத்துரைக்கும் தொல்காப்பியத் தொடர் தமிழகத்தில் முருகன் வழிபாட்டின் தொன்மை நிலைக்கு ஓர் எல்லைக் கல்லாக நிலவுகின்றது. முருகன் மழைக்குரிய தெய்வம் ஆதலின், "மேகம் சூழ்ந்த மலையுலகம்" என்ற கருத்தில் "மைவரை உலகம்" என்று தொல்காப்பியர் விதந்துரைத்தனர் என்பது நச்சினார்க்கினியர் தரும் குறிப்புரை. முருகப் பெருமானின் பன்னிரு திருக்கரங்களில் ஒன்று "நீல நிற விசும்பில் மலி துளி பொழிய" அமைந்ததாகக் கூறும் திருமுருகாற்றுப்படையும் இக்கருத்தை வலியுறுத்தும். மழை வேண்டும் காலத்தில் மலைக் குறவர்கள் குறிஞ்சிப் பண் பாடி, குரவைக் கூத்தாடி, முருகனுக்கு வழிபாடு இயற்றுவர் என்ற குறிப்பு சங்கப் பாடல்களில் பரவிக் கிடக்கின்றது.

முருகனுக்கு வழிபாடு இயற்றுங்கால் 'வேலன்' எனப்படும் பூசாரி தெய்வ மருள் கொண்டு ஆடத்தொடங்குவன். தெய்வவெறி ஏறப் பெற்று ஆடுதலின், இவ்வாடல் "வெறியாடல்" எனப் படும். இதனைத் தொடர்ந்து குன்றத்திலுள் ளோர் கைப்பிணைத்துக் கூடியாடுங்கால், இது "குன்றக் குரவை" எனப்படும். மகளிர் வள்ளியாகத் தம்மை ஒப்பனை செய்துகொண்டு ஆடுங்கால், இது "வள்ளிக்கூத்து" எனவும் பெயர்பெறும். முருகன் சூரபன்மனோடு பொருத போர்க்களத்தில் துடி கொட்டியாடிய நிகழ்ச்சி "துடிக்கூத்து" எனவும், குடை பின்தாழ ஆடிய ஆடல் "குடைக் கூத்து" எனவும் ஆடல் வகைகளுள் இடம் பெற்றன.

வெறியாடல் புரியும் "வேலன்" காந்தள் மலரைத் தலையில் சூடிக்கொண்டு ஆடுதல் மரபு. "வேலன் வெறியாட்டயர்ந்த காந்தள்" என்று இத்துறையைச் சுட்டுவர் தொல்காப்பியர்.

"சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்"

என்று முருகப் பெருமானின் தலைக்கோலத்தை நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் சித்திரிப்பது தெய்வ வடிவ இலக்கணம் கூறும் "தியான சூத்திரம்" போல் திகழ்கின்றது. "காந்தள்" முருகப்பெருமானின் அடையாளப் பூ என்று நச்சினார்க்கினியர் திருமுருகாற்றுப்படை உரை யில் குறிப்பதும் இங்கு நோக்கத்தக்கது. இக்காந்தள் 'உழிஞை'த் திணையில் பழந் தமிழரின் போர் நெறிகளை வகுத்துரைக்கும் புறப் பொருள் துறைகளுள் ஒன்றாக இடம் பெற்றுள்ளது. போர்க்கடவுளாம் முருகனுக் குரியது என்ற தொடர்பு பற்றியேயாம்.

"வெட்சி", "கடம்பு" முதலிய மலர்களும் முருகனுக்கு உகந்தவை. முருகன் போர்க் கடவுளாகக் கருதப் பெற்றதால், போர் நெறிகளை வகுத்துரைக்கும் புறப் பொருள் திணைகளுள் முதலாவது "வெட்சி" என்ற அடையாளப் பூவால் சுட்டப்பெற்றது. இத்திணையில் பகை வரின் பசுக் கூட்டங்களைக் கவர்ந்து வெற்றி பெற்று வந்த போர்வீரர்கள் "வெறியாடல்" நிகழ்த்தித் தமது நன்றிக் கடனை முருகக் கடவுளுக்குச் செலுத்துதல் மரபு. கடம்ப மலர்களைச் சூடுதலில் விருப்பமுள்ளவனைப் பூத்துக் குலுங்கும் கடம்ப மரத்தின் அடியில் உறைவான் முருகன். இக்காரணத்தால் முருகன் "கடம்பன்" என்றும் வழங்கப்பட்டான். பூத்த கடம்ப மரத்தையே முருகனாக எண்ணி வழிபாடு செய்தல் பண்டைய வழக்கம் எனத் தெரிகிறது.

பருவ மகளிர் காதல் மயக்கம் கொண்ட காலத்து அது முருகனால் விளைந்தது என்று கூறி, அதைத் தணிக்கும் நிமித்தமாக "வெறியாடல்" தொடங்குவது பண்டைய வழக்கம். வேட்கையைத் தூண்டுதலின் "வேள்" என்ற பெயரால் முருகன் சுட்டப் பெற்றான். பிற்காலத்தில் மன்மதன் காதலின் தெய்வமாகச் சிறப்புநிலை பெற்று 'வேள்' என்ற பெயரால் வழங்கப்பெற்ற காலை, வேறுபாடு கருதி மன்மதன் "கருவேள்" என்றும், முருகன் "செவ்வேள்" என்றும் அடைமொழி பெற்று வழங்கப்பெற்றனர்.

வெறியாடுங்கால், முருகனுக்குச் செம்மறி யாட்டைப் பலியிட்டுச் செங்குருதியில் அளைந்த தினையரிசியையும், மலரையும் படையலாக வைத்து வழிபடுதல் பண்டை வழக்கு. முருகனை "கொற்றவை சிறுவன்" என்றும், "தானைத் தலைவன்" என்றும் போர்க் கடவுள் நிலையில் வைத்துத் திருமுருகாற்றுப்படை சுட்டுதலால் குருதிப் பலியைப் போர்க்கடவுளாம் முருக னுக்குப் பண்டைத் தமிழர் ஏற்புடைத் தாக்கினர்.

பழந்தமிழர், நிலத்தில் விளையும் முதல் விளைவை முருகனுக்கு என்று நேர்ந்து அதனை அவனுக்குப் படைத்த பின்னரே விளைபயனை நுகர்தல் வழக்கம். 'குறுந்தொகை'யில் காணும் ஒரு காட்சியை இங்குக் குறிப்பிடலாம். தினைக் கொல்லையில் தோன்றிய முதற் கதிரை முருக னுக்கு நேர்ந்தமை அறியாது தன் அலகால் கொத்திய மயில் ஒன்று ஆடத் தொடங்கியது. தெய்வ மருள் ஏறப்பெற்ற காலை மயில் களிநடம் புரியும் என்று கருதுவது பழந்தமிழர் நம்பிக்கை என்பது குறிஞ்சிப் பாட்டிலும் சுட்டப் பெறுகின்றது. "பொதினி" (பழநி) மலையைச் சார்ந்த ஆவினன் குடியின் தலைவன் "பேகன்" தம் விலையுயர்ந்த மேலாடையினைக் களிநடம் புரிந்த மயிலுக்குக் காணிக்கையாக ஈந்ததும் பழந் தமிழ் நம்பிக்கை வழிக் கனிந்த அவ்வள்ளலது உளக்காட்சியின் விளைவே என்று உய்த்துணரவும் இடமுண்டு. கடையெழு வள்ளல் களுள் தம் விலை மதிப்பற்ற கலிங்கத்தை "ஆலமர் செல்வருக்கு" வழங்கியதால் சிறப்புற்ற "ஆய்" போலும், முருகப் பெருமான் ஊர்திக்குப் "பக்திக் கொடை" நேர்ந்தான் ஆவினன்குடித் தலைவன் பேகன் என்பதில் இழுக்கு ஒன்றும் நிகழ்தற்கில்லை.

மிகப் பண்டைக் காலத்தில் சேவற்கொடியும், வேற்படையும் அடையாளமாக நின்று, நெய்யும் ஐயவியும் பூசப்பெற்று "வேலன்", "கட்டு விச்சி", "கணிகாலி", "அகவல் மகள்" என்னும் பெயரால் நியமம் பூண்ட மலை நில மக்களால் வழிபாடு நிகழ்த்தப் பெற்றது.

முருகனின் திருக்கோலங்கள், திருக்கோயில் அமைப்பு முறைகள், வழிபாட்டு நெறிகள், ஊர்திகள், படைக்கலங்கள் இவற்றில் வளர்ந்த புதிய போக்குகளைத் திருமுருகாற்றுப்படையும், பரிபாடலும் தெளிவுறுத்துகின்றன. முருகன் வீற் றிருக்கும் கோயில்களை "ஆறுபடை வீடுகள்" என்று வகுத்து முருக வழிபாட்டு நெறியில் ஒரு புதுமையைக் காட்டுவது திருமுருகாற்றுப்படை. போர்க் கடவுளாக வீறு கொண்டு கற்பு மணப் பிராட்டியாம் தெய்வயானை அம்மையுடன் மணக்கோலத்தில் வீற்றிருந்து தேவமகளிரின் ஆடல் பாடல் வழிபாட்டில் அகமகிழ்ந்து அருட் காட்சி வழங்கும் முதல் படைவீடு திருப்பரங் குன்றம் ஆகும்.

முழுமுதற் பரம்பொருளாகி முருகன் உலகம் உய்யும் திருக்குறிப்புடன் அறுவகைத் தொழிலை முறையே மேற்கொண்ட ஆறு திருமுகமும், அவற்றிற்கு இயைந்த ஆறு இணைக்கரங்களும் தாங்கி திருச்சீரலைவாய் என்னும் திருச்செந் தூர்ப் பதியில் யானை ஊர்தியில் எழுந்தருளி யிருப்பது இரண்டாம் படைவீடு. முருகன் என்ற குறிஞ்சி நிலக் கடவுள் நில வரையறை யைக் கடந்து, வளர்ந்து, உயர்ந்து முழுமுதற் பரம்பொருளாகவே விரிந்து நிற்கும் நிலையை இங்கு திருமுருகாற்றுப்படை சுட்டுகின்றது. குறிஞ்சிக் கடவுள் நெய்தற் பகுதியிலும் திருக் கோயிற் கொண்டு தமிழ்நாடு முழுவதும் தலைமை பெறத் தொடங்கிய நிலையை இது உணர்த்துகின்றது.

முருகன் என்னும் முழுமுதற் கடவுள் கோலத்தில் பழந்தமிழர் கண்ட அறுவகைச் சிறப்பியல்புகளை இங்கு திருமுருகாற்றுப் படை சித்திரமாகத் தீட்டித் திகழ்கின்றது. ஆக்கல், அருளுதல், காத்தல், அறிவித்தல், அழித்தல், மறைத்தல் என்னும் முறையில் அண்டகோளங்களில் பல்கதிர் தோற்றுவித்து ஒளி வழங்குவதும் ஒரு முகம். அடியார்க்கு வரம் கொடுப்பது ஒரு முகம். வையத்து வளம் சுரக்க, வேள்வி காப்பது ஒரு முகம். மறைந்து கிடக்கும் நுண்பொருட்களைத் தெளிய ஞானம் வழங்குவது ஒரு முகம். தீய சக்திகளை அழிப்பது ஒரு முகம். களவு மணப்பிராட்டியாம் வள்ளியோடு நகையமர்ந்து ஆன்மாக்களைச் சுத்த மாயையில் ஆழ்த்தி புவன போகங்களைத் தருவது ஒரு முகம்.

மூன்றுவது படைவீடாகத் திருவாவினன்குடி திகழ்கின்றது. ஆணவ முனைப்பாற் சிறைப்பட்ட படைப்புக் கடவுட்கு விடுதலை பெறும் வேண்டு கோளை முன்னிட்டுக் கொண்டு தேவர் உலகமே முருகன் திருமுன் ஆவினன்குடியில் திரண்டு நிற்கின்றது. இப்பெருங் குழுவை ஆணவ முனைப்பு அற்ற முனிவரும், ஆனந்த வயப்பட்ட தெய்வ இசைபாலரும் தலைமை தாங்கி நடத்துவது குறிப்பிடத்தக்கது. அவர் பின்னே, சிவனும், மாலும், இந்திரனும், பிற தேவர்களும் தொடர்ந்து சென்று முருகன் திருமுன் குறை யிரந்து நிற்கின்றனர். அதற்கு இணங்கி அருள் வழங்கும் கோலத்தில் முருகன் வீற்றிருப்பது

திருவாவினன்குடி என்னும் தலம். இத்தலம் இன்று பழநிமலையின் அடிவாரத்தில் விளங்கும் திருக்கோயிலாகும். சங்க காலத்தில் மலையின் உச்சியில் வீற்றிருக்கும் முருகனைப் பற்றிய செய்தியும் குறிப்பாகக் கொள்ளக் கிடக்கின்றது.

"திருவேரகம்" என்னும் தலம் நான்காவது படைவீடாகும். குடிப் பிறப்பு, கல்வி கேள்வி ஒழுக்கங்களில் சிறந்த அந்தணர்கள் நாற்பத்தெட்டு ஆண்டுகள் இளமை (பிரமசரியம்) காத்து நீராடிய ஈராடையுடன் ஆறு எழுத்து மந்திரத்தை நாவசையும் அளவில் மெல்லப்பாடி, நறுமலர் தூவிப் புரியும் பூசனையை விரும்பும் நிலையில் முருகன் வீற்றிருக்கும் தலம் திருவேரகம் ஆகும். இது இக்காலத்தில் "சுவாமி மலை" என்று வழங்கும் சோழநாட்டுப் பதியே என்பது முருகனுல் திருவருட்புலமை பெற்ற அருணகிரிநாதரின் திருப்புகழிற் கண்ட துணிவாம். இத்திருப்பதி மலைநாட்டில் உள்ளது என்பது நச்சினுர்க்கினியர் கருத்து.

வழிபாட்டு நிலையில் ஆறு எழுத்து மந்திரமாகிய "சரவணபவ" என்னும் சடாட்சரத்தை உச்சரித்துப் பேறு பெறும் உண்முக நெறி இங்கு குறிப்பிடத்தக்கதாகும். "நமோ குமராய" என்பது ஆறெழுத்து மந்திரம் என்பது நச்சினர்க்கினியர் கொள்கை.

குறிஞ்சிக் கடவுளாகிய முருகன் கற்றவர்க்கே யன்றிக் கல்லார்க்கும் களிப்பூட்டும் கடவுளாய், குன்றிடந்தோறும் வெறியாடி நிற்கும் குறவர் வழிபாட்டில் கலந்துறையும் காட்சியைச் சித்திரிக்கும் நிலை "குன்றுதோருடல்" என்னும் ஐந்தாம் படைவீடாகும். இந்நிலையில் அடியொற்றியே "பலகுன்றிலும் அமர்ந்த பெருமாளே" "மலையாவையும் மேவிய தம்பிரானே" என்று அருணகிரியார் திருப்புகழிற் பாடிப் பரவுகின்றுர்.

ஆருவது படைவீடாகத் திகழ்வது "பழமுதிர் சோலை". இழும் என இழிதரும் அருவியின் பெரு வீழ்ச்சியில் முருகப் பெருமானின் திருவருள் வீழ்ச்சியைக் காட்டி நிற்கின்றது இத்தலம். சாவா மூவாப் பெருவாழ்வாகிய கந்தழியை நல்கி எங்கும் தானுகக் காணும் திருவருட்பயனைப் பரிசிலாக நல்குவது திருமுருகாற்றுப்படையின் குறிக்கோள். முருக வழிபாட்டின் குறிக்கோள் இவ்வாருவது படைவீட்டில் சுட்டிக் கூறப்படுகின்றது.

"சேயோன்", "அறுவர் பயந்த ஆறமர் செல்வன்", "ஆல்கெழு கடவுள் புதல்வன்", "மலைமகள் மகன்", "வெற்றி வெல் போர்க் கொற்றவை சிறுவன்", "பழையோள் குழவி", "வானேர் வணங்கு வில் தானைத் தலைவன்", "நூலறி புலவன்", "அந்தணர் வெறுக்கை", "அறிந்தோர் சொல் மலை", "மங்கையர் கணவன்", "வேல்கெழு தடக்கை சால்பெருந் தலைவன்", "குறிஞ்சிக் கிழவன்", "அரும் பெறல் மரபின் பெரும் பெயர் முருகன்", "உருகெழு நெடுவேள்", "பெரும் பெயர் இயவுள்" முதலிய பல திருப் பெயர்களால் முருகக் கடவுள் போற்றப் பெற்றதைத் திருமுருகாற்றுப்படையில் அறியலாம். முருக வழிபாட்டில் வேதாகம நெறிகளும், இதிகாச பௌராணிகக் கதைகளும் கலந்து, வளர்ந்த புதிய நிலைகளை மேல் குறித்த பெயர் விளக்கங்கள் சுட்டுகின்றன.

பண்டை வழிபாட்டு நிகழ்ச்சிகள் திருக்கோயில்களின் பெருக்கத்தால் பல்கிப், பல்வகை விழாக்களைத் தோற்றுவித்து, கலைப்போட்டிகள், பட்டிமன்றம், ஆடல் பாடல் அரங்குகளில் வளர்ந்து பெருகிய மறுமலர்ச்சியைப் 'பரிபாடல்' என்னும் சங்க நூலில் காண்கின்றோம். திருப்பரங்குன்றத்துக் கோயிலில் விளங்கிய ஓவியச் சாலையில் இதிகாச புராணச் செய்திகள் தீட்டப்பட்ட காட்சியொன்று பரிபாடலில் இடம் பெற்றுள்ளது. முருகன் வழிபாடு திருக்கோயில்களின் விழாக்களில் கலைஞானப் பண்ணைகளாக உருவெடுத்ததை இப்பழம் பாடலில் காண்கின்றோம்.

பிற்காலத்தில் கச்சியப்பரின் கந்த புராணமும் அருணகிரிநாதரின் சந்தத் திருப்புகழ்ப் பாடல்களும் தமிழகத்தில் முருகன் திருவிளையாடல்களைப் பரப்புதற்குப் பெருங் கருவியாயின. முருகனைப் பற்றிப் பல்வகைச் சிற்றிலக்கியங்களும், இசைப்பாடல்களும் பல்கி, முருக வழிபாட்டைத் தமிழர் நெஞ்சில் வேரூன்றச் செய்தன. சுருங்கக் கூறின் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் தொல்காப்பியர் காலந் தொட்டு இன்றுவரை முருகன் தமிழ் மக்களின் அகவாழ்விலும், புறவாழ்விலும் நீங்கா நிலைபெற்று விளங்குகின்ருன். தமிழர் அகப்புற வாழ்வில் கண்ட பன்மையில் ஒருமைக் காட்சியே முருகன் என்னும் திருப் பெயர். 'அரும்பெறல் மரபிற் பெரும் பெயர் முருகன்' என்பது திருமுருகாற்றுப்படையின் பொருண்மொழி. இளமை, அழகு, விழா என்னும் பல்வகைப் பொருளுடன் 'தேன்' என்னும் இனிய பொருளையும் உடையது இப்பெயர். பல்வகைச் சமயமாம் மலர்வனத்தில் வண்ணத்தாலும் மணத்தாலும் வேறுபட்ட பல்வகைக் கடவுள் மலர்களிலும் தமிழ் ஞானிகள் பல்லாயிரம் ஆண்டுகளாய்த் திரட்டிச்

சேர்த்த தேனடையாய் 'முருகன்' என்னும் தெய்வத் தமிழ்நெறி தமிழர் வாழ்வில் இன்றும் உவட்டாமல் இனித்து நிற்கின்றது. தைப்பூசம், பங்குனி உத்திரம் முதலிய பெருநாட்களில் முருகன் தலங்களை நோக்கிச் செல்லும் காவடி ஆடல்களில் பண்டைத் தமிழகத்தின் வெறியாடல் கோலங்களைக் கண்டு முருக வழிபாட்டின் தொடர்ந்த ஒருமைப்பாட்டைத் தெளியலாம்.

சங்கப் புலவர்களை அடியொற்றி, பெருங்காப்பியப் புலவர்களும், நாயன்மார்களும் முருகப்பெருமான் வழிபாட்டைச் சுட்டிப் பாடியுள்ளனர். முருகனைப் பாடிய புலவர்மணிகளின் வரிசையை "விரிப்பிற் பெருகும்; தொகுப்பின் எஞ்சும்" சந்தத் திருப்புகழால் செந்தமிழ் முருகன் விளையாடலைத் தமிழகத்தில் எம்மருங்கும் பரவச்செய்த அருணகிரிநாதர் திருவாய் மலர்ந்தருளிய திருவாக்கின்படி,

"மெய்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன்
முத்தமிழால் வைதாரையும் இங்கு வாழ வைப்பான்"

என்ற தமிழ்க் காதல் நெறியில் ஒப்பற்ற வள்ளற் பெருமானாய்த் தமிழ்கூறு நல்லுலகமெங்கும் பண்டும் இன்றும் என்றும் நின்று நிலவும் கருணைக் கடவுளாய் முருகன் விளங்குகின்றான்.



# ஜைனம்

ஜீவபந்து T. S. ஸ்ரீபால்

ஜைன அறம் (சமயம்) மிக 'மிகத் தொன்மை வாய்ந்தது; வரலாற்றுக் காலத்திற்கும் முற்பட்டது. பகவான் விருஷபதேவர் என்ற அற வோரால் தோற்றுவிக்கப் பெற்றது. அஹிம்ஸா தர்மத்தின் அடிப்படையில் இல்லறம், துறவறம் என்று அறத்தை "அனுவிரதம்" என்றும், துறவற நெறியை "மகா விரதம்" என்றும் கூறியருளினர்.

**இல்லறம்:** கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பிறன் மனை நயவாமை, மிகு பொருள் விரும்பாமை, ஊன் உண்ணாமை, கள்ளுண்ணாமை, குரவரை இகழாமை, இரவுண்ணாமை, அன்புடைமை, அடக்கமுடைமை, விருந்தோம்பல் போன்ற ஒழுக்க நெறிகளைக் கொண்டது.

**துறவறம்:** மனைவி மக்களைத் துறந்து மேலே கூறிய அற நெறிகளோடு, இன்னான், இனியான் என்று பாராமல் பற்றற்ற நிலையில் ஐம்பொறிகளையும் அடக்கித் தவம் புரிந்து வினைகளை வென்று பிறவா நிலை அடைய முயற்சித்தல்.

**தத்துவக் கலை:** ஜைன மதத் தத்துவத்தில் ஒன்பது பொருள்கள் கூறப்படுகின்றன. இவற்றை நவ பதார்த்தம் என்பர். இவை, உயிர், உயிரல்லது, புண்ணியம், பாவம், ஊற்று, செறிப்பு, உதிர்ப்பு, கட்டு, வீடு என்பனவாம். இவற்றை முறையே ஜீவன், அஜீவன், புண்ணியம், பாவம், ஆஸ்ரவம், ஸம்வரை, நிர்ஜரை, பந்தம், மோக்ஷம் என்று கூறலாம்.

**உயிர் (ஜீவன்):** உயிர்கள் எண்ணிறந்தன. அழிவில்லாதன; அநாதியாக உள்ளன. அதாவது உயிர்களைக் கடவுள் படைக்கவில்லை. நல்வினை, தீவினை என்னும் இரு வினைகள் (புண்ணிய பாவங்களைச்) செய்து அவற்றின் பயனாகிய இன்ப துன்பங்களைத் தீர்ப்பதற்கு நரககதி, விலங்கு கதி, மக்கள் கதி, தேவகதி என்னும் நான்கு கதிகளில் பிறந்து இறந்து, உழன்று, திரிவதும் இரு வினைகளையறுத்து பிறவா நிலையாகிய பேரின்ப வீட்டினையடைவதும் உயிர்களின் இயல்பாகும். உயிர்கள் ஓரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர், ஐந்தறிவுயிர் என்று ஐந்து வகைப்படும். ஐயறிவுயிர்கள் பகுத்தறிவு (மனம்) உடையவை, பகுத்தறிவில்லாதவை என இரு வகைப்படும். உடம்பின் பெருமை, சிறுமைக்கேற்ப உயிரானது பெரியதாகவும், சிறியதாகவும் உடல் முழுவதும் பரந்து நிற்கும். இவ்வாறு அநேகாந்தம் என்னும் ஸ்யாத்லாத தத்துவம் முதலியவைகளையும் அறிவியல் துறையில் பகவான் விருஷபதேவர் அருளிச் செய்தார்.

இவ்விரு பேரறங்களையும் தத்துவங்களையும் தம் பெயராலோ, சமயம் மதமென்ற பெயராலோ அழைக்காமல், 'அறம்! அறம்!!' என்றே அழைத்துப் போதித்தார்.

பகவான் விருஷபதேவர் இவ்வற நெறிகளோடு மக்கள் சமுதாயம், அமைதியோடு, பசி, பிணி, பகையின்றி வாழவேண்டி, கல்வி, வாணிபம், உழவு, சிற்பம், வாள், வரைவு, ஆகிய அறு தொழில்களையும் கற்பித்தார். மக்கள் பலரும் உடன் பிறந்தோர் போன்று வாழ வேண்டி மக்களுக்குள் உயர்வு, தாழ்வு கற்பிக்காமல் எல்லோரும் சமம் என உரைத்தார். தொழில் முறையில் வேறுபடினும் மக்கள் பலரும் பிறப்பினால் ஒன்றே என்பதை வலியுறுத்திப் பலருக்கும் அறமுரைத்தார்.

**இருபத்து நான்கு தீர்த்தங்கரர்கள்:** பகவான் விருஷபதேவருக்குப் பின் அப்பெருமான் அருளிய அறநெறிகளையும், கல்வியறிவையும் மக்களிடையே பரப்பியவர்கள் இருபத்து மூவர். இவ்விருபத்து மூவர்களும் ஒருவர்பின் ஒருவராக வெவ்வேறு காலங்களில் தோன்றியவர்கள். இவ்வறவோர்களில் மகாவீர வர்த்தமானர் இருபத்து நான்காம் தீர்த்தங்கரர் ஆவர். இவர்களனைவரும் பகவான் விருஷப தேவரைப் போலவே கடும் தவம் செய்து ஒப்பற்ற கேவல ஞானமடைந்து வினைகளை வென்று, வீடு பேற்றுறவர்கள். தேவர்களாலும், மக்களாலும் பகவான் எனப் போற்றப் பெற்றவர்கள். இவ் விருபத்து மூன்று அறவோர்களுக்கும் 'பகவான்

விருஷபதேவர் முதல்வராகையால், அப் புண்ணிய மூர்த்தியை, ஆதிபகவன், ஆதிநாதர், ஆதிமூர்த்தி, ஆதிநாயகர், ஆதிதேவர், ஆதி பட்டாரகர், ஆதிமூலர், ஆதிபிரம்மா, ஆதி காலத்து அந்தணர், ஆதி முதற்கடவுள் என் றெல்லாம் அழைத்தனர். இவ்வழக்காற்றைக் கொண்டே நமது தமிழ்மறை யாத்த பெரியார் பகவான் விருஷப தேவரை "ஆதி பகவன்" என வாழ்த்தினர்.

**தமிழகத்தில் ஜைனம்:** தமிழகத்தில் ஜைனம் எப்பொழுது வந்தது என்று கூறவியலாது. இலக்கிய ஆதாரங்களைக் கொண்டு ஆராயின், இராமபிரான் தென்னாடு வந்தபோது சமண முனிவர்களைத் தரிசித்துச் சென்றார் என வால்மீகி இராமாயணம் கூறுகிறது. தமிழிலக் கியங்களிலே தொல்காப்பியத்தில் ஜைன சமயம் சிறப்பாகப் போற்றப் பெற்றுள்ளது. ஜைன சமயக் கொள்கைகளை எல்லாம் விளக்கும்போது தொல்காப்பியர் நேரிதின் உணர்ந்தோர் நெறிப் படுத்தினரே என்றும் செவ்விதின் உணர்ந்தோர் முறைப்படுத்தினரே என்றும் கூறியுள்ளார். எனவே, ஜைன சமயம் தமிழகத்தின் தொன்மை வாய்ந்த சமயமாகும்.

மேலும், தமிழ் நாட்டு ஜைன அறவோர்கள் தவம் இயற்றவும் கலை வளர்க்கவும் தமிழகத்தி லுள்ள பல மலைக் குகைகளைப் பள்ளிகளாக அமைத்துக் கொண்டனர். இவர்கள் தனியாகக் குகைகளில் தவம் இயற்றாது, ஐந்தும் ஐந்துக்கு மேற்பட்ட முனிவர்களுமாகத் தங்கியிருந் தார்கள். அதனால்தான், அம்மலைகளை மக்கள் ஐவர் மலை என்று அழைத்து வந்தனர். இந்த ஐவர் மலையையே பிற்காலத்தில் "பஞ்ச பாண் டவர் மலை" யெனக் கூறி வருகின்றனர். பெரும் பாலான குகைப் பள்ளிகளில் ஜைன முனிவர் களைப் பற்றித் தாமிழி எழுத்துக்களாலான குறிப்புக்கள் காணப்படுகின்றன. இவைகள் கி. மு. 3ஆம் நூற்றாண்டு அல்லது 4ஆம் நூற்றாண்டுகளில் பொறித்தவை எனக் கல் வெட்டு ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். ஜைன முனிவர்கள் பற்றற்ற துறவிகளாகை யால்,

"மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க்கு உடம்பும் மிகை"

என்ற தமிழ் மறை கூறும் தவத்தை மேற் கொண்டு ஆடையின்றிப் பற்றற்ற நிலையை மேற்கொண்டதால், அவர்கள் மலைப் பள்ளிகள் அமைத்துத் தவமியற்றினார்கள்.

இத்தகு புனிதப் பள்ளிகளை, சமணர் மலை, நாகமலை, திருப்பரங்குன்றம், ஆனைமலை, அழகர் மலை, கழுகு மலை, ஆறு நாட்டான் மலை, சித்தன்னவாசல், குன்றக்குடி, அறச்சாலையூர் போன்ற பல இடங்களிற் காணலாம்.

இவ்வாறு விளங்கும் ஜினர் பள்ளிகளை, சில அறிஞர்கள் பௌத்தப் பள்ளிகள் என்று துணிந்து விடுகிறார்கள். பௌத்தத் துறவிகள் உடல் முழுமையும் ஆடைகளும், பாதுகாப்பான படுக்கைகளும், குடைகளும் வைத்துக் கொண் டிருப்பவர்களாகையால் அவர்கள் மலைக்குகையில் வசிக்க வேண்டிய அவசியமில்லை. மக்களிடையே ஊருக்குள் வசதியான கட்டிடங்களை விகாரங் களாக அமைத்துக் கொண்டு வாழ்ந்தார்கள். இதனை நீலகேசி நூலில் :

"கொடி மகரக் கோபுரமு
நெடு மதிலுங் குடினைகளும்
தொடி மகரத் தூணிரையுஞ்
சொலற் கரிதாய்ச் சுவர்க்கத்தின்
படி மகரப் படியமையப்
பள்ளிகண் டளியள் போய்க்
கடிமகரக் கடல் கடந்து
கலந் தந்த நலமென்றாள்"

என்பதனாலறியலாம். எனவே, மலைக் குகைகளில் பள்ளியமைத்துத் தவம் புரிந்தவர்கள் ஜைன அறவோர்களே யாவர்.

**தமிழ் வளர்த்த சான்றோர்கள் :** தமிழகத்து ஜைன அறவோர்கள் தமிழ் மொழியை வளம் பெறச் செய்துள்ளார்கள். இலக்கண, இலக்கிய, நீதி, கணித, சோதிட நூல்கள் முதலிய பல நூல்களை இயற்றித் தமிழ் மொழியை வளர்த் துள்ளார்கள்.

தொல்காப்பியம், நன்னூல், நேமிநாதம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, சிலப் பதிகாரம், சீவக சிந்தாமணி, சூளாமணி, பெருங்கதை, திருக்குறள், நாலடியார், பழமொழி நானூறு, அறநெறிச் சாரம், ஜினேந்திர மாலை, கணித நூல்கள், இசை நூல்கள் ஆகிய பல்வேறுத் துறை நூல்களை அறத்தின் அடிப்படையில் இயற்றி தமிழ்த் தாயை அலங்கரித்துள்ளதை அறிஞர் உலகம் அறியும்.

**வளர்க நல்லறம்.**

# தமிழர் நீதிமுறை

## நடன காசிநாதன்

தொன்று தொட்டு, சிறந்த நாகரிக, பண்பாடு களையுடையவர்களான தமிழ் மக்கள் நீதி நிர்வாக முறையிலும் சிறந்த இடத்தை வகித்து வந்திருக்கின்றனர். இப்போது நிலவிவரும் தன்மையில் நீதிமுறை அக்காலத்தில் இல்லாதிருப்பினும், பாராட்டிக் குறிப்பிடத்தகுந்த வகையில் நீதி நிர்வாகம் நடந்திருக்கிறது என்பது எவரும் மறுக்கமுடியாத உண்மையாகும்.

அக்காலத்தே தேவை ஏற்படும்போது கூடி வழக்குக் கேட்டு நீதி வழங்கும் நிலையங்கள் இருந்ததாகத் தெரியவருகிறது. சிலப்பதிகாரத்தில் குறிக்கப்பெறும் 'அறங்கூறவையமும்' கல்வெட்டுகளிலே காணப்படும் 'தர்மாசனமும்' ஒரே தொழிலுடையதேயெனினும், அவைகள் நிலைத்துப் பணி புரியும் நிலையங்கள் அல்ல; கல்வெட்டுகளைத் துணைகொண்டு காண்போமாயின் வேண்டும்போது கூடித் தீர்ப்பு வழங்குவதாகவே தோன்றுகின்றன. ஊர்ச்சபையில் 'நியாயவாரியம்' என்று ஒரு வாரியம் இருந்ததாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன. அவைகளும் மேலே கூறியவாறே இயங்கின. மேலும் 'நடுவிருக்கை' என்னும் அதிகாரி ஒருவர் குறிப்பிடப்படுகிருர். அவருக்கு நீதி வழங்கும் அதிகாரம் இருந்ததாகத் தெரியவில்லை.

நீதி வழங்கும் அவை அரசனது தலைநகரத்திலும், மற்றைய நகரங்களிலும், சிற்றூர்களிலும் இருந்தது. அவைகள் 'மன்றம்', 'அவை', 'அறக்களம்' என வழங்கி வந்தன. 'அறங்கெழு நல்லவை உறந்தை யன்ன' என்று அகநானூறும்; 'உறந்தை அவையத்து அறம் நின்று நிலையிற்று' என்று புறநானூறும்; 'அரசுகோல் கோடினும் அறங்கூறு அவையத்து உரைநூல் கோடி ஒரு திறம் பற்றினும்' என்று சிலப்பதிகாரமும்; 'பிணக்கறுக்கும் மூத்தோரை இல்லா அவைக்களனும்' என்று, திரிகடுகமும்; 'மன்றின் முதுமக்கள் வாழும் பதி' என்று இன்ஞ நாற்பதும் கூறுவதால் உணரலாம்.

ஓர் ஊருக்கும் மற்ருேர் ஊருக்கும் ஏற்படுகிற தகராறுகளையும், எல்லைப் பிரச்சினைகளையும், சிறு குற்றமிழைத்தோரையும் ஊர்மன்றமே விசாரித்து தக்க தண்டனை அளித்து வந்தது. கொலை, களவு, சமயப் பிணக்கு ஆகியவை பற்றிய வழக்குகளை, நாட்டாரும் அரசனுல் அனுப்பப்பட்ட அதிகாரியும், ஊர்ப் பெருமக்களும் கேட்டு நீதி வழங்கினர். இவ்விரு வேறு நிலையிலும் தீர்க்கப்படாத வழக்குகளை அரசன் தனது நீதிமன்றத்தைக் கூட்டி 'அறக்களத்து அந்தணர்' என்பாரைக் கலந்து ஆலோசித்து நீதி வழங்கியுள்ளான்.

தமிழ் மக்கள் நீதி வழங்கிய முறையே மிகவும் உன்னதமான முறையாகும். அரசன் தனது அவையின் முன்ஞல் 'ஆராய்ச்சிமணி' ஒன்றைக் கட்டிவைத்து, நீதி பிறழ்ந்தது என்றுணரும் யாவரும் அம்மணியை அசைத்து அரசனுக்குத் தெரிவிக்கலாம் என்றிருந்த நெறி எண்ண எண்ண இறும்பூது அளிக்கிறது. சேக்கிழார், சயங்கொண்டார், ஒட்டக்கூத்தர், இளங்கோவடிகள் ஆகியவர்களால் புகழ்ந்து பாராட்டப்பெறும் மனுநீதிச்சோழன், தன் கோயில் வாயிலில் மணி ஒன்றைக் கட்டியிருந்தானென்றும், அம்மன்னனின் மகனுடைய தேர்ச் சக்கரத்தில் அகப்பட்டுத் தன் கன்று உயிரிழந்தது என்பதை, தாய்ப்பசு மணியை அசைத்து அறிவித்தது என்றும், மன்னனும் உடன் அதற்குத் தண்டனையாகத் தன் மகனைத் தேர்க்காலின் கீழ்க்கிடத்தி அவன்மீது தோரோடச் செய்து தண்டனை கொடுத்தான் என்பதையும் அறியும் போது யாரே வியப்படையார்?

பழங்கால மக்கள் நீதித்துறையில் சீரிய முறையை வகுத்திருந்தார்க ளென்பதற்குச் சான்றுகள் பல உள்ளன. மன்னனிடத்து வழக்குப்பற்றி அறிவித்தலை 'குறை' யென்றும், அரசன் அவ்வழக்கை இரு சாராரிடத்தும் கேட்டு நன்கறிந்து, பின் நீதி வழங்குதலை 'முறை' யென்றும் வழங்கி வந்திருக்கின்றனர். வழக்கு பற்றி விசாரணை நடத்துங்கால் சாட்சிகளை விசாரித்தார்கள், சான்றுகளை கண்டு ஆய்ந்தார்கள். இவற்றை, பெரிய புராணத்தின் கண் கூறப்படும் சுந்தரமூர்த்தி நாயனுர் வழக்கிலிருந்து நாம் அறிந்துகொள்ளலாம்.

சுந்தரமூர்த்தி நாயனுர் திருமணக்கோலத்தில் நிற்க, அவரைத் திருமணம் செய்யவொட்டாது தடுத்துத் தான் ஆட்கொள்ளவேண்டுமென்ற காரணத்தால் இறைவன் சிவபெருமான், வயோதிக உருவம் பூண்டு சுந்தரமூர்த்தியின் முன் தோன்றி 'நீர் எமது அடிமை' என்று கூற, சுந்தரமூர்த்தி மறுக்க, பின்னர்த் தங்கள் வழக்கை ஊரவையின்கண் கூற, ஊரார் முதியோ

ரைப் பார்த்து, 'இவர் உமது அடிமை என்று காட்டுவதற்குச் சான்று அல்லது அயலார் சாட்சி உளதோ' என்று வினவ, உடன் அம்முதியோரும், 'இவர் முன்னர் கிழித்துவிட்டது மூலத்தின் படிதான்; இதோ உள்ளது மூலம்' என்று காட்ட, அவையோரும் சுந்தரமூர்த்தி நாயனுரவர்கள் அம்முதியோரின் அடிமைதான் எனத் தீர்ப்பு வழங்கினர். (ஆட்சியில், ஆவணத்தில், அன்றி மற்றயலார் தங்கள் காட்சியில் மூன்றில் ஒன்று காட்டுவோம்—பெரிய புராணம்) அவ்வாறே, திருப்பாதிரிப் புலியூரில் காணப்படும் பாண்டியர் காலத்துக் கல்வெட்டொன்று, நிலச் சம்பந்தம் காரணமாக பிராமணர்களுக்கும் தேவ கன்மிகளுக்கும் ஏற்பட்ட தகராறில் சான்று காட்டும்படி அரச அதிகாரிகள் வேண்ட, பிராமணர்கள் சான்று காட்டாதொழியவும், தேவகன்மிகள் சான்று காட்டவும், அதிகாரிகள் தேவகன்மிகளுக்கே அந்நிலம் உரிமையுடையது என்று தீர்ப்புக் கூறினர் என்று கூறுகின்றது. (S. I. I. Vol. VII, No. 759). எந்தவொரு சான்றும் கிடைக்காதபோது, பாம்புள்ள குடத்தினுள் கைவிடுதல், தீச்சட்டியைத் தலையிலேந்தி நடத்தல், பழுக்கக் காய்ந்த இரும்புத் தண்டத்தைக் கையில் தாங்கி உருவுதல் போன்ற சோதனைகளின் மூலம் குற்றம் புரிந்தவர் யாரென அறிந்து தக்க தண்டனையைத் தந்திருக்கின்றனர். வாயால் உறுதி செய்யும் சத்தியப்பிரமாணத்தைச் "சத்தியம் செய்தல்" என்றும், பிரத்தியக்ஷப் பிரமாணமாக மெய்ப்பித்தலை "பிரத்தியம் செய்தல்" என்றும் கூறுவர். வழக்கில் சாட்சி கூறுதலைக் 'கரி' என்றும், சாட்சி கூறும்போது உண்மையைக் கூறவேண்டுமென்றும், உண்மையைக் கூருது ஒளித்தாலோ, பொய்ச் சாட்சி கூறினுலோ அல்லது பொய்ச் சான்று காட்டினுலோ தண்டிக்கப்படுவர் என்றும், பூம்புகாரில் பொய்க்கரி கூறுவாரைத் தண்டிக்கும் பூதம் ஒன்று இருந்ததென்றும் இலக்கியங்கள் பகர்கின்றன.

வழக்குகளை, உரிமை பற்றிய வழக்கு, குற்றம் பற்றிய வழக்கு என இரு கூறுகப் பிரித்து நீதி வழங்கினுர்களில்லை அக்கால மக்கள். அனைத்தைப் பற்றிய வழக்கையும் ஒரு இடத்திலே கேட்கப்பெற்று நீதி வழங்கினுர்களெனத் தெரிகிறது. ஆனுல், உரிமையின் தொடர்பாக எழுந்த வழக்கிற்குக் குறைந்த தண்டனையும், குற்றத் தொடர்பாக கிளர்ந்த வழக்கிற்கு கடுந் தண்டனையும் வழங்கி வந்ததாகத் தெரிகிறது. கொலைக் குற்றத்தைவிடப் பிறன்மனை நயந்த குற்றத்தையே கொடியதாய்க் கண்டு பெருந் தண்டனையும் வழங்கி வந்தமை ஈண்டு நோக்கத்தக்கது. இலக்கியங்கள் பெரும்பாலும் உரிமை இயல் பற்றியே விரித்துக் கூறுகின்றன.

குற்ற இயல் பற்றிக் கூற நினைக்கும்போது, அரசின் சிலம்பைக் களவாடினுன் என, தவருகக் கோவலன்மீது பழி சுமத்தப்பட்டுக் கொலை செய்யப்பட்டான் என்பதும், நன்னன் என்னும் குறுநில மன்னன் ஒருவன், தனது தோட்டத்து மரத்திலிருந்து உதிர்ந்து ஆற்றின் வழி மிதந்து வந்த கனியொன்றை எடுத்துச் சுவைத்தாள் என்ற காரணத்திற்காக ஒரு சிறு பெண்ணைக் கொலை செய்யும்படி ஆணை பிறப்பித்தான் என்பதும், ஆடவன் இல்லாது, பெண் ஒருத்தி தமியளாய் இருக்க, அவ்வீட்டில் இரவில் கதவைத் தட்டினுன் என்பதற்காக ஒரு பாண்டியன் தன் கையைத் துண்டித்துக்கொண்டான் என்பதும் நம் நினைவில் அழியாச் சின்னங்களாக வந்து உலவுகின்றன.

உரிமையியல்பற்றி நோக்கும்போது கல்வெட்டுகளில் எண்ணிறந்தனவாகக் காணப்பெறும் நிலத் தகராறு, எல்லைத் தகராறு, நீர்த்தகராறு, சமயப்பூசல் ஆகியவைகள் மேலோங்கி நிற்கின்றன. திருக்கடையூரில் காணப்படும் மூன்ரும் இராசராசனின் கல்வெட்டொன்று, அவ்வூர் மாகேச்சுரர்கள் செந்தாமரையைச் சூடியிருந்தார்கள் என்ற காரணத்திற்காகத் தண்டனையாக அவர்களுடைய நிலங்களை அவ்வூர்ச் சபை கவர்ந்தது என்று குறிக்கின்றது.

(A. R. E. 257 & 1925)

வழக்குரைத்து நீதி வேட்டு நின்ற மக்கள், நீதி வழங்குபவனின் வயதிலும் அறிவிலும் பெரும் நம்பிக்கை வைத்திருந்தார்களென்பதை, சோழ மன்னன் கரிகாலன் சிறியவனுக இருந்த காரணத்தினுல் வழக்குரைக்க வந்தவர்கள் தயங்கினர் என்பதாலும், பின்னர் வேந்தன் மாறுவேடம் பூண்டு முதியோனுகக் காட்சியளித்து முறை வழங்கினுன் என்பதாலும் அறியலாம்.

வழக்குகளை, சமன் செய்து சீர்தூக்கும் கோல் போல் நடுநிலைமை தவருது நீதி வழங்கியதாலும், வழக்குகளை ஒரு முறையோடல்லாது, எழு முறை கேட்டு அறிந்து, சிந்தித்து, 'அறக்களத்து அந்தணர்' போன்ற தக்காரின் ஆலோசனை கேட்டு நீதி வழங்கியதாலும், மன்னர்கள் வள்ளுவர் கூறியது போன்று இறைவர்களாக மதிக்கப்பட்டார்கள். அதனுலன்ரே 'திருவுடை மன்னனைக் காணில் திருமாலைக் கண்டேனே' என்று ஆழ்வார் ஒருவர் பாடிப் பாராட்டி மகிழ்கிருர்.

# ஊரமைப்புக் கலை

வை. கணபதி

கிராமம், நகரம், பட்டணம், கோட்டை முதலியவற்றை நிர்மாணித்து வானுயர்ந்த கட்டடங்களையும், மாட மாளிகைகளையும் கூட கோபுரங்களையும் கட்டிக்கொண்டு பெருமையோடு வாழ்ந்த மக்கள் தமிழ்ப் பெருங்குடி மக்கள். பல நூற்றாண்டுகளாகப் பெற்ற அநுபவங்களை விஞ்ஞான வழியில் நூல் வடிவமாக நமக்கு நம் முன்னோர் அளித்துச் சென்றிருக்கிறார்கள். அவற்றைச் 'சிற்ப நூல்கள்' என்றும், 'மனையடி சாத்திரம்' என்றும் 'வாஸ்து நூல்கள்' என்றும் கூறி வருகிறோம்.

கிராமம், நகரம், பட்டணம், பட்டினம், அரண்மனை, மாளிகை, சிறுமனைகள், கோயில், கோட்டை, குளம், கிணறு, கேணி, படுக்கைகள், வாகனங்கள் ஆகியவற்றைப்பற்றி விளக்கிக் கூறும் மனையியல் நூலே வாஸ்து நூல் எனப்படும். சிற்ப வடிவங்களும், அலங்காரக் கட்டிடப் பகுதிகளும் சிற்பத்தின்பாற் படும். இவையும் வாஸ்து நூலிலே அடங்கும்.

கிராமம், நகரம் அமையும் நிலப்பகுதியையும், பிற மனை யிடங்களையும் வாழ்க்கைக் கேற்றதாக உளதா வென்று சோதித்துப் பின்னரே அவற்றை நிறுவுதல் வேண்டும். ஓரிடத்தின் மண்ணின் நிறம்; மணம்; இடத்தின் மேடு பள்ளம்; அவ்விடத்தில் வளர்ந்தோங்கிய செடி கொடி மரங்கள்; தட்டினால் எழும்பும் ஓசை; மண்ணின் சுவை; அதன் செறிவும் மென்மையும் ஆகிய இவ்வேழு கூறுகளையும் நோக்கிச் சிறந்த பூமியைக் கைக்கொள்ள வேண்டும் என வாஸ்து நூல்கள் கூறுகின்றன. இவ்விலக்கணத்தைப் பின்பற்றியே நம் முன்னோர்கள் மனையிடங்களைத் தேர்ந்தெடுத்தனர்.

நல்லதோர் இடத்திற்கு இலக்கணம் கூறுமிடத்து, உறுதியும் மென்மையும் நறுமணமும் பொருந்திய மண்ணும், நாற்றமுடைய பூச்செடி கொடிகள் அடர்ந்திருப்பதும், விரிந்த நிலப் பரப்பை யுடையதும், வலமாக ஓடும் நீருடையதும் ஆன நிலமே வசிப்பதற்குச் சிறந்த இடமாகும் என்று மனையியல் நூல் விளக்கம் தருகிறது.

வாஸ்து நூல்களில் மிகத் தொன்மையானது மயன் என்ற தென்னாட்டுச் சிற்பியால் எழுதப் பட்ட 'மயமதம்' என்ற நூலாகும். இதற்கு ஈடாகக் கூறப்படும் மற்றொரு நூல் 'விசுவ கர்மியம்' என்ற நூலாகும். சிலப்பதிகாரத்தில், பூம்புகார் நகர நிர்மாணம் மயநூல் இலக்கணங்களுக்கு இணங்கச் செய்யப்பட்டதென்ற குறிப்பைக் காண்கிறோம். சோழ நாட்டிலும், அதற்கு வடக்கிலும், சேர நாட்டிலும் இந்நூல் மிகுதியாகக் கையாளப்பட்டிருத்தல் வேண்டுமென்று அந்நூலைக் கையாளும் பரம்பரைச் சிற்பிகள் கூறுவர். விசுவ கர்மியம் என்ற நூல் பாண்டிய நாட்டிலும், தெற்கிலும் மிகுதியாக வழங்கி வருகிற நூலாகும். தமிழ் நாட்டில் உருவான சிற்ப நூல்களில் இவ்விசுவ கர்மியம் ஒன்றுதான் நிலப் பிரிவுகளை தமிழ் மரபுக் கேற்றவாறு, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்று ஐம்பெரும் பிரிவுகளாகக் காட்டுகின்றது. மற்ற நூல்கள் நிலத்தின் நிறத்தையே அடிப்படையாகக் கொண்டு பிற இயல்புகளையும் குறிப்பிட்டு நான்கு பிரிவுகளாகவே கூறுகின்றன.

### கிராமங்கள் :

மய மத மனை நூல் கிராமங்களை அதனதன் சுற்றளவை ஆதாரமாகக் கொண்டு ஐந்து விதமாகக் கூறும். ஒரு தண்டம் என்பது 4 முழம் அல்லது பதினோரு அடியாகும். இவ் வளவினால் 20,000, 40,000, 60,000, 80,000, 1,00,000 தண்டம் சுற்றளவு கொண்ட நிலப் பரப்பு கிராமங்கள் நிறுவ ஏற்றதாம். இதில் 20தில் ஒரு பாகம் மக்கள் குடியிருப்புகளுக்கு ஒதுக்கப்படும். இது குடும்ப பூமி என்றழைக்கப் படும். எஞ்சிய இடம் விளை நிலங்களாகவும் மேய்ச்சல் நிலங்களாகவும் பயன்தரும் மரங்கள் நிறைந்த தோப்புகளாகவும், நீர்நிலைகளாகவும் அமையும்.

மக்கள் வசிப்பதற்கு ஏற்ற இடங்கள் முறையே, கிராமம், கேடம், கர்வடம், துர்கம், நகரம் என்று ஐந்து வகையாகும்.

கிராமங்களுடைய வடிவங்களும் சிற்ப நூல்களில் விளக்கிக் கூறப்படுகின்றன. அவ்வடிவங்கள் முறையே தண்டகம், ஸ்வஸ்திகம், பிரஸ்தரம், பிரகீர்ணகம், நந்தியாவர்த்தம், பராகம், பத்மம், ஸ்ரீ பிரதிஷ்டிதம் என எட்டு வகை ஆகும்: இப் பெயர்கள் வீதிகளுடைய எண்ணிக்கை, போக்கு, இவற்றை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டிருக்கின்றன. கிராமத்தின் வீதிகள் தண்டத்தைப் போல் நீண்டு கிழக்கு முகமாதல் வடக்கு முகமாதல் சென்று, அச்சாலையின் நடுவில் நான்கு சந்துகள் இருப்பின் அக்கிராமம் " தண்டகம் " எனப்படும்.

ஸ்வஸ்திக வடிவத்தில் வீதிகள் போக்குடையதாக இருப்பின் அது "ஸ்வஸ்திகம்" எனப் படும்.

கிராமத்தின் கிழக்கு மேற்கு பாகங்களில் வடக்கு நோக்கிச் செல்லுகின்ற வழிகள் மூன்றுதல், நான்காதல், ஐந்தாதல், 'ஆறுதல், ஏழாதல் இருப்பின் அது "பிரஸ்தரம்" என்று கூறப்படும்.

கிழக்கு நோக்கி நான்கு வழிகளிலும், வடக்கு நோக்கி எட்டாதல், ஒன்பதாதல், பத்தாதல், பதினொன்றுதல், பனிரண்டாதல், இருப்பின் அக்கிராமம் " பிரகீர்ண " வடிவமுடையதாகும்.

கிழக்கு மேற்காக ஐந்து வழிகளும் வடக்கு நோக்கி பதிமூன்று முதல், பதினெழு வழிகளும், நான்கு திசைகளில் முக்கிய வழிகளும் அமைந்தது " நந்தியா வர்த்தம் " எனப்படும். இக்கிராமத்தின் உட்புறத்தில் நந்தியா வர்த்தமாக சிறு வீதிகளும், சந்துகளும் அமையும்.

வடக்கு நோக்கிச் செல்லுகின்ற வழிகள் பதினெட்டு முதல் இருபத்தி இரண்டு வரையிலும் கிழக்கு, மேற்காகச் செல்லுகின்ற வழிகள் ஆறும் அமைந்திருந்தால். அதற்குப் " பராகம் " என்று பெயர்.

கிழக்கு, மேற்காகச் செல்லும் வழிகள் ஏழும், தெற்கு, வடக்காக செல்லுகின்ற வழிகள் மூன்று முதல் ஏழு வரையும் அமையின், அது "பத்மம்" என்று சொல்லப்படும்.

கிழக்கு மேற்கான போக்குடைய வழிகள் எட்டும் தென்—வடலாகச் செல்லும் வழிகள் இருபத்தெட்டும் அக்கிராமத்தில் இருந்தால் அது " ஸ்ரீ பிரதிஷ்டிகம் " என்று சொல்லப் படும். தெற்கு வடக்காக பதினாறு வழிகளும், கிழக்கு, மேற்காக பதினாறு வழிகளும் இருந்தால் அதுவும் " ஸ்ரீ பிரதிஷ்டிகம் " எனப்படும்.

கிராமங்களுடைய வீதிகளின் அகலங்களைப் பற்றியும் அமைப்பைப் பற்றியும், விளக்கிக் கூறப்பட்டுள்ளது. மழை நீரையும், கழிவு நீரையும், வெளியேற்றுவதற்காக நீர்த் தாரைகள் அமைக்கும் முறை பற்றிய விளக்கங்களையும் நூல்களில் காணலாம்.

எல்லா விதமான கிராமங்களுக்கும், வெளியில் அகழி சூழ்ந்த கோட்டை இருத்தல் வேண்டும் என்று விதிக்கப்பட்டுள்ளது.

கிராமங்கள் ஆற்றின் தென் கரையில் இருந்தால் அக்கிராமம் ஆற்றின் போக்கை அனுசரித்து நீண்டு அமைதல் நன்றாகும்.

கிராமத்தை உருவாக்கும் பொழுது, கிராம இடத்தை 81 சதுரங்களாகப் பிரித்து அதன் நடுவிடத்தை பிரம்ம பதம் என்றும் அதைச் சுற்றிலும் உள்ள பதங்களை தெய்வ பதம் என்றும், அதைச் சுற்றியுள்ள உள்ள பதங்களை மானுட பதம் என்றும், அதைச் சுற்றி கடைசியாக உள்ள பதங்கள் பைசாச பதம் என்றும் கொண்டு, பிரம்ம பதத்தை நீக்கி தெய்வ பதம், மானுட பதங்களில் மக்கள் வசிப்பதற்கான வீடுகளை அமைத்தல் வேண்டும். கடைசி பைசாச பதத்தில், தொழிலாளர்களின் குடியிருப்புகளை நிறுவுதல் வேண்டும்.

கிராமத்திலாதல், நகரத்திலாதல் வீடுகளை அமைப்பதற்கு முன்பாக, கோவில்களுக்கு இடம் வகுத்து நிர்மாணம் செய்து அதன் பின்னரே வீடுகளைக் கட்டுதல் வேண்டும் என்பது மயனுடைய விதியாகும்.

கிராமத்தைச் சுற்றி, தேர்களும், பெரு ஊர்திகளும் ஊர்வலங்களும் சுற்றி வருவதற்கு ஏற்ற அகண்ட வீதிகளை அமைத்தல் வேண்டும். இது அரச வீதி என்றும் மங்கள வீதி என்றும் சொல்லப்படும்.

கிராமமாயினும், நகரமாயினும், எல்லா தேவதைகளுக்கும், கோயில்களை நிறுவுதல் வேண்டும்.

ஊருக்கு வடகிழக்கில் சிவன் கோயிலும், மேற்கே விஷ்ணு கோயிலும், தெற்கே முருகன் கோயிலும் கிழக்கே சூரியன் கோயிலும் தென் மேற்கு மூலையில் ஐயனர், விநயகர் ஆகியோரின் கோயிலும், தென் கிழக்கே காளி கோயிலும், வடக்கே குபேரன், அல்லது சப்த மாதர்களின் கோயில்களும் நிர்மாணிக்கப்பட வேண்டும். கிராமத்தின் மேற்கே சைனரின் கோவிலைக் கட்டலாம். கிராமத்தில் குடியிருப்பு அல்லாமல் சிறு மன்றங்களும், கோசாலைகளும், பூந்தோட்டங்களும், துறவிகள் வசிக்கும் மடங்களும், மயானமும், கடைகளும் அமைந்திருக்கும்.

ஒரு கிராமத்தில் எந்தெந்தப் பகுதியில், எந்தெந்த மக்கள் குடியிருத்தல் வேண்டும் என்றும் நூல்கள் வரையறுத்துக் கூறுகின்றன.

**நகரங்கள் :**

கிராமத்தை விட பரப்பிலும், மக்கள் தொகையிலும், வகையிலும், பெருக்க முடையது நகரமாகும். ஒரு சிறிய நகரத்தின் சுற்றளவு பதினாறாயிரம் தண்டம் அல்லது 6,76,000 அடி ஆகும்.

நான்கு திசைகளிலும் நான்கு கோபுரங்களை யுடையதும், மதிற் சுவர்களைப் பெற்றதும், பொருள்களை வாங்கி விற்பனை செய்யும் வணிகர்கள் நிறைந்ததும் பலவகை மக்கள் வாழ்கின்ற வீடுகள் நிறைந்ததும் எல்லாத் தெய்வங்களுக்கும் உரிய கோயில்களை உடையதும் ஆனது "நகரம்" எனப்படும்.

காடு அல்லது தோப்புகள் நிறைந்ததும் பல வகை மக்கள் வசிக்கத் தகுந்ததும் வணிகர்கள் நிறைந்ததும் ஆகிய நகரத்தைப் புரம் என்று குறிக்கும் நூல்.

நதிகளாலும், மலைகளாலும் சூழப்பட்டு உழவர்களும், தொழிலாளர்களும் வசிக்கும் இடம் "கேடம்" என்று அழைக்கப்படும்.

நான்கு பக்கங்களும் மலைகள் சூழ்ந்திருப்பதும் மக்கள் வாழ்கைக்குத் தகுதியுடையதுமான இடம் "கர்வடம்" என்று பெயர்.

அயல் நாட்டிலிருந்து இறக்குமதியான பொருள்களை யுடையதும் பல திறப்பட்ட மக்கள் வாழ்வதும், வணிகர்கள் நிறைந்ததும், இரத்தினங்கள், பொற் காசுகள் புழக்கமுடையதும், பட்டாடைகள் கிடைக்கக் கூடியதும் கடல் ஓரத்திலே அமைந்ததும், வெளிநாட்டு மக்கள் குடியேறி இருப்பதும் ஆகிய பெருநிலம் "பட்டினம்" என்று சொல்லப்படும். இத்தகைய இலக்கணம் வாய்ந்தது பண்டைய "காவிரிப் பூம் பட்டினம்" ஆகும்.

சுற்றிலும் கோட்டைச் சுவரோடு கூடியதும் வெளிப் பக்கத்தில் மணல் குவியல்கள் உள்ளதும் அகழி சூழ்ந்ததும் அதற்கு வெளியே படைகள் தங்கும் கூடாரங்கள் கொண்டதும் பலவிதமான பாதுகாப்புகள் நிறைந்ததும், வானுயர்ந்த கோபுரங்கள் உள்ளதும் பல வகையான மாளிகைகளும், கோயில்களும் கொண்டதும், நிறைந்த தோட்டங்களையும், பூங்காக்களையும் உடையதும், நால்வகைப் படைகளோடு கூடியதும், சிறிய, பெரிய வீடுகளையும், சந்துகளையும் உடையதும், அரசனின் அரண்மனையோடு கூடியதுமான பெரு நகரத்திற்கு "இராஜ தானி" என்று பெயர்.

**கோட்டைகள் :**

கிராமங்களைச் சுற்றியும், நகரங்களைச் சுற்றியும் சுவர்களை அமைத்துக் கொண்டு வாழ்ந்த நமது முன்னோர்கள் பலவிதமான கோட்டைகளையும் கட்டி வாழ்ந்தனர். கோட்டைகளை "துர்க்கம்" என்று அழைத்தனர். மலைக் கோட்டையை "கிரி துர்க்கம்" என்றும் சூழ்ந்த காட்டைக் கோட்டையாகவுடையதை "வன துர்க்கம்" என்றும், நதியினாலும், கடலினாலும் சூழ்ந்த இடத்தை "ஜல துர்க்கம்" என்றும், சேற்றினால் கட்டப்பட்ட சுவருடைய கோட்டையை "பங்க துர்க்கம்" என்றும், இயற்கையாக அமைந்த அரணையுடைய கோட்டையை "தெய்வத துர்க்கம்" என்றும், ஒரே பொட்டலாக அமைந்த கோட்டையை "ரிண துர்க்கம்" என்றும் நூல் கூறும். ரிண துர்க்கத்தில் மரமும் நீரும் இல்லா, வரண்ட சூழ்நிலையே அரணாக அமைகிறது.

மலையும், காடும் சேர்ந்து கலந்தவிடத்தே அமையும் பாதுகாப்பான இடத்திற்கு "மிஸ்ர துர்க்கம்" என்று பெயர்.

நமது சிற்ப நூல்களில் கோட்டைகளை அமைக்கும் முறைகளும், விரிவான விளக்கங்களும், பாதுகாப்பிற்குரிய இரகசிய பாதைகளையும் அறைகளையும் அமைக்கும் முறைகளையும், படைகள் தங்கும் இடங்களையும் வாழ்க்கைக்குத் தேவையான வசதிகளை, எங்கெங்கு எங்ஙனம் அமைப்பது என்பதைப் பற்றியும் விளக்கமாகக் காணலாம்.

# ANCIENT GEOGRAPHICAL DIVISIONS OF TAMIL NAD

## TAMIḺ-NĀḌU OR TAMIḺAGAM AND ITS ANCIENT LIMITS

K. S. VAIDYANATHAN

The designation of a country by the name of the language of the people that inhabited it in large numbers is very ancient. Existence of linguistic provinces or states is well known from ancient Tamil Literature of the Sangam period. The classics of the Tamil Acadamy contain many references to Tamiḷagam or Tamiḷ-Nāḍu, the country or the region of the Tamils who spoke that ancient language. The poets who sang about them and their kings have left accurate descriptions of the countries that surrounded Tamiḷagam, and one of the usual phrases by which they distinguished the outlying countries is by a reference to their language. '*Moḷipeyar-dēyam*' was the general name they applied to these, and this term corresponds to the modern 'Linguistic State'. While Telugu, Vaḍugu and Tuḷu were the languages that were spoken beyond the frontiers of Tamiḷagam, these countries were called Vaḍugu, Vaḍugar-dēyam, Erumai Nāḍu, and Tuḷu Nāḍu. This linguistic delineation is confirmed by foreigners' accounts of the early centuries of the Christian era. The general description of Tamiḷagam as being bounded by the ocean on its three sides is not only confirmed by the notes of these travellers, but the starting point of this Tamiḷagam in the coast line in the west is glaringly brought out by their remarks about 'Ariake' and 'Damirike'. The former is the region of the Aryas as distinguished from the latter which is the region of the Tamils. Damirike is the foreigner's corruption of the word Tamiḷagam. While the author of the Periplus (70 A.D) marks that, after the White Island opposite Karwar, Naura and Tyndis were the first markets of Damirike, Ptolemy (150 A. D.) mentions the latter as the first among the ports of importance. Periplus notes 'Tyndis is of the kingdom of Cerebotheras' (i. e., Kēraḷaputras), 'a village in plain sight by the sea'. Damirica appears in its correct form in the Peutinger's tables (xiith segment), almost contemporary with the Periplus. The cosmography of the geographer, Ravenna, repeatedly mentions Damirica as one of the three divisions of India. These notes make plain that Tamiḷagam was the name by which the region south of the Ariake was known from at least the beginnings of the present era. The demarcating line between the two in the west coast lay south of the river Nangouna and the mart Nitra, which were in Ariake, and above Naura and Tyndis, which were in Damirica. The identification of this river is yet to be correctly made. Naura of the Periplus is no doubt Naravu of the Sangam classics. The Ariyar of the Ariake is also mentioned in the Tamil works. The Chera king Imayavaramban Neduncheral Adan is said to have

subjugated the Ariyar and taken captive the Yavanas. These Yavanas are noted to be the Greek colonists, occupying 'Byzanteion' in Ariake. According to Tamil poets Tuḷu Nāḍu lay north of Koṅkāṇam, and was a different linguistic province. The coast line in the east commencing from Kanyakumari ('the Cape of Comari' (Periplus), 'Komaria, a cape and town' (Ptolemy) extended up to North Pennar, forming the borders of the countries of the Pandya (Pandion), Cholas (Socetai), and Aruvar (Aruvarnoi). The delineation of the boundary of the ancient Tamiḻagam in the north, is very well brought out from some of the references in Sangam Literature, and are confirmed by early inscriptions. The northern boundary is generally stated to be Vēṅgaḍam or the hill range (*paṇmalai-aḍukkam*). Kakkaippadiniyar says the border was the Vaḍugu in the north (*vaḍa tiśai maruṅgir Vaḍugu varambāga*), for that was the language of that region. And this is attested to by Tayangannanar and Mamulanar in their verses included in the Agaṇānūṟu collection. These references to Vaḍugar are to the Andhras or Telugus. But that the general name of Vaḍugar also denoted the Kannada people of Mysore is well indicated by Nakkirar in one of his songs (Agam 253) wherein the Erumai Nāḍu or the Mahisha country (i. e., Mysore) of the Vaḍugar Perumagaṉ is mentioned. This poet mentions that Gaṭṭi Nāḍu was the frontier of the Vaḍugar country (*Vaḍugar muṇai*), and that beyond it lay the linguistic state (*Moḻipeyar dēyam*) of Vaḍugar.

In the region of the Vengadam hills,- the S'ri Parvata (Tirumalai) range, lying north to south, the country in its immediate east deserved to be demarcated. By the Sangam classical references Pavvattiri was one of the capitals of the Tiraiyar, and this is noted in inscriptions as the headquarters of a territorial division called Pavattiri Kōṭṭam, and this lay in the coast region south of the Svarnamukhi river in the Nellore district. From epigraphs it is plain that Paiyūr Kōṭṭam, which was one of the divisions of the ancient Toṇḍai Nāḍu of the Pallavas, included Nellore, Rapur, Gudur and Venkatagiri, and extended up to North Pennar in the north. As such, these were inside Tamiḻagam, being situated in the country of the Tiraiyar and the Pallavas from early times. The early Prakrit copper plates of the Pallavas, (Uruvapalli, Pikira, Vilavatti and Nedungaraya sets), mention the ancient province Muṇḍa Rāshṭra, and this is also found noted in the later epigraphs of the Nellore district. An analysis of the names of the villages mentioned in these copper plates and inscriptions, shows that almost all the places are traceable in the modern map of the Kovur and Atmakur taluks of the Nellore district, and indicate by their location that Muṇḍa Rāshtra or Muṇḍa Nāḍu lay north of the North Pennar. This river was thus the common boundary between Muṇḍa Rāshṭra and Toṇḍai Nāḍu of the Tamiḻagam, in this region, which was in the east of the S'ri Parvata and Nallamallur ranges. The Muṇḍas were a distinct ethnical race, who spoke the Muṇḍa language and their habitat on the banks of the North Pennar was thus fittingly called Muṇḍa Rāshṭra in the early Pallava copper plates. This corresponds to the description by the Tamil poets of the region to the north of the Vengadam of Tiraiyar as a linguistic province '*Moḻipeyar-dēyam*'.

Sangam Literature mentions the chieftain Pulli and his mountainous country in the Vengadam region. His dominion is called *Pulli-Mā-nilam* or *Pulli-nan-Nāḍu*. Though he was also in posssession of Vengadam, probably as the subordinate of the Tiraiyar, his great country was extensive up to the domain

of the Bāṇas. Tamil songs reveal this and inscriptions attest to this. Epigraphs mention his country as Puli Nāḍu and the numerous villages situated inside this Nāḍu are even now traceable in the Punganur and Palamner taluk of the Chittoor district. It is thus clear that to the west of his country lay Mysore, the region of a different *lingua franca* (*Moḷipēyar dēyam*). According to Mamulanar, there was a forest adjoining the country of Pulli in the south, and one of the verses of the Tamil Sangam collections speaks of the linguistic state of Vaḍugar beyond the northern frontiers of his kingdom. It is interesting to note that one of them refers to a difficult pass, situated in his country, that linked the northern region of the Vaḍugar with the Tamiḷagam.

That this state of linguistic demarcation continued to be the predominant feature even in mediaeval times is prominently brought out by Sekkilar in his Periyapurāṇam. While describing the region of the country in which was Uḍuppūr, from where the Saint Kaṇṇappar hailed, he states in clear terms that S'en Tamiḷ was not current in the region beyond Kalahasti (*aṅgaṇ vaḍa tiśai mēlum kuḍakkiṉ mēlum arum tamiḷiṉ vaḷakku aṅgu nigaḷādāga*). Due to force of historic circumstances and the popular demands of the present day, the Tamil Nāḍu we have obtained, is a greatly diminished form of the ancient Tamiḷagam or Homeland of the Tamils.

## DIVISIONS OF TAMIḶAGAM

Broadly speaking, ancient Tamil literature and inscriptions reveal that Tamiḷagam was made up of six Maṇḍalas or great Nāḍus, *viz*, Toṇḍai Nāḍu (Maṇḍalam), Nāḍu Nāḍu (Naḍuvil Maṇḍalam), Chōḷa Nāḍu (Maṇḍalam), Koṅgu Nāḍu (Maṇḍalam), Pāṇḍya Nāḍu (Pāṇḍi Maṇḍalam) and Çhēra Nāḍu (Malai Maṇḍalam). But to-day the last of these Nāḍus has become the Kerala State.

## DIVISIONS OF TOṆḌAI NAḌU

Toṇḍai Nāḍu or Toṇḍai Maṇḍalam was the region that was bounded in the north and the south by the two great rivers, the North Pennar and the South Pennar, and had the sea coast between the too mouths of these rivers as its eastern boundary. In the west it was bordered by the Mahisha Maṇḍala or Mysore country, and still further south it was coterminous with Koṅgu Maṇḍalam. It was divided into twenty-four Kōṭṭams or big divisions which were named after the corresponding headquarters called Tiurvēṅgaḍam, Paiyūr, Chendirukkai (Chandragiri), Īkkāḍu, Puḷai, Puliyūr, S'eṅgāḍu, Āmūr, Ūttukkāḍu, Eyil (Kāñchi), Dāmal, Maṇavil (Maṇavūr), Vēlūr or Mēlūr, Kaḍigai (Ghaṭikāchala), Palkuṉṟam, Kuṉṟavardhanam, Paḍuvūr, S'eṅguṉṟam, S'embūr, Kāḷattūr, Veṇkunram, Īdūr (Īttūr), Ōymānūr. The traditional capital of this ancient Nāḍu was Poḷal, near the Red Hills lake, while Kāñchi or Conjeeveram was the well-known historic capital, a city as old as the Buddha. This Nāḍu was further divided into smaller subdivisions called Nādus and parts named with reference to lakes, hills and other prominent geographical features such as roads. As examples we may cite Naduvilmalai Perumiūr Nādu, Kilmalai Mōkūr-nādu, Puḷalērikil-Nādu, Māmandurēri-kil Nādu, Kīl-waḷi-nādu, Mēl-vaḷi nādu etc. According to the traditional accounts, there were 79 Nāḍus inside this Toṇḍai Maṇḍalam, while according to the references available in inscriptions we have many more. The vast area of Toṇḍai Maṇḍalam can be seen from the fact that it comprised of many of the adjacent taluks of the five districts of the Madras State.

## DIVISIONS OF NAḌU-NĀḌU

South of the Toṇḍai Nāḍu or Toṇḍai Maṇḍalam, was the Naḍu Nāḍu also called Naḍuvu Nāḍu or Naḍuvu-nilai-Nāḍu or Naḍuvil Maṇḍalam. It was situated north of the Chōḷa Nāḍu. This name was given to it on acount of the fact that this Nāḍu lay between the two great kingdoms of Toṇḍai Nāḍu and Chōḷa Nāḍu. It had the other names Milāḍu or Malāḍu and Chēdi Maṇḍalam. It was bordered in the east by the coast extending from the mouth of the South Pennar to the point where the North Veḷḷāṟu river joins the sea. It was made up of portions of Villupuram, Tirukoyilur, Vriddhachalam, and Kallakurichi taluks of the South Arcot district. The major divisions of this Nāḍu were Kuṟukkai-kūṟṟam, Veṇbār-Kūṟṟam, Āṟṟūr-Kūṟṟam, Naṟaiyanūr-Kūṟṟam, Paranūr-Kūṟṟam, Peṇṇākaḍa-Kūṟṟam, Paruvūr-Kūṟṟam, Ugalūr-Kūṟṟam, Nalvayalūr-Kūṟṟam, Viḷandai-Kūṟṟam, and in these were the divisions (Nāḍus) called Viḷupppēraraiyar-Nāḍu, Tirumuṇaippāḍi-Nāḍu, Ōgūr-Nāḍu, Araiyanūr-Nāḍu, Ānāṅgūr-Nāḍu, Kayavapākkai-Nāḍu, Paṭṭānpākkai-Nāḍu, Mēṟkā-Nāḍu, Kīḻkkā Nāḍu, Śeṅgīrai-Nāḍu, Tuṇḍa-Nāḍu, Vāṇagōppāḍi-Nāḍu, Veśālippāḍi-Nāḍu, Muṭṭa-Nāḍu, Āṟṟūr-Nāḍu, Teṇkarai-Nādu and others. Among these Tirumuṇaippādi-Nāḍu was a large and famous division, which was further subdivided into the Nāḍus of Ānmūr, Araśūr, Avivanūr, Dāmar, Ēmappērūr, Iḍaiyāṟu, Kiḻāmūr, Mēlāmūr, Kūdal, Kuṟkkai, Mēlūr, Muḍiyūr, Paṇaiyūr, Pēriṅgūr, Peruganūr, Tiruveṇṇainallūr etc.

## DIVISIONS OF CHŌḶA NĀḌU

To its south lay the ancient Chōḷa country, called Chōḷa Nāḍu, Chōḷa Maṇḍalam or Chōḷika Vishaya. It was like Toṇḍai Nāḍu bordered in the north and south by the two rivers of the same name Veḷḷāṟu, while the sea between the two mouths of the rivers was the boundary in the east. In its west the Chōḷa country was co-terminous with the Koṅgu Nāḍu, in what was generally known as the Maḷa Nāḍu region. Here lay an ancient territorial demarcation called the Karaipōṭṭāṇāṟu, and the Kōṭṭaikkarai. Two of its cities of capital importance were Uṟaiyūr near Tiruchirapalli and Puhār or Kāvērippūmpaṭṭiṇam, the coastal mercantile town at the mouth of Kaveri. The Chola country comprised of the taluks of Tiruchirapalli, Tanjore, Chidambaram, Shiyali, Mayavaram, Mannargudi, Kumbakonam, Nannilam, Tirutturaippundi, Pattukottai etc. In the days of the Sangam period this Chōḷa Nāḍu was made up of principalities over which Vēḷ chieftains held sway. They were Peruṅkōḷi, Kōḷiyur, Uṟaiyūr, Piḍavūr, Vallam, Tañjai, Āṟkāḍu, Ambar, Poṟaiyāṟu, Aḷundūr, Nāṅgūr, Kaḻār, Pōr etc. Places like Uṟandai, Paḷayārai, Ārūr, Kuḍandai, Podiyil and Puhār were among the cities of capital importance. The Kaveri being the main river of this region and running in the middle of the country, a classification of the Nāḍus or divisions which it contained was made with reference to it as Vaḍakarai or Teṇkarai.

*Maḷa Nāḍu* was made up of the Kūṟṟams of Pāchchil, Kalāram, Kuṇṟam, Viḷandaiyūr, Ugaḷūr, Mirai, in the north of the Kaveri. In the south of that river lay Śūralūr-Kūṟṟam and Uṟaiyūr-Kūṟṟam. To the east was Tañjāvūr-Kūṟṟam, Āṟkāḍu-Kūṟṟam, and Kiḻār-Kūṟṟam. The other Kūṟṟams of the Chōḷa Nāḍu were Āvūr-Kūṟṟam, Mēl-Kūṟṟam, Pāmbuni-Kūṟṟam, Śēṟṟūṟ-Kūṟṟam, Paṭṭiṇa-Kūṟṟam, Veṇṇi-Kūṟṟam, Śeṇṇmaṅgala-Kūṟṟam, Śēvūr-Kūṟṟam, Vilivala-Kūṟṟam, Tiruvārūr-Kūṟṟam, Ārvala-Kūṟṟam, Vaṇḍāḷai Vēlūr-

தெண்டக்கோல் செய்வதற்கேற்றவை. அளவு கோல்கள் செய்வதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட மரங்கள் வளைந்தோ, தெறித்தோ உழுத்தோ அல்லது மிருதுவாகவோ இருத்தலாகா.

பொதிகை மலைச் சாரலிலே கண்ணிடை ஒரு சாண் வளர்ந்த மூங்கில் கோலை முழக்கோலாக உபயோகித்த செய்தி சிலப்பதிகாரத்தில் காணக் கிடக்கிறது.

சந்தனம், தேவதாரு, கருங்காலி, தேக்கு, முருக்கு, கமுகு, மா, பனை, வேங்கை, புளி, ஷண்பகம் முதலிய மரங்களிலும், பொன், வெள்ளி, தாமிரம், இரும்பு ஆகிய உலோகங்களிலும் முழக் கோல்கள் செய்யலாம் என்பது வேறு நூல்களில் கூறப்பட்டிருக்கும் கருத்து. தாமரைக்கொடி, தென்னை ஈர்க்கு முதலியனவும் அளவு கோல்களாகப் பயன்படுத்தப் படலாம் என்பது காமிகாகமத்தின் விருப்பம். நடைமுறையில் ஏற்கனவே சொல்லப்பட்டவை இருக்கின்றன. தென்னை ஈர்க்கு முதலிய சிறு பொருள்களை அளப்பதில் அதாவது தற்காலிகமாக (temporary) அளப்பதில் உபயோகப்படுத்தப் படுகின்றன.

### முழக்கோல் செய்முறை :

தகுந்த மரத்தைத் தக்க அளவில் தெரிந்தெடுத்த பிறகு அதனை மூன்று மாதகாலம் நீரில் ஊரவைத்தல் வேண்டும். பிறகு அதனை வெளியிலெடுத்துக் கழுவித் துடைத்து உலர வைத்து (dried) தச்சனைக் கொண்டு பிளக்கச் செய்து சோறுள்ள பகுதியினை நீக்கி விட்டு உறுதியான பாகத்தில் ஒரு முழ நீளமும் ஒரு விரல் அகலமும் அரை விரல் கனமும் உள்ளதாக நன்கு செதுக்கி, அதனில் அளவுக் குறிகள் இடுதல் வேண்டும். இங்ஙனம் தயாரிக்கப்பெற்ற முழக்கோலுக்கு இரு நுனிகளிலும் உலோகத்தினால் பூண்கள் பிடித்தல் வேண்டும் என காமிகாகமம் விரும்புகின்றது.

### அளவுகோல்கள் வரைதல் :

செதுக்கி வடிவாக்கிய கோலை 24 விரல் நீளமுள்ளதாக நறுக்குதல் வேண்டும். அரை முழம், கால் முழம், அரைக்கால் முழம் ஒரு விரல் முதலிய பிரிவுகளைக் குறித்தல் வேண்டும். கிஷ்கு முழத்தை இங்ஙனம் உருவாக்குதல் வேண்டும்.

பிராஜாபத்திய முழம் 25 விரல் நீளமுடையது. இவ்வளவு கொண்ட கோலை நறுக்கி அதனை 24 பாகங்களாகப் பிரித்தல் வேண்டும். முன்னையதைக் காட்டிலும் பின்னையது 1 விரல் கூடினதல்லவா! அந்த ஒரு விரல் 24 பாகங்களாகப் பிரிந்து ஒவ்வொரு விரலுடன் $\frac{1}{24}$ கூறு சேர்ந்து விடுகிறது. எனவே, பிராஜாபத்ய முழத்தை 24 கூறு செய்வதில் இந்தப் பின்னவிரல் நம்மையறியாமலே கணக்கில் சேர்ந்து விடுவது கண்கூடு.

இங்ஙனம் எத்தனை விரல் நீளமுடைய முழமாயினும் அதனை 24 பாகங்களாகக் கொண்டு, $\frac{1}{2}$, $\frac{1}{4}$, $\frac{1}{8}$, $\frac{1}{24}$ முழக் கூறுகளை வரைந்து கொள்ளுதல் வேண்டும்.

### கயிறு திரித்தல் (ரஜ்ஜு) :

தேங்காய் நார், தெர்ப்பைப்புல், ஆலமர உரி, பருத்தி நூல், பட்டுநூல், பனைநார் முதலியன ரஜ்ஜு செய்வதற்குகந்த பொருள்களாகும். திரிக்கப்பெற்ற கயிறு முப்பிரிவுகளையுடையதாகவும் ஒரு விரல் பருமனுள்ளதாகவும் முண்டு முடிச்சுக்களில்லாததாகவும் இருத்தல் வேண்டும்.

### சிதம்பர முழம் :

தமிழ் நாட்டில் பிரும்மாண்டமான ஆலயங்கள் பல இருக்கின்றன. அகண்ட பிராகாரங்களும், நீண்ட மதிற்சுவர்களும், வானளாவும் கோபுரங்களும், எழில்மிக்க விமானங்களும், கலைத்திறன் மிக்க பிரதிமைகளும் நிரம்பிய மாபெரும் ஆலயங்களில் சிதம்பரம், திருவண்ணமலை, தஞ்சை, மதுரை முதலியன மிகப் பிரசித்தமானவை. இக்கலைக்கூடங்களை எந்த அளவு கோல் கொண்டு, நமது பண்டைச்சிற்பிகள் நிருமித்தார்கள் என்று அறிய ஒவ்வொருவருக்கும் ஆசை பிறப்பது இயற்கை. எனவே, அச்செய்திகளையும் இங்கே தருவோம்.

சிதம்பரத் திருக்கோயிலை 25 விரல் நீளமுள்ள பிராஜாபத்ய முழத்தால் கட்டியுள்ளார்கள். இம்முழம் ஆங்கில அங்குலம் $34\frac{3}{8}$க்குச் சமதையான அளவினதாகும். சிதம்பரம் கோயிலைச் சுற்றியுள்ள ஊர்களிலும் பிற இடங்களிலும் இம்முழத்தை பின்பற்றுவது இன்றளவும் வழக்கமாக இருந்துவருகிறது. பிராஜாபத்ய முழம் என்ற பெயர் மறைந்து சிதம்பர முழம் என்றே அழைக்கப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

### தஞ்சை முழம் :

தஞ்சை பெருவுடையார் ஆலயம் தனிச் சிறப்புடையது; கண்டோர் வியக்கும் அழகிய மேரு விமானத்தைப் பெற்றது; தமிழ் நாட்டுச் சிற்பக் கலைஞர்களின் திறமைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு. இத்தகைய ஆலயத்தை நிருமாணிப்பதில் சிற்பிகள் கையாண்ட முழம் சிஷ்கு முழமாகும்; ஆங்கில அங்குலம் 33க்குச் சமதையான அளவினதாகும்.

ஒரு தெண்டப் பிரமாணத்தைக் காட்டும் கல் ஒன்று தஞ்சைப் பெருவுடையார் ஆலய முன் மண்டப தெற்குப் படியினருகில் காணப்படு கிறது. இதனில் வரைக் கோடுகள் இருக் கின்றன. இதன் நீளம் 11 அடி சிஷ்கு முழத் தால் 4 கொண்டது ஒரு தெண்டத்தின் அளவாகு மல்லவா? எனவே, இக்கல் தெண்ட நீளத்தைக் காட்டும். இதனையே அக்கால மக்கள் அசல் அளவாக (standard measure)க் கொண்டிருந் தல் வேண்டும் என்பது வெள்ளிடைமலை.

**திருவண்ணுமலை முழம் :**

கருமுகிலை முத்தமிடும் வானுயர்ந்த இராஜ கோபுரத்தை உடையது அண்ணுமலையப்பன் கோவில். தமிழ் நாட்டில்—ஏன் இந்திய உப கண்டத்திலேயே—மிக உயரமான கோபுரம் இங்குதான் உள்ளது. சாஸ்திரங்களில் கூறப் படும் கோபுர லக்ஷணங்களை நேரில் பார்த்தறிய விரும்பும் வருங்காலக் கலைஞர்களுக்கு மிக ஏற்ற இடம். ஐந்து பிராகாரங்களைப் பெற்ற மாபெரும் சிவாலயம். இதனைச் சமைத்த சிற்பி உத்தம சிஷ்கு முழத்தாலேயே (33 இஞ்சு கொண்ட முழக்கோல்) அளவிட்டுக் கட்டி யுள்ளார். இச்சிற்பியாரின் திருவுருவத்தை மேற்படி ஆலயத்தில் காணலாம்.

அவர் அருகே இவர் உபயோகித்த முழக் கோலின் பிரதி ஒன்று சிறு அளவில் கல்லிலே செதுக்கிக் காட்டப் பெற்றுள்ளது. இத்தகைய முழக்கோலையும் இதனை உபயோகித்த ஸ்தபதி யின் திருவுருவத்தையும் கண்டறிந்தவர் மிகச் சிலரே.

**மதுரை, பழனி முழம் :**

சங்கம் வளர்த்த தமிழ் மதுரையில், பாண்டிய மன்னர் பெருமையோடு வளர்த்த சிற்பக் கருவூலம் மதுரைத் திருக்கோயில். சிற்பத் துறையில் எத்தகைய சந்தேகம் எழுந்தாலும் மதுரைக்குச் சென்றால் நிவர்த்தியாகும் என்பது சிற்பத்துறை மூதாதையர் வாக்கு. பல்வகையி லும் சிறப்பியல்புகளைப் பெற்ற இம்மதுரை யம்பதி ஆலயத்தை நிறுவிய ஸ்தபதி பிடித் திருந்த முழக்கோல் கன்ய சிஷ்கு முழம் ஆகும். 24 விரல் கொண்ட சிஷ்கு உத்தம முழமென்றும், $23\frac{1}{2}$ விரல் கொண்ட சிஷ்கு மத்யம முழம் என்றும், $23\frac{1}{4}$ விரல் கொண்ட சிஷ்கு கன்யச சிஷ்கு என்றும் சிற்ப நூலின் விதி. இம்மூன்றில் மூன்றாவது கடை முழத்தை ஸ்தபதி கையாண்டுள்ளார். இவ்வளவு ஆங்கில அங்குலம் 32க்குச் சமமானது. இந்த முழமே பழனி க்ஷேத்ர முழமுமாகும்.

**அதிதேவதைகள் :**

முழக்கோல், தெண்டக்கோல் இவ்விரண்டுக் கும் அதிதேவதை (Tutelary god) விஷ்ணு வென்றும், ரஜ்ஜுவுக்கு அதிதேவதை வாசுகி என்றும், பொதுவாக அளவைப் பிரமாணங் களில் அதிதேவதை பிரும்மாவென்றும் மான சாரம் இயம்புகின்றது.

அளவு கோலின் அடிப்பகுதி ஸ்வாயம்புவ ரூப மென்றும், நடுப்பகுதி இலட்சுமி ரூபம் என்றும், தலைப்பகுதி விஸ்வகர்ம ஸ்வரூபம் என்றும் காமிகாகமம் கூறுகின்றது.

இத்தேவதைகளைத் தியானித்து வணங்கிய பின்னரே வர்த்தகியானவன் பொருட்களை அளத்தல் வேண்டுமென மானசாரம் வற்புறுத் திக் கூறுகிறது.



# தமிழக உணவு

சா. கணேசன்

தமிழகத்தில் உணவு வகைகள் பலப் பலவாய் பெருகி விளங்குவதைப் பலவகை நூல்களிலும், கல்வெட்டுக்களிலும் காணலாம். உட்கொள்ளுதலுக்குரிய பல சொற்களும், ஆக்கும் முறை பற்றிய பல சொற்களும், உண்டிகள் பற்றிய பல பெயர்களும் அறியக் கிடக்கின்றன. அவற்றைப் பார்த்தால் எத்துணை அருமையாக முன்னேயோர் எதையும் அளந்துரைத்திருக்கின்றனர் என்பது தெற்றெனப் புலனாகும்.

முதலில் உட்கொள்ளுதலுக்குரிய சொற்களைக் காண்போம். அவை அருந்தல், உண்ணல், உறிஞ்சல், குடித்தல், தின்றல், துய்த்தல், நக்கல், நுங்கல், பருகல், மாந்தல், மெல்லல், விழுங்கல் எனப் பன்னிரு வகையாகும்.

**அருந்தல்** = மிகச் சிறிய அளவே உட்கொள்ளுதலை இச் சொல் குறிக்கும். [உதாரணம்: 'மருந்து அருந்தினான்']

**உண்ணல்** = 'துற்றல்' என்றும் கூறப்படும், இச்சொல் பசி தீர உட்கொள்ளுவதைக் குறிக்கும். [உ-ம்: 'வயிறார உண்டான்.']

**உறிஞ்சல்** = வாயைக் குவித்துக் கொண்டு நீரியற் பண்டத்தை ஈர்த்து உட்கொள்வதை இச்சொல் குறிக்கும். [உ-ம்: 'தாமரைத் தண்டு கொண்டு நீரை உறிஞ்சினான்.']

**குடித்தல்** = நீரியல் உணவைச் சிறிது சிறிதாகப் பசி நீங்க உட்கொள்வதை இச்சொல் குறிக்கும். [உ-ம்: 'கஞ்சி குடித்தான்; கூழ் குடித்தான்.']

**தின்றல்** = திற்றி என்றும் கூறப்படும் இச்சொல் கொறித்தலையும், அஃறிணை உயிர்கள் தீனி கொள்வதையும் குறிக்கும். [உ-ம்: முறுக்குத் தின்றான் ;]

**துய்த்தல்** = சுவைத்து மகிழ்ந்து உட்கொள்வதை இச்சொல் குறிக்கும். [உ-ம்: பல் சுவைப் பண்டம் துய்த்தான்.]

**நக்கல்** = நாக்கினால் துளாவி உட்கொள்வதை இச்சொல் குறிக்கும். [உ-ம்: தேனை வழித்து நக்கினான்.]

**நுங்கல்** = முழுவதையும் ஒரு வாயில் ஈர்த்து துறிஞ்சி விரைந்து உட்கொள்ளுவதை இச்சொல் குறிக்கும். [உ-ம்: 'நூறு குடம் கள் நுங்கினான்.']

**பருகல்** = நீரியற் பண்டத்தைச் சிறுகக் குடிப்பதை இச்சொல் குறிக்கும். [உ-ம்: 'நீர் மோர் பருகினான்.']

**மாந்தல்** = பெரு வேட்கையுடன், மடமடவென்று, உட்கொள்வதை இச்சொல் குறிக்கும். [உ-ம்: 'வந்தன எல்லாம் மாந்தி வளர்பசி யோங்க நின்றான்.']

**மெல்லல்** = கடிய பண்டத்தைப் பல்லால் கடித்துத் துகைத்து உட்கொள்வதை இச்சொல் குறிக்கும். [உ-ம்: சீடையை மென்று தின்றான்.]

**விழுங்கல்** = பல்லுக்கும், நாக்கிற்கும் வேலையே இன்றித் தொண்டை வழி குபுக்கென்று உட்கொள்வதை இச்சொல் குறிக்கும். [உ-ம்: 'மாத்திரை விழுங்கினான்.']

இங்ஙனம் பன்னிரு வகையாக உட்கொள்ளுவதை அறிந்தபின் உணவுப் பண்டங்களை ஆக்கும் முறை பற்றிய பெயர்களைக் காண்போம். அவை இருபத்திரு வகைப்படும். அவையாவன: அவித்தல், இடித்தல், கலத்தல், காய்ச்சல், கிண்டல், கிளறல், சுடுதல், திரித்தல், துகைத்தல், துவட்டல், பிசைதல், பிழிதல், பொங்கல், பொரித்தல், மசித்தல் வடித்தல், வதக்கல், வறுத்தல், வாட்டல், வார்த்தல், வெந்நீர்ப்படுத்தல், வேக வைத்தல்.

**அவித்தல்** = ஆவியால் வேகச் செய்வது இது. இது மூவகையாகும். குழாய் முதலியவற்றுள் செலுத்தி பிட்டு முதலியன அவிப்பது பெய்தவித்தல் என்றும், முகந்து இட்டு, இட்டலி போன்றவற்றை அவிப்பது இட்டவித்தல் என்றும், கட்டை, துணித் துளைகளின் வழிப் பிழிந்து இடியாப்பம் போன்றவைகளை அவிப்பது பிழிந்தவித்தல் என்றும் சொல்லப்படும்.

**இடித்தல்** = அரிசி முதலியவற்றை மாவாகவோ

அன்றி அவலாகவோ இடித்து ஆக்குவது இடித்தலாம்.

**கலத்தல்**=பல பண்டங்களைக் கலந்து நீர்மோர் போன்றவற்றை ஆக்குவது கலத்தலாம்.

**காய்ச்சல்**=கஞ்சி, பால் போன்றவற்றைச் சூடேற்றிப் பக்குவம் செய்தல் காய்ச்சலாம்.

**கிண்டல்**=நீரிலோ அன்றி நெய்யிலோ குறிப்பிட்ட பண்டத்தையிட்டு நீர் வற்றக் கிண்டிக் கொண்டேயிருந்து களி, கும்மாயம் போன்றவற்றை ஆக்குதல் கிண்டலாம்.

**கிளறுதல்**=தாளித்தபின் அதனுடன் அவல், பயறு போன்றவற்றை இட்டு, தாளிப்பும் தாளிக்கப்படுவதும் கலந்து விளங்குமாறு செய்வது கிளறுதலாம்.

**சுடுதல்**=அப்பளம், சோளம், பனம்பழம் முதலியவற்றை நேரடியாக நெருப்பின் தணலிலிட்டு வேகுமாறு பக்குவம் செய்தல் சுடுதலாம்.

**திரித்தல்**=பாலில் பிறை மோரிட்டுத் தயிராக மாறச் செய்வது போன்றவை திரித்தலாம்.

**துகைத்தல்**=ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட பண்டங்களை நசுக்கிக் கலந்து ஒன்றுகி விடுமாறுமல்லித்துகையலைப் போலச் செய்வது துகைத்தலாம்.

**துவட்டல்**=நீரில் வெந்த வாழைப்பூ, கீரை போன்றவற்றைத் துவண்டு செறியுமாறு பக்குவப்படுத்துவது துவட்டலாம்.

**பிசைதல்**=வேங்கைமா, தயிர்ச்சோறு முதலியவற்றை அவ்வவற்றிற்குரியவற்றைப் பெய்தும் தூவியும் கையால் நன்கு குழைந்து கலக்குமாறு பிசைவது பிசைதலாம்.

**பிழிதல்**=தேனடை, பழம் முதலியவற்றின் சாற்றைக் கையால் அல்லது துணி முதலிய கொண்டு சாறு வரச் செய்தல் பிழிதலாம்.

**பொங்கல்**=அரிசி போன்றவற்றைத் தனியாகவோ அன்றி, பருப்பு முதலியன கூட்டியோ கொதிநீர் வடிக்காமல் அளவாக நீர் பெய்து ஆக்குவது பொங்கல் ஆம்.

**பொரித்தல்**=(1) கடுகு முதலியவற்றைக் காயும் எண்ணெயில் இட்டுத் தாளித்து நீரில் வெந்த அல்லது பச்சைக்கறி காய்களை அத்துடன் இட்டு வேண்டிய நேரம் அடுப்பில் இருக்கச் செய்து ஆக்குவதும்.

(2) அரிசி, நெல், கடலை போன்றவற்றை வரை யோட்டிலிட்டுப் பொரியச் செய்வதும் பொரித்தல் ஆம்.

**மசித்தல்**=கீரை, கிழங்கு போன்றவற்றை நன்கு வேக வைத்து அவற்றை மத்துக் கொண்டு மசித்துக் குழையச் செய்வது மசித்தலாம்.

**வடித்தல்**=அரிசி முதலியவற்றைக் கொதிநீரில் இட்டு, வெந்த பின்னர் உபரி நீரை வடித்து விட்டுச் சோருக்கல் வடித்தலாம்.

**வதக்கல்**=காய்கறி முதலியவற்றை எண்ணெயிலிட்டு நீர்ச்சத்து நீங்கி அவை வதங்கித் துவளுமாறு ஆக்குவது வதக்கலாம்.

**வறுத்தல்**=காய் கிழங்கு முதலியவற்றை நன்கு காயும் எண்ணெயில் இட்டு மொறமொறவென ஆமாறு ஆக்கல் வறுத்தலாம்.

**வாட்டல்**=பிஞ்சுக்காய், அல்லது பசுங்கதிர் போன்றவற்றை நெருப்பிலிடாது அதன் அனலில் வாட்டிப் பதமாய்ப் பக்குவம் செய்வது வாட்டல் ஆம்.

**வார்த்தல்**=நன்ருகக் காய்ந்த தோசைக்கல் போன்றவற்றில் கரைத்த மாவை வார்த்துத் தோசை, அப்பம் முதலியவற்றைச் சுடுவது வார்த்தலாம்.

**வெந்நீர்ப்படுத்தல்**=நன்ருகக் கொதிக்கும் நீரில் பழம், காய்கறி, முட்டை போன்றவற்றை இட்டு வேகும்படி செய்தல் வெந்நீர்ப் படுத்தலாம்.

**வேக வைத்தல்**=நெருப்பிலோ, அனலிலோ, கொதி நீரிலோ, ஆவியிலோ, எண்ணெயிலோ, அன்றி வேறு வழியிலோ எப்பண்டத்தையும் பச்சைத் தன்மையிலிருந்து மாற்றி உண்ணத் தக்கதாய் வெந்ததாய்ச் செய்வது வேக வைத்தலாம்.

மேலே கண்ட இருபத்தொரு வகையன்றி 'ஊற வைத்தல்' போன்ற வேறு முறைகளும் தமிழகத்தில் இருந்து வருவதை நாமறிவோம். உணவு வகைகளை நாம் பார்ப்போமானுல் பலப்பல பெயர்களைக் காண்போம். இலக்கியம், கல்வெட்டு, நிகண்டுகள் ஆகியவற்றில் எத்தனை எத்தனேயோ உண்டிப் பெயர்களை நாம் காணலாம். அவற்றை முழுவதும் இக் கட்டுரையில் அடக்கிவிட முடியாது. அதற்கெனத் தனி நூல் ஒன்றை எழுதினுற்ருன் ஒருவாருக முழு விளக்கம் கிட்டும். எனவே ஓரளவு பழம் பெயர்களை அறிந்தமட்டும் காணலாம்.

**அக்காளி**=கோயிற் பிரசாதம்.

**அக்காரவடிசில்**=சர்க்கரைச் சோறு.

**அக்கிரம்**=பாயசம்.

**அடை**=பயறுகளும் அரிசியும் கலந்து ஆட்டிப் பிசைந்து வடை போலத் தட்டித் தோசைக் கல்லில் இட்டுச் சுடுவது இது.

**அதிரசம்**=அரிசி மாவும் சர்க்கரையும் ஏலம் முதலியனவும் கலந்து நெய்யில் பொரிப்பது இது.

அப்பம் = அரிசி, சர்க்கரை சேர்த்து தோசை போல வார்த்தெடுப்பது.

அமுத கலசம் = பூரணக் கொழுக்கட்டைபோன்ற இதனுள் பூரணத்திற்குப் பதிலாக, பானகம் போன்ற பாகு இருக்கும்.

அவல் = ஊறிய நெல்லை இடித்து உமி போக்கிய ஒன்று.

அவலமுது = அவலைக் கொண்டு செய்யும் உணவு.

அவித்துவையல் = வெந்து குழைந்த, கூட்டுப் போன்ற ஒரு வகைக் கறி.

அவிழ் = சோற்றுப் பருக்கை.

ஆணம் = குழம்பு; குழம்பின் காய்.

ஆப்பம் = தோசை போன்றது மூடிச் செய்யப் படுவது.

இட்டலி = தமிழனின் தனிப்பெரும் சிற்றுண்டி.

இடி = அரிசி மா.

இடியாப்பம் = அரிசி மாவால் செய்யப்படுவது.

இலட்டுகம் = உருண்டை வடிவாயமைந்த, மாவால் செய்த, இனிப்புத் தின்பண்டம்.

இலைக்கறி = கீரையால் செய்த கறி.

இறைச்சோறு = பெரியோர்க்கு அல்லது வந்து தங்கினோர்க்கு அளிக்கும் சோறு (?)

உக்காரி = உக்காரை என்றும் கூறப்படும் இது பயற்றம் பருப்பில் செய்த கேசரி போன்ற இனிப்புத் தின்பண்டம்.

உழுத்தங்களி = 'களி' காண்க.

உழுத்தப்பம் = ஊத்தப்பம் என இன்று வழங் கப்படுவது.

எச்சோறு = ஏச்சோறு, எற்சோறு என்றும் வழங்கப்படும் இது பொதுப் பணியாளர்க்கு முறை வைத்து அளிக்கப்படும் உணவு.

எண்ணுப்பூரி = பூரிகை எனவும் வழங்கப்பெறும் இது ஒரு வகை இனிப்பு அப்பமாகலாம் (?) பூரி = நெல்.

எள்ளுண்டை = எள்ளுப் பொரியும், கருப்பட்டிப் பாகும் சேர்த்து உருட்டியது இது.

எள்ளோரை = எள் கலந்த சோறு; சித்திரான் னங்களுள் ஒன்று.

ஐங்கறியமுது = இலைக்கறி, தெற்றிக்கறி, புழுக் குக்கறி, புளிங்கறி, பொரிக்கறி என்ற ஐந் தினையும் ஒருசேரக் குறிப்பது இது.

கஞ்சி = தானியம் அல்லது மாவைக் கொதிநீரில் இட்டு நன்கு வெந்தபின், குடிக்கும் எளிய உணவு.

களி = அரிசி, உழுந்து, கேழ்வரகு, சோளம் போன்ற தானியங்களின் திரித்த மாவை நீரில் கரைத்துக் கிண்டி (அல்வா போல) ஆக்குதல். கெட்டிபட்ட கூழ் என்னலாம் இதை. எனவே களித் தின்னல் என்பது மரபு.

கறி = பல முறைகளில் சமைக்கப்படும் வியஞ் சனங்களின் பொதுப் பெயர்.

கும்மாயம் = பாசிப்பயிற்று மாவில் கருப்பட்டி கலந்து கிண்டி வெண்ணெய்போல அமைப் பது.

கூழ் = களி போன்றதே; ஆனால் அல்வா போல அல்லாமல் பாயசம் போல நீர்த்திருக்கும். 'எனவே கூழ் குடித்தல்' என்பதே மரபு.

கொதி = நைவேத்தியத்திற்குரிய வெண்சோறு; ஒரு குறிப்பிட்ட அளவுள்ளதாம்.

கொழுக்கட்டை = இது பலவகைப்படும். பிடி கொழுக்கட்டை, பூரணக் கொழுக்கட்டை, பிட்டுக் கொழுக்கட்டை, நீர்க் கொழுக்கட்டை, மோர்க் கொழுக்கட்டை, பாற் கொழுக்கட்டை, பதநீர்க் கொழுக்கட்டை என்றெல்லாம் பேர் பெறும் அவை. மோதகம் என்றும் பெயர் பெறும்.

கொற்று = கத்திரிக்காய் போன்றவற்றைத் தீயிற் சுட்டு புளியுடன் பிசைந்து ஆக்கும் ஒரு வகைத் துவையல். இன்று கொஸ்து என வழங்கும்.

சட்டிச் சோறு = ஆக்கிய சட்டியுடன் கூடிய சோறு.

சம்பா = அரிசிச் சோற்றுடன் மிளகு சீரகப் பொடியும் உப்பும் கலந்து நெய் விட்டுக் கிளறு வது.

சுருளமுது = வெற்றிலை பாக்குப் பட்டியல்.

சோறு = நெல்லரிசி, புல்லரிசி, வரகரிசி போன்ற வற்றைப் பொங்கி அல்லது வடித்துச் சமைத் தது.

தட்டை = முறுக்கு மாவை அப்பளம் போலத் தட்டி எண்ணெய்விட்டுப் பொரித் தெடுப்பது.

தயிர் அமுது = தயிர்.

தயிர்ப்போனகம் = தயிர்ச் சோறு.

தயிர்ப்போனக அமுது = தாளித்து ஆக்கிய சிறந்த தயிர்ச் சோறு.

தளிகை = பலவிதமாய் தாளித்து அமைத்த சித்திரான்ன வகைகள்.

திருப்போனகம் = இவகைக் கறியும், பாயசமும், வடையும், பருப்பு, நெய்யுடன் வைத்துச் செய் யும் நைவேத்தியம்.

தினைமா = தினையின் மா; தேனொடு கூட்டிப் பிசைந்ததையும் குறிக்கும்.

துகையல் = நன்ருக அறைபட்டு வெண்ணெய் போல் ஆவது. மல்லித் துகையல் போல்வது.

துவை = புளி சேர்த்து அறைக்கும் துகையல் அல்லது புளிக்கறி.

தெற்றிக்கறி = கறிவகையில் ஒன்று; மசித்தலா யிருக்கலாம் (?)

**தேங்குழல்** = கட்டைத் துவாரத்தின் வழிப் பிழிந்து செய்வது.

**தொக்கு** = நீர்ச்சத்து அகல வதக்கி, நன்கு நசுக்க இடித்துக் கலக்கச் செய்வது இது.

**தோசை** = அரிசி, உழுந்து கலந்த மாவால் சுடுவது இது. கோதுமை, கேப்பை, பயறு முதலிய கொண்டும் செய்யப்படும்.

**நழுவமுது** = அரிசிக் களி.

**நாட்டிருவமுது** = பகல் நேரத்து உணவு; நாள் தோறும் படைக்கும் உணவு.

**நீச்சோறு** = நீர் விட்டுக் குளிர்ந்த சோறு.

**பஞ்சவமுது** = பஞ்சாமிர்தம்.

**பண்ணிகாரம்** = வெள்ளைப்பண்ணிகாரம், கற்கண்டுப் பண்ணிகாரம், பயற்றம் பண்ணிகாரம், பாற்பண்ணிகாரம், தேங்காய்ப் பண்ணிகாரம், காரப் பண்ணிகாரம் எனப் பல வகைப்படும். இது எண்ணெய் நிறைந்த இருப்புச் சட்டியில் பக்குவம் செய்தரைத்துக் கரைத்த மாவைக் கரண்டியால் ஊற்றி வேக வைப்பது.

**பழையது** = நீர் ஊற்றிய முன்னை நாட் சோறு.

**பாற்சோறு** = பாலில் வெந்த இனிப்புச் சோறு, க்ஷீரான்னம், கற்கண்டுச்சோறு என்றெல்லாம் இன்று வழங்கும்.

**பிண்டி** = தினைமாவாற் செய்யப்பட்ட உண்டி.

**பில்லடை** = இடியப்பம் போன்று பிழிந்து காய வைத்து அப்பளம் போல எண்ணெயிலிட்டுப் பொரித்தது.

**புழுக்குக் கறி** = குழைய வேகவைத்துச் செய்த வாழைக்காய், கருணைக்கிழங்கு போன்ற கறி.

**புளிங் கறி** = புளிச் சாற்றில் வெந்த அல்லது பொறித்த கறி.

**புளியோரை** = வெந்த புளிச்சாறு எண்ணெய் தாளிப்பு முதலியவற்றோடு பிசைந்த சோறு.

**பூரிகை** = எண்ணைப்பூரி காண்க.

**பெருஞ்சோறு** = மாண்டோர்களை முன்னிட்டு வழங்கும் சோறு.

**பொங்கல்** = குறித்த அளவு நீர் வைத்து கஞ்சி வடிக்காமல் அரிசியைச் சமைப்பது.

**பொடி** = சோறு, பலகாரத்துடன் கொள்ளத் தக்கது. மிளகு பொடி, கறிவேப்பிலைப் பொடி பருப்புப் பொடி என்று எத்தனையோ வகைப் பொடிகள் உண்டு.

**பொடித்தூவல்** = காய் கிழங்குகளை மிகப் பொடியாக நறுக்கிப் பொரிக்கும் ஒருவகைக் கறி.

**மசியல்** = கிழங்கு, கீரை, காய்கறிகளை நன்ருகக் குழைய அவித்து மத்திட்டுக் கடைந்து மசியச் செய்யும் ஒரு வகைக் கறி.

**மணகோலம்** = ஒமப் பொடி பிழிந்து அதனுடன், பொரிகடலையும், தேங்காய்ப் பல்லும் சேர்த்து வெல்லப்பாகு கூட்டிச் செய்வது இது. மனோகரம் என்றும் பெயர் பெறும்.

**முறுக்கு** = கையால் முறுக்கிச் சுற்றுவதும், கட்டைத் துவார வழி பிழிவதுமான தின்பண்டம்.

**வடகம்** = அரிசி முதலான தானிய மாவைக் கூழ் ஆக்கி அதை வெயிலில் வார்த்தும், பிழிந்தும், கிள்ளியிட்டும் உலர்த்திச் செய்வது வடகம். இதை வடாம் என்றும் கூறுவர்.

**வடை** = உளுந்து வடை, ஆமை வடை, காரா வடை, கற்கண்டு வடை, பாகு வடை எனப் பல வடைகள் உண்டு. கையினுல் தட்டி எண்ணெயில் வேக வைப்பது இது.

**வற்றல்** = காய் கறிகளை அல்லது கிழங்குகளை மோரில் ஊற வைத்து, அல்லது நீரில் வேக வைத்து உலரச் செய்தல் வற்றலாம்.

**வறளி** = காய் கறி முதலியவற்றைப் பச்சையாக வெயிலில் உலரவைப்பது வறளியாம்.

**வியஞ்சனம்** = பலவகைக் கறிகளையும் குறிக்கும் சொல்.

**வெச்சமுது** = சூடு தணியாத உணவு.

**வெட்டிச்சோறு** = ஊர்ப் பணியாளருன வெட்டிக்கு அளிக்கும் முறைச்சோறு.

**வெஞ்சனம்** = ‘வியஞ்சனம்’ காண்க.

**வெம்புழுக்கு** = வெறுஞ்சோறு; வெண்சோறு.

# TAMILNAD IN HISTORY

Dr. T. V. MAHALINGAM

In the historical map of India the Tamil country has a pride of place. As one of the earliest habitats of man, it has a hoary antiquity. Archaeological explorations and excavations have revealed the continuity of civilized life in this region ever since palaeolithic period. It has been found that the palaeolithic man of Tamilnad lived in the region around Madras. The discovery of microlithic tools in the Tirunelveli district establishes that his successor of the mesolithic age lived in that area. Traces of the neolithic man who came next after him are to be found in different parts of the Tamil country. Unlike his predecessors who were food gatherers, he was a food producer with a knowledge of the use of metals like bronze, copper and, later, iron. The description of India as an 'ethnological museum' is in a restricted sense applicable to Tamilnad also in whose racial texture one finds the blending of such elements as Negroid, Proto-Austroloid, Proto-Mediterranean, Alpine, Armenoid and Nordic.

The really historical period of Tamilnad begins with the fourth century B. C. The Tamilnad of that period, known as Tamiḷagam, comprised the region between the Vēngaḍam hill in the north, Cape Comorin in the south and the two seas on the east and west. Our knowledge of the history of this region prior to the Christian era is very vague. The references to the Pāṇḍya country in a scholium of Kātyāyana on Pāṇini and in the works of Megasthenes and Kauṭilya are the earliest available data. In the second and thirteenth Rock Edicts of Aśoka, we hear of the southern kingdoms, besides Ceylon-the Cōḷas, Pāṇḍyas, Satiyaputa, Keralaputra and Tāmbraparrṇī. Of these, the Pāṇḍya monarchy was in the extreme south and included the modern districts of Tirunelvēli, Madurai, Rāmanāthapuram and South Travancore. It had Madurai on the banks of Vaigai as its capital and Koṛkai and Sāliyūr on the Tāmbraparṇī as ports. The Cōḷa kingdom, which comprised the region between the two Veḷḷār rivers, included the present Tanjavur and Tiruchirappalli districts and had Uṛaiyūr, in the suburb of the modern Tiruchi town, as capital and Puhar as port. The Cēra kingdom, with Vaṇji as capital, and Toṇḍi and Muśiri as ports, was lying on the western coastal strip. The real identity of the 'Satiyaputa' of Aśokan inscriptions is uncertain; the usually accepted view is that they were the same as the Adigaimān chiefs of Tagaḍūr.

The early Śangam classics throw a flood of light on the political institutions, social and economic life of the people and the religious observances prevalent in the early centuries of the Christian era. But, in them, accounts of political history are very meagre and it is not until the rise of the Pallavas of Kāñci that we rise from the twilight of vague historical references to the limelight of recorded history.

The Pallavas appear to have held

supremacy in the Toṇḍaimaṇḍalam and the present southern districts of Andhrapradesh from at least about the second quarter of the fourth century A.D. But all their records, until the reign of Simhavarman, grandfather of Mahēndravarman I (610–630 A.D.), are in Sanskrit and not Tamil. It is in the Pallankovil copperplate grant of Simhavarman that we come across the first instance of Tamil being used for Pallava official records. However, the recent interpretations of the Śaka-type of silver coins issued by some Śātavahana rulers have shown that Tamil, along with Prakrit, was once extensively used as far north as modern Maharashtra. It is very likely that future researches in this regard will throw more and welcome light, not only on the early history of the southern dynasties, but also on the wider nature of the area under the linguistic and cultural hegemony of Tamil.

The history of the Pallavas from the earliest known ruler, Simhavarman of the Mancikallu stone inscription, to Simhavarman, father of Simhaviṣṇu, is until now a tentative pedigree of rulers. No two scholars agree either on their genealogy or on chronology. But their history from about the end of the sixth century can be reconstructed largely with the aid of their copper-plate charters and lithic records. Mahēndravarman I, the first in this well-known list of Pallava rulers, is taken to be the king in whose reign rock-architecture in the Tamil country was initiated. His son and successor, Narasimhavarman I, was the famous conqueror of Vātāpi and the author of most of the mounments at Mahābalipuram. Rājasimha Narasimhavarman II was another great rular of the dynasty, who built the grand structural edifices of the Kailāsanatha at Kāñcīpuram and the Shore Temple at Mahābalipuram. The next important rular of the dynasty was Nandivarman Pallavamalla, a prince of a collateral branch, who ascended the throne even as a young boy and had a long reign of about sixty-five years. The Pallava tail-ender was Aparājita, in whose reign the Cōḷas under Vijayālaya and Āditya asserted themselves in the Tanjāvūr area.

Under Āditya (871–907 A.D.) and Parāntaka (907–955 A.D.), the Cōḷa kingdom expanded in the north, and the entire Toṇḍaimaṇḍalam region was absorbed in its fold. Under the illustrious Rājarāja, the Cōḷa kingdom became what may not be incorrectly termed as 'the Cōḷa Empire'. Besides the extension of the peripheries of the kingdom, an active commercial, cultural and, to a lesser extent, also political-contact with South-east Asian kingdoms was maintained. Under Kulōttunga I, the Cōḷa and Cāḷukya kingdoms were merged under a single banner, but, in the following centuries, the kindom shrunk in size under weak hands.

The rise of the Pallavas in the late sixth century in the Toṇḍaimaṇḍalam synchronised with the ushering in of a new era in the history of the extreme south. The Pāṇḍyas of the Śangam age, whose supremacy was effectively overshadowed by the Kaḷabhras for nearly three centuries, redeemed themselves and established their power at Madurai. Some of the early rulers of the dynasty were Śēndan, Arikēśari Māravarman, Kōccaḍaiyan, Rājasimha, Neḍunjaḍaiyan, Śrīvallabha etc. The increasing power of the Cōḷas in the north inevitably eclipsed the Pāṇḍyas, though they were occasionally raising their heads. Ultimately they established a second, if short-lived, kingdom. History knows also of such minor dynasties like the Bāṇas and Kadambas, Muttaraiyars and other chiefs, who played ā secondary role in the political history and whose political loyalties

often changed with the exigencies of time.

South India received a rude shock by reason of frequent Muslim raids from the time of Malik Kafur in the early years of the fourteenth century. Though a Muslim Sultanate was established at Madurai in 1334 A.D. and Hindu institutions suffered considerably, it is in the South that one finds today the pristine Hindu culture ; and this, in no small measure, was due to the emergence of the Vijayanagar dynasty, which offered effective resistance to aggressive Islam and encouraged the progress of everything that was cherished by the Hindus. With the fall of the Vijayanagar kingdom, the Nayak feudatories rose into prominance in Madurai, Jinji and Tanjāvūr. The last place was conquered by the Marathas in 1676 and was under their authority till 1800, when the British took over. In the eighteenth century, the European powers, who had come to South India as commercial people, were struggling with one another to establish themselves in the region. The British overcame their rivals, the Dutch and the French, and ultimately entrenched themselves in the region. The Nawabs of the Carnatic, who also appeared on the political horizon in the eighteenth century, sought their protection and handed over to them little by little the administration of the Carnatic and, in 1801, it completely went into their hands. Tamilnad became a part of the Madres Province.

Through-out the successive historical periods, the Tamil country has contributed to the cultural heritage of India. In fact, her history and institutions are inextricably intertwined with those of the whole country, not-withstanding some of their individualistic features which mark them as distinct. The ancient Tamil genius has been profoundly and succinctly expressed in literature and learning, art and architecture, besides administrative institutions and philosophy. The present-day Panchayat Raj can be traced back to the concept of village autonomy of ancient times. The conduct of election to village assemblies, gleaned from Uttiramērūr inscriptions, is an eloquent testimony to enlightened political practices during the period of the Cōḷas. We hear in inscriptions of educational institutions at Kāñcī, Eṇṇāyiram and Bāhūr, which were veritable, if less known, universities of their own kind.

It is indeed significant that two of the greatest philosophers and reformers in Hinduism, Śankara and Rāmānuja, hailed from the south. The *bhakti* movement in this region, which saw its beginning in the seventh century and ran its course through the twin streams of Śaivism and Vaiṣṇavism, produced a large volume of religious literature, ranging from the ecstatic hymns of devotional poetry of the Nāyanmārs and Āḻvārs to recondite philosophical works, both in Tamil and Sanskrit, which it is not possible to list here.

The greatest contribution of Tamilnad to Indian and world thought and culture alike is the *Tirukkuraḷ* of Vaḷḷuvar. This work, written in the 'Augustan Age' of Tamil literature, incorporates in small couplets, among other things, the best ethical codes to be adopted in life.

In the field of art, the inner creative urge of the Tamils has found ample expression in architecture and sculpture, painting and music. The imposing tower in the temple complex, which should not be confused with the superstructure over the *sanctum sanctorum*, is a speciality of South India, particularly Tamilnad. The best age of Tamil sculpture was the period between the middle of the ninth to the end of the eleventh centuries and productions of this phase are found

in numerous temples, built during the period throughout the Tamil country. In the art of metal casting, which rose to great prominence under the Cōḷas, the Tamil *sthapatis* attained much technical perfection that is really superb.

More than all, it must be recognised that Tamilnad was second to none in maintaining a harmonious liason with different countries and varying cultures and assimilating the best among them. The eternal universal outlook of Tamiḷagam is best expressed in the old maxim '*yādum ūrē yāvarum kēḷīr*'. It can be asserted with-out fear of contradiction that the entire history of Tamilnad, covering over nearly two thousand years in time scale, bears witness to this claim.



# BATTLE FIELDS OF TAMIL NAD

## THE SANGAM AGE

| | |
|---|---|
| **Battle of Venni :** | A place near Tanjore, now called by the name Kovilvenni, where a battle took place between Karikala and eleven Velirs, probably his kinsmen and neighbours. |
| **Second Battle of Venni :** | Between the Chera king Peruncheral-Adan and Karikala Chola. As he was wounded in the back, the Chera king starved unto death. |
| **Third Battle of Venni :** | Between Karikala and Pandya, where Karikala defeated two kings. |
| **Battle of Tirupporpuram :** | Between the Chola Peruvirarkilli anb Kudakko Neduncheral Adan. Both died in the battle field. |
| **Battle of Kurappalli :** | This place is the modern Tiruvidai-kazhi, Between the Chera king Kalangai Kanni, Narmudicheral and the Chola Perum Tirumavalavan, where the Chola King was defeated. |
| **Battle of Mohur :** | Between Cheran Senguttuvan and Palaiyan, the Chief of Mohur, where Palaiyan was defeated. |
| **Battle of Gangai :** | Between Cheran Senguttuvan and Kongu kings of the North, who were aided by the Kalingas, Aryas, etc., where the Chera was victorious. |
| **Battle of Avur :** | Between two Chola Princes, viz., Mavalattan and Nedumkilli. Nedumkilli was defeated. |
| **Battle of Kudarparandalai :** | Between the Pandya Palaiyan Maran and the Chola Killivalavan, where the Chola was defeated. |
| **Battle of Talaiyalanganam :** | This place is in the Nannilam Taluk of Tanjore District. Between Pandya Nedunjeliyan and the allied forces of the Chola, Titiyan, Ezhini and Erumayuran, where the Pandya was victorious. |
| **Battle of Tirukkoyilur :** | Situated in South Arcot District. Between Chola Killivalavan and Malaiyaman Kari, where Malaiyan was defeated. |
| **Battle of Kulamurram :** | Located in Chera Nadu. Between Chola Killivalavan and the combined forces of Chera and Pandya, where Killivalavan was killed. |

**Tagadur :** Modern Dharmapuri in the Salem district. Between the Chera king Peruncheral Irumporai and Kari on one side, and Adiyaman of Tagadur, Ori, the Pandya and the Chola on the other, where the Chera was victorious.

**Battle of Kanapereyil :** Between the Pandya Ukkiraperuvazhudi and Vengaimarpan, the chief of Kaanapereyil; where the later was defeated.

**Battle of Kazhumalam :** Between the Chola Senganan and the Chera Kanaikkal Irumporai, where the Chera was defeated and imprisoned in the port of Kudavayil. Here the Chera king committed suicide, on account of the delay in the supply of drinking water to him.

## PALLAVA PERIOD

**Battle of Puilalur :** About A. D. 620. It is 10 miles from Kanchi. Between Mahendravarman I and the Chalukya Pulikeasi II, where the latter was defeated.

**Battle of Manimangalam :** A. D. 642. Twenty miles east of Kanchi. Between Pallava Narasimhavarman and Chalukya Pulikesi II, where the latter was defeated. Narasimha proceeded there-upon to Vatapi, where he planted a pillar of victory.

**Battle of Peruvalanallur :** About A. D. 699. Ten miles away from Trichy. Between Pallava Paramesvaravarman and Chalukya Vikramaditya, where the Pallava was victorious.

**Battle of Nandigramam :** About A. D. 731. It is the present Nathankoil near Kumbakonam. Between Pallava Nandivarman and Pandya Rajasimha I, where Nandivarman was first captured and imprisoned and then released by his Commander-in-Chief, who defeated the Pandya.

**Battle of Pennagadan :** About A. D. 767. Between Pandya Parantaka Neduncadaiyan and the Pallava Nandivarman II, where the latter was defeated.

**Battle of Vizhinjam :** About A. D. 768. Eight miles east of Trivandrum. Between the Pandya Parantaka Nedumjadayan and Ay-vel, where the latter was defeated.

**Battle of Tellaru :** About A. D. 845. Situated near Vandavasi. Between the Pallava Nandivarman III and Pandya Srimara, where the former was victorious.

**Battle of Arisilar :** About A. D. 845. Situated near Kumbakonam. Between Pandya Srimara Sri Vallabha and Pallava Nripatunga, where the Pallava was victorious.

**Battle of Tiruppurambiyam :** A. D. 885. Situated near Kumbakonam. Between Pandya Varaguna II and the Pallava Nripatunga, assisted by the Chola Aditya, where the Pandya was defeated.

## CHOLA PERIOD

**Battle of Vellur :** About A. D. 910. Situated near Madurai. Between the Pandya Rajasinha III and the Chola Parantaka, where the Chola won.

**Battle of Vallam :** About A. D. 916. It is the modern Tiruvalam in North Arcot District. Between the Chola Parantaka and the Bana of Vahaippadi, where the Chola won.

**Battle Takkolam :** A. D. 949. It is near Arkonam. Between the Chola Rajaditya and the Rashtrakuta king Krishna II, where Rajaditya was killed by an arrow of the Ganga king Pudugan.

**Battle of Cevur :** About A. D. 961. Between Sundara Chola and Vira Pandya, where the latter was defeated.

**Battle of Tenur :** A. D. 1003. Situated in Bijapur taluk. Between Rajaraja and Chalukya Satyasraya, where the latter was defeated.

**Battle of Poondur :** About A. D. 1048. This place is on the banks of Krishna. Between the Chola Rajadhiraja and Chalukya Ahavamalla, where the latter was defeated.

**Battle of Koppam :** A. D. 1053-4. Between Chola Rajadhiraja and Chalukya Somesvara.

**Battle of Kudal Sangamam :** A. D. 1016-2. Located midway between Tungabhadra and Krishna. Between Rajaraja II and Chalukya Somesvara I, where the Chola won.

**Battle of Kalinga :** About A. D. 1110. Between Chola Kulottunga I and the Kalinga king Anantavarman Chola Ganga, where the former won.

**Battle of Thiruvedagam :** About A. D. 1172. Between Sambuvaraya, the Commander-in-chief of the Chola king Rajadhiraja II and Virapandya, where the latter was defeated.

**Battle of Nettur :** About A. D. 1182. Between Virapandya and Chola Kulottunga III, where Vira Pandya was driven away.

**Battle of Tanjore :** About A. D. 1217. Between the Pandya Maravarman Sundara I and the Chola Rajadhiraja III, where the Pandya won and Tanjore and Uraiyur were burnt by the victor.

**Battle of Tellaru :** About A. D. 1226. Thirty miles from Trichy. Between Kopperunjingan and the Chola Rajaraja III, where the Chola king was imprisoned at Sendamangalam.

**Battle of Mahendramangalam :** About A. D. 1230. Between Hoysala Narasimha and Maravarma Sundarapandya I, where the Pandya was defeated.

**Battle of Kannanur :** About A. D. 1262. Situated near Trichy. Between Hoysala king Somesvara and Sadaiyavarman I, Sundara Pandya, where the former was defeated.

## VIJAYANAGAR PERIOD

**Battle of Adoni :** About 1366. Bettween Muhammad Shah Bahmani and Bukka I.

**Battle of Pangul :** About A. D. 1513. Situated to the east of Raichur. Between Krishnadevaraya and Kutb Shah, in which the latter was victorious.

**Siege and Battle of Raichur :** A. D. 1520. Between Sultan Adil Shah and Krishna Deva Raya, where the former was defeated.

**Battle of Talikota :** A. D. 1565. Twenty Five miles north of Krishna. Between Ramaraya and Nizamshah and the former was killed.

**Siege of Adoni :** 1568. Adil Shah invaded the territory of Adil Shah and laid siege to this place.

**Battle of Toppur :** A. D. 1616. It is very near Grand Anicut in Trichy District. Between Yachama, of the Vijayanagar family and Jagga Raya, in which the latter was defeated.

**Battle of Virunchipuram :** A. D. 1646. Between Sriranga and Mustafa-Khan, in which the former was defeated.

## தமிழகத் தலைநகர்கள்

| | |
|---|---|
| புகார் : | காவிரிப்பூம்பட்டினம். சங்க காலச் சோழ மன்னர்களின் முதல் தலைநகர். |
| மதுரை : | சங்க காலம் முதல் பாண்டிய மன்னர்களின் தலைநகர். |
| உறையூர் : | சங்க காலம் முதல் கி.பி. 9ஆம் நூற்றாண்டு வரை சோழ மன்னர்களின் தலைநகர். |
| தஞ்சை : | விஜயாலயன் தஞ்சையைக் கைப்பற்றி அங்கு சோழப் பேரரசை கி.பி. 850இல் நிலை நிறுத்தினான். தஞ்சை, மூன்றாம் இராஜ ராஜன் காலம் வரை சோழர் தலைநகராய் விளங்கியது. |
| கங்கை கொண்ட சோழபுரம் : | முதலாம் இராஜேந்திரன் கங்கைவரை வெற்றி கொண்டு, கங்கை கொண்ட சோழபுரத்தை ஏற்படுத்தி அதைத் தலைநக ராக்கினான். அதிலிருந்து சோழப் பேரரசின் தலைநகராக அது விளங்கிற்று. |
| வஞ்சி : | சங்க காலச் சேரமன்னர்களின் தலைநகர். |
| காஞ்சி : | சங்க காலத்தில் திரையர் அரசர்களின் தலைநகராகத் திகழ்ந்தது. கி.பி. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 9ஆம் நூற்றாண்டு வரை 600 ஆண்டுகள் பல்லவர்களின் தலைநகராகத் திகழ்ந்தது. |
| தகடூர் : | சங்க காலம் முதல் கி.பி. 7ஆம் நூற்றாண்டு வரை அதியமான் அரசர்களின் தலைநகராக விளங்கியது. |
| கிடங்கில் : | சங்க காலத்தில் ஒய்மானாட்டு நல்லியக்கோடன் என்ற அரசனின் தலைநகராக விளங்கியது. |
| திருக்கோவலூர் : | மலையமான் திருமுடிக்காரி என்ற அரசனின் தலைநகராக, சங்க காலத்தில் திகழ்ந்தது. |

## சேர மாதேவியரும் புதல்வரும்

| | |
|---|---|
| வெளியன் வேண்மா நல்லினி : | உதியன் சேரல்.<br>நெடுஞ்சேரலாதன். |
| வேளாவிக் கோமான் பதுமன் தேவி : | சேரலாதன்.<br>களாங்காய்கண்ணி நார்முடிச்சேரல். |
| சோழன் மனக்கிள்ளி : | நெடுஞ்சேரலாதன்.<br>கடல் பிறக்கோட்டிய குட்டுவன். |
| வேளாவிக்கோமான் தேவி : | நெடுஞ்சேரலாதன்.<br>ஆடுகோட்பாட்டு சேரலாதன். |
| பொறையன் பெருந்தேவி : | அந்துவன் சேரல்.<br>செல்வக்கடுங்கோ வாழியாதன். |
| வேளாவிக்கோமான் பதுமன்தேவி : | செல்வக்கடுங்கோன்.<br>பெருஞ்சேரல் இரும்பொறை. |
| அந்துவன் செள்ளை : | குட்டுவன் இரும்பொறை.<br>இளஞ்சேரலிரும்பொறை. |
| பெருங்கோப் பெண்டு : | சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக் கோதை. |

## பல்லவர் மாதேவியர்

| மாதேவி | | மன்னன் | | மகள் |
|---|---|---|---|---|
| சாருதேவி | — | | | |
| ரங்கபதாகை | — | ராஜசிம்மன். | — | |
| ரேவா (ராஷ்டிரகூடப் பெண்) | — | இரண்டாம் நந்தி. | — | தந்திவர்மன். |
| தர்ம மஹாதேவி | — | இரண்டாம் நந்தி. | | |
| அக்களநிம்மடி (கதம்ப பெண்) | — | தந்திவர்மன். | — | மூன்ரும் நந்திவர்மன். |
| கங்கா (இராஷ்டிரகூடப் பெண்) | — | மூன்ரும் நந்தி. | — | நிருபதுங்கவர்மன். |
| அடிகள் கந்தன் மாறன் பாவை (பாண்டிய குலப் பெண்) | — | மூன்ரும் நந்தி. | | |
| பிருத்வி மாணிக்கம் | — | நிருபதுங்கன். | | |
| வீரமஹாதேவி | — | | | |
| மாதேவடிகள் | — | அபராஜிதன். | | |

## சோழ மாதேவியர்

| | | |
|---|---|---|
| கோக்கிழான் : | பராந்தகன் | இராஜாதித்யன். பெண்கள் : வீரமாதேவி, அநுபமா. |
| செம்பியன் மாதேவி : | கண்டராதித்தர் | உத்தம சோழன். |
| கல்யாணி : | அரிஞ்சயன் | சுந்தர சோழன். |
| ஒத்தானனசுரபி : | உத்தம சோழர் | |
| வானவன் மாதேவி : | சுந்தர சோழர் | ராஜராஜன். |
| தந்திசத்தி விடங்கி : | முதலாம் ராஜராஜன் | |
| வானவன் மாதேவி : | | ராஜேந்திரன். |
| முக்கோக்கிழான் : | முதலாம் ராஜேந்திரன் | |
| திரிபுவன மாதேவி : | | |
| பஞ்சவன் மாதேவி : | | |
| வீரமாதேவி : | | |
| த்ரைலோக்யமுடையார் : | முதலாம் ராஜாதிராஜன் | இராஜாதி இராஜன். |
| கிழானடிகள் : | இரண்டாம் ராஜேந்திரன் | |
| அருள்மொழி நங்கை : | வீரராஜேந்திரன் | |
| மதுராந்தகி : | முதலாம் குலோத்துங்கன் | |
| ஏழிசை வல்லபி : | | |
| தியாகவல்லி : | | |
| உமை நங்கை : | | |
| முக்கோக்கிழான் : | விக்கிரம சோழன் | |
| தியாக பதாகை : | | |
| தியாகவல்லி : | இரண்டாம் குலோத்துங்கன் | |
| உலகுடையமுக்கோக்கிழான் : | இரண்டாம் இராஜராஜன் | |
| சோழகுல மாதேவியார் : | மூன்ரும் இராஜேந்திரன் | |

## கி. பி. எட்டாம் நூற்றுண்டில்

## பாண்டி நாட்டில் பண்ட விலை

| | | |
|---|---|---|
| 1 காசுக்கு (35 np.) | — | 1000 வாழைப்பழம் |
| 1 காசுக்கு | — | 7 துலாம் 65 பலம் சர்க்கரை |
| 1 காசுக்கு | — | 20 துலாம் கறியமுது |
| 1 காசுக்கு | — | 60 நாழி காயம் |
| 1 காசுக்கு | — | 11200 வெற்றிலை |
| 1 காசுக்கு | — | 10100 அடைக்காய் (பாக்கு) |
| 1 காசுக்கு | — | 150 நாழி நறும்பூ |
| 1 காசுக்கு | — | 15 கழஞ்சு பச்சைக் கற்பூரம் |
| 1 காணத்துக்கு | — | 11 நாழி 1 உழக்கு மஞ்சள் |
| 1 நந்தா விளக்குக்கு முதல் | — | 100 திரமம் (உரோமானியக் காசு) |
| 1 ,, | — | 15 காசு |

## சோழ மன்னர்களின் மெய்க்கீர்த்திகள்

| அரசர் | பட்டம் | மெய்க்கீர்த்தியின் தொடக்கம் |
|---|---|---|
| விஜயாலயன் | பரகேசரி | தஞ்சை கொண்ட பரகேசரி |
| ஆதித்யன் | இராஜகேசரி | இராஜகேசரி |
| பராந்தகன் | பரகேசரி | மதுரையும் ஈழமும் கொண்ட பரகேசரி |
| முதல் இராஜராஜன் | இராஜகேசரி | திருமகள் போல |
| முதல் இராஜேந்திரன் | பரகேசரி | திருமன்னி வளர |
| முதல் இராஜாதிராஜன் | இராஜகேசரி | திங்களேர்தரு |
| வீரராஜேந்திரன் | இராஜகேசரி | திருவளர் திரள் புயத்து |
| முதல் குலோத்துங்கன் | இராஜகேசரி | புகழ்மாது விளங்க |
| விக்ரம சோழன் | பரகேசரி | பூமாது புணர |
| இரண்டாம் குலோத்துங்கன் | இராஜகேசரி | பூமேவு திருமகள் |
| இரண்டாம் இராஜராஜன் | பரகேசரி | பூமருவிய திருமாதும் |
| இரண்டாம் இராஜாதிராஜன் | இராஜகேசரி | கடல் சூழ்ந்த |
| மூன்றும் குலோத்துங்கன் | பரகேசரி | புயல் வாய்த்து வளம் பெருக |
| மூன்றும் இராஜராஜன் | இராஜகேசரி | சீர்மன்னி இருநான்கு |
| மூன்றும் இராஜேந்திரன் | பரகேசரி | பூமியும் திருவும் |

சோழர் குல முறையில் பரகேசரி, இராஜகேசரி என்ற பட்டங்கள் மாறி மாறி வரும்.

## நாட்டுப் பிரிவுகள்

| சங்க காலம் | பல்லவர் காலம் | சோழர் காலம் | பாண்டியர் காலம் | விஜய நகர் |
|---|---|---|---|---|
| மண்டிலம் | மண்டலம் | மண்டலம் | மண்டலம் | மண்டலம் |
| — | — | வளநாடு | வளநாடு | ராஜ்யம் |
| கூற்றம் | கோட்டம் | கோட்டம், கூற்றம் | நாடு, கூற்றம் | கோட்டம் |
| நாடு | நாடு | நாடு | மாகாணம் | நாடு |
| மூதூர் | மூதூர் | மூதூர் | நகரம் | சீர்மை |
| ஊர் | ஊர் | ஊர் | பேரூர் | ஊர் |
| | | | ஊர் | |

## ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் கூலி வகைகள்

| | | | | |
|---|---|---|---|---|
| வண்ணன் | நாள் கூலி | 8 | நாழி | நெல் |
| தோட்டக்காரன் | ,, | 6 | ,, | ,, |
| விறகு வெட்டி | ,, | 4 | ,, | ,, |
| சமையல் செய்யும் அந்தணன் | ,, | 4 | ,, | ,, |
| பல்லக்குத் தூக்கி | ,, | 4 | ,, | ,, |
| நீர் முதலியன கொண்டு வருவார்–ஆண் கூலி | ,, | 8 | ,, | ,, |
| ,, –பெண் கூலி | ,, | 4 | ,, | ,, |
| திருப்பதியம் ஓதுவார் | ,, | 24 | ,, | ,, |
| பரிசாரகம் செய்யும் அந்தணன் | ,, | 16 | ,, | ,, |
| நிலையாய் பணி புரிவான் | ,, | 24 | ,, | ,, |
| கோயில் கணக்கர் | ,, | 54 | ,, | ,, |
| பள்ளித்தாமம் தொடுப்பார் | ,, | 10 | ,, | ,, |
| வேதம், மந்திரம் வல்ல பார்ப்பான் | ,, | 10 | ,, | ,, |
| திருவாய்மொழி விண்ணப்பிப்பான் | ,, | 24 | ,, | ,, |
| நம்பி (வழிபாடு செய்வான்) | ,, | 16 | ,, | ,, |
| தளிச்சேரிப் பெண்டுகள் தேவரடியார்கள் | ,, | 27 | ,, | ,, |
| கூத்தர்கள் | ஒரு கூத்துக்கு | 2 | கலம் | நெல் |

## பல்லவர் காலத்து வரி வகைகள்

விசக்காணம்
குசக்காணம்
பட்டிகைக்காணம்
கத்திக்காணம்
தட்டக்காணம்
செங்கொடிக்காணம்
பிராமணராசாக்காணம்
கல்லாணக்காணம்
கன்னிட்டுக்காணம்
கதிர்க்காணம்
குவளைக்காணம்
மெத்தக்காணம்
உறிக்காணம்
பறிக்காணம்
ஆட்டுக்காணம்

நாவிதக்காணம்
வண்ணாரக்காணம்
திருமுகக்காணம்
பாறைக்காணம்
அதிகரணக்காணம்
கரணதண்டம்
உபகரணதண்டம்
அரப்புறதண்டம்
நல்லா
நல்லெருது
தறி
கூலம்
தரம்
தறிக்கூறை
ஈழப்பூட்சி

இடைப்பூட்சி
உள்ளிருக்கை
உல்லியக்கூலி
அரிகொழி
நெயிவிலே
புட்டகவிலே
நாட்டுவகை
படாங்கழி
கையாள்
நெடும்புறே
புத்தூர்சாற்று
உழைவையப்பள்ளி வஸ்து
குவளை நடுவரி
குவளை காணம்
கோயில் வஸ்து

# கல்வெட்டுக்கள் எதைக் குறிக்கின்றன ?

அன்றுளும் அரசனின் மெய்க்கீர்த்தி
அவரின் ஆட்சி ஆண்டு
அவ்வூர், கூற்றம், கோட்டம் (ஊர், தாசில், மாவட்டம்)
கோயிலும் கடவுளின் பெயரும்.
கொடுத்த பரிசு (மான்யம்)
எதற்காகக் கொடுக்கப்பட்டது ?
யார் கொடுத்தது ?
யாரிடம் கொடுக்கப்பட்டது ?
அதற்கு இசைந்தோர் யாவர் ?
இது அழித்தோர் அடையும் பாவம்.

## THE INSCRIPTIONS RECORD

1. GIFTS AND ENDOWMENTS TO TEMPLES ETC.
2. CONSTRUCTION OF TEMPLES.
3. CONSTRUCTION OF GATEWAYS AND PILLARED HALLS.
4. SETTING UP OF METAL IMAGES.
5. PROVISION FOR OFFERINGS.
6. PROVISION FOR EXPOSITION OF EPICS AND DIVINE SONGS.
7. ENDOWMENT FOR MUSIC AND DANCE.
8. ENDOWMENT FOR EDUCATIONAL INSTITUTIONS.
9. ESTABLISHMENT OF HOSPITALS.
10. GIFTS FOR PERPETUAL LAMPS.
11. ELECTIONS TO VILLAGE ASSEMBLIES.
12. TRANSACTIONS OF LOCAL BODIES.
13. SURVEY OF LANDS.
14. REGULATIONS REGARDING IRRIGATION.
15. JUDGEMENTS ON CIVIL AND CRIMINAL CASES.
16. ACADEMIC DECISIONS ETC.

## ADMINISTRATIVE PROCEDURE

THE MONARCH'S ORAL ORDER IS WRITTEN OUT (ELUTTU) BY A TIRUMANDIRAOLAI.

AND COMPARED (OPPU) BY THE THREE OFFICERS, CALLED TIRUMANDIRA OLAINAYAKAMS.

BEFORE IT IS ENTERED (PUGUNDA) THREE OTHER OFFICERS, ONE OF THEM A VIDAIYIL-ADIGARI ORDERS.

THE ENTRY OF THIS IN THE VARI, AND THEN, SIX OFFICERS OF THE UDANKUTTAM, TWENTY EIGHT OF THE VIDAIYIL, AND FOUR OF THE NADUVIRUKKAI CAUSE THIS TO BE DONE.

NINE SUPERINTENDENTS (KANKANI) OF THE PURAVUVARI TINAIKKALAM, ONE VARIPPOT-TAGAM, ELEVEN MUGAVETTIS, THREE VARIYILIDUS, TWO VARIPPOTTAGAKKANAKKUS AND ONE PATTOLAI ATTEST THE ENTRY IN THE VARI IN TOKEN OF THEIR PRESENCE WHEN THE ORDER WAS READ OUT AND ENTERED IN THE PROPER REGISTER.

## சங்க காலச் சேர மன்னர் கல்வெட்டுகள்

கருவூரை அடுத்த புகழூரில் ஆறுநாட்டார் மலைக்குகைகளில் சங்க காலச் சேர மன்னர்களின் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இக்கல்வெட்டின் மொழி தமிழாகும். இவை கி.பி இரண்டாம் நூற்றுண்டில் வழங்கிய 'தாமிழி' எழுத்துக் களால் பொறிக்கப்பட்டுள்ளன.

கோ ஆதன் செல்லிரும்பொறையின் பெயரனும் பெருங்கடுங்கோனின் மகனும் ஆகிய கடுங்கோன் இளங்கடுங்கோ, இளங்கோ பதவி எய்தியாற்றூரைச்சேர்ந்த செங்காயபன் என்ற சமணத் துறவிக்கு உறையுள் அமைத்த செய்தியை இக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இச்சாசனங்களின் மன்னர்கள் பதிற்றுப்பத்தின் பிற் பகுதியின் பாட்டுடைத் தலைவர்களான சேரல் இரும்பொறைகள் ஆகலாம்.

புகழூரிலுள்ள கல்வெட்டுகளின் மூலம் அத்தி, ஓரி, பிட்டன், கொற்றன், வேணுகன் மகன்

இளங்கீரன் முதலிய சங்க காலத்துத் தமிழ்ப் பெரு மக்கள் நமக்கு அறிமுகமாகின்றனர்.

இவ்வரிய கல்வெட்டுகளைப் பாதுகாக்கத் தமிழ் நாட்டு அரசினர் தக்க நடவடிக்கை எடுத்து வருகின்றனர்.

## கிரந்த எழுத்துக்கள்

'தாமிழி' எழுத்துக்களிலிருந்து தமிழ் நாட்டில் சிறப்பாக வளர்ந்த எழுத்துக்கள் கிரந்த எழுத்துக்களாம். இவை கி.பி. 6ஆம் நூற்றுண்டில் சிம்மவர்மன் காலத்திலிருந்து காணப்படுகின்றன. இவை வடமொழியை எழுத தமிழ் நாட்டில் உபயோகப்பட்ட தனி எழுத்துக்களாகும். பல்லவர், சோழர், பாண்டியர், மற்றுமுள்ள எல்லாத் தமிழக அரசர்களும் வடமொழியைக் கிரந்த எழுத்துக்களிலேயே எழுதினர். பல்லவர் காலத் தொடக்கத்தில் தெலுங்கு-கன்னட எழுத்துக்களுக்கும், தமிழ் கிரந்த எழுத்துக்களுக்கும் நெருங்கிய ஒற்றுமை காணப்படுகிறது. பல்லவர் காலத்தில் எழுதப்பட்ட எழுத்திற்கு 'பல்லவ கிரந்தம்' என்பது பெயர். தமிழகத்தில் வளர்ந்த இப்பல்லவ கிரந்தம், கடல் கடந்து கடாரம், ஶ்ரீவிஜயம், சுமத்ரா முதலிய நாடுகளுக்கும் பரவி அங்கும் வளர்ந்தது. கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் சுமார் 1500 ஆண்டுகளுக்கு மேல் தமிழகத்தில் இந்த எழுத்துத் திகழ்ந்தது. இன்று வரை சமஸ்கிருத நூல்கள் அனைத்தும் இந்த எழுத்தில்தான் எழுதப்பட்டு வருகின்றன. இப்போது தேவநாகரி அதிக வழக்கில் இடம் பெறுவதால் கிரந்த எழுத்துப் பயிற்சி சிறிது சிறிதாக மறைந்து வருகிறது.

## தெற்கு அன்னும்

சம்பா தேசம் என்று குறிக்கப்படும் தெற்கு அன்னும் தேசத்தில் ஏராளமான கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இவை சமஸ்கிருத மொழியில் உள்ளன. காம்போஜ தேசத்துக் கல்வெட்டுகளைப் போலவே இவை உள்ளன. ஆயினும் மிகப் பெரிய கல்வெட்டுகள் அல்ல. இங்கும் சக வருஷம் குறிக்கப்பட்டுள்ளது. நான்காம் நூற்றுண்டில் இருந்து இங்கு கல்வெட்டுகள் காணப்படுகின்றன. ஆறும் நூற்றுண்டிலிருந்து சக வருஷம் குறிக்கப்பட்டுள்ளது. இவை அங்கு ஆண்ட மாற வம்சத்து அரசர்களைக் குறிக்கின்றன. மாற வம்சம் என்பது பாண்டிய வம்சம் போலும்.

## வேறு நாடுகள்

சீனம், சுமித்திரா, மலேசியா, பர்மா, ஈழம் முதலிய நாடுகளில் பல காலங்களைச் சேர்ந்த தமிழ்க் கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. அதைப் பற்றிய விவரம் "பிற நாடுகளில் தமிழ்க் கல்வெட்டுக்கள்" என்ற கட்டுரையில் காணலாம்.



# தமிழகத்து அளவை முறை

சா. கணேசன்

அளவை முறை ஏழு வகைப்படும். அவைபற்றி பண்டை நிகண்டுகளும் இலக்கண இலக்கிய நூல்களும் பேசுகின்றன. முதலில் அவற்றின் பெயர்களையும், அடுத்து அவை ஒவ்வொன்றிற்கும் பொருளையும், அதன்பின் அவற்றின் விளக்கத்தையும் இக்கட்டுரையில் காணலாம்.

ஏழு வகை அளவையாவன: (1) எண்ணல், (2) நிறுத்தல், (3) முகத்தல், (4) பெய்தல், (5) நீட்டல், (6) தெறித்தல், (7) சார்த்தல், என்பனவாம்.

## Systems of Measurement of The Tamils

Systems of measurement were seven in number. They are referred to in old dictionaries, grammars and treatises. In this essay, it is proposed to enumerate first their names, then their purposes and thirdly their discriptions.

The Seven systems of measurement are :

(1) எண்ணல் Counting (or) Computation.
(2) நிறுத்தல் Weights.
(3) முகத்தல் Liquids.
(4) பெய்தல் Grain measure.
(5) நீட்டல் Linear measure.
(6) தெறித்தல் Time measure.
(7) சார்த்தல் Saarthal (This was a system peculiar to the Tamils wherein sound, colour, shape etc., are compared with certain more popular objects).

1. எண்ணல் :—ஒன்று, இரண்டு, மூன்று என்ற எண்ணாகவோ, வீசம், அரைக்கால், கால் என்ற இலக்கமாகவோ, அல்லது பதாதி, சேனாமுகம், குமுதம் எனத் தொகையாகவோ எண்ணிக் கணக்கிடுவது எண்ணலளவை ஆகும்.

2. நிறுத்தல் :—குன்றிமணி, வராகனெடை, பலம், வீசை, துலாம் என, படிக்கல் கொண்டு தராசி லிட்டு நிறுப்பது நிறுத்தலளவை ஆகும்.

3. முகத்தல் :—பால், மோர், நெய் போன்ற நீரியல் பொருளை உழக்கு படிகளால் மொண்டு எடுத்து அளப்பது முகத்தலளவை ஆகும்.

4. பெய்தல் :—நெல் முதலியவற்றை படி, மரக்கால்களில் சொரிந்து அளப்பது பெய்தலளவை ஆகும்.

5. நீட்டல் : — விரல், சாண், முழம் என, நீளத்தை கை அல்லது கோல்களால் அளப்பது நீட்டலளவை ஆகும்.

6. தெறித்தல் :—நொடி, நாழிகை, நாள் என, காலத்தைக் கணித்து அளப்பது தெறிப்பளவை ஆகும்.

7. சார்த்தல் :—சுரம், ஒலி, நிறம், உரு முதலியவற்றைக் கூறி "இப்படி" "அதைப்போல" என்று, ஒப்பிட்டு அளப்பது சார்த்தலளவை ஆகும்.

## இலக்கம்-எண் எழுத்துக்கள்

### Numerals and Figures

| | | | |
|---|---|---|---|
| வந | முந்திரி | Mundiri | 1/320 |
| ரி | அரைக்காணி | Araikkāṇi | 1/160 |
| ரிவந | அரைக்காணி முந்திரி | Araikkāṇi Mundiri | 3/320 |
| ഀ | காணி | Kāṇi | 1/80 |
| ஃஉ | கால் வீசம் | Kálviśam | 1/64 |
| சு | அரைமா | Araimā | 1/40 |
| சு | அரை வீசம் | Araiviśam | 1/32 |
| சூ | முக்காணி | Mukkāṇi | 3/80 |
| சூஉ | முக்கால் வீசம் | Mukkālviśam | 3/64 |
| ப | ஒருமா | Orumā | 1/20 |
| ஶ | மாகாணி (வீசம்) | Mākāṇi (Viśam) | 1/16 |
| ஐ | இருமா | Irumā | 1/10 |
| ஹ | அரைக்கால் | Araikkāl | 1/8 |
| ந | மூன்றுமா | Mūṇrumā | 3/20 |
| ஙு | மூன்று வீசம் | Mūṇṛuviśam | 3/16 |
| சப | நாலுமா | Nālumā | 1/5 |
| வ | கால் | Kāl | 1/4 |
| இ | அரை | Arai | 1/2 |
| ஐ | முக்கால் | Mukkāl | 3/4 |
| க | ஒன்று | Oṅṛu | 1 |
| உ | இரண்டு | Iraṅḍu | 2 |
| ங | மூன்று | Mūṅṛu | 3 |
| ச | நான்கு | Nāṅgu | 4 |
| ரு | ஐந்து | Aindu | 5 |
| சு | ஆறு | Āru | 6 |
| எ | ஏழு | Ēḷu | 7 |
| அ | எட்டு | Eṭṭu | 8 |
| கூ | ஒன்பது | Oṅpadu | 9 |
| ௰ | பத்து | Pattu | 10 |
| உ௰ | இருபது | Irupadu | 20 |
| ங௰ | முப்பது | Muppadu | 30 |
| ச௰ | நாற்பது | Nāṛpadu | 40 |

